# श्री तेजिनीवनमाहात्म्यम्

# ஸ்ரீ தேஜினீவநமாஹாத்ம்யம்



ஸ்ரீ சுந்தர குசாம்பிகை ஸமேத ஸ்ரீ வீழிநாத சுவாமி, திருவீழிமிழலை

ओं नमः शिवाय

# तेजिनीवनमाहात्म्यम्

(शिवपुराणे एकादशरुद्रसंहितातः)

तेजिनीवनेशकल्याणसुन्दरेश्वर-अष्टोत्तरशतसहस्र-
नामावलीसहितम्

# தேஜிநீவந மாஹாத்ம்யம்

## திருவீழிமிழலை பெருமை

தேஜிநீவநேச்வர கல்யாண ஸுந்தரேச்வர
108 - 1008 நாமாவளியுடன்


தொகுப்பு :
**வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி**
ஸ்ரீரங்கம்



வெளியிடுபவர் :

**ஸ்ரீ மஹாபெரியவாள் ட்ரஸ்ட்**

குருக்ருபா, 94 I.T.I. Layout, M.S.R.I.T.

பெங்களூர் - 560 054

விரோதி 2010

# நூல் அறிமுகம்

தேஜினிவனம் எனவும் திருவீழிமிழலை எனவும் புகழ்பெற்ற ஸ்தலம். கும்பகோணம் - பூந்தோட்டம் பாதையில் விஷ்ணுபுரம் அருகே உள்ளது. காவேரியின் தென் கரையிலுள்ள திருமுறைத் தலங்களில் சிறப்பு வாய்ந்தது. பூகைலாஸம், கல்யாணபுரம், பஞ்சாக்ஷரபுரம், தக்ஷிணகாசி, ஷண்மங்கலஸ்தலம், சுவேதவனம், ஆகாசநகரம், பனஸாரண்யம், தேஜினீவனம், விஷ்ணுநேத்ரார்ப்பணபுரம் எனப் புராணப் பெயர்கள் பல.

திருஞானஸம்பந்தர், அப்பர், சுந்தரர் என மூவராலும் பாடப் பெற்றது. அருணகிரிநாதர், காளமேகப்புலவர் முதலானோர் பாடிய பாடல்களுடன் இத்தலத்து அம்பிகை படிக்காசுவிநாயகர் கந்தர் இவர்கள் மீது பாடல்களும் பெருமை பெற்றவை.

காத்யாயனியைக் கைலாஸ நாதன் திருமணம் செய்து கொண்டதால் இது திருமண ஸ்தலம். இவ்வீசனின் அருள் பெற திருமணம் எளிதில் நடைபெறும்.

''சுவேதாரண்யே யதா அந்தக:'' வால்மீகி ராமாயணத்தில் கரவதப்படலத்தில் இவ்வூரை நினைவு படுத்துகிறார் (அரண்ய - 30) யமபயம் நீக்குகிற ஸ்தலம்.

பஞ்சம் ஏழ்மை தீர அப்பருக்கும் திருஜ்ஞானஸம் பந்தருக்கும் படிக்காசு அளித்த ஸ்தலம்.

திருவீழிநாதர் (தேஜிநீவநேசர்) கல்யாண ஸுந்தரேச்வரர் பிருஹத் ஸுந்தர குசாம்பிகை, காத்யாயனீ, படிக்காசு விநாயகர், இரட்டை விநாயகர், அபஸ்மாரன் இல்லாத தக்ஷிணாமூர்த்தி, பாலகணபதி, ஸோமாஸ்கந்தர், பாதாள நந்தி, அருணாசலேச்வரர், மூலநாதர், மயூரநாதர், மத்யார்ஜுன மஹாலிங்கர், ஸுப்ரமண்யர், சம்பந்தர், ஸுந்தரர், அப்பர், கஜலக்ஷ்மீ, ஜேஷ்டா தேவி, பைரவர், நடராஜர் என்று பல தைவத் திருவுருவங்கள் காட்சி தருகின்றனர்.

காத்யாயனியைத் திருமணம் செய்து கொண்ட திருக்கல்யாண மண்டபம் அற்புத அமைப்பு கொண்டது. பயனிழந்த மண்டபங்களை வௌவால் தன்னிருப்பிடமாகக் கொள்ளும். இங்கு அவை தொங்கி வசிக்க இயலாதாகையால் வௌவால் நெத்தி மண்டபம் என்பர். சிற்பகலைக்கு அரிய முன்மாதிரி என்பதும் இதன் சிறப்பு.

தமிழ்நாட்டில் சோழநாட்டில் மலைக் கோயிலாக இது அமைந்திருப்பதும் ஒரு சிறப்பு. கீழ்வேளூர், தேலூர், சிக்கல் அம்பர் முதலிய சில ஸ்தலங்களும் இச்சிறப்பை பெற்றவை. விஷ்ணு சக்ராயுதம் பெறச்சிவனை அர்ச்சிக்கத் தன் கண்ணைத் தாமரையாக அர்ப்பணித்ததால் நேத்ரார்பணபுரம். வீழிச்செடி இத்தலத்தின் தலவிருக்ஷமாகத் இருந்ததால் வீழிக்காடு - தேஜினீவனம். மேருமலையின் ஒரு சிகரமான கல்யாண சிகரம் பெயர்ந்து வந்து இங்கு ஈசன் கோயில் அமைய வானவழியே வந்தமர்ந்ததால் விண்ணிழி விமானம். இதன் அடையாளம் விண்ணிழிக் கோபுரம். கலியில் பலாமரமே ஸ்தல விருக்ஷமானதால் பனஸவனம்.

ஸந்நிதிக் கெதிரே உள்ள தீர்த்த புஷ்கரிணீ எனும் கல்யாண தீர்த்தம், விஷ்ணு தான் நீராடக் காவேரியை வேண்ட அவளது கிளையாக ஓடுகிற ஹரிச்ருதா, ஹரிநதி என்ற அரிசொல்லாறு (அரிசிலாறு) விஷ்ணு பூஜைக்குரிய தாமரைகளை விளைவிக்க அமைத்த பத்ம தீர்த்தம், காமதேனு தன் பாலால் ஈசனை நீராட்ட அந்தப்பால் ஆறுகப் பெருகி அரிசிலாற்றில் கலக்கிறது. (பாலாறு - முட்டையாறு)

தேஜினீ எனும் வீழிச்செடி புதராக ஆங்காங்கு உள்ளது. எரிவல்லிக் கொடி (ஜ்யோதிர்லதா) என்பர். ஸ்தலவிருக்ஷமான பலாமரத்தின் பழம் ஈசனுக்கே அர்ப்பணமாகிறது. முன்யுகங்களில் சந்தன மரமும் சண்பகமும் வீழிச்செடியும் ஸ்தல விருக்ஷங்களாயிருந்தன. இப்போது பலா ஸ்தல விருக்ஷமாயுள்ளதென்பர்.

மேருவிலுள்ள கைலாயப் பகுதி பெயர்ந்து இங்கு கோயிலைத் தாங்குகிற கல்யாண சிகரம் கோயில்

கொண்டுள்ள கல்யாண ஸுந்தரர், சூழ்ந்துள்ள கல்யாண (தேஜிநீ) வனம். கல்யாண தீர்த்தம் எனும் தீர்த்த புஷ்கரிணீ, கல்யாண விமானம் என்ற விண்ணிழி விமானம் என ஆறு கல்யாணங்கள் (மங்களங்கள்) கொண்டதால் இது ஷண் மங்கல க்ஷேத்திரம்

அரசன் ஈசனருள் பெற இங்கு வழிபட்ட போது வீழிக்காட்டினுள் 500 குடியிருப்புகள் அமைத்து 500 அந்தணர்களை வேதம் ஓத, வேள்விபுரிய ஈசனை வழிபட ஆங்காங்கிருந்து திரட்டி வேதியர் குடியிருப்பை அமைத்த போது 499 வேதியரே கிட்டியதாகவும் அரசரின் தீவிர வழிபாட்டில் மகிழ்ந்த தேஜினீவநேசனே 500 வது அந்தணராகக் காட்சி தந்து குடியமர்ந்தார் என்பர்.

தக்ஷிணாமூர்த்தியின் திருவடிகளின் கீழே இங்கு முயலகன் இல்லை. புரூரவ அரசனின் ராணிக்கு இருந்த அபஸ்மார நோய் நீங்க ராணி இங்கு வழிபட்டாள். அருள் புரிந்த தக்ஷிணாமூர்த்தியின் ஹுங்காரம் ராணியின் அபஸ்மாரத்தை (வலிப்பு நோயை)ப் போக்க அத்துடன் திருவடிகளிலிருந்த அபஸ்மாரனும் மறைந்தான் என்பர்.

கல்யாண மண்டபத்தில் சிவகிரி விமானத்தின் கீழ் விவாஹ ஸ்தம்பம் (மணக்கால்) உள்ளது. மண்டபத்தை எட்டு சிங்கங்கள் தாங்குகின்றன. ஸிம்ஹகர்ப்பகிருஹம் என்பர்.

தியாகராஜப் பெருமானின் ஸுந்தர நடனம். கல்யாண ஸுந்தரரின் திருவடிகளில் விஷ்ணுவின் நேத்ரத்தாமரை, மிழலைக் குறும்பர் என்ற வேடர் அளித்த விளாங்கனி, பத்மதீர்த்தக் கரையருகே அவிமுக்தேசுவரர், அஞ்சநாட்சி, பத்ரவல்லீசவரர், பத்ரவல்லீசுவரி, சுவர்க்காவதரணேச்வரர் என்ற பல ஸ்தலங்களில் ஈசன் அருள்புரிகிறார்.

இவ்வாலயம் திருவாவடுதுறை ஆதீனத்தின் குருமஹா ஸந்நிதானத்தின் மேற்பார்வையில் மிக அழகாக அக்கரையுடன் பாதுகாக்கப் பெற்றுள்ளது.

இத்தலத்தின் மாகாத்மியம் சிவபுராணத்தின் ஏகாதசருத்ரஸம்ஹிதையின் முன் பகுதியான க்ஷேத்ர கண்டத்தில் 91 வது அத்யாயம் முதல் 179 வது அத்யாயம் வரை 89 அத்யாயங்களாக இடம் பெற்றுள்ளது. 1913 ம் ஆண்டில் கிரந்தலிபியில் வெளியான இந்நூலை விஷ்ணு புரத்தைச் சார்ந்த தஞ்சை சாஸ்திரா ஸர்வகலாசாலையில் மூத்த பேராசிரியராகப் பணிபுரிகிற ஸ்ரீ.S.சங்கரன் அவர்கள் அளித்து உதவியதும் திருவீழிமிழலையில் வசிக்கிற முன்னாள் ஆசிரியர் ஸ்ரீ. V.நடராஜய்யர்,M.A/M.Ed.,அவர்கள் இந்த தொகுப்பாளருக்கு க்ஷேத்திரதரிசனம் செய்வித்துப் பெருமையை விளக்கியதும் இந்நூலை வெளியிட முற்றிலும் உதவியதை எந்நாளும் போற்றிப் பாராட்டுவோம்.

இறையருளும் குருவருளும் துணை நிற்பதுடன் செயல்களிலும் அந்தர் யாமியாகித் தூண்டியதும் உண்மை. அவரருளால் அவர் தாளைப் போற்றி நிற்போம். ஸ்ரீ மஹா பெரியவாள் டிரஸ்ட் தமிழகத்திற்கும் அகில பாரதத்திற்கும் ஆன்மீகத் துறையில் கராவலம்பம் தந்து உதவுகிறது. குரு மூர்த்தே த்வாம் நமாமி காமாக்ஷி! ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சரணர்களின் ஸ்ரீ சரணங்களில் அமிருத மஹோத் ஸவபாத ஸமர்பணம் இது.

S.V.ராதாகிருஷ்ண சாஸ்திரி

ஸ்ரீரங்கம்.

16.11.2009



அரசாணிக்கால்



ஸ்ரீ ஜ்ஞான மேதா தக்ஷிணாமூர்த்தி கோவில்

# विषयानुक्रमणिका

पृष्ठ संख्या

# स्तुतयः

# பொருளடக்கம்.

அத்யாயம்.

பக்க எண்

## துதிகள்

श्रीसुन्दरकुचाम्बासमेत

तेजिनीवनेश्वराय नमः

# तेजिनीवनमाहात्म्यम्

शिवपुराणे एकादशरुद्रसंहितायां

९१—१७९ अध्यायात्मकम्

प्रथमोऽध्यायः

## "தேஜிநீவந மாஹாத்ம்யம்"

"திருவீழிமிழலை பெருமை"

(சிவபுராணம் ஏகாதசருத்ரஸம்ஹிதை

91-179 அத்யாயங்கள்)

*"அத்தியாயம்"-1*

यं विशिष्टजनाः शान्ता वेदान्तश्रवणादिना ।
जानन्त्यात्मतया वन्दे तमहं सत्यचित्सुखम् ॥ १

*வேதாந்த நூல்களைக் கேட்டும் உணர்ந்தும் அமைதியுற்றுச் சிறந்தபெரியோர்கள் ஆத்மா எனவும் மெய்பொருளும் பேருணர்வும் பேரானந்தமும் எனவும் உணர்ந்த அந்த ஈசனை நான் வணங்குகிறேன். (1)*

सत्त्रावसाने सम्भूय शौनकाद्या महर्षयः ।
नैमिशेया महात्मानः शिवध्यानपरायणाः ॥ २

भस्मरुद्राक्षमालाभिरलङ्कृतकलेबरम् ।
व्यासशिष्यं महाप्राज्ञं पौराणिकशिरोमणिम् ॥ ३

प्रसन्नवदनाम्भोजं सर्वशास्त्रविशारदम् ।
वेदान्तज्ञाननिर्णीतपरतत्त्वं मुनीश्वरम् ॥ ४

दृष्ट्वा यथार्हं संपूज्य प्रसन्नहृदयास्ततः ।
पप्रच्छुरेनमखिलाः पुराणश्रवणोत्सुकाः ॥ ५

*நைமிசவனத்தில் வேள்வியின் இறுதியில் சௌனகர் முதலான மஹரிஷிகள் கூடினர். சிவத்தியானத்தில் எப்போதும் ஈடுபட்ட பெரியோர்கள். இவர்கள் பேரறிஞரும் வியாஸரின் சிஷ்யரும் விபூதி பூசி ருத்ராக்ஷமாலையணிந்தவரும், புராணம் கூறுவதில் சிறப்பு பெற்றவரும், தெளிந்த முகத்தாமரை கொண்டவரும் சாஸ்திரங்களனைத்தின் பேரறிஞரும், வேதாந்தத்தின் நுட்ப அறிவால் பரதத்துவத்தை கண்டவருமான ஸூதரைக் கண்டு முறைப்படி உபசரித்தனர். மிக்க மகிழ்ச்சியுடன் அவரிடம் புராணம் கேட்க ஆர்வமிக்கவர்களாக அவரிடம் விண்ணப்பித்தனர் (2-5)*

ऋषयः—

उद्भूत भगवन्नग्निकुण्डादाश्रितवत्सल ।
सर्ववेदान्तपारीण शिवधर्मविचक्षण ॥ ६

भक्तिमुक्तिप्रदानीह शिवक्षेत्राणि सर्वतः ।
मेरुमन्दरकैलासश्रीपर्वतमुखानि च ॥ ७

धर्माधर्मविचारेण शिवज्ञानस्य बोधनात् ।
अज्ञानतो निवृत्ताश्च बभूवुर्ज्ञानिनो जनाः ॥ ८

जातोऽसि लोकरक्षार्थं व्यासस्य कृपया पुरा ।
स्तोतुं तव गुणान् सर्वान् केनापि च न शक्यते ॥ ९

त्वमेव शिवभक्तानामग्रणीः पूज्य एव च ।
त्वदुक्तेनैव मार्गेण भक्तिं कृत्वा द्विजोत्तमाः ॥ १०

कृतार्था अभवन् सर्वे कृपया तव सुव्रताः ।

*அக்னிகுண்டத்திலிருந்து தோன்றியவரே! அண்டியவரிடம் அன்பு கொண்டவரே! வேதமுடிவான உபநிஷத்துகளில் தேர்ந்தவரே! சிவப்பணிகளில் வல்லவரே! மேரு, மந்தரம், கைலாஸம், ஸ்ரீபர்வதம் முதலான இம்மையிலும் மறுமையிலும் நன்மை அளிக்க வல்ல சிவக்ஷேத்திரங்கள் பல எங்கும் உள்ளன. மக்களும் இது தர்மம், இது அதர்மம் என ஆராய்வதாலும் சிவனைப்பற்றிய மெய்ஞானம் பெற்றதாலும் அறியாமையை விலக்கி நல்லறிவு பெற்றுள்ளனர். இவ்வழியில் உலகைக் காக்கத் தோன்றியுள்ள உம் பெருமை கூற இயலாது. நீர் சிறந்த சிவபக்தர்களின் முன் நிற்பவர். மதிப்பிற்குரியவர். நீர் காட்டிய வழியில் ஈசனிடம் பக்தி கொண்ட நன்மக்கள் நல்ல விரதமேற்று மேன்மை பெற்றுள்ளனர். (6-10)*

कैलासाचलमारभ्य यावत् सेतुतटावधि ॥ ११

स्थानानाञ्चैव माहात्म्यं तीर्थानाञ्चैव वैभवम् ।
दिवि भुव्यन्तरिक्षे च नदा नद्यश्च याश्च वै ॥ १२

वर्णाश्रमविधिश्चैव क्रमेण तव वाक्यतः ।
क्वचित् क्वचिद्विस्तरेण क्वचिद्वै सङ्ग्रहेण च ॥ १३

तत्तत्कालानुगुण्येन नैमिशेऽनिमिषस्थले ।
सत्रयागस्य मध्ये च मुनीनाञ्चैव सन्निधौ ॥ १४

गङ्गायाश्चैव तीरे च गोदावर्यास्तटे च यत् ।
कृष्णवेणीतटे चैव तुङ्गभद्रातटे तथा ॥ १५

क्षीरनद्यास्तटे चैव कावेर्याश्च तटे शुभे ।
ताम्रपर्ण्यास्तटे चैव तथा वेगवतीतटे ॥ १६

यानि स्थानानि शैवानि पुराणोक्तानि यानि च ।
तेषां चैव तु माहात्म्यं यथावच्च श्रुतं पुरा ॥ १७

तेजिनीवननाम्नस्तु क्षेत्रस्य महिमा तथा ।
यत्किञ्चित् सङ्ग्रहेणोक्त्वा भवतोपरतं क्षणात् ॥ १८

सर्वेषामपि माहात्म्यमुक्त्वा सुबहुविस्तरम् ।
तेजिनीवनमाहात्म्यमुक्त्वाऽतीव च सङ्ग्रहात् ॥ १९

*கைலாஸமலை தொடங்கி ஸேதுக்கரை வரை க்ஷேத்திரங்கள் புண்ணிய நீர் - நிலைகள், விண்ணிலும் வானிலும் பூமியிலும் உள்ள ஆறுகள், வர்ண - ஆசிரம நடைமுறை முதலியவற்றைப்பற்றி விரிவாகவும் சுருக்கமாகவும் கூறியுள்ளீர். கண்கொட்டாது நல்லதைக் கேட்க ஆர்வம் கொண்டவர் கூடுமிடம் நைமிசக் காட்டிலுள்ள வேள்விச்சாலைகள். கங்கை, கோதாவரீ, கிருஷ்ணவேணீ, துங்கபத்திரை, பாலாறு, காவேரி, தாமிரபரணீ, வைகை முதலிய ஆற்றங்கரையில் அமைந்துள்ள க்ஷேத்திரங்களின் வரலாற்றை விரிவாகக் கேட்டுள்ளோம். தேஜினீவனம் என்ற வீழிக்காட்டின் பெருமை மிகச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. (11-19)*

सद्यस्तूपरतस्यामुमाशयं मन्महे तव ।
यन्नाभिपङ्कजे भाति स्रष्टा त्रिजगतां प्रभुः ॥ २०

यदधीनं हि लोकानां रक्षणं दुरुपप्लवात् ।
गायन्ति यस्य माहात्म्यं महोपनिषदस्तथा ॥ २१

विविधानि पुराणानि यस्य शंसन्ति वैभवम् ।
यस्योदरे जगत्सर्वं भासते निरुपाधिकम् ॥ २२

समस्ता देवता यस्य दासभूता भवन्ति च ।
महादेवेन सादृश्यं यस्मिन् प्रायः प्रतिष्ठितम् ॥ २३

साक्षात् स देवो लक्ष्मीशो यत्र साम्बस्य पूजकः ।
पुष्पं च नेत्रं यस्यासीदर्चकस्य महेशितुः ॥ २४

स्नानार्थं यस्य कावेरी सान्निध्यं प्रययौ हरेः ।
मेरुशृङ्गविमानादि भाति यत्रातिपुण्यदम् ॥ २५

तादृक् तत्तेजिनीक्षेत्रं गुह्याद्गुह्यतमं खलु ।
न प्रकाश्यममीषान्तद् गोपनीयं प्रयत्नतः ॥ २६

इति निश्चित्य भवता विस्तरान्न पुरोदितम् ।
इति मन्यामहे दीना वयं सूत महामुने ॥ २७

अस्मत्तश्शिवभक्ताः किमासते भुवनत्रये ।
त्वद्भक्ता वा विनीता वा शिवपूजारताश्च वा ॥ २८

श्रद्धाभक्तियुता वापि शिवमाहात्म्यवर्णने ।
अस्मान्विना कृपायास्ते पात्रं को वा मुने वद ॥ २९

तस्मादस्माकमेतस्य कथने मास्तु संशयः ।
रहस्यमपि शिष्याणां गोपायन्ति न सत्तमाः ॥ ३०

சுருக்கமாக இதனைக் கூறியதற்குக் காரணமிருக்கலாம். விஷ்ணுவின் தொப்புள் தாமரையிலிருந்து மூவுலகையும் படைத்தப் பிரபுவான பிரும்மா தோன்றினார். விஷ்ணுவே உலகைப் பெருங்கேடுகளிலிருந்தும் காப்பவர். எல்லா புராணங்களும் அவரது பெருமையைப்பாடுகின்றன. அவரது வயிற்றினுள் உலகனைத்தும் தன் தனித்தன்மையை இழந்து உறங்குகிறது. எல்லா தேவர்களும் அவரது தாஸர்கள், பெருந்தேவனான சிவனுக்கு அவர் ஒருவரே ஒப்பானவர். அந்த லக்ஷ்மியின் மணாளரே இத்தலத்தில் அம்பிகை மணாளனை வழிப்பட்டுள்ளார். அவரது கண்ணே வழிபாட்டிற்கு உதவுகிற பூவாயிற்று. அவர் நீராடுவதற்காகக் காவேரி அங்கு தோன்றினாள், மேருவின்சிகரமே விமானமாகியது. அந்த மிகப்புனித க்ஷேத்திரத்தைப் பற்றி தெரிந்துகொள்ள எமக்குத்தகுதி உள்ளதோ என ஐயம் தோன்றி விரித்துக்

கூறத்தயங்குகிறீர் என எண்ணுகிறோம். எம்மை விடப்பணிவுடன் சிவ பூஜையில் ஈடுபடுகிற பக்தர்கள் உலகில் இல்லை. சிவனது பெருமை பற்றிக் கேட்க நாங்கள் ஏற்றவர்களே. நல்லோர் சிஷ்யனிடம் எந்த ரகசியத்தையும் மறைப்பதில்லை என்று வேண்டினர். (20-30)

श्रीसूत:—

अहो मुनीश्वरा यूयमस्मत्पूज्या महत्तराः ।
न गोप्यमस्ति युष्माकं शिवभक्ताग्रयायिनाम् ॥ ३१

एतादृशानां भवतां गोपने दुष्कृतं भवेत् ।
दुरदृष्टवशादेव तन्माहात्म्यं न हि स्मृतम् ॥ ३२

स्मारितोऽहं यदधुना भवद्भिः पुण्यगौरवात् ।
कृतार्थोऽहं कृतार्थोऽहं यूयं च सुकृतोन्नताः ॥ ३३

सर्वे च यं सामाराध्य लभन्ते गतिमुत्तमाम् ।
स देवो वासुदेवोऽत्र नेत्रेणार्चितवान् शिवम् ॥ ३४

शिवभक्ताय तत्क्षेत्रमाहात्म्यं पृच्छते तु यः ।
न वदत्येष वै पापी भवेन्निरयभाजनम् ॥ ३५

शैवानां हि पुराणानां श्रवणे पठने फलम् ।
सेतिहासं प्रवक्ष्यामि शृण्वन्तु मुनिसत्तमाः ॥ ३६

ஸூதர் கூறினார் - சிறந்த முனிவர்களே! சிவபக்தர்களில் முன் நிற்கிற தங்களிடம் சிவனது பெருமைகளைக் கூறாமல் மறைப்பது பெருந்தவறே. எதிர்பாராது நேர்ந்த குறை இது. நல்ல வேளையாக நினைவுபடுத்தியுள்ளீர். நான் பாக்கியசாலி. தன்னை முறைப்படி வழிபடுபவருக்கு மேனிலையளிக்கிற வாஸுதேவனே சிவனுக்குத் தன் கண்ணால் அர்ச்சனை செய்துள்ளார். நீங்கள் விரும்பிக் கேட்ட பின்னரும் கூறாதிருப்பது



திருக்கல்யாண மண்டபம் (வெளவால் நத்தி)



ஹரிச்ருதா - அரிசொல் ஆறு



மஹாமண்டபம் நுழைவாயில் பன்னிரு ராசிப்படிகள்



திருஜ்ஞான ஸம்பந்தர் படிக்காசு மேடை



மஹாமண்டபம் வாரப் படிகள்



திருநாவுக்கரசர் படிக்காசு மேடை
காத்யாயனீ

நரகத்திற்கு இட்டுச்செல்கிற பாபச்செயலாகும். இதனை விளக்கிக் கூறுகிறேன். (31-36)

कलिङ्गदेशे कस्मिंश्चित् ग्रामे देवव्रताभिधः ।
धनी विद्वान् सदाचारसम्पन्नोऽस्ति द्विजोत्तमः ॥ ३७

सुन्दरः सुकुमारश्चेत्युभौ तस्यात्मसंभवौ ।
यदा यौवनमापन्नौ तनूजातौ तदा तयोः ॥ ३८

पिता कालवशं प्राप्तस्ततस्तौ हृष्टमानसौ ।
तस्यौर्ध्वदेहिकं कर्माप्यकृत्वा पैतृकं धनम् ॥ ३९

आदाय सर्वमुन्मत्तौ काञ्चीपुरमवापतुः ।
तत्र गत्वा तु गणिकां कामप्यतिमनोहराम् ॥ ४०

दृष्ट्वा प्रतिदिनं दत्वा धनं तौ भ्रातरावुभौ ।
पर्यायेणानुभुञ्जातां तस्या रतिसुखं मुदा ॥ ४१

ततः क्षीणे धने तौ तु चौर्यवृत्त्यार्जितैर्धनैः ।
तस्यामेवान्ववर्त्तेतां ततस्तौ तु कदाचन ॥ ४२

கலிங்க நாட்டில் ஒரு கிராமத்தில் தேவவிரதன் என்ற சிறந்த அந்தணன். தனிகரும் பேரறிவாளருமான அவருக்கு ஸுந்தரன் ஸுகுமாரன் என இருபுதல்வர்கள். இருவரும் வாலிபமடைந்தனர். திடீரென தேவவிரதன் இறந்தார். இருபுதல்வர்களும் அவரது ஈமச்சடங்குகளைக்கூட செய்யாமல் தந்தையின் செல்வத்தை தமதாக்கிக் காஞ்சியை அடைந்து அங்கு ஒரு அழகிய வேசியிடம் மயங்கிப் பணத்தைக் கொடுத்து மாற்றி மாற்றி மகிழ்ந்தனர். செல்வம் சீரழிந்தது. திருட்டால் செல்வம் திரட்டி அவளுடன் வாழ்ந்தனர். (37-42)

पुरा जन्मान्तरे कश्चित् आगतं शिवयोगिनम् ।
नीत्वा गृहं फलाहारैः प्रीणयित्वा तदापि तौ ॥ ४३

भ्रातरौ शयनस्थानं ददाते स्मातिकोमलम्।
तेन पुण्यप्रभावेन पर्यटन्तौ ततस्ततः ॥

वक्तुश्शिवपुराणानामन्तिकं तावबापतुः ।
पापानि पापभेदानां शृण्वाते नरकानि च ॥ ४४

नानानरकभेदानां क्रौर्यश्रवणतस्तयोः।
हृदयेऽप्रीतिरभवत्तदा प्रभृति तावुभौ ॥ ४५

त्यक्तसङ्गौ भैक्षचर्यात् कलितोदरपोषणौ।
भक्त्यैवं शृण्वतां भूयः पुराणं मासपञ्चकम्॥ ४६

तेन पुण्यप्रभावेन शिवानुग्रहवैभवात्।
धनेन राजसदृशौ पुत्रपौत्रसमन्वितौ ॥ ४७

बहूनां बन्धुवर्गाणां भृत्यानां चैव रक्षकौ।
शरीरान्ते विमानेन कैलासं समवापतुः ॥ ४८

முன் பிறப்பில் இவர்களிருவரும் வழியில் சென்ற சிவயோகியைத் தம் இல்லத்திற்கு அழைத்துச் சென்று பழம் முதலிய உணவுப் பொருள் அளித்து அன்றிரவு தம் வீட்டிலேயே தங்க வைத்தனர். அந்தப் புனிதச் செயலின் பின் விளைவாக, திருடமுற்பட்ட இருவரும் வழியில் சிவபுராணச் சொற்பொழிவைக் கேட்டனர். கெட்ட செயல்கள் புரிவதால் பாபம், பாபத்தால் துன்பம், இறுதியில் நரகம், பல நரகங்களின் கொடுமை என விளக்கத்தைக் கேட்ட அவர்கள் திருந்தி, நல்வழிப்பட்டு, திருட்டையும், வேசியின் இணக்கத்தையும் தவிர்த்து பிக்ஷை எடுத்து உண்டு, தினமும் சிவபெருமானின் பெருமையைப்பற்றி விளக்கம் கேட்டு வந்தனர். சிவனது அருளால் புத்திரர் பௌத்திரர் என நன்மக்கட் பேற்றுடன் நற்செல்வமும் பெற்று நல்வாழ்வு வாழ்ந்தனர். உற்றார் உறவினர் பணியாளர்கள் என அனைவரையும் காத்தனர். நல்வாழ்வின் இறுதியில் சிவலோகம் பெற்றனர். (43-48)

तस्माच्छिवपुराणानि श्रोतव्यानि निरन्तरम्।
भोगमोक्षार्थिभिस्सर्वैर्ब्राह्मणक्षत्रियादिभिः ॥ ४९

एवमन्ये च बहवः पुराणे शिववैभवम्।
श्रुत्वाऽन्यदुर्लभां सिद्धिं प्राप्ताः सुखमयत्नतः ॥ ५०

श्रुत्वा शिवपुराणानि पशवः पक्षिणो मृगाः।
प्राप्नुयुस्सहसा सर्वे शिवलोकमनामयम्॥ ५१

यस्मिन् शिवपुराणानि देशे विप्राः पठन्ति वै।
तत्रत्यास्तृणगुल्माद्याः शिवलोकमवाप्नुयुः ॥ ५२

यस्मिन् शिवपुराणानि पठन्ति द्विजसत्तमाः।
तत्रैवापर्णया सार्धं सान्निध्यं कुरुते शिवः ॥ ५३

भक्त्या शिवपुराणस्य वक्तारं प्रीणयेत्तु यः।
धनैर्धान्यैरलङ्कारैर्मृष्टान्नैरंबरैस्तथा ॥ ५४

तेन देवाश्च मुनयः प्रीणिताः स्युर्न संशयः।
शाम्भवानि पुराणानि विलिख्य पठते तु यः ॥ ५५

ददाति श्रद्धया सोऽयं तावदक्षरपङ्क्तिषु।
एकैकस्याक्षरस्यात्र कल्पं शिवपुरे वसेत्॥ ५६

किं फलं शिवभक्तानां शास्त्रान्तरविलोकने।
किमप्राप्यस्य देशस्य सरणे श्रवणे फलम्॥ ५७

श्रद्धया लिख्य दत्तानि शिवप्रियचिकीर्षया।
भक्त्या शिवपुराणानि प्रतिगृह्णन्ति ये द्विजाः ॥ ५८

काञ्चनेन विमानेन शिवलोकमवाप्नुयुः।
कामक्रोधादियुक्तानां कलिनोपहतात्मनाम्॥ ५९

स्वभावचञ्चलाक्षाणां युगे माहेश्वरेऽत्र हि।
विना शिवपुराणस्य श्रवणेन कुतो गतिः ॥ ६०

चतुर्णामपि वर्णानामाश्रमाणां तथैव च।
श्रुतिस्मृत्युदिताचारविहीनानां कलौ युगे ॥ ६१

श्रुतिः शिवपुराणस्य प्रायश्चित्ततयोच्यते।
ये वै शिवपुराणानि न शृण्वन्ति पठन्ति वा ॥ ६२

शिवभक्ता अपि च ते शिवद्रोहि समाः स्मृताः।
प्रकाश्यन्ते नान्यशास्त्रैः पुराणेन विना शिवः ॥ ६३

गर्भागारस्थितं वस्तु दीपेनैव प्रकाश्यते।
एवं शिवपुराणानां न वाङ्मानसगोचरः ॥ ६४

महिमा किमु वक्तव्यं तपःस्थानस्य शार्ङ्गिणः।
तेजिनीविपिनस्यास्य माहात्म्यश्रवणाद् द्विजाः ॥ ६५

यदुक्तं विस्तरात् श्रोतुमिच्छाम इति वै पुरा।
तत्तेजिनीशमाहात्म्यं विस्तरेण वदामि वः ॥ ६६

इति प्रथमोऽध्यायः।

இம்மையிலும் மறுமையிலும் மேன்மை பெற சிவபுராண விளக்கங்களை கேட்கவேண்டும். இப்படிக் கேட்ட பலர் மேனிலை பெற்றனர். சிவபுராணச் சொற்பொழிவு நடக்கிற இடத்தை சுற்றி நிற்கிற பசு - பக்ஷி முதலியவையும், புல் பூண்டு முதலியவையும் மேனிலை பெறும். தேவர்களும் முனிவரும் அருள்புரிவர். இவற்றை எழுதிப்படிக்க மெய்யறிவு வளரும். சிவநிலை பெறச் செய்யும். இவற்றை எழுதிப்பிறர் படிக்க உதவுவதும் அதனைப் பெற்றுப் படிப்பதும் சிவநிலைபெறச் செய்யும். புராண விளக்கம் நடைபெறும் போது அதனைத் தவிர்த்து வேறு பணிகளில் ஈடுபடுவதும் பாபமாகும். கருவறையிலுள்ள சிவபெருமானை அங்குள்ள தீபம் விளக்குவது போல் இந்த புராணமும் சிவனைக்



மாப்பிள்ளை ஸ்வாமி காத்யாயனி



ஸ்தல விருக்ஷம் - பலா

காட்டும். திருவீழிமிழலையின் பெருமை சொல்லிலடங்காதது. அதனை நீங்கள் விரும்பியவாறு விளக்குகிறேன் என்றார் ஸூதர் (49-66)

—*—

## द्वितीयोऽध्यायः

ऋषयः

जगत्पावनचारित्र सूत पौराणिकोत्तम।
धर्माधर्मप्रकथनात्शिवज्ञानस्य बोधनात्॥ १

त्वमेव सर्वलोकानां गुरुत्वेनावतीर्णवान्।
रक्षिताश्च त्वया लोका व्यासशिष्येण धीमता॥ २

पाद्मे कल्पे पुरा धीमान् जगद्रक्षणहेतवे।
दैत्यान्नाशयितुं शम्भुः विष्णवे सर्वजिष्णवे॥ ३

चक्रायुधमदत्तेति संग्रहेण यदीरितम्।
अन्याश्च याः कथाः पूर्वं संग्रहेण समीरिताः॥ ४

अन्येषु वा पुराणेषु याः कथाः समुदीरिताः।
तत्सर्वं कृपया सूत विस्तरेण वदाद्य नः॥ ५

### ''அத்தியாயம்''- 2

ருஷிகள் ஸூதரிடம் விண்ணப்பித்தனர். உலகைத் தூயதாக்குகிற நடைமுறை கொண்டவரே! இது தர்மம், இது அதர்மமென விளக்குவதாலும் ஈசனைப்பற்றிய விளக்கம் தருவதாலும் உலகிற்கு நீரே குரு. வியாஸரின் சீடரானபேரறிவு மிக்க நீர் உலகைப் பாதுகாத்துள்ளீர். பாத்மகல்ப காலத்தில் உலகைப் பாதுகாப்பதன் பொருட்டும் அசுரர்களை அழிக்கவும் சிவபெருமான் விஷ்ணுவிற்குச் சக்கிராயுதம் அளித்தார். இத்தகைய பல வரலாறுகள் முன்னர் சுருக்கமாகக் கூறப்பட்டன.

*இவற்றை விளக்கிக் கூறுவீர் என (1-5)*

सूतः—

ज्ञातमात्रं प्रवक्ष्यामि व्यासस्य कृपया द्विजाः।
तस्य क्षेत्रस्य माहात्म्यं वक्तुं सर्वज्ञ विस्तरात्॥ ६

ईशादयोऽपि विबुधा नेशते क्वाहमल्पधीः।
ब्रह्मकल्पायुतं चापि नालं तत् कथने द्विजाः॥ ७

यत्क्षेत्रे शिवमाराध्य शूरपद्मादयोऽसुराः।
गुहेन निहता ह्यासन् शक्त्याऽधिकबलेन च॥ ८

दैत्याश्च दानवाश्चैव राक्षसाः कामरूपिणः।
बहवो निहता ह्यासन् लब्धचक्रेण विष्णुना॥ ९

तस्मिन्नेव महाक्षेत्रे श्वेतकेतुं पुरा द्विजाः।
पाशितं कालपाशेन ररक्ष ह्यन्तकान्तकः॥ १०

कलिङ्गाधिपतिं राजसत्तमञ्च सुविक्रमम्।
अनुजग्राह वै तत्र भगवान् पार्वतीपतिः॥ ११

तस्मिन् क्षेत्रोत्तमे लब्धश्रेयसां त्रिदिवौकसाम्।
मनुष्याणां च संख्यानं ब्रह्मणाऽपि न पार्यते॥ १२

*வியாஸரின் அருளால் நான் தெரிந்து கொண்டு விளக்குவதாகக் கூறிய ஸூதர் சிவபெருமானின் பெருமையை விளக்கினார். இங்கு சிவனை வழிபட்டு குகன் சூரபத்மன் முதலியவரைச் சக்தியாயுதத்தால் அழித்தார். விஷ்ணு சக்கிராயுதம் பெற்று பல அஸுர - ராக்ஷஸர்களை அழித்தார். சுவேதகேது யமனின் பாசக்கயிற்றில் சிக்கிய நிலையில் யமனை வென்று சிவன் சுவேதகேதுவைக் காப்பாற்றினார். கலிங்கத்தரசனான ஸுவிக்ரமனுக்கு இங்கு சிவன் அருள் புரிந்தார். இவ்வாறு அருள் பெற்றவரைக் கணக்கிட இயலாது. (6-12)*

तस्मादलमिदानीं तु विष्णोर्दानवमाथिनः ।
चक्रलब्धिक्रमं वक्ष्ये शृणुध्वं मुनिपुङ्गवाः ॥ १३

यस्य स्मरणमात्रेण मुच्यन्ते किल्बिषैर्नराः ।
हिरण्याक्षमुखा दैत्याः पुरा संभूय सर्वतः ॥ १४

अबाधन्त भृशं लोकान् तदा विष्णुः सनातनः ।
अशक्तो निगृहीतुन्तान् मनस्येवमचिन्तयत् ॥ १५

गत्वा केलासमचिरात् प्रसाद्य च महेश्वरम् ।
दैत्यनिग्रहणे शक्तं गृहीष्याम्यायुधं दृढम् ॥ १६

इति निश्चित्य गीर्वाणैः प्रतस्थे रजताचलम् ।
मध्यस्थमेरोः परितः सप्तद्वीपांस्तथार्णवान् ॥ १७

समवेष्टयतो लोकालोकाद् बहिरवस्थिताम् ।
त्रयोविंशतिलक्षैश्च योजनैर्दशकोटिभिः ॥ १८

विस्तृतां पादपैर्दिव्यैर्नानापुष्पफलान्वितैः ।
सरिद्भिश्च सरोभिश्च कुमुदोत्पलगन्धिभिः ॥ १९

दरसंफुल्लकल्हारसरसीरुहशोभितैः ।
दीप्यमानां स कैलासवनभूमिमुपाश्रयत् ॥ २०

तन्मध्ये च महाविष्णुः कैलासं शङ्कराकृतिम् ।
दशकोटिप्रमाणं च शृङ्गैर्बहुभिरुज्ज्वलम् ॥ २१

त्रयस्त्रिंशद्योजनश्च शृङ्गमेकैकमैक्षत ।
तत्र मध्यमशृङ्गोऽयं नवकोटिप्रमाणकः ॥ २२

अट्टालगोपुरोपेतः सप्तावरणमण्डितः ।
शिवलोकस्तु विख्यातः सर्वकामसमृद्धिमान् ॥ २३

அசுரர்களை வென்ற விஷ்ணு சக்கரம் பெற்ற வரலாறு இது. ஹிரண்யாக்ஷன் முதலிய அரக்கர்கள் முன்பு ஒன்றுகூடி உலகமக்களைத் துன்புறுத்தினர். விஷ்ணு இவர்களிடமிருந்து மக்களைக்காக்க எண்ணி, கைலாஸம் சென்று சிவனை அணுகித் தக்க ஆயுதம் பெற எண்ணி, தேவர்களுடன் கைலாஸம் செல்ல முற்பட்டார். மேருவைச்சுற்றி ஏழுதுவீபங்களும் ஏழு கடல்களும் இருந்தன. வெளியில் லோகாலோகாசலம் அரணாக நின்றது. 10 கோடி 23 லக்ஷயோஜனப் பரப்புள்ளது. அல்லியும் ஆம்பலும் மணக்கப் பல நீரோடைகள், ஆறுகள். இவற்றின் நடுவே கைலாஸமலையின் காடு. அதன் நடுவில் சங்கரரின் வடிவமைப்பில் 10 கோடி யோசனை பரப்புள்ள அதன் நடுவே 33 யோசனை உயரமுள்ள ஒரு சிகரம் ஒன்பது கோடி யோசனை பரப்புள்ளது. அதில் மதிற்சுவர்கள் கோபுரங்களுடன் ஏழு ஆவரணங்கள் கொண்ட சிவலோகம். சிந்தாமணிகற்களாலான மலைகள் சூழ்ந்தது. விரும்பியதனைத்தும் நிறைந்து காண்பது. *(13-23)*

चिन्तामणिशिलोत्तुङ्गनानापर्वतशोभितः।
प्रथमावरणं त्वर्धकोटिमानं समन्ततः॥ २४

दिक्षु द्वारं सप्तलक्षप्रमाणं स्यात् पृथक् पृथक्।
वैनायकगणास्तत्र बहवो द्वाररक्षकाः॥ २५

द्वितीयावृतिमध्यञ्च पञ्चाशल्लक्षमात्रकम्।
षट्लक्षमानमस्यापि द्वारं दिक्षु विराजते॥ २६

रक्षन्ति तस्य द्वारञ्च तुन्दिसात्यनिका गणाः।
तृतीयावृतिमध्यं च कोट्यर्धं योजनोन्नतम्॥ २७

पञ्चलक्षप्रमाणैस्तु द्वारैर्दिक्ष्वपि राजितम्।
वेतालास्तानि रक्षन्ति द्वाराणि कुलिशायुधाः॥ २८

चतुर्थावृतिमध्यञ्च कोट्यर्धं योजनोन्नतम्।
चतुर्लक्षप्रमाणानि द्वाराणि स्युः पृथक् पृथक्॥ २९

रक्षन्त्यमूनि संघुष्टाः कुलिशायुधपाणयः ।
तत्र सारूप्यसंपन्नाः शिवभक्ता वसन्ति हि ।। ३०

पञ्चमावरणं तद्वत् कोट्यर्धं योजनोन्नतम् ।
त्रिलक्षमानद्वारं तु चतुर्दिक्षु मनोहरम् ।। ३१

तानि स्कन्दगणाः सौम्या रक्षन्ति स्कन्दरूपिणः ।
सामीप्यभाजस्तल्लोके निवसन्ति शिवप्रियाः ।। ३२

दिव्यवर्षसहस्रेण यो भोगो लभ्यते दिवि ।
तद् भोगसुखमक्षय्यं दिनेनेशास्पदे भवेत् ।। ३३

षष्ठमावरणं तद्वत् कोट्यर्धं योजनोन्नतम् ।
विमानशतसङ्कीर्णमप्सरोनृत्तभास्वरम् ।। ३४

द्विलक्षमानद्वारं तद्वैनायकगणैर्वृतम् ।
प्राच्यां कोट्यर्धविस्ताराः सप्त कक्ष्याः समुज्ज्वलाः ।। ३५

मूर्तिभिर्विघ्नराजस्य ष ड्भिश्च दशभिर्वृताः ।
तदन्तर्गृहमानं तु एकविंशति लक्षकम् ।। ३६

त्रिंशल्लक्षार्धविस्तारे माणिक्यमयविष्टरे ।
विराजमानं तेजिष्ठं गजाननमुमासुतम् ।। ३७

*அதன் நடுவே முதல் சுற்று (ஆவரணம்) 50 லக்ஷ யோசனைப் பரப்புள்ளது. 7 லக்ஷப்பரப்புள்ள நான்கு வாயில்கள். இதில் விநாயக கணங்கள் வாயில்களைக் காக்கின்றனர். இரண்டாவது சுற்று 50 லக்ஷ யோசனை. 6லக்ஷ உயரமுள்ள நான்கு வாயில்கள். துந்திஸாத்யனிக கணங்கள் இவற்றைக் காக்கின்றனர். மூன்றுவது சுற்று 50 லக்ஷ யோசனை பரப்புள்ளது. 5 லக்ஷப்பரப்புள்ள நான்கு வாயில்கள். வேதாளங்கள் வஜ்ராயுதமேந்தி இவற்றைக் காக்கின்றனர். நான்காவது சுற்றும் 50 கோடி யோசனை பரப்புள்ளது. நான்கு லக்ஷ யோசனை அளவுள்ள*

நான்கு துவாரங்களை வஜ்ரமேந்திய ஸங்குஷ்ட கணங்கள் காக்கின்றனர். ஸாரூப்யம் என்ற சிவவடிவம் பெற்ற சிவனடியார்கள் இங்குள்ளனர். ஐந்தாவது சுற்றும் 5 கோடி யோசனை உயரமும் 3 லக்ஷயோசனை அளவுள்ள நான்கு வாயில்களும் கொண்டது. ஸ்கந்த கணங்கள் காக்கின்றனர். சிவனது அருகாமை (ஸாமீப்யம்) பெற்ற அடியார்கள் இங்கு உள்ளனர். ஆயிரம் தேவ வருஷங்களில் தேவலோகத்தில் கிடைக்கிற இன்பம் இங்கு ஒரு நாளில் கிட்டுகிறது. ஆறுவது சுற்று 50 கோடி யோசனை உயரமும் 2லக்ஷயோசனை உயரமுள்ள நான்கு வாயில்களும் கொண்டது. நூற்றுக்கணக்கான விமானங்கள் இங்கு உலாவுகின்றன. விநாயகரின் கணங்கள் இதனைக் காக்கின்றனர். இதன் கிழக்கில் ஏழுபகுதிகள். இதில் கணபதியின் பதினாறு மூர்த்திகள் உள்ளனர். அதனுள் 21 லக்ஷயோசனை உயரமும் 15 லக்ஷயோசனைப் பரப்பும் கொண்ட மாணிக்கத் தரையால் அழகான மாளிகையில் உமையின் மைந்தன் கணபதி உள்ளார். (24-37)

दृष्ट्वा विष्णुरनुज्ञातः तेनागात् सप्तमावृतिम्।
कोट्यर्धमानकौन्नत्यां लक्षार्धद्वारमानकाम्।। ३८

कक्ष्याभिस्सप्तभिः श्रेष्ठां गणैः स्कान्दैर्विराजिताम्।
तद्भक्ति सिद्धसारूप्यैर्महात्मभिरलङ्कृताम्।। ३९

तदन्तर्भवनश्चाष्टादशलक्षाणि योजनाः।
माणिक्यविष्टरे पञ्चदशलक्षप्रमाणके।। ४०

आसीनं तत्र वै वल्या प्रियया देवसेनया।
सनकाद्यैर्योगिबृन्दैः सेव्यमानं षडाननम्।। ४१

दृष्ट्वा च तदनुज्ञातो विष्णुः परमया मुदा।
सप्तावरणमध्ये तु पञ्चावरणमद्भुतम्।। ४२

ददर्श तत्र परितो गौरीलोक इतीरितः।
सप्तकोटिप्रमाणेन संयुतो रत्नभूषितः।। ४३

अध्यर्धकोटिमात्राग्रे कक्ष्येयं प्रथमोच्यते।
गौरीभक्तजनैर्जुष्टा सारूप्यङ्गमितैरियम्॥ ४४

पञ्चावरणसंपन्नं पञ्चाशद्योजनोन्नतम्।
तदन्तर्भवनं दिव्यं कोटिमानसमुन्नतम्॥ ४५

पञ्चाशल्लक्षविस्तारे रत्नपीठे निषेदुषीम्।
पीताम्बरधरां देवीं चन्द्ररेखावतंसकाम्॥ ४६

प्रसन्नवदनां कर्णालम्बमाणिक्यकुण्डलाम्।
दृष्ट्वा तयाऽभ्यनुज्ञातो बहुमानपुरस्सरम्॥ ४७

*இவரது அனுமதி பெற்று ஏழாவது சுற்றினுள் விஷ்ணு நுழைந்தார். 50 லக்ஷ யோசனை உயரமும் 50 ஆயிரம் யோசனையளவுள்ள நான்கு துவாரங்களும் ஏழு கட்டுகளும் கொண்ட அது ஸ்கந்தரின் கணங்களால் காக்கப் பெற்றது. அங்கு ஸ்கந்த பக்தர்கள் விளங்குகின்றனர். அதனுள் உள்ள மாளிகை 18 லக்ஷ யோசனை பரப்புள்ளது. அதில் 15 லக்ஷ யோசனை பரப்புள்ள மேடையில் வள்ளி - தேவஸேனையுடன் ஸ்கந்தர், ஸனகாதியர் சூழ அமர்ந்துள்ளார். அவரிடம் அனுமதி பெற்று விஷ்ணு ஏழாவது ஆவரணத்தின் இடையே உள்ள கௌரீலோகத்தினுட் சென்றார். அது ஐந்தாவரணங்கள் கொண்டது. ஏழு கோடி யோசனை பரப்புள்ளது அது. ரத்தினங்கள் பதித்தது. அதில் 1 1/2 கோடியோசனை ஒருகட்டு. ஸாரூப்யம் பெற்ற கௌரீபக்தர்கள் வசிக்குமிடம் இது. அதனுள் ஐந்து சுற்றுகள் கொண்ட தேவியின் மாளிகை. அதன் 50 லக்ஷ விரிவு கொண்ட ரத்தின மேடையில் தேவி அமர்ந்துள்ளாள். பீதாம்பரம் அணிந்தவளாக சந்திர கலை சூடியவளாக காதுகளில் மாணிக்யக் குண்டலத்துடன் தெளிந்த முக ஒளியுடன் காட்சி தருகிறாள். அவளிடம் பெருமதிப்புடன் அனுமதி பெற்று விஷ்ணு உள்ளே சென்றார். (38-47)*

विष्णुः कक्ष्यान्तरं यातः कोटिमात्रसुविस्तृतम्।
तत्रास्ते वृषभश्रेष्ठोऽधिष्ठानं त्रिपुरद्विषः॥ ४८

पञ्चाशल्लक्षमात्रोऽयं पादकोटिचतुष्पदः ।
लक्षप्रमाणशृङ्गं च पादलक्ष श्रुतिद्वयम् ।। ४९

अर्धलक्षककुत्सीमा तावद्वक्त्रप्रमाणकः ।
अर्द्धकोटिप्रमाणेन लाङ्गूलेन युतो वृषः ।। ५०

लक्षप्रमाणवृषणो निश्वासोत्सारितार्णवः ।
अनुज्ञातस्तेन विष्णुः कक्ष्यान्तरमुपेयिवान् ।। ५१

तत् कोटियोजनं भास्वद्विद्रुमस्तम्भशोभितम् ।
तात्रास्तेऽद्भुतचारित्रश्चण्डेश्वर इति श्रुतः ।। ५२

सप्तमातृमहाशास्तृदुर्गाकाल्योऽत्र भैरवैः ।
दृष्ट्वा तास्तदनुज्ञातो विष्णुः कक्ष्यान्तरं गतः ।। ५३

तत्रास्ते शिवभक्तानां नन्दको नन्दिकेश्वरः ।
रत्नवेत्रलसत्पाणिः प्रसन्नवदनांबुजः ।। ५४

अपरः शङ्करः साक्षादन्तकारिगणाग्रणीः ।
राजधान्यां महेशस्य सरूपैः स्वगणैर्वृतः ।। ५५

राजधानीयुतः कक्ष्यपादकोटि प्रमाणकः ।
तस्याः स्वरूपश्चिह्नश्च वेत्ति को नन्दिनं विना ।। ५६

तत्रागत्य महाविष्णुर्विनयेन समन्वितः ।
अपश्यन्नन्दिकेशानं पर्यायं परमेशितुः ।। ५७

अभ्युत्थायाथ नन्दीशः परिरभ्य श्रियःपतिम् ।
पप्रच्छ कुशलं सोऽपि प्रणम्य च गणाधिपम् ।। ५८

असुरैर्जगदाक्रान्तं नाहन्तन्निग्रहे पटुः ।
दर्शयाद्य महेशानं दयालुं नन्दिकेश्वर ।। ५९

அங்கு கோடி யோஜனை விரிவுள்ள கட்டில் விருஷபம் உள்ளது. சிவனது வாஹனமான 50 லக்ஷ அடிஉடல் பருமன் உள்ளது. நான்கு கால்களும் 25 லக்ஷ அடிஅளவுள்ளது. லக்ஷ அடி நீளமுள்ள கொம்புகள் 25 ஆயிரஅடிஅளவுள்ள காதுகள், 50 ஆயிர அடிஅளவுள்ள திமில். அவ்வளவுள்ள வாய். 50 லக்ஷ அடிஅளவுள்ள வால். மூச்சால் கடல் சீறிவெளியேறுகிறது. அதன் அனுமதி பெற்று சண்டேசர் உள்ள கட்டு. அதனைத் தாண்டி ஏழு மாதாக்கள், சாஸ்தா, துர்க்கை, காளி, பைரவர்கள் இவர்களின் கட்டு. இதனுள் சிவபக்தத் தலைவர் நந்திகேசரின் இருப்பிடம். அவர் சங்கரனின் மாற்றுருவம். மஹேசனின் ராஜதானிக்கு அவரே காவலர். நந்தி விஷ்ணுவை வரவேற்று அணைத்துக்குசலம் விசாரித்தார். உலகை அஸுரர்கள் ஆக்கிரமித்துத் துன்புறுத்துவதை ஈசனிடம் தெரிவித்து அஸுரர்களை அடக்க அவர் ஒரு வல்லவர் என்பதால் அவரது உதவியைப் பெற வந்துள்ளதை விஷ்ணு நந்தியிடம் தெரிவித்தார். (48-59)

इत्युक्तस्स तु नन्दीशः शीघ्रं गत्वा यथोत्तमम्।
समयं प्राप्य विज्ञाप्य विष्णोरागमनं शनैः ॥ ६०

तदनुज्ञाञ्च लब्ध्वाऽथ चतुष्कोटिप्रमाणकाम्।
राजधानीं निनायाशु शिवस्य पुरुषोत्तमम् ॥ ६१

ध्वजदण्डसमाकीर्णपताकान्तरिताम्बराम्।
विराजिविद्रुमस्तम्भां माणिक्यमयभित्तिकाम् ॥ ६२

वज्राधोवलभीगुप्तवेदिकां रत्नतोरणाम्।
चिन्तामणिमयक्रीडापर्वतां रत्नकुट्टिमाम् ॥ ६३

कल्पादिनिबिडारामां कल्पाराजितवापिकाम्।
एतादृशीमुल्लसदिन्द्रनीलविटङ्कवालीविहरत् कपोतम् ॥ ६४

मयूर नृत्तावहवाद्यघोषां ददर्श विष्णुः शिवराजधानीम्।
एककोटिप्रमाणा सा षड्द्वारा षोडशारका ॥ ६५

तन्मध्ये राजते पीठे षष्टिलक्षायुते शुभे।
पञ्चाशल्लक्षविस्तारे काञ्चनप्रवरासने॥ ६६

त्रिंशल्लक्षणप्रमाणे तु तेजोमण्डलमध्यमे।
सहस्रदलपद्मस्य लक्षाग्रे कर्णिकान्तरे॥ ६७

आसीनमञ्जुलं देव्या मञ्चमध्ये विराजितम्।
आपादमौलिविलसद् भूषणाभासमुज्ज्वलम्॥ ६८

शक्रोपलसमच्छायग्रीवातेजोविराजितम्।
उत्फुल्लपङ्कजच्छाया प्रतिस्पर्द्धिमुखत्विषम्॥ ६९

गिरिजामुखपाथोजषट्पदीकृतचक्षुषम्।
चन्द्ररेखावतंसं तं ददर्श पुरुषोत्तमः॥ ७०

इति द्वितीयोऽध्यायः

*நந்தி உடன் ஈசனது குறிப்பறிந்து உள்ளே சென்று அவரது அனுமதி பெற்று விஷ்ணுவிடம் வந்து அவரைஅழைத்துக் கொண்டு உள்ளே சென்றார். அது சிவராஜதானீ. கொடி மரங்களில் கொடிகள் வானளாவப் பறக்கின்றன. பவழத்தாலான தூண்கள், மாணிக்கத்தாலான சுற்றுச் சுவர்கள், வைரம் பதித்த வளைவுகள், ரத்தினத் தோரணங்கள், சிந்தாமணியாலான விளையாட்டுமலை, கற்பகவிருஷங்கள் நிறைந்த தோட்டங்கள், கல்பகவிருக்ஷங்கள் சூழ்ந்த நீரோடைகள் இந்திர நீலக்கற்களாலான மாடக்குழிகளில் புருக்கள், வாத்ய இசைக்கேற்ப ஆடுகிற மயில்கள், இவ்வாறமைந்த சிவராஜதானி. ஆறுதுவாரங்களும் 16 கோணங்களும் கொண்ட மண்டபம். அதன் நடுவே அமைந்த வெள்ளிப்பீடம். அதன்மீது தங்கத்தாலான ஆஸனம். பேரொளிமிக்க சூழ்நிலை. ஆயிரம் இதழ்தாமரையாலான ஆஸனத்தின் மீதுள்ள மஞ்சத்தின் நடுவில் ஈசன் தேவியுடன் அமர்ந்துள்ளதை விஷ்ணு கண்டார். சிரம் முதல் கால்வரை அணிகளின் வரிசை. இந்திர நீலக்கல் போன்ற சாயையுள்ள*

கழுத்துள்ளவர். மலர்ந்த தாமரையின் அழகைப் பழிக்கின்ற அழகிய முகமுள்ளவர். மலைமகளின் முகத்தாமரையை நாடிநிற்கிற வண்டு போன்ற கண்கள் உள்ளவர். சந்திரகலை சூடிய அந்தப்பரமனைப் புருஷோத்தமன் கண்டார். *(60-70)*

—*—

## तृतीयोऽध्यायः

सूतः—

तलस्सन्निधिमासाद्य शङ्करस्य रमापतिः।
प्रणिपत्य च साष्टाङ्गं भूयो भूयः कृताञ्जलिः।
माधवः स्तोतुमारेभे द्राक्षामधुरया गिरा॥ १

विष्णुः—

रक्षित्रे जगतां नमो दलयते दैतेयसङ्घान्नमो
नेत्रे कर्मगतिं तमो निनयते लोकांस्तदाहन्नमः।
स्थात्रे च प्रलये समस्तगतये सर्वप्रपञ्चात्मने
सर्वेषामपि साक्षिणे नम इदं साम्बाय तुभ्यं नमः॥ २

श्रुत्यन्ताम्बुरुहाकरे सुकृतिनां हृत्पङ्कजे योगिनां
स्वच्छन्दं परया मुदा विहरते हंसाय भूम्ने नमः।
भूतानां पतये नमः पुरुभिदे पत्ये पशूनां नमः
कण्ठे निष्कवते हलाहलमुमा कान्ताय तुभ्यं नमः॥ ३

तत्त्वानां परतः स्थिताय महसे षट्त्रिंशते भूयसे
स्वासीनाय षडम्बुजेषु यमिनां सिद्धिप्रदात्रे नमः।
पादाम्भोरुहषट्पदायितहृदां सद्भक्तिभाजां व्रजे
वात्सल्यं दधते च वाङ्मनसयोर्दूराय तुभ्यं नमः॥ ४

''அத்தியாயம்''-3

ஸூதர் விளக்குகிறார் - விஷ்ணு சங்கரரின் எதிரில் வணங்கி நின்று திராக்ஷையைப் போன்ற இனிய குரலில் துதித்தார். அம்பிகையுடன் கூடிய உமக்கு வந்தனம். நீர் உலகைக் கண்காணிப்பவர். அஸுரக் கூட்டத்தைச் சிதறச் செய்பவர். செயலின் பின்விளைவைக் கூட்டி வைப்பவர். உலகை வழிநடத்திச் செல்பவர். பிரளயத்திலும் நிலைத்திருப்பவர். அனைவருக்கும் சென்றடையுமிடம். எல்லா உலகங்களும் நீரே! எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி நீரே! வேதமெனும் தாமரைக்குளத்திலும் புனிதர்களான யோகிகளின் இதயத்திலும் தன் இஷ்டப்படி ஆனந்தமாக விளையாடுகிற ஹம்ஸர், பெருமான், உயிரினத்தின் தலைவர், முப்புரமழித்தவர், பசுபதி, கழுத்தில் ஹாலாஹலவிஷமரு கொண்டவர், உமையின் கணவர், 35தத்துவங்களுக்காப்பாற்பட்ட பேரொளி, யோகிகளின் ஆறு ஆதாரசக்கிரங்களில் அமர்ந்து யோக சித்தி அருள்பவர். தன் திருவடிகளாகிற தாமரை மீது உள்ளத்தை வண்டாகச் சுற்றச் செய்து பக்தர் குழாமிடம் தாயன்பு கொண்டவர், வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதவர். உமக்கு வந்தனம். *(1-4)*

संवर्तोऽहमिति स्फुटं विदधते निस्ताण्डवं ताण्डवं
भूयो जातु सिसृक्षयेक्षितवते विश्वं बहु स्यामिति।
सृष्टं क्षोभयते प्रधानपुरुषौ सृष्ट्वा प्रपञ्चान् बहून्
अन्तर्यामितया प्रविश्य नयते कर्माणि तुभ्यं नमः॥ ५

उद्भूते स्थिरधर्मकन्दजठराद्विज्ञाननाले मह-
त्वैश्वर्यादिदले हृदम्बकुहरे वैराग्यसत्कर्णिके।
ओङ्कारार्थमुदारशक्ति परमज्योतिर्महायोगिनो
ये ध्यायन्ति तदात्मना त्रिजगतामीशाय तुभ्यं नमः॥ ६

सर्वेऽमी पशवो वयं स हि भवान् देवः पशूनां पतिः
दीप्तैरंशुभिरावृतं परतरं ज्योतिर्जगद्व्यापि च।

नित्यं निष्कलमित्यवेत्य गिरिजाकान्तं भवन्तं शिवं
कैवल्यं मुनयः प्रयान्ति महसे तत्तादृशे ते नमः ॥ ७

*''நான் பிரளயகாலத்துத் தீ'' எனத் தாண்டவமாடி உலகை மறைத்து ''நான் பலவாக ஆவேன்'' என அனைத்தையும் படைத்து பிரகிருதியும் புருஷனுமாகத் தனித்து உருவாகி இணைந்து குழப்பிப் பல உயிரினமாகி அவற்றுள் நுழைந்து அந்தர்யாமியாகி செயலில் இயக்குபவர், தர்மம் எனும் கிழங்கினுள் கருவாக உருவான விஞ்ஞானமென்ற கொடி மீது மஹத் ஐச்வர்யம் முதலிய இலைகளின் மேல் உள்ள இதயத்தாமரையின் நடுவில் வைராக்யம் என்ற மொக்கின் மீது ஓங்காரத்தின் உட்பொருளும் பேராற்றல் கொண்டதுமான பேரொளியாக உம்மை பெரும் யோகிகள் தியானிப்பர். மூவுலகின் ஈசன் நாங்கள் அனைவரும் பசுக்கள். நீர் ஒருவரே பசுபதி. பேரொளியால் சூழப்பெற்ற பெரும்பொருள். உலகை அளாவிநிற்கிற சோதி. இவ்வாறு உமையின் மணாளனை உம்மை யோகிகள் உள்ளத்தில் கண்டு முக்தியைப் பெறுகின்றனர். அந்தப் பெருஞ் சோதிக்கு வந்தனம். (5-7)*

ये नीचोत्तममध्यमैस्तनुभृतो गर्भैस्सगर्भैस्तथा
प्राणायामचयैर्मलत्रयमपाकृत्यात्मनैक्यं तव ।
प्राप्यानन्दघना भवन्ति त इमे धन्यास्तदानन्ददं
भक्ताभीप्सितदायकं परशिवं भूत्यै नमस्याम्यहम् ॥

त्वत्सायुज्यनि दानमीश्वर भवत्तत्वप्रबोधं बुधाः ।
यं वाञ्छन्ति तदर्थनं प्रकरणद्वेषी त्युपेक्ष्यैव तत् ॥ ८

भावत्कं सततं चतुर्दशजगत्त्राणं नियोगं दृढात्
विश्वासादनुतिष्ठतो मम दयामूर्ते प्रसीदाधुना ॥ ९

*நீசம், உத்தமம், மத்யமம், ஸகர்ப்பம், நிகர்ப்பம் என்ற பிராணாயாம முறைகளால் ஆணவம், கர்மம், மாயை என்ற மும்மலத்தை அகற்றி ஆத்மதத்துவத்துடன் ஒன்றி உம்மோடு*

*இணைந்து யோகிகள் ஆனந்தச் செறிவுற்றவராவர். அந்த ஆனந்தத்தை வழங்குபவர், பக்தர் விரும்பியதை வழங்குபவர், பரமசிவன், இவரை நன்னிலை பெற வந்தனம் செய்கிறேன் ஈச்வர! உம்முடன் இணைய (ஸாயுஜ்யம் பெற) உமது தத்துவ நிலையுணர்வை அறிஞர் பெரிதும் விரும்புகின்றனர். இந்நிலையில் அதனை நான் நாடுவது பொருந்தாது. 14 உலகங்களையும் காக்கும் பொறுப்பில் என்னை அமர்த்தியுள்ளீர். அதனை நம்பிக்கையுடன் செய்துவருகிற எனக்கு தயையின் வடிவான நீர் இப்போது அருள் புரிவீர். (8-9)*

इति स्तुत्वा महादेवं मधुरं मधुसूदनः।
पुनः प्रणम्य साष्टाङ्गं कृताञ्जलिरुवाच ह॥ १०

लोकरक्षाविधानेऽहं नियुक्तोऽस्मि महेश्वर।
तत्कार्यस्थैर्यलाभाय कुरु पूजामितीरितः॥ ११

इतः परं किं भाग्यं मे कृतार्थोऽहं न संशयः।
किं ते प्रियतमं क्षेत्रं पूजायै शीघ्रसिद्धिदम्॥ १२

किं वा पूजाविधानं ते किं वा मन्त्रं महेश्वर।
स्वामिनोक्तप्रकारेण करिष्ये पूजनं तव॥ १३

इत्येवं प्रार्थितो देवो विष्णुना भक्तिपूर्वकम्।
देव्याऽलङ्कृत वामाङ्गः कृपया वाक्यमब्रवीत्॥ १४

*மகாதேவனை இனிய வாக்கால் துதித்த நாராயணன் மறுபடி வணங்கி எழுந்து கைகூப்பி வேண்டினார். மகேச! உலகைக் காக்கிற பொறுப்பில் என்னை அமர்த்தினீர். அது வலிவு பெற உம்மை வழிபடச் சொன்னீர். இது என் பாக்கியமே. உம்மை வழிபடச் சிறந்த க்ஷேத்திரத்தையும் வழிபடுகிற முறையையும் அதற்கான மந்திரத்தையும் கூறுவீர் என விஷ்ணுவால் வேண்டப் பெற்ற உமையின் மணாளன் கூறினார். (10-14)*

आगमोक्ता हि बहवो मार्गास्सन्ति सुदुर्गमाः।
अनन्तशाखाभेदैश्च प्रोक्ता मार्गास्तथैव हि॥ १५

तत्रापि तत्र सारांशमुद्धृत्याहं वदामि ते।
स्थिरं लिङ्गं चरञ्चेति द्विविधं लिङ्गमुच्यते ॥ १६

मर्त्यानां तु चरा पूजा प्रशस्ता सुलभा हरे।
केचित् स्थिराञ्च कुर्वन्ति भक्तिबाहुल्यभाविताः ॥ १७

कर्तव्यऽद्य स्थिरा पूजा भवता मम तुष्टये।
वक्ष्ये स्थानं पुण्यतमं मम प्रत्यक्षकारकम् ॥ १८

जम्बूद्वीपे महापुण्ये कावेरीति महानदी।
मत्स्वरूपा महापुण्या महोपकृतिशालिनी ॥ १९

आदिमब्रह्मणः कल्पे नीताऽगस्त्येन पुण्यदा।
शतं गते ब्रह्मणां च विष्णुरेको विनिर्गतः ॥ २०

द्वितीयस्त्वमिदानीं तु कल्पितो लोकरक्षणे।
विष्णुकल्पशतस्यान्ते रुद्रः कारणसंभवः ॥ २१

संहृत्य लोकव्यापारं मम लोकं प्रयास्यति।
एवं रुद्रशतस्यान्ते ब्रह्माण्डं लयमेष्यति ॥ २२

स्थास्यामि चाहमेवैकः स्वया शक्त्या समन्वितः।
कल्पयिष्यामि चानन्दताण्डवं परमं मुदा ॥ २३

रहस्यमेतत् कथितं न वक्तव्यं च कस्यचित्।
तव प्रबोधहेत्वर्थमेतावत्समुदीरितम् ॥ २४

*ஆகமங்களில் வழிபாட்டுமுறைகள் பல கூறப்பட்டுள்ளன. அதன் சாரம் இது. ஸ்திரம் சரம் என எனக்கு இரு லிங்கங்கள். மனிதர்களுக்குச் சரபூஜையே சிறந்தது. எளியதும் கூட. பக்திமிக்கவர் ஸ்திர லிங்கத்தில் வழிபடுவர். நீர் என் ஸ்திரலிங்கத்தையே என் அருள் பெற வழிபடுவீர். மிகப்புனிதமான ஜம்பூத்வீபத்தில் காவேரீ எனும் என் வடிமான*

புனித நதி. மக்களுக்குப் பெரிதும் உதவுபவள். முதல் பிரும்மகல்பத்தில் அகஸ்தியரால் உருவாக்கப் பெற்றவள். நூறுபிரும்மகல்பங்கள் கடந்ததும் அக்காலத்து விஷ்ணு வெளியேறினார். நீர் இரண்டாவது விஷ்ணு. (நூறு பிரும்மகல்பங்களுக்கு ஒரு விஷ்ணு என்று விகிதம் உள்ளது.) நூறு விஷ்ணு கல்பங்களுக்கு ஒரு ருத்ரகல்பம். ருத்ரர் மூல காரணமான என்னிடமிருந்து தோன்றியவர். உலகப் போக்கை முடித்தபின் ருத்ரர் என் உலகத்தை அடைவார். இவ்வாறு நூறு ருத்ரர்கள் ஆண்டபின் பிரும்மாண்டம் என்னிடம் லயமடையும். நான் என் சக்தியுடன் ஆனந்தமாக பிரளய தாண்டவம் ஆடுவேன். இது தான் ரகசியம். பிறருக்கு இதை விளக்கவேண்டாம். (15-24)

तत्तिष्ठतु परां वक्ष्ये मम पूजाविधिं तव।
तेन मन्त्रेण सिद्धेन पूजा कार्या फलार्थिभिः॥ २५

तेषाञ्च तत्क्षणादेव सिद्धिः स्यान्नात्र संशयः।
इममागमसिद्धान्तुं न जानाति जनो भुवि॥ २६

त्वामुद्दिश्य मया प्रोक्तं गोपनीयं प्रयत्नतः।
सान्तं यान्तं द्विरावृत्य प्रथमं मन्त्रराजकम्॥ २७

प्रणवञ्च समुच्चार्य ततः पञ्चाक्षरं जपेत्।
याजुर्वेद्यमिमं मन्त्रं शतरुद्रीयमध्यगम्॥ २८

समस्तैर्मन्त्रबीजैश्च दशाङ्गन्यासमारभेत्।
अङ्गन्यासादिकं कृत्वा पादाद्यञ्च शिरोऽन्तकम्॥ २९

ततः कृत्वा करन्यासमेवं ध्यायेन्ममाकृतिम्।
वरदाभयहस्तञ्च त्रिणेत्रं सूर्यसन्निभम्॥ ३०

कोटिचन्द्र प्रतीकाशं शान्तमत्यन्त कोमलम्।
भुजैर्द्वादशभिर्युक्तं भुजङ्गमविभूषणम्॥ ३१

दशायुधसमोपेतं दिव्यमङ्गलविग्रहम्।
वामपार्श्वपरिष्कारायितशैलेन्द्रकन्यकम्॥ ३२

व्याघ्रचर्मपरीधानं भस्मोद्धूलितविग्रहम्।
चन्द्ररेखाकृतोत्तंसं ध्यायेन्मद्रूपमव्ययम्॥ ३३

*இது தான் சிறந்த பூஜை. பிரணவம், ஹர ஹர, பஞ்சாக்ஷரம் என 10 அக்ஷரங்கள் கொண்ட மந்திர அமைப்பு. பஞ்சாக்ஷரம் யஜுர் வேதத்தின் நடுப்பகுதியான சதருத்ரீயத்தின் நடுப்பகுதியான நம: சிவாய (நமச்சிவாய) என்பது. ஒவ்வொரு எழுத்தைக் கொண்டு தலைமுதல் கால்வரை தசாங்க நியாஸம். அங்கநியாஸம் கரநியாஸம் செய்த பின் தியானம் செய்யவும். தியானிப்பதற்கான உருவம் - வர அபயமுத்திரைகள் கொண்ட இருகைகள். மற்றும் பத்துகைகள், மூன்று கண்கள் உள்ளவர். சூரியனைப் போன்று ஒளிமிக்கவர் கோடி சந்திரர்கள் போன்ற குளிர்ச்சியுள்ளவர், அமைதிமிக்கவர், மென்மை மிக்க மேனியர், பாம்பணி பூண்டவர், 10 ஆயுதங்கள் ஏந்தியவர். மங்கள வடிவினர். இடதுபுறத்தில் மலைமகளால் அலங்கரிக்கப் பெற்றவர். புலித்தோல் உடுத்தியவர், விபூதி பூசிக்கொண்டவர். சந்திரகலை சூடியவர், எங்கும் அகலாதவர் என்று என் வடிவைக் காணலாம். (24-33)*

निष्कलश्चाप्यचिन्त्यश्च निर्लेपो निरवद्यकः।
भवामि सकलश्चैव भक्तानुग्रहकारणात्॥ ३४

मध्वाज्यशर्करादुग्धकदलीपनसाम्रकैः।
अभिषिच्य तथा शुद्धैः पञ्चद्रव्योदकैरपि॥ ३५

वस्त्रैराच्छाद्य मृदुलैरालिप्याङ्गानि चन्दनैः।
कर्पूरगन्धिभिश्चारु कल्हारोत्पल दामभिः॥ ३६

पायसाद्यैश्च नैवेद्यैः पूज्य मां सिद्धिमाप्नुयात्।
दशाक्षरः स मन्त्रोऽयं दशेन्द्रियविशोधकः॥ ३७

कर्तव्य एव भवता शीघ्रं सिद्धिर्भविष्यति।
नियमं किञ्चिदालम्ब्य कुरु पूजामतन्द्रितः ॥ ३८

पूजाया नियमेनाहं तुष्टस्तव जनार्दन।
मच्चक्रमायुधश्रेष्ठं दास्यामि तव वाञ्छितम् ॥ ३९

तद्बलेनासुराञ्जित्वा लोकान्रक्षिष्यसि ध्रुवम्।

*சிந்தனையால் உணரமுடியாததும் அப்பழுக்கும் குறைவுமற்றதான நிஷ்கல வடிவமும் கொண்டவனுயினும் பக்தர்களுக்கு அருள்புரிவதற்கென ஸகல வடிவ மேற்கிறேன். அதனை தேன், நெய், சர்க்கரை, பால், வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம், இவற்றின் சாறு, தூய நீர் இவற்ருல் நீராட்டி ஆடை சாற்றி கற்பூரம் கலந்த சந்தனம் பூசி ஆம்பல் அல்லிப் பூமாலை அணிவித்து பாயஸம் முதலியவற்றை நிவேதனம் செய்து வழிபடவேண்டும். முன் கூறிய பத்தக்ஷர மந்திரத்தை ஜபிக்க ஞான - கர்மேந்திரியங்கள் தூய்மை பெறும். இவ்வாறு வழிபட வழிபாட்டாலும் உம்நியமங்களாலும் மனம் நிறைந்து நீர் விரும்பிய சக்கரத்தை அளிப்பேன். அதனுல் அஸுரர்களை வென்று உலகைக் காப்பீர். (34-39)*

शीघ्रं सिद्धिप्रदं वक्ष्ये क्षेत्रं पुण्यतमं तव ॥ ४०

बलाढ्योऽहं बलाढ्योऽहं लोकेष्विति पुरा खलु।
शेषवाय्वोर्विवादोऽभूद्देवानश्चैव पश्यताम् ॥ ४१

फणाग्रेणाखिलां भूमिं मया संबिभ्रता तव।
कथं वा समताबुद्धिरवलेपश्च कीदृशः ॥ ४२

सहस्रं मेरुशृङ्गाणां सहस्रेण फणैरहम्।
आक्रमामि बलाढ्यैश्च तदीषदपि चालय ॥ ४३

इत्युक्त्वा फणिनां नेता मेरोः शृङ्गाणि सर्वतः।
मन्यन्ते हि यथा देवा मेरुचापे पुरान्तकः ॥ ४४

आरोपयत् किमहिराण्मौञ्जीमिति तथाऽहिराट्।
वालेनावेष्ट्य मूले त्रिर्मेरोरुन्नमितैः फणैः ॥ ४५

आक्रामति स्म वायुश्च ततः क्रोधसमन्वितः।
आत्मीयबलसर्वस्वमाविष्कृत्वाऽविवेकतः ॥ ४६

उद्वेलयन् पयोराशीन् सप्त सप्तापि पर्वतान्।
उत्कम्पयन्महीं कृत्स्नामुर्वीरुहसहस्रतः ॥ ४७

आकाशं निबिडीकुर्वन्नुज्जृम्भत ससम्भ्रमम्।
तदा देवाश्च गन्धर्वास्सिद्धविद्याधरा यतः ॥ ४८

किमयं जगतां क्षोभः किं कल्पान्तः समागतः।
आकालिकः किं प्रलय इत्यत्याहितमाययुः ॥ ४९

*விரைவில் சித்தி அளிக்கிற க்ஷேத்திரம் பற்றிய வரலாறு இது. நானே வலிவு மிக்கவன், நானே வலிவு மிக்கவன் என ஆதிசேஷனுக்கும் வாயு தேவனுக்குமிடையே போர் நிகழ்ந்தது. ''என் படங்களின் (தலைகளின்) நுனியில் இந்த பூமி அனைத்தையும் தாங்குகிறேன். எனக்கு நீ ஈடா? இது செருக்கின் விளைவு தானே! என் ஆயிரம் தலைகளில் மேருவின் ஆயிரம் சிகரங்களையும் தாங்கிநிற்கிறேன். சிறிது இதனை அசைப்பாய்! சிவன் தன் மேருவாகிய வில்லில் பாம்பரசனை நாணாகப் பிணைத்தார். பாம்பரசனும் மேருவின் அடியில் தன் வாலால் மூன்று சுற்றுகள் சுற்றித் தலைகளால் வளைத்தான்'' என்று வாதிற்கு அழைத்தான். வாயுவும் பகுத்தறிவுக்குறையால் உடன் உருவெடுத்து தன் வலிவு முழுவதையும் கொண்டு ஏழு கடல்களையும் கலக்கி ஏழு குலபர்வதங்களையும் ஆட்டி பூமியை நடுங்கச் செய்து ஆயிரக்கணக்கான மரங்களைப் பிடுங்கி வானில் எறிந்து பரபரப்புடன் செயல்பட்டான். தேவர்களும் மற்ற வானவர்களும் உலகத்தை நடுங்கச் செய்கிற பிரளயம் நெருங்கியதோ என நடுங்கினர். (40-49)*

उत्तरोत्तरमाधिक्यादेवं भञ्जयतो जगत्।
प्रभञ्जनस्य वर्षाणि सहस्राण्यतिचक्रमुः ।। ५०

एतस्मिन्नन्तरे तस्य फणीन्द्रस्य फणाश्चलम्।
किंचित् चालयितुं चापि न शशाक प्रभञ्जनः ।। ५१

तदाऽतिकुपितो वायुरहङ्कारविजृम्भितः।
प्राणिनां प्राणवायूंश्च स जग्राह जगत्त्रये ।। ५२

तदा तु प्राणिनस्सर्वे निष्प्राणत्वान्मृता इव।
ततस्सम्भूय सर्वाश्च देवतास्समचिन्तयन्।। ५३

वयन्तु फणिनामीशं स्तुत्वा मधुरया गिरा।
अवकाशपयामोऽत्र वायोरितरथा जगत्।। ५४

नष्टं स्यादिति निश्चित्य शेषस्यान्तिकमाययुः।
आगत्य तुष्टुवुः शेषं सर्वे च सुरपुङ्गवाः ।। ५५

देवाः-

भो भो फणीन्द्र भवता भूभारं वहता जगत्।
रक्षितं प्रागिदानीन्तु कथं संह्रियते क्षणात्।। ५६

पलायनपरो वायुस्तव स्थास्यति किं पुरः।
अवकाशं दापयाद्य परिहर्तुं जगत्क्षयम्।। ५७

इति स्तुतः सुरेन्द्राद्यैः फणिनामग्रणीर्मुदा।
फणपार्श्वे ददौ किञ्चित् गतिं पालयितुं जगत्।। ५८

उद्घाटयामास वायुस्तद्रन्ध्रात् पञ्च पञ्च च।
वेगेन मेरोः शृङ्गाणि भूरिपुण्यलतानि च ।। ५९

மென்மேலும் சிறிச்சிறி உலகைச் சிதறச் செய்கிற வாயுவின் வேகம் ஆயிரம் ஆண்டுகள் முடிந்தும் அடங்கவில்லை.

*பாம்பரசனின் ஒரு தலையைக் கூட வாயுவால் அசைக்க இயலவில்லை. வாயு அகந்தை மிகுதியால் மக்களின் உயிர்க்காற்றசைவை ஸ்தம்பிக்கச் செய்தான். மக்கள் உயிரின் அசைவின்றி மடிந்தனர். இந்நிலையில் தேவர்கள் கலந்தாலோசித்தனர். நாகராஜனைத் துதித்து வாயுவிற்குச் சிறிது இடமளிக்க வேண்டினர். பாம்பரசரே! பூமியைத் தாங்குகிற நீர் இதுவரை உயிரினத்தைக் காத்தீர். இப்போது உயிரினம் அழியத்துவங்கியுள்ளது. எப்போதும் ஓடிக் கொண்டே இருக்கிறவாயுவிற்கு உம்முடன் போட்டி போட இயலாது. உலகம் அழியாதிருக்க வாயுவிற்கு நீரே சிறிது இடமளிப்பீர் எனத் தேவர்களின் வேண்டுகோளை ஏற்று தன் தலைகளின் இடையே சிறிது இடைவெளியைத் திறந்துவிட்டார். வாயு உடன் அந்த இடுக்குகளின் வழியே மேருவின் சிகரங்களை 5-5 ஆகப்பெயர்த்து வீசினார் (50-59)*

कतिचित्तत्र मग्नानि क्षित्यामर्धं तु कानिचित् ।
प्रकाशितानि शृङ्गाग्रमात्रदृश्यानि कानिचित् ॥ ६०

तत्र तत्र क्षितितले पेतुश्शृङ्गाणि वेगतः ।
तत्रान्वर्थाभिधानं तु कल्याणमिति किञ्चन ॥ ६१

मध्यमं शिखरं मेरोः केलीस्थानं सदा मम ।
कावेर्या दक्षिणे तीरे मग्नं सर्वात्मना भुवि ॥ ६२

तच्छीर्ष्णि वेदशिरसि विद्येवाज्ञानमाथिनी ।
तेजिनीलतिका भाति तेजसा दिव्यरूपिणी ॥ ६३

तज्जातीयैर्लताभिश्च क्षेत्रं कल्याणलाञ्छितम् ।
आवृतं पुण्यभूमिः सा सर्वसिद्धिप्रदायिनी ॥ ६४

मेरोर्निपतिते शृङ्गे कावेर्याश्चातिदूरतः ।
सपादयोजनान्ते च तीर्थं तत्रास्ति पुण्यदम् ॥ ६५

तीर्थपुष्करिणी नाम सर्वतीर्थफलप्रदम् ।

गत्वा त्वमपि तत्राशु नियमेन समन्वितः ॥ ६६

कुरुष्व पूजां विधिवद्भक्त्या परमया युतः ।
सर्वे देवाश्च मुनयः त्वामद्यानु व्रजन्ति च ॥ ६७

तस्य क्षेत्रस्य माहात्म्यं कस्यापि न महीतले ।
तवाभीष्टं प्रदास्यामि श्रीपते गच्छ सत्वरम् ॥ ६८

பெயர்ந்த விழுந்த மேருவின் சிகரங்கள் ஆங்காங்கு விழுந்து பூமியினுள் மறைந்தன. அவற்றில் கல்யாணம் என்ற சிகரம் மட்டும் காவேரியின் வடகரையில் விழுந்து பூமியினுள் ஆழ்ந்து மறைந்தது. மிகவும் மங்களகரமான விளையாட்டுத்திடலாக மேருவில் துலங்கிய சிகரம் அது. வேதத்தின் தலைப்பகுதியாக உபநிஷத் துலங்குவது போல் அதன் கொடுமுடியில் தெய்வத்தன்மைமிக்க ''தேஜினிக்கொடி'' (வீழிச்செடி) துலங்குகிறது. அதனைச்சுற்றி அவ்வினத்தைச் சார்ந்த செடிகள் பல உள்ளன. அது மிகப்புனிதமான செடி. அந்த பூமியும் மிகப்புனிதத் தன்மையும் மங்களத் தன்மையும் மிக்கது. மேருவின் சிகரம் விழுந்த இடத்தினருகே காவேரிக்குச் சற்றுதூரத்தில் ஒரு நீர் நிலை ''தீர்த்த புஷ்கரிணீ'' உள்ளது. நீர் அங்கே சென்று நியமத்துடன் என்னை வழிபடுவீர். தேவர்களும் ருஷிகளும் உம்மைப் பின் தொடர்வர். லக்ஷ்மீபதியே! நீர் விரைவில் அங்கு செல்வீர். நீர் விரும்பியதை நான் வழங்குவேன் என்றார். (60-68)

सूतः—

एवं नियुक्तो भगवान् लक्ष्मीपतिरनुत्तमम् ।
तेजिनीवनमन्वीक्ष्य जगाम मुनिभिः सुरैः ॥ ६९

ब्रह्माद्यैस्सुरपुङ्गवैस्सुरमुनीन्द्रैर्नारदाद्यैस्तथा
विश्वामित्रवसिष्ठभार्गवमुखैः सिद्धर्षिसङ्घैरपि ।

गत्वैवानुगतो मुदा स भगवांस्तत्तेजिनीकाननं
कल्याणाचलशृङ्गभूषितमगादन्विष्य लक्ष्मीपतिः ॥ ७०

इति तृतीयोऽध्यायः

*இவ்வாறு நியமனம் பெற்ற விஷ்ணு உடன் முனிவருடனும் தேவர்களுடனும் தேஜினீ வனத்தை நாடி வந்தார். பிரும்மா முதலிய தேவர்கள் விச்வாமித்ரர் வஸிஷ்டர் பார்க்கவர் முதலிய ருஷிகள் பின்தொடர அந்த கல்யாணாசலம் என்ற மேருவின் சிகரம் பதிந்த வீழிக்காட்டைத் தேடி வந்தார். (69-70)*

—*—

## चतुर्थोऽध्यायः

दक्षिणाभिमुखो गच्छन् कावेरीमतिलङ्घ्य च ।
तत्क्षेत्रे तेजिनीं दिव्यां ददर्श मधुसूदनः ॥ १

त्रयी किं विधृताकारा विद्या मूर्तिमती किमु ।
सिद्धिः किं तपसामेवंरूपेत्यमनुताच्युतः ॥ २

कृतार्थोऽहं कृतार्थोऽहं दृष्टं येन स्थलोत्तमम् ।
दृष्टा च तेजिनीवल्ली सर्वसिद्धिप्रदायिनी ॥ ३

ततः पूजाऽत्र कर्तव्या शिवस्य परमात्मनः ।
इति निश्चित्य कावेरीं स्नानाय मनसाऽस्मरत् ॥ ४

स्मृतमात्रेण लोकैकपूज्या सा सह्यकन्यका ।
हरेराह्वानमात्रेण भक्त्या परमया युता ॥ ५

कृतार्थाऽहं कृतार्थाऽहं कृतार्थाऽहं न संशयः ।
स्नानाय येन लक्ष्मीशः सस्माराखिलपावनः ॥ ६

इति तत्रांशतः स्थित्वा समीपं मुरवैरिणः।
सर्वात्मना समागन्तुं लोकरक्षाविधायिनः॥ ७

पुष्पद्रुतेः पूर्वभागाद्विभज्याशु विनिर्गता।
शैवालकेशा पाथोजवदना शफरेक्षणा॥ ८

आवर्तनाभिरालोलफुल्लकल्हारमालिका।
कोकस्तनी कम्बुकण्ठी सैकतश्रोणिमण्डला॥ ९

वीचीबाहुलता फेनचन्दना यादसां रवैः।
आदधाना हरेः स्तोत्रं शिवभक्तिविजृम्भणम्॥ १०

मज्जनैः प्रोक्षणैश्चापि दर्शनैः प्लवनैरपि।
पार्श्वद्वयस्थितान् लोकान् पावयन्ती पुनः पुनः॥ ११

आकाशचारिणो वेदान् सिद्धविद्याधरानपि।
पावयन्ती जगत्पूज्यैर्वातोद्धूताम्बुबिन्दुभिः॥ १२

घटिकात्रयमात्रेण तेजिनीवनमुत्तकम्।
यत्र तद्दक्षिणे भागे प्रवहन्ती हरेः पुरः॥ १३

आगत्य सा हरिनदी हरिमान्या हरिश्रुता।
इत्याख्यात्रितयं भेजे विशिष्यात्र मरुद्वृधा॥ १४

ब्रह्महा च सुरापायी स्वर्णस्तेयी गुरोरपि।
पत्नीजारस्तथा सङ्गी तथान्ये पापिनो जनाः॥ १५

यस्या दर्शनमात्रेण मुच्यन्ते सर्वकिल्बिषैः।

''அத்தியாயம்'' - 4

ஸூதர் விளக்குகிறார் - தெற்கு நோக்கி வந்த விஷ்ணு காவேரியைத் தாண்டியதும் தெய்வத் தன்மை கொண்ட வீழிச்செடியைக் கண்டார். (வீழிஎன்பது ஒரு செடி. மிழலை

என்பது ஊரின் பெயர். இவ்வூருக்கு ''பூகைலாஸம்'', ''கல்யாணபுரம்'', ''பஞ்சாக்ஷரபுரம்'', ''தக்ஷிணகாசி'', ''ஷண்மங்களம்'', ''சுவேதாரண்யம்'', ''சுவேதகிரி'', ''ஆகாசநகரம்'', ''பனஸாரண்யம்'', (பலாக்காடு) ''நேத்ரார்பணபுரம்'', ''தேஜினீவனம்'' (வீழிக்காடு) எனப்பல பெயர்கள் உண்டு. அனைத்தும் பொருள் பொதிந்தவை. ஆங்காங்கு இவற்றின் விளக்கம் பெறலாம்.) வேதமே உருக் கொண்டுள்ளதோ? ஆத்மவித்யையே உருக்கொண்டதோ? தவத்தின் சித்தியே இவ்வடிவேற்றதோ? என்று சிறிது பிரமித்து நின்றபின் சிவனை இங்கு வழிபட முனைந்தார். நீராடுவதற்குக் காவேரியை மனத்தால் தியானித்தார். ஹரியின் சொல்லைக் கேட்டதும் காவேரி மிகவும் பக்தியுடன் தான் பாக்யசாலி, தான் கொடுத்துவைத்தவள்! தான் விருப்பம் நிறைவுற்றவள் எனத் தன்னைப் பாராட்டிக் கொண்டே உலகைக் காக்கிற நாராயணனுக்கு உதவ, புஷ்பத்ருதி (பூந்துருத்தி) யின் கிழக்குப்பகுதியில் தன்னை இரு கூறாக்கிக் கொண்டு வெளிப்பட்டாள். பாசியே அவளது கேசக்கற்றை, தாமரையே முகம், மீன்களே கண்கள், சுழலே தொப்புள், மலர்ந்தாடுகிற கழுநீர்ப் பூமாலை, நீரில் மிதந்து வருகிற சிவந்த வாத்தே மார்பகம், சங்கே கழுத்து, மணல் திட்டே புட்டம், அலையே கைகள், நுரையே சந்தனப்பூச்சு. நீர்வாழ் உயிரினங்களின் கூவலே விஷ்ணுவின் துதி. பொங்கும் நீர்ப்பெருக்கே சிவபக்தி, தன்னில் நீராடலாலும் நீர்தெளிப்பாலும் காண்பதாலும் நீந்துவதாலும் இருகரைகளில் குடியிருப்பவரைத் தூய்மைப்படுத்துபவள், அலைகள் மீது காற்று வேகமாக வீசியதால் எழுந்த நீர்த்துளிகளால் வானவரையும் தூய்மைப் படுத்துபவள். மூன்று நாழிகைகளில் வீழிக்காட்டில் தென்பகுதியில் ஹரியின் முன் பெருக்கெடுத்து ஓடினள். ஹரிக்காக வந்ததால் ''ஹரிநதி'' ஹரியால் பெரிதும் மதிக்கப் பெற்றவள்- ஹரிச்ருதா - ''அரிசொல்லாறு''எனப் பெயர் பெற்றுள். பிரும்மஹத்திகள் குடித்தல் தங்கத் திருட்டு முதலிய கொடும்பாபம் செய்தவரும் இவளைக் கண்டதும் பாபமகன்று அமைதி பெறுவர். (1-15)

समागतां नदीं दृष्ट्वा विष्णुः सन्तुष्टमानसः ॥ १६

पूजां कर्तुमनाः पूर्वं तीर्थपुष्करिणीजले।
स्नात्वा तदनु कावेर्यां स्नात्वा पुण्योदके शुभे॥ १७

कृत्वा तीर्थं स्वयं तत्र श्वेतरक्तमयानि च।
कमलानि प्रतिष्ठाप्य तथाऽऽरामांश्च तत्तटे॥ १८

तीर्थपुष्करिणीतीरे तेजिन्याश्चैव पश्चिमे।
देवानृषींस्तथा चान्याननुज्ञाप्य श्रियः पतिः॥ १९

ध्यानयोगमुपाश्रित्य हृदि ध्यायंस्त्रियम्बकम्।
कैलासे च समासीनं करुणापूर्णविग्रहम्॥ २०

विमानवरमासीनं देव्या सह सनातनम्।
प्रमथैरन्वितं सेव्यं देव बृन्दैस्तथाधिकैः॥ २१

नानालङ्कारभूषाढ्यं दिव्यतेजोमयं शुभम्।
तताप तप अत्युग्रं दिव्यं वर्षसहस्रकम्॥ २२

विस्मृत्य विषयान् सर्वान् लोकरक्षणहेतवे।
तपसां फलदाताऽपि तपस्तेपे सुदुश्चरम्॥ २३

ततो वर्षसहस्रान्ते भगवान्पार्वतीपतिः।
ज्योतिर्मयविमानेन सिंहवाहनभास्वता॥ २४

दिव्यं वृषं समारुह्य देव्या साकं महेश्वरः।
प्रसन्नः सन् पुरो विष्णोः साक्षात् अवततार च॥ २५

*ஆறு தன்னருகே வந்ததைக் கண்ட ஹரி சிவனை வழிபடுமுன் தீர்த்த புஷ்கரிணியிலும் காவேரியிலும் நீராடினார். வெண் தாமரைகளையும் செந்தாமரைகளையும் தோன்றச் செய்தார். நீர் நிலைக்கரைகளில் பூந்தோட்டமமைத்தார். தேவர்களிடமும் ருஷிகளிடமும் அனுமதி பெற்று தியானத்தில் ஆழ்ந்தார். முக்கண்ணனர், கைலாஸவாஸி, கருணையின் வடிவம், தேவியுடன்*

*விமானத்தில் அமர்ந்துள்ளவர். தன் பிரமத கணங்கள் சூழ பல அணிகள் பூண்டு பேரொளியாகக் காட்சி தருபவரை உள்ளத்தில் கொண்டு ஆயிரம் ஆண்டுகள் தவத்திலிருந்தார். வெளிப்பொருள் அனைத்தையும் மறந்து, உலகைக் காப்பதென்ற ஸங்கல்பத்துடன் தவத்திற்குப்பலனளிக்கிற தெய்வமான ஹரியே தவமிருந்தார். தவத்தில் மகிழ்ந்த சிவன் சிங்கவாஹனத்தின் மீதுள்ள பேரொளி மிக்க விமானத்தில் விருஷபத்தின் மீதமர்ந்தவராக தேவியுடன் ஹரியின் முன் தோன்றினார். (16-25)*

पुरस्ताल्लिङ्गरूपेण स्वयमाविरभूच्छिवः ।
भक्तानुग्रहणोद्युक्तः स्वभासा भासयन्दिशः ॥ २६

सच्चिदानन्दरूपः स परमेशः परात्परः ।
विष्णुना पठ्यमानेन स्तोत्रेणातिप्रसन्नधीः ॥ २७

विष्णोर्मस्तकमध्ये च निवेश्य स्वकरं शिवः ।
अनुजग्राह भगवानमराणां च पश्यताम् ॥ २८

दीक्षितं लोकरक्षार्थै विना तं गरुडध्वजम् ।
हस्तमस्तकसंयोगः कस्य वा परिलभ्यते ॥ २९

इति सञ्चिन्त्य सर्वे च देवब्रह्मर्षयोऽखिलाः ।
इन्द्रादयो लोकपाला योगिनः सनकादयः ॥ ३०

त्रयस्त्रिंशत्कोटयश्च देवा विद्याधरादयः ।
समस्तानि च तीर्थानि गङ्गाद्यास्सरितस्तथा ॥ ३१

आगमान्यखिला वेदाः सर्वोपनिषदस्तथा ।
विष्णोस्तपःप्रभावेन महिमानं पिनाकिनः ॥ ३२

देवस्य च दयालुत्वं को वा वर्णयितुं क्षमः ।
विष्णोस्तपः प्रभावेन सन्तुष्टः परमेश्वरः ॥ ३३

विमानेन सहागत्य सिंहवाहेन भास्वता।
इतः परं पूजया ते सन्तुष्टश्चक्रमायुधम्॥ ३४

दास्यामीति वरं दत्वा विष्णोरागात् प्रसन्नताम्।
तेजिनीवल्लरीमूले सान्निध्यमतनोद्यतः॥ ३५

तत्तेजिनीवनमिति ख्यातं तत्क्षेत्रमुत्तमम्।
आकाशादागतं यस्माद्विमानं लोकपूजितम्॥ ३६

आकाशनगरश्चेति वदन्ति मुनिपुङ्गवाः।
अस्य क्षेत्रस्य माहात्म्यं कस्य वास्ति जगत्त्रये॥ ३७

कल्याणं मेरुशिखरं दिव्या सा तेजिनीलता।
तेजोमयं विमानञ्च पुण्यक्षेत्रे क्व सम्भवेत्॥ ३८

बहुना किमिदं क्षेत्रं कल्याणशिखराञ्चितम्।
दर्शनादेव जन्तूनां भोगमोक्षफलप्रदम्॥ ३९

वरदानात्परं विष्णोश्चक्रलाभाय तेन हि।
कृतां पूजां प्रसन्नेन पूजया चन्द्रमौलिना॥ ४०

कृतं चक्रप्रदानञ्च यथाशक्ति वदाम्यहम्।
श्रुत्वा कृतार्थं मामद्य कुरुध्वं मुनिपुङ्गवाः॥ ४१

सुमेरुशिखरं तदा कलिततेजिनीवल्लरी
विमानमधिकोन्नतं तपसि निष्ठितः श्रीपतिः।
अभीष्टफलदायकः शशिकलावचूडः शिवः
कथं गणितुमीशते गुणगणानमीषां सुराः॥ ४२

इति चतुर्थोऽध्यायः

விங்கவடிவில் பக்தருக்கருள தன் ஒளியால் இக்கெட்டையும் ஒளிரச் செய்தவராக ஸத் - சித் - ஆனந்த

வடிவினராக, ஹரியின் துதியில் மிகவும் மகிழ்ந்து, அவரது தலைமீது தன்கை வைத்து அருள் புரிந்தார். தேவர்கள் இக்காட்சியைக் கண்டனர். உலகைக் காக்க முற்பட்ட ஹரியைத் தவிர இந்த ஹஸ்தமஸ்தகச் சேர்க்கை வேறுஎவருக்குக் கிட்டும்? முப்பத்துமுக்கோடி தேவரும் மற்றவானவரும் முனிவர்களும் கங்கை முதலிய நதிகளும் புனித தீர்த்தங்களும், வேதங்களும் உருவெடுத்து அக்காட்சியைக் கண்டனர். விஷ்ணுவின் தவப்பெருமை, சிவபெருமானது இளகிய உள்ளம் இவை ஒவ்வொன்றும் அவர்களை வியப்பில் ஆழ்த்தின. உம் வழிபாட்டில் மகிழ்ந்த நான் சக்ரத்தை வழங்குவேன் என்றார் சிவன். வீழிச் செடியின் அடியில் தோன்றியதால் வீழிக்காடு (தேஜினீவனம்) என இந்த க்ஷேத்திரம் புகழ் பெறும். ஆகாய வழியே இந்த விமானம் வந்ததால் ஆகாயநகரம் (விண்ணிழி) எனப்படும். கல்யாணம் என்ற மேருவின் சிகரம், திவ்யத்தன்மை மிக்க வீழிச்செடி, பேரொளி மிக்க விமானம் இம்மூன்றும் எங்கும் காணக் கிடைக்காது. சக்கிரம் வழங்குவதாகச் சிவன் அருளியதையொட்டி ஹரி செய்த வழிபாட்டையும் சக்கிரம் வழங்கியதையும் இனி விளக்குவேன். மேருவின் சிகரம், வீழிச்செடி, மிக உயர்ந்த விமானம், ஹரியின் தடும் தவம், அருள் மூர்த்தியான ஈசன், இவற்றை விளக்க தேவர்களாலும் இயலாது. *(26-42)*

—*—

## पञ्चमोऽध्यायः -५

सूतः—

श्टणुध्वं सावधानेन शिवस्मरणपूर्वकम्।
स्मृते शिवे महादेवे सर्वपापैः प्रमुच्यते ॥ १

विष्णुरेवं तपः कृत्वा शिवस्य गमनात् परम्।
चक्रलाभाय पूजाञ्च चकार परया मुदा ॥ २

षण्मङ्गले महाक्षेत्रे सर्वलोकैकपावने।
तीर्थं नदी वनं शैलं पुरञ्चापि विमानकम्॥ ३

षण्मङ्गलमिति प्रोक्तं सर्वसौभाग्यदायकम्।
एतत्क्षेत्रसमं क्षेत्रं न भूतं न भविष्यति॥ ४

''அத்தியாயம்'' - 5

'ஷண்மங்கலம்' -சிவன் மறைந்ததும் தவத்திலிருந்த ஹரி சக்ரத்தைப்பெற மிகவும் சந்தோஷத்துடன் சிவனை வழிபடத் தொடங்கினார். தீர்த்தம், ஆறு, காடு, மலை, நகரம், விமானம் என ஆறும் மங்களமாக அமைந்தால் இதனை ''ஷண்மங்களம்'' என்பர். இதனைப் போன்ற பெருமை மிக்க க்ஷேத்திரம் உலகில் இல்லை. (1-4)

ऋषयः—

अस्मिन् क्षेत्रे महापुण्ये विमानेनागतं शिवम्।
येन स्तोत्रेण लक्ष्मीशस्तोषयामास भक्तितः॥ ५

किं तत्स्तोत्रं तस्य को वा ऋषिश्छन्दोऽधिदेवताः।
किं नाम किं तन्माहात्म्यं सूत सर्वं वदाद्य नः॥ ६

श्रीसूतः—

वेदान्तसारगर्भाख्यं तत्स्तोत्रं शिवतुष्टिदम्।
तस्याच्युत ऋषिश्छन्दोऽनुष्टुप् देवो महेश्वरः॥ ७

श्रीसुन्दरकुचा देवी शक्तिश्च परिकीर्तिता।
कीलकञ्चादिशक्तिश्च वेदाश्चार्गलमेव च॥ ८

इष्टार्थकार्यसिद्ध्यर्थे विनियोगश्च कीर्तितः।
आत्मार्थकार्यसिद्ध्यर्थे जपेत्स्तोत्रमनुत्तमम्॥ ९

இந்த க்ஷேத்திரத்தில் விமானத்தில் வந்து இறங்கிய, சிவனை ஹரி எவ்வாறு துதித்தார்? அதன் ருஷி, சந்தஸ் தேவதை அதன்

பெருமை இதனை விளக்கும்படி ருஷிகள் கோரியதும் ஸூதர் அதனை விளக்கினர். வேதாந்தஸார கர்ப்பம் என்ற அந்தஸ்தோத்திரம் சிவனுக்கு மகிழ்ச்சி தருவது. அச்யுதர் அதற்கு ருஷி, அனுஷ்டுப் சந்தஸ். மஹேசனே தேவதை. ஸ்ரீ ஸுந்தர குசாம்பிகா தேவி (அழகு முலையம்மன்) இதன் சக்தி. வேதங்கள் கீலகம். ஆதி சக்தி அர்க்களம் (சக்தி வெளியேறாதபடி காக்கிற தாள்) விரும்பியதைப் பெறுவதற்கே விநியோகம். (5-9)

विष्णुः—

अनन्तगुणगम्भीर तेजोराशे जगत्पते।
परेशाय पराध्यार्य सर्वावयवसुन्दर॥ १०

अष्टाङ्गयोगसिद्धाय निर्गुणाय गुणात्मने।
आकाशदिक्स्वरूपाय विरूपाक्षाय शम्भवे॥ ११

वामदेव नमस्तुभ्यं वरदायामितात्मने।
अनन्तायाप्रमेयाय मायिने च विमायिने॥ १२

"வேதாந்தஸார கர்ப்ப ஸ்துதி" - வரையற்ற குணச்சிறப்புகளால் கம்பீரமானவரே! ஒளிக்குவியலே! உலகைக் காப்பவரே! பேரீசர், எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட பெருமான். ஸுந்தரவடிவினர், எட்டங்கங்கள் கொண்ட யோக முறையால் அடையத்தக்கவர், குணச்சிறப்பற்றவர், குணவடிவினர், அம்பலவாணர், திக்கின் வடிவினர், மாறுகண்ணர், மங்களத்தின் தோற்றுவாய், அழகிய தேவர், விரும்பியதையளிப்பவர், அளவிட இயலாதவர், வரையற்றவர், மதிப்பீட்டிற்கு உட்படாதவர், மாயை உள்ளவர், மாயை அற்றவர், உமக்கு வந்தனம். (10-12)

अणोरणीयसे तुभ्यं महताञ्च महीयसे।
त्रिणेत्राय नमस्तुभ्यं नमस्ते चन्द्रशेखर॥ १३

अकारादि क्षकारान्त मातृकादिस्वरूपिणे।

मन्त्राणां गुरवे तुभ्यं महामन्त्रस्वरूपिणे ।
कार्यकारणवेद्याय कार्यकारणहेतवे ॥ १४

अन्नानां पतये तुभ्यं पुष्टानां पतये नमः ।
वनानां पतये तुभ्यं पशूनां पतये नमः ॥ १५

*அணுவிற்கு நுண்ணிய அணுவானவர், மிகப் பெரிதிற்கும் பெரியவர், முக்கண்ணர், பிறை சூடி, 'அ' முதல் 'க்ஷ' வரையுள்ள எழுத்து வடிவினர். மந்திரங்களை உபதேசிக்கிற குரு, பெரும் மந்திரங்களின் வடிவிலுள்ளவர், காரிய - காரண ஆராய்ச்சியால் உணரப்பெறுபவர், காரியம் காரணம் என இரண்டிற்கும் மூலப்பொருள். உணவின் தலைவர், உணவால் புஷ்டி பெற்றவரின் தலைவர். காட்டின் தலைவர், பசுக்களின் தலைவர் உமக்கு வந்தனம். (13-15)*

गोत्राणां पतये तुभ्यं क्षेत्राणां पतये नमः ।
अष्टमूर्ते नमस्तुभ्यं बहुमूर्ते त्रिमूर्तये ॥ १६

योगिने योगिगम्याय भिषजाञ्च भिषग्वर ।
स्तोष्यामीति मया देव यदुक्तं तव सन्निधौ ॥ १७

अपराधं क्षमस्वाद्य प्रथमं परमेश्वर ।
कः स्तोतुं क्षमते देव भवदीयगुणार्णवम् ।१। १८

अपारत्वाद्गुणानाञ्च भक्त्या मुखरितो ह्यहम् ।
सूर्याचन्द्रमसौ धाता विधाता च जगत्पते ॥ १९

मेर्वादयो महाशैला द्वीपाः सप्तजलाशयाः ।
द्भिः सप्त भुवनानाञ्च भेदास्सर्वे त्वया धृताः ॥ २०

*பர்வதத் தலைவர், க்ஷேத்திரத்தலைவர், பூதங்கள் 5 ஸூரியன், சந்திரன், வேள்வி புரிபவன என் எட்டு வடிவினர், பல வடிவங்கள் கொண்டவர், பிரும்மா, விஷ்ணு, ருத்திரர் என்றமும் மூர்த்திவடிவினர், யோகத்தில் ஆழ்ந்தவர்,*

*யோகிகளால் காணப்பெறுபவர், மருத்துவருக்கும் சிறந்த மருத்துவர், உமக்கு வணக்கம் . இதுவரை துதிப்பேன் என்று நினைத்து உம் எதிரில் கூறியதனைத்தும் முதலாவதான தவறு. இதனைப் பொறுத்தருள்வீர். உம் குணக்கடலைத் துதிக்க எவராலும் இயலாது. அவை வரையற்றவை. பக்தி என்னைத் தூண்டுகிறது. சூரியனும் சந்திரனும் பிரும்மாவும் பிரஜாபதியும் இவ்வுலகமும் மேரு முதலிய பெருமலைகளும் தீவுகளும் ஏழு கடல்களும் 14 உலகங்களும், உம்மால் தாங்கப் பெற்றவை (16-20)*

त्वन्मयश्च जगत्सर्वं तस्मात् स्तोतुं क ईशते।
किं किञ्च वदते मूढाः किं किञ्च कुरुते जडाः ॥ २१

सर्वं क्षमस्व देवेश भवद्भक्तस्य चेष्टितम्।
क्षमां कुर्वन्ति पितरः पुत्रवात्सल्यकारणात् ॥ २२

पादाघातकराघातमलमूत्रनिषेचनम्।
भवत्पादे निपतितं मामुद्धर शिवाव्यय ॥ २३

व्रतं कर्तुं हि मनसः प्रवृत्तिं कुरु मे हर।
निर्विघ्नेन व्रतं मेऽद्य त्वत्प्रीत्यै भवति ध्रुवम् ॥ २४

व्रतस्याचरणं कर्तुं अनुज्ञां देहि मे विभो।
एतद्विमानं क्षेत्रेऽस्मिन् यावद्ब्रह्माण्डसंस्थितम् ॥ २५

तावदास्तां त्वमप्यत्र सन्निधानं कुरु प्रभो।
मया कृतमिदं स्तोत्रं भवत्प्रीणनकाम्यया ॥ २६

ये पठन्ति नरा लोके तेषामिष्टप्रदो भव।

*உலகமனைத்தும் நீயே! உன்னைத்துதிக்க எவராலும் இயலாது. மூடரும் ஜடரும் ஏதேனும் செய்யலாம். பக்தனின் செயலைப் பொறுத்தருள்வீர், தந்தை மகனிடம் அன்பால் எதனையும் பொறுத்துக் கொள்வார். காலால் இடித்தாலும் கையால் அடித்தாலும் மலமூத்திரம் விட்டாலும் பொறுப்பார்.*

உமது திருவடியைச் சார்ந்துள்ள என்னைக் காப்பீர். பூஜை செய்வதை விரதமாகக் கொள்ள உள்ளத்தைத் தூண்டுவீர். இடையூறின்றி அந்த விரதம் நிறைவுறச் செய்வீர். அதற்கு அனுமதி தருவீர். இந்த விமானம் இந்த க்ஷேத்திரம் உள்ளவரை பிரும்மாண்டம் உள்ளவரை இங்கே நிலைத்திருக்கட்டும். இந்தத்துதியும் உம்மை மகிழ்விக்கவே. இதனைப் படிப்பவர் விரும்பியதை வழங்கி அருள்வீர் என வேண்டினார். (21-26)

सूतः—

इति श्रुत्वा वचो विष्णोर्देवदेवः पिनाकधृत्॥ २७
तथाऽस्त्विति वरं दत्वा व्रतस्याचरणाय च।

मान्तं यान्तं द्विरावृत्य षडक्षरमुपादिशत्॥ २८

अनुज्ञां च तदा दत्वा व्रतस्याचरणाय च।
तिरोधानं ययौ पश्चाल्लिङ्गे चाकाशसंज्ञिते॥ २९

तिरोधानस्य समये लाञ्छितं लिङ्गमुत्तमम्।
जटाभिस्तिसृभिः पश्चाद्भागे तस्य त्रिशक्तिभिः॥ ३०

लिङ्गस्य पश्चाद्भागे तु गौर्या साकं स्थितो हरः।
गौर्या स्थितश्च तत्क्षेत्रे ये पश्यन्ति नरा भुवि॥ ३१

ते यान्ति रजताद्रिश्च स्ववंश्यैः पितृभिस्सह।
विष्णुर्लब्धवरः पश्चात्क्षेत्रेऽस्मिन् परिपावने॥ ३२

देवस्य पश्चिमे भागे बाणपातप्रमाणके।
कृत्वा तीर्थं स्वनाम्ना च स्नानार्थं चात्मनस्तदा॥ ३३

तीर्थस्य पश्चिमे भागे कृत्वा पर्णकुटीमपि।
देवस्य नैरृते भागे पुनस्तीर्थं तदाऽकरोत्॥ ३४

तस्मिन् पद्मानि संस्थाप्य देवपूजार्थमादरात्।
नियमेनान्वितो भूत्वा वायुभक्षो जितेन्द्रियः॥ ३५

स्वशक्त्या च महालक्ष्म्या सम्यक् च परिवारितः ।
कमलानां सहस्रेण प्रत्यहं परमेश्वरम् ।। ३६

पूजयामीति सङ्कल्प्य पूजयामास वै शिवम् ।
तिरोधानस्य समये त्रिजटाधारिणं विभुम् ।। ३७

जटाधरो महादेवो लिङ्गे तत्र स्वयंभुवि ।
प्रत्यग्रहीच्च तां पूजां विष्णुना परिकल्पिताम् ।। ३८

देववर्षप्रमाणञ्च नियमेन समन्वितः ।
एवं चकार वै पूजां देवर्षीणाञ्च पश्यताम् ।। ३९

அவ்வாறே ஆகட்டுமென அருளிய சிவபெருமான் தேவர்கள் பார்த்து நிற்கும் போதே ஹரிக்கு 'ஹரஹர,வும் கொண்ட (பிரணவத்துடன் கூடிய பஞ்சாக்ஷரமான) ஷடக்ஷர மந்திரத்தை உபதேசித்து விரதம் தொடங்க அனுமதி வழங்கி 'ஆகாசலிங்கம்' என்று பெயர் பெற்ற லிங்கத்தினுள் மறைந்தார். மறையும் போது அவரது மூன்று சடைகளால் லிங்கத்தின் பின்புறத்தில் அடையாளமிடப்பட்டது. லிங்கத்தின் பின்புறத்தில் தேவியுடன் சிவன் அமர்ந்துள்ளார், இந்தக் காட்சியை காண்பவர் தன் வம்சத்தினருடன் கைலாஸம் சென்றடைவர். சிவ பெருமானிடமிருந்து வரம் பெற்ற ஹரி தான் நீராட ஈசனின் பின்புறத்தில் வில்லடி தூரத்தில் தன் பெயரில் ஒரு நீர்நிலையை (விஷ்ணு தீர்த்தம்) அமைத்தார். அந்த தீர்த்தத்தின் மேற்கில் தனக்கெனக் குடிசை அமைத்துக் கொண்டார், தென்மேற்கில் மற்றொரு நீர்நிலை அமைத்து வழிபாட்டிற்கென தாமரைக்கொடிகளை விளைவித்தார். லக்ஷ்மியின் துணை கொண்டு, தன் சக்திக்கேற்ப காற்றை உணவாகக் கொண்டு புலன்களை அடக்கியவராய் தினமும் ஆயிரம் தாமரைகளால் ஈசனை வழிபடுவதாக ஸங்கல்பம் செய்து கொண்டு சடையாண்டியான சிவனைத்தியானித்து வழிபட, சிவனும் பூஜை முடிவில் ஜடாதாரியாக லிங்கத்தில் நேரில் தோன்றிப் பூஜையை ஏற்றார். தேவர்களின் ஓராண்டு வரை பூஜை தொடர்ந்தது. (27-39)

तदा शिवस्तस्य मनश्शोधनाय जगत्प्रभुः ।
आहृतेषु च पद्मेषु न्यूनमेकञ्चकार ह ।। ४०

पूजाकाले च गणयामास पद्मानि माधवः ।
दृष्ट्वैकं न्यूनमब्जेषु पुनः पद्माकरं गतः ।। ४१

आहृत्य पङ्कजं भूयः सन्देहस्य निवृत्तये ।
गणयामास तत्पद्मं न्यूनमेवाभवत्पुनः ।। ४२

पुनराग्रहतो विष्णुराहर्तुं बहु पङ्कजम् ।
पद्माकरं गतस्तत्र ह्येकमेव ददर्श ह ।। ४३

पद्मानां बहु साहस्रं दृष्ट्वा पूर्वं मया खलु ।
इदानीमेकमेवात्र दृश्यते किमिहाद्भुतम् ।। ४४

इति व्याकुलचित्तस्तदेकमाहृत्य पङ्कजम् ।
गत्वा लिङ्गस्य पुरतः पुनश्च गणनं व्यधात् ।। ४५

तथैवैकं न्यूनमासीत्तदा विस्मयविह्वलः ।
पद्माकरेषु पुष्पस्याभावमाकलयन् हरिः ।। ४६

अतीव दुःखितो भूत्वा शिवनामसहस्रतः ।
पूजां कृत्वाऽथ महतीं वैराग्येण समन्वितः ।। ४७

अभावपुष्पसंपूर्त्यै नेत्रमुत्पाट्य दक्षिणम् ।
अर्चयामास लक्ष्मीशो भक्त्या परमया युतः ।। ४८

तेजिनीवननाथोऽस्य भक्तिं दृष्ट्वा महत्तराम् ।
नेत्रञ्च कमलाकारं दृष्ट्वा च कृपयान्वितः ।। ४९

अस्याभीष्टमवश्यञ्च दातव्यमिति चिन्तयन् ।
पूर्वस्मादतिसौन्दर्यं नेत्रं दत्वाऽभिधानतः ।। ५०

पुण्डरीकाक्ष इत्युक्त्वा हरिं स परमेश्वरः।
तुष्टोऽहमिष्टं व्रियतां वरमित्याह शङ्करः॥
इत्युक्तो देवदेवेन शम्भुना गरुडध्वजः॥ ५१

यो विष्णुनेत्रार्चितपादपद्म :
तस्मै ददौ चक्रमतीव हृष्टः।
तस्मै तु रुद्राय नमोऽस्त्वितीदं
तत् पैप्पलादोपनिषद् ब्रवीति॥ ५२

आनन्दाश्रुपरिक्लिन्नगात्रो वचनमब्रवीत्।

அப்போது சிவபெருமான் அவரது உள்ளத்தைச் சோதிக்க விரும்பினார். பூஜைக்காக கொணர்ந்த தாமரைகளில் ஒன்றைக் குறையச் செய்தார். பூஜை வேளையில் தாமரையை எண்ணிய ஹரி ஒன்று குறைந்ததைக் கண்டு தாமரையோடைக்குச் சென்று ஒரு பூ கொணர்ந்தார். சந்தேகம் தீர மறுபடி எண்ண ஒரு பூ மறுபடி குறைந்தது. மறுபடி பிடிவாதத்துடன் பல தாமரைகளைக் கொணரத்திட்டமிட்டு ஓடைக்குச் சென்றவர் அங்கு ஒரு பூவை மட்டும் கண்டார். முன் ஆயிரக்கணக்கில் பூக்களைக் கண்டேனே! இப்போது ஒரு பூ மட்டுமே உள்ளதே! என வியப்புற்று அந்த ஒரு பூவைக் கொண்டு சேர்த்து லிங்கத்தின் முன் மறுபடி எண்ண ஒரு பூ மட்டும் குறைந்தது. ஓடையில் இனி பூ இல்லை. மிகவும் வருத்தத்துடன் பூஜையைத் தொடங்கிய ஹரி குறைந்த பூவிற்கு ஈடாகத் தன் வலது கண்ணைப் பிடுங்கி எடுத்துப் பக்தியுடன் அர்ச்சித்தார், தேஜினீ வனத்தீசன் இந்த மிகச் சிறந்த பக்தியைக் கண்டார். அந்தக் கண்ணும் தாமரையின் உருவிலிருந்தது. பரிவு மிகுந்தவராக ஹரிக்கு முன்னதை விட மிக அழகிய கண்ணை முதலில் அளித்து 'புண்டரீகாக்ஷர்' எனப்பெயரிட்டு அன்புடன் அழைத்தார். நான் உன் தவத்தால் மகிழ்ச்சியுற்றேன். விரும்பியதைக் கேட்பாய் என்றார். இந்நிகழ்ச்சியைப் பிப்பலாதோபநிஷத் பெரிதும் இவ்வாறு பாராட்டுகிறது. 'விஷ்ணுவின் கண்ணால் திருவடியில் அர்ச்சிக்கப் பெற்றதால் மகிழ்ந்த சிவபெருமான் சக்கிரத்தை அவருக்கு அளித்தார். அந்த

ருத்திரருக்கு வந்தனம்' என. தேவதேவரால் இவ்வாறு கூறப்பட்ட ஹரி ஆனந்தக்கண்ணீர் பெருக இவ்வாறு கூறினார். *(40-52)*

विष्णुः—

स्वामिन् यदि प्रसन्नोऽसि पूजया नियमेन च।
जलन्धरस्य संहारमनायासेन वै पुरा ॥ ५३

कृतवान्येन चक्रेण पादाग्रोद्भावितेन च।
तच्चक्रं दीयतामद्य दैत्यानां निधनाय मे ॥ ५५

तेन चक्रेण भगवन् गमिष्यामि कृतार्थताम्।
इत्युक्त्वा प्रणिपत्याशु शूलिनः पादपद्मयोः ॥ ५६

बद्धाञ्जलिस्समुत्थाय पुनस्तामारभत् स्तुतिम्।
भवेदिष्टार्थसिद्धिस्तु यया पठितमात्रया ॥ ५७

पापानि नाशमायान्ति वर्धन्ते पुण्यसंपदः।
अणुमात्रं कृतं पुण्यं मेरुमात्रं भविष्यति ॥ ५८

प्राग्गृहीता सुपर्णेन गरुडाद्गुरुरासवान्।
व्यासेन मम च प्रोक्ता साङ्गसौभाग्यदा स्तुतिः ॥ ५९

एकेन श्लोकपाठेन शिवः प्रीतो भविष्यति।
आन्तं पठति यस्तस्य सदृशो न हि भूतले ॥ ६०

तत्र पुष्करिणीतीर्थे स्नात्वा च प्रथमं ततः।
हरिश्रुतायाश्चद्याश्च सन्तर्प्य पितृदेवताः ॥ ६१

ये स्तुवन्ति महादेवं तेजिनीवननायकम्।
ते वै धन्यतमा लोके शिवभक्तास्त एव हि ॥ ६२

जन्मर्क्षे श्राद्धकाले वा मातापित्रोर्दिनेऽपि वा।
अमायां पौर्णमास्याञ्च ग्रहणे चन्द्रसूर्ययोः ॥ ६३

व्यतीपातदिने वापि अर्धोदयमहोदये।
सदा जपति यो मर्त्यस्स शिवो नात्र संशयः ॥ ६४

आपत्काले समायाते ज्वररोगादि सङ्कटे।
कान्तारगिरिदुर्गेषु ग्रहपीडादि संभवे ॥ ६५

नियमेन जपेद्यस्तु दुरितैः स विमुच्यते।
सम्पदस्तस्य वर्द्धन्ते कीर्तिरायुर्बलानि च ॥ ६६

तेषान्तु पितरश्चापि महीयन्ते शिवान्तिके।
बहुनाऽत्र किमुक्तेन सर्वाः सिद्ध्यन्ति सिद्धयः ॥ ६७

''பெருமானே! என் வழிபாட்டிலும் நியமத்திலும் நீர் மனநிறைவு பெற்றிருந்தால் முன்னர் ஜலந்தராஸுரனை அழிக்க உம்திருவடிகளிலிருந்து சக்கிரத்தைத் தோற்றுவித்துத் தந்தருளியதுபோல் இப்போது அஸுரர்களை அழிப்பதற்கென சக்கிரத்தைத் தந்தருள்வீர். அதனால் நான் செயல் நிறைவு பெறுவேன்'' என்றார். மறுபடி திருவடிகளில் வணங்கி முன் கூறிய ஸ்துதியால் துதித்தார். இந்த துதி படித்த உடன் பாபத்தைப் போக்கும். புண்ணியம் கூடும். அணுவளவு செய்த நற்பணியும் மேருஅளவு வளரும். முன்னர் இது ஹரியால் கருடனுக்கு உபதேசிக்கப்பெற்று கருடனிடமிருந்து பிருஹஸ்பதியும் அவரிடமிருந்து வியாஸரும், வியாஸரிடமிருந்து நானும் பெற்றோம். இது ஸௌபாக்கியமளிக்கக்கூடிய துதி. ஒரு சுலோகமே சிவனை மகிழ்விக்கப் போதுமானது. புஷ்கரிணியில் நீராடி, மறுபடியும் அரிசொல்லாற்றில் நீராடிப் பித்ருதர்ப்பணம் செய்து பின் இதனால் துதிப்பர். ஜன்ம நக்ஷத்திரம், பெற்றோரின் சிராத்த திதி, அமாவாசை, பௌர்ணமி, சந்திர-ஸூரியகிரஹணம், வியதீபாதம், அர்த்தோதயம், மஹோதயம் முதலிய நன்னாட்களில் படிக்க சிவனது அருள்கிட்டும்.

*ஆபத்துகள் நேரும் போது நோயுற்ற போது காடுமலை முதலியதில் சிக்கிய போது, கிரஹபீடையில் நியமத்துடன் ஜபிக்க நலம் கிட்டும். பித்ருக்கள் திருப்தியுறுவர். எல்லா ஸித்திகளும் கிட்டும். (53-67)*

वेदान्तसारगर्भाख्यं जपन्नपि विमुच्यते।
अनेन स्तोत्रवर्येण विष्णुनोदीरितेन च॥ ६८

प्रसन्नः शङ्करो लिङ्गात् सन्निधाय यथापुरम्।
चक्रं दातुं यदोद्युङ्क्ते तदैवेन्द्रादयः सुराः॥ ६९

वर्षन्तः पुष्पवर्षाणि चक्रदानोत्सवस्य च।
दिदृक्षया समायातास्तथा सर्वे मुनीश्वराः॥ ७०

देवोऽपि दृष्ट्वा सकलामरांश्च
ददौ च चक्रं जगतो हिताय।
चक्रं गृहीत्वा हरिरप्यथादरात्
गुरुं विदित्वा पुनरप्यथार्पयत्॥ ७१

देवोऽपि तद्गृहीत्वाऽथ कृत्वा चक्रञ्चतुर्मुखम्।
अर्द्धशक्तियुतश्चक्रं ददौ देवस्तु विष्णवे॥ ७२

तच्चक्रधारणसहं स्वबलञ्च निरीक्ष्य सः।
गृहीतवान् पुनश्चक्रं तेजिनीविपिने हरिः॥ ७३

चक्रायुधं प्रदायेत्थं विष्णवे सर्वजिष्णवे।
अन्तर्द्धिमभजल्लिङ्गे यथापूर्वं महेश्वरः॥ ७४

*விஷ்ணு இதனால் துதித்ததும் லிங்கத்திலிருந்து வெளிப்பட்ட சிவன் ஹரிக்கு சக்கிரம் வழங்க முற்பட்டதும் வானவர் பூமாரி பொழிந்தனர். இதனைக்காண முனிவர்களும் அங்கு கூடினர். உலகின் நன்மைக்காக சிவபெருமான் சக்கிரத்தை வழங்க, ஹரியும் அக்கரையுடன் அதனை ஏற்று*

*குருவாக மதித்து மறுபடி சிவபெருமானிடம் வழங்க அதனை ஏற்ற சிவபெருமான் அதனை நான்கு முகமுள்ளதாக்கி அதன் பாதி சக்தியைத் தன்னுள் அடக்கிப் பாதி சக்தியுள்ளதாக ஹரியிடம் வழங்கினார். ஹரியும் அதனை ஏற்கத் தன் வலிவை ஒப்பிட்டுப் பார்த்து ஏற்றார். அதனைத்தையும் வெல்ல வல்லவரான ஹரியிடம் சக்கிரத்தை அளித்த பின் முன் போல் சிவன் லிங்கத்தினுள் மறைந்தார் (68-74)*

स्वहस्तभूषणं कृत्वा तच्चक्रं शम्भुनाऽर्पितम्।
अवध्यानसुरेन्द्राणां जहार श्रीपतिर्गुणान्॥ ७५

वरानन्तरमप्येवं शिवपूजापरोऽभवत्।
तेन चक्रेण शुशुभे सूर्यश्च किरणैर्यथा॥ ७६

शिवादवाप स हरिरन्यांश्चाथ वरान्बहून्।
देवोऽपि तस्मै वरदानकाले
स्वतेजसा पूरितदिग्विभागः।
उवाच वाक्यं जगतो हिताय
स्थाने निवासं कुरु चेति भक्त्या॥ ७७

श्रुत्वा देवोदितं वाक्यं विष्णुः सन्तुष्टमानसः।
तथैव वासमकरोत्तस्मिन् क्षेत्रे महत्तरे॥ ७८

मुनिभिर्देवगन्धर्वैः सिद्धविद्याधरैरपि।
पूजयन् परया भक्त्या त्रिकालं तेजिनीपतिम्॥ ७९

सहस्रकमलार्चाभिः पूजानैवेद्य वन्दनैः।
एतद्धि विष्णुचरितं सर्वपापप्रणाशनम्॥ ८०

पठतां शृण्वतां वाऽपि धर्मकामार्थमोक्षदम्।
स्वायम्भुवानां क्षेत्राणामेतत् क्षेत्रं विशिष्यते॥ ८१

कैलासादागतं यत्र विमानं देवपूजितम्।
भूकैलास इति प्राहुर्वेदवादरता द्विजाः ॥ ८२

इति पञ्चमोऽध्यायः

*சிவபெருமான் அளித்த சக்கிரத்தைத் தன்கையணியாக ஏற்று தேவரை அவமதித்தவரின் கூட்டத்தை அழித்தார். வரம் பெற்ற பிறகும் சிவபூஜையில் முன் போல் ஈடுபட்டார். சூரியன் தன் ஒளிக்கதிர்களால் விளங்குவது போல் சக்கிரத்தால் ஒளி மிகுந்திருந்தார். வரமளித்த சிவன் ஹரியை அந்த க்ஷேத்திரத்திலேயே உலக நன்மைக்காக வஸிக்கச் சொன்னதை ஏற்று முக்காலங்களிலும் தேவர் முதலானவருடன் ஈசனை வழிபட்டு வந்தார். தானே தோன்றிய (ஸ்வாயம்புவ) க்ஷேத்திரங்களில் இது சிறந்தது, கைலாஸத்திலிருந்து இந்த விமானம் வந்தமையால் இதனை 'பூகைலாஸம்'- 'விண்ணிழிவிமானம்'. சக்கிர பிரதான க்ஷேத்திரம் என்பர். (காஞ்சீ - அரக்கோணம் வழியில் திருமாற்பேறு (திருமால்பூர்) என்ற க்ஷேத்திரத்திலும் ஜலந்தரனைக் கொல்லப்பயன்பட்ட சக்கிரத்தைப் பெற ஆயிரம் தாமரைப் பூக்களால் வழிபட்டதும் ஒரு பூ குறைந்ததால் நேத்ரார்பணம் செய்து சக்கிரம் பெற்றதும் அவ்வூர் வரலாற்றில் உள்ளது. பத்மாக்ஷர் எனப்பெயரை ஹரி பெறுகிறார் இதுவும் சக்ரபிரதான க்ஷேத்திரம் என்பர்.) (75-82)*

*

षष्ठोऽध्यायः

ऋषयः -

विष्णुः किमकरोत्तत्र निवसन् भक्तिपूर्वकम्।
तीर्थानि कानि सन्त्यत्र तेषाञ्च महिमा किमु॥ १

अपृष्टमपि नो ब्रूहि तत्वेन मुनिनन्दन।
येनात्र शृण्वतां मुक्तिः करस्था भवति ध्रुवम्॥ २

सूतः—
देवेनोक्तप्रकारेण वसन्तं तेजिनीवने।
लब्धाभीष्टश्च सन्तुष्टं देवं लक्ष्मीपतिं सुराः ॥ ३

स्तुत्वा मधुरया वाचा वचनं चेदमब्रुवन्।
सुराः-
हरे ते महिमा चायमवाङ्मनसगोचरः ॥ ४
कः स्तोतुं क्षमते लोके भवन्तं मधुसूदन।
जगत्पालयितुं सर्वं विशिष्यास्मांश्च रक्षितुम् ॥ ५

कर्तव्या सकलैरेवं शिवपूजा दृढैर्व्रतैः।
इति द्योतयितुं चापि व्रतमेतदनुष्ठितम् ॥ ६

महिमानं महेशस्य त्वं वेत्सि न परः पुमान्।
तवापि महिमानं स भक्तिं वेत्ति सदाशिवः ॥ ७

चक्रेणानेन सर्वेषामसुराणां वधं त्वयि।
वितन्वानेऽतिभक्तिर्नः तद्व्रजामो वयं दिवम् ॥ ८

सेवायै चागमिष्यामस्तव विष्णो तदा तदा।
इत्यामन्त्र्य सुपर्वाण :स्वांशैर्जग्मुः स्वमालयम् ॥ ९

''அத்தியாயம்'' - 6

தேஜினீ வனத்தில் ஹரி தொடர்ந்திருந்தது, அங்குள்ள பெருமை மிக்க தீர்த்தங்கள் முதலியவற்றைப் பற்றி ருஷிகள் அறிய விரும்பி ஸூதரிடம் விண்ணப்பித்தனர். க்ஷேத்திரங்களின் பெருமைப் பற்றி அறிவதால் பிறவித்துயரிலிருந்து விடுபடலாம் என அவர்கள் எண்ணினர். ஸூதர் விளக்கினார். தேஜினீ வனத்தில் தான் விரும்பியதனைத்தையும் சிவனருளால் பெற்ற ஹரியிடம் தேவர்கள் விண்ணகம் செல்ல அனுமதி வேண்டினர். ''உலகைக் காக்கவும் தனித்து எங்களை அஸுரபாதையிலிருந்து

விடுவிக்கவும் எல்லோருக்கும் வழிகாட்டியாக சிவனை வழிபட்டீர், உமது பெருமையையும் பக்தியையும் சிவபெருமான் நன்கு அறிவார். ஈசனருளால் பெற்ற சக்கிரத்தால் அஸுரர்களனைவரையும் அழித்த உம்மிடம் எமது பக்தியைத் தெரிவித்துக் கொள்கிறோம். நாங்கள் வானுலகம் செல்கிறோம். உமது ஸேவைக்காக அவ்வப்போது வருவோம் என்று ஹரியின் அனுமதி பெற்றுச் சென்றனர். (1-9)

ततो नारायणस्तत्र निवसंस्तेजिनीवने।
काले काले समुद्भूतान् दैत्यान्दानवराक्षसान्॥ १०

संहरन् चक्रवर्येण शिवपूजाप्रभावतः।
कैङ्कर्यकरणोद्युक्तो देवदेवस्य शूलिनः॥ ११

विश्वकर्माणमाहूय शिल्पिनं देवमन्दिरम्।
विचित्रं कारयामास तेजिनीकाननान्तरे॥ १२

प्राकारगोपुरादीनि मण्डपानि विशेषतः।
विमानं परितः स्वर्णनवरत्नमयानि च॥ १३

तीर्थस्य तीरबन्धं च धर्मशालास्तथैव च।
श्रीसुन्दरस्तनीनाम्ना देवी च परिपूजिता॥ १४

अलङ्कृतनटो नाम ताण्डवश्च प्रपूजितः।
विघ्नेशषण्मुखाद्याश्च स्थापिता भवनान्तरे॥ १५

शैवाः प्रतिष्ठिताश्चासन् पञ्चगोत्रसमुद्भवाः।
आङ्गीरसा भरद्वाजा गौतमाः काश्यपास्तथा॥ १६

कण्ववंशसमुद्भूताः शैवागमपरायणाः।
देवस्य नित्यपूजार्थं स्थापयित्वा च तान् द्विजान्॥ १७

तेषां बहु धनं दत्वा कुडुम्बभरणाय च।

நாராயணன் தேஜினீ வனத்தில் தங்கி அவ்வப்போது தோன்றுகிற அரக்கர் - அஸுரர்களைச் சிவனை வழிபட்டுப் பெற்ற சக்கிரத்தால் அழித்தார். தேவதேவனுன சூலமேந்திய சிவனது கைங்கரியத்தில் ஈடுபட்டு தேவச் சில்பியான விசுவகர்மாவைக் கொண்டு வியப்பிற்குரிய ஆலயத்தை அமைத்தார். பிராகாரம், கோபுரம், விமானத்தைச் சுற்றி ரத்ன மண்டபங்கள், தீர்த்த புஷ்கரிணியைச் சுற்றி கரை, தர்மசாலைகள், உமாதேவியை ஸ்ரீ ஸுந்தரஸ்தனீ எனப் பெயரிட்டுத் தனித்துக் கோவில், சிவபெருமானின் நிருத்தஸபை, அங்கு அலங்கிருதநடர் என்ற தாண்டவ மூர்த்தி, கணேசர், ஸ்கந்தர் முதலிய தனிச் சன்னிதிகள் அமைப்பு என க்ஷேத்திரத்தை தெய்விக அழகு பெறச் செய்தார். ஆங்கிரஸ - பாரத்வாஜ - கௌதம - காசியப - கண்வ - கோத்திரங்களைச் சார்ந்த சைவர்களை சிவபெருமானது நித்ய வழிபாட்டிற்கென அமர்த்தி, அவர்களது குடும்ப நிர்வாகத்திற்கென நிறையத்தனமளித்தார். (10-17)

रथं निर्माय पश्चात्तु सर्वतोभद्रसंज्ञिकम्॥ १८

आगमोक्तप्रकारेण करणेन यथा विधि।
वीथीश्च चतुरः कृत्वा स्थाप्य ब्राह्मणपुङ्गवान्॥ १९

वेदाध्ययनशीलांश्च साग्निहोत्रान् कुटुम्बिनः।
गृहक्षेत्रादिकं दत्वा तेषामाहारपूर्तये॥ २०

उत्सवं कारयामास देवस्य प्रीतिपूर्वकम्।
मृगशीर्षे समारोप्य ध्वजं वृषभलाञ्छितम्॥ २१

वास्तुपूजां विधायाथ ब्रह्मस्थानप्रपूर्वकम्।
प्रत्यहं देवयात्राश्च कारयामास वै हरिः॥ २२

नानालङ्कारसंयुक्तं नानामाल्यविराजितम्।
नानाध्वजपताकाढ्यं नानारत्नविचित्रितम्॥ २३

उत्सवं कारयामास स्वर्गावतरणेशितुः ।
ध्वजारोहणमारभ्य षष्ठेऽह्नि निबिडत्विषि ॥ २४

चन्द्रिकाभिश्च सान्द्राभिः रात्रावतिमनोहरम् ।
नानादेशसमायातैर्जनसंघैः समाकुलम् ॥ २५

दीपिकाशतसाहस्रैरुद्दीपितदिगन्तरम् ।
मुरवैर्मुरजैर्डक्काकाहलीपटहारवैः ॥ २६

मृदङ्गैर्मद्दलैरन्यैः सङ्गीतैर्नर्तनैरपि ।
कीर्तनैश्शिवभक्तानां बहूनां व्याप्तदिक्तटम् ॥ २७

उत्सवं तादृशं ये तु न सेवन्ते जना भुवि ।
ते निन्द्याः सर्वलोकेषु तेषां जन्म निरर्थकम् ॥ २८

*ஆகம முறைப்படி ஸர்வதோபத்திர அமைப்பில் தேரை உருவாக்கி அதில் ஈசனை வீதியுலா வரச் செய்தார். வேதம் முழுதும் ஓதி அக்னி ஹோத்ரம் முதலிய நித்தியச் சடங்குகளை முறைப்படி செய்கிற வேதியரைச் சகலவஸதிகளுடன் குடியமர்த்தி தேவனின் பிரீதி பெற உற்சவங்களைச் செய்தார். மிருகசீர்ஷ நட்சத்திரத்தில் விருஷபக் கொடியேற்றி வாஸ்து பூஜை செய்து பிரும்மஸ்தானத்தில் அமர்ந்து தினமும் ஊர்வலத்தை நடத்தினார். விண்ணிலிருந்து விமானத்தின் மூலம் அங்கு ஈசன் வந்திறங்கிய நாளை பல்வேறு அலங்காரம் செய்து கொடிகள் கட்டி ரத்ன அங்கி சார்த்தி ஊர்வலம் நடத்தினார். கொடியேற்றத்திலிருந்து ஆறுவது நாளன்று நிலவொளியில் பல ஊர் மக்கள் கூட்டத்தினிடையே ஆயிரக்கணக்கான தீப ஒளியால் வழியை ஒளி மயமாக்கி முரசம், டமரு, டக்கா, எக்காளம், தம்பட்டம், மிருதங்கம், மத்தளம் முதலியவற்றின் நாதத்தோடு ஆடலும் பாடலும் கீர்த்தனமுமாகப் பல பக்தர்களின் ஆரவாரத்துடன் உற்சவம் பெரும் கோலாஹலத்துடன் நடந்தது. இந்த சிறந்த உற்சவத்தைக் காண்கிற பேறு பெறாதவரின் பிறவி வீணே என மக்கள் கருதினர். (18-28)*

कल्हारमालिकापङ्क्त्या विचित्ररचनाजुषा ।
अलङ्कृतमनर्घाभिर्मुक्तारुद्राक्षदामभिः ॥ २९

देव्या सह वृषारूढं भासुरं दिव्यतेजसा ।
विष्णुनेत्रार्चितपदं पुरोभागे परत्र तु ॥ ३०

ब्राह्मणेनार्पितव्याधकपित्थफलभासुरम् ।
स्वर्गादवातरदिति स्वर्गावतरणेश्वरम् ॥ ३१

नाम्ना दर्शनमात्रेण सर्वकामार्थसिद्धिदम् ।
यस्सेवते तदा मर्त्यो दश पूर्वान् दशावरान् ॥ ३२

पितॄनुत्तार्य नरकान्नयते शाङ्करं पदम् ।
एवं तस्योत्सवं कृत्वा हस्तर्क्षे च रथोत्सवम् ॥ ३३

कारयित्वा च चित्रायां तीर्थं स हरिरातनोत् ।
देवस्य पश्चिमे भागे विष्णुतीर्थे स्वनिर्मिते ॥ ३४

सौवर्णतीरबन्धे च स्वर्णसोपानशोभिते ।
तदा तु सर्वलोकाश्च मुनयश्च सनातनाः ॥ ३५

स्नात्वा चावभृथे काले कृतार्था अभवन् द्विजाः ।
जीवन्मुक्ता बभूवुस्ते तीर्थस्नानस्य वैभवात् ॥ ३६

*அழகிய செங்கழுநீர்ப் பூமாலை, முத்துமாலை, ருத்ராக்ஷமாலை அணிந்து விருஷபவாஹனத்தின் மீது அமர்ந்த ஈசனை திருவடியில் விஷ்ணு நேத்திரமாகிய தாமரை, குறும்பர் என்ற வேட இனத்தவர் அளித்த விளாங்கனி, விண்ணிலிருந்து விமானத்துடன் இறங்கிய ஸ்வர்காவதரணர் என்ற கோலம். இக்காட்சியைக் கண்டவரின் முன்பின் 21 வம்சத்தினர் நற்கதிபெறுவர். இவ்வாறு அந்த உற்சவத்தை நடத்தி ஹஸ்த நக்ஷத்திரத்தில் ரதோத்ஸவத்தையும் நடத்தி சித்திரை நக்ஷத்திரத்தில் தீர்த்தவாரியை, தங்கக்கரையும் தங்கப்படிக்*

*கட்டுகளும் கொண்டு விஷ்ணுவால் தோண்டப் பெற்ற விஷ்ணு தீர்த்தத்தில் நடத்தினார். கூடியிருந்த மக்களும் முனிவரும் தேவரும் தீர்த்தத்தில் நீராடி மனநிறைவு பெற்றனர். வஸிஷ்டர் முதலானோர் ஜீவன் முக்தராயினர்.*

*(சிவராஜதானி என்ற சிறப்புப் பெயர் விஷ்ணுவின் வழிபாட்டுச் சிறப்பால் ஏற்பட்டது. ஸ்வர்காவதரணம் - விண்ணிழி கோயில். தில்லை, கீழ்வேளூர், திருப்புறம்பயம், திருவாரூர், திருவீழிமிழலை என ஐந்தும் பஞ்சஸ்தலங்கள். வீழிக்காட்டில் உள்ள சக்ரபிரதான மூர்த்தியும் கல்யாண ஸுந்தரரும் 64 சிவமூர்த்திகளில் இரு மூர்த்திகள். திருவுலா உற்சவம் நடைபெறும் போது திருமஞ்சனத்திற்காக மாலையில் தாமரைப் பூக்களோடு விஷ்ணு ஆலயத்திற்கு எழுந்தருள்வார். அர்ச்சிப்பார். சக்கிரம் பெறுவார். இது இவ்வரலாற்றை அடியார்களுக்கு நினைவு படுத்துகிறது.) (29-36)*

सूतः—

उत्सवान्ते तदा स्नात्वा विष्णुः सम्प्रीतमानसः ॥ ३७

आहूय मुनिवर्यांश्च मार्कण्डेयपुरोगमान् ।
नित्याग्निहोत्रिणः शान्तान् शिवभक्तिपरायणान् ॥ ३८

नमस्कृत्य द्विजवरान् ब्रह्मण्यो ब्रह्मभावनः ।
मान्यो वाङ्मनसातीतमहिमा धर्मविग्रहः ॥ ३९

सर्वलोकैकसंरक्षादीक्षितोऽमितविक्रमः ।
स्वेनाभिन्नान्मन्यमानो ब्राह्मणान् सत्यवादिनः ॥ ४०

तत्तादृशो हरिर्वाक्यमब्रवीन्मुनिपुङ्गवान् ।
विष्णुः—
भो ब्राह्मणा महाभागास्तपसा धूतकल्मषाः ॥ ४१

कैलासादागतेनात्र विमानेन समन्विते ।
कल्याणनाम्ना शृङ्गेण कल्याणाद्रौ विराजिते ॥ ४२

तीर्थपुष्करिणीतीर्थपवित्रितमहीतले।
तेजिनीविपिने पुण्ये क्षेत्राणामुत्तमोत्तमे॥ ४३

कुरुध्वं शाम्भवं यज्ञं देवप्रीत्यर्थमादरात्।
तेनैव जन्मसाफल्यं भवत्यत्र न संशयः॥ ४४

देशे काले च संपन्ने कर्तव्यः पुण्यसञ्चयः।
नो चेत्कृतस्य वैकल्यं कर्मणो जायते ध्रुवम्॥ ४५

यदि वो रोचते विप्राः कुर्वन्त्वत्र मयेरितम्।

*உத்ஸவம் முடிந்ததும் ஹரி தான் நீராடி மார்கண்டேயர் முதலிய முனிவர்களையும் தினமும் அக்னி ஹோத்ரம் புரிகிற சிவபக்தர்களையும் அழைத்து வணங்கினார். வேதியரிடம் அன்பு மிக்கவர், அனைவரையும் பிரும்மமாக பாவிப்பவர். பெருமதிப்புக்குரியவர்; வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பெருமை கொண்டவர். தர்மமே வடிவானவர். உலகனைத்தையும் காக்கக் கங்கணம் கட்டியவர், பேராற்றல் மிக்கவர், ஆத்மஜ்ஞானி. இந்த விஷ்ணு வேதியரையும் முனிவரையும் தன்னருகே அழைத்துக் கூறினார். நீங்கள் பெரும் பாக்யசாலிகள். தவத்தால் தூய்மை பெற்றவர். இந்த விமானம் கைலாஸத்திலிருந்து வந்தது. மேருவின் கல்யாணமெனும் பகுதியிலிருந்த கல்யாணம் என்ற சிகரம் இங்கு புதைந்துள்ளது. மிகப்புனிதமான தீர்த்த புஷ்கரிணீ என்ற நீர் நிலை. புனிதமான வீழிக்காடு. இங்கு சிவனைக் குறித்து வேள்வி புரிவீர். உம் பிறவி நற்பயன் பெறும். கிடைத்த இடத்தையும் நேரத்தையும் நல்வினை புரியப் பயன் படுத்த வேண்டும். நேரத்தையும் ஆயுளையும் வீணடிக்கக் கூடாது. உமக்கு இது உசிதம் எனத் தோன்றினால் உடன் வேள்வியைத் தொடங்குவீர் என்றார். (37-45)*

सूतः—

इत्युक्तास्तेन हरिणा ब्रह्मिष्ठा वेदवादिनः॥ ४६

मन्वानास्तद्वचः पथ्यं मार्कण्डेयपुरोगमाः।
स्तुत्वा हरिं तदा वाग्भिरग्र्याभिरतिपौरुषम्॥ ४७

सदा हितोपदेष्टारं ब्रह्मण्यं ब्रह्मवादिनः।
स्थलस्य परितश्चक्रुः शालाश्चैव पृथक्पृथक्॥ ४८

वसिष्ठः पूर्वभागे च दक्षिणे गौतमो मुनिः।
मार्कण्डेयः पश्चिमे च विश्वामित्रस्तथोत्तरे॥ ४९

अन्ये तदन्तरे चक्रुः शालाः शास्त्रविधानतः।
कामधेनुं समावाह्य हव्यादीनाञ्च सिद्धये॥ ५०

आरभ्य यागं ते चक्रुः विप्रपूजापुरस्सरम्।
घृतकुल्याः पयःकुल्या मधुकुल्याश्च तैलजाः॥ ५१

पुण्ड्रेक्षुसारकुल्याश्च दधिकुल्यास्तथैव च।
शर्कराफलपूपाद्या भोक्तॄणां तृप्तयेऽभवन्॥ ५२

निवासार्थं गृहाश्चापि गन्धमाल्यादयस्तथा।
भूषणानि च वासांसि ब्राह्मणानां पृथक् पृथक्॥ ५३

अन्यानि चाभिलषितान्यासंस्तेषां गृहे गृहे।
उच्चैस्तरैर्ब्रह्मघोषैः शालामौखर्यमावहन्॥ ५४

होमसञ्जनितैर्धूमैर्वितानितदिगन्तरम्।
अकाण्डवर्षासमयभ्रान्तिप्रदमभून्नभः॥ ५५

बर्हिणश्च तथा भ्रान्त्या नृत्यन्ति स्म समन्ततः।
वपासन्दोहसौरभ्यवहा वातास्तरस्विनः॥ ५६

*முனிவர்களும் வேதியர்களும் இதனை ஏற்று ஹரியைப் பாராட்டி தலத்தைச் சுற்றிப் பல இருப்பிடங்களை அமைத்தனர். வஸிஷ்டர் கிழக்கிலும், கௌதமர் தெற்கிலும் மார்க்கண்டேயர் மேற்கிலும், விசுவாமித்திரர் வடக்கிலும் மற்றவர் நடுவிலும் குடியிருப்பை முறைப்படி அமைத்துக் கொண்டனர். பால் ஹவிஸ் முதலிய வேள்விக்குரிய பொருளைப் பெற காமதேனுவை*

அழைத்தனர். வேள்விகள் தொடங்கின. நெய், பால், தேன், எண்ணெய், கருப்பஞ்சாறு, தயிர், இவை வாய்க்கால்களாக ஓடின. உண்பவர் திருப்தியடைய சர்க்கரை பழம் அப்பம் என உணவுப் பண்டங்கள் நிறைந்திருந்தன. விரும்பிய தனைத்தும் எங்கும் கிட்டியது. வேத கோஷம் எதிரொலித்தது. ஹோமப்புகை எங்கும் மேகம் போல் பரவ மக்கள் மழையை எதிர்பார்த்து வானை நோக்கினர். மயில்கள் ஆடின. *(46-56)*

दिगन्तं प्राप्य सर्वेषां शंसन्ति स्म मखोत्सवम्।
ऋत्विजां स्तोत्रशस्त्राद्यैः पूर्णमासीद्दिगन्तरम्॥ ५७

गव्यूतिपञ्चकं ब्रह्मसंघैरापूरितं तथा।
तिलतर्पणपूर्वविद्यावच्छ्रीवाञ्छयमेव च॥ ५८

यावत्कल्याणनगरं पश्चिमे च महास्थले।
उत्तरे कोटिनगरं स्थानस्यावधिरुच्यते॥ ५९

प्रत्यहं शतसाहस्रं ब्राह्मणाः परितर्पिताः।
विशिष्यानेन यज्ञेन शिवस्तुष्टोऽभवद्भृशम्॥ ६०

सर्वलोकाश्च सन्तुष्टाः शिवे तुष्टेऽखिलात्मके।
एतादृशे क्रतुवरे शाम्भवे च प्रवर्तिते॥ ६१

चतुश्शालाश्च विविधाः स्थापितास्तत्र तत्र हि।
शालाविधायकश्चासीद्विश्वकर्मा स्वबान्धवैः॥ ६२

यथैव विष्णुभवनं यथा कैलासमन्दिरम्।
यथैव ब्रह्मसदनं नानालङ्कारसंयुतम्॥ ६३

तथैव कारयामास सर्वमास्थानमण्डपम्।
एतादृशे महाक्षेत्रे शाम्भवे च प्रवर्तिते॥ ६४

सर्वे तृप्तिं गता देवा लोकपालादयस्तथा।
ब्राह्मणाश्च महाभागा वृद्धानाथाश्च बालकाः॥ ६५

यथा यज्ञान्तरे नासीत्तृप्त्यै सर्वसुपर्वणाम्।
तथा प्रवर्तितो यज्ञः शाम्भवस्तेजिनीवने ॥ ६६

उच्छ्रायवत्तरा यूपाः स्थापिता बहवोऽत्र हि।
सुवर्णाङ्कृताश्चैव मेरुश्रृङ्गा इवाभवन्॥ ६७

रक्षकश्चाभवद्विष्णुः सर्वयज्ञफलप्रदः।
यज्ञाङ्गो यज्ञभोक्ता च यजमानस्वरूपवान्॥ ६८

धाता विधाता जगतां सर्वधर्मप्रवर्तकः।
वर्षे पूर्णे ततश्चक्रुर्मुनयोऽवभृथं द्विजाः॥ ६९

हरिश्रुतायां नद्याश्च शिवप्रीत्यर्थमादरात्।
ददुश्च ब्राह्मणेभ्यश्च धनं धेन्वा समर्पितम्॥ ७०

यावत्तृप्तिर्भवेत्तेषां तावत्तत्र स्थलोत्तमे।
देवस्तत्र हि तेजिनीवनपतिर्देव्या महासुन्दर -
स्तन्व्या नायिकया सहैव वृषभारूढो मयूरध्वजम्।
विघ्नेशश्च पुरो विधाय हि गणैर्नन्द्यादिभिस्संवृतः
सान्निध्यं समगादभीप्सितवरं दातुं मुनीनां तदा॥ ७१

इति षष्ठोऽध्यायः

வேள்வி நடப்பதை பக்கத்து ஊர் மக்கள் அறிந்து கூடினர். 30 கிலோ மீட்டர் பரப்பில் வேதியர் கூட்டம் தென்பட்டது. திலதர்பணபுரீ (திலதைப்பதி - செதிலைப் பதிஎனப்படுகிற ஊர்) ஸ்ரீ வாஞ்சியம், மேற்கிலுள்ள கல்யாணபுரம், வடக்கில் கோடி நகரம் வரை லக்ஷம் அந்தணர்கள் கூடியிருந்தனர் சிவன் இதனால் அருள் மிகுந்து மகிழ்ந்தார். விச்வகர்மா க்ஷேத்திரத்தைச் சுற்றி விஷ்ணு கோவில் பிரும்மன் கோவில் முதலியவற்றை அமைத்தார். பாலரும் யுவரும் முதியவரும் மகிழ்ந்தனர். வேள்விகளில் மிக உயர்ந்த யூபங்கள் பல, மேருசிகரப் போல்

*அமைக்கப் பெற்றன, வேள்வியை விஷ்ணு காப்பாளராக இருந்து நிறைவுறச் செய்தார். வேள்வியும் அதன் பகுதிகளும் அதனைப்புரிபவரும் அதற்குப் பலன் தருபவரும் பிரும்மாவும் பிரஜாபதியும் தர்மத்தை நிறைவுறச் செய்பவரும் ஹரியே. மனநிறைவு தருகிற தக்ஷிணை வழங்கப் பெற்றது. தேஜினீவன நாதரான ஈசன் மஹாஸுந்தரஸ்தனியான தேவியுடன் விருஷபத்தின் மீது அமர்ந்து கணபதி - ஸ்கந்தர்களுடன் அனைவருக்கும் காட்சி தந்து விரும்பியதனைத்தையும் அருளினார். (57-71)*

—*—

## सप्तमोऽध्यायः

सूतः—

लिङ्गस्य नैरृते भागे यत्र प्रवहते नदी।
हरिश्रुताख्या तत्राविर्भूता पूता महेश्वरे॥ १

गङ्गा किरीटनिलया सह्यजां धृतविग्रहाम्।
अंशेनासाद्य सन्तोषादालिलिङ्ग प्रियां सखीम्॥ २

लिङ्गाभिषेकसम्भूतक्षीरस्रोतस्विनी च सा।
सहैव सङ्गता ताभ्यां प्रावहन्निरवग्रहम्॥ ३

एकैका मुक्तिदा गङ्गासह्यजाक्षीरसिन्धुषु।
तादृङ्नदीसङ्गमस्तु त्रिवेणीसङ्गमः स्मृतः॥ ४

मकरे मासि पुण्यर्क्षे गङ्गा तां सह्यकन्यकाम्।
यदाऽऽलिङ्गत्तदाद्येतत् पुष्यतीर्थमिति स्मृतम्॥ ५

पुष्यतीर्थं तदारभ्य रुद्रगङ्गावधि द्विजाः।
पश्चिमायामपि दिशि पञ्चक्रोशावधि ध्रुवम्॥ ६

पुण्यतीर्थं तत्र मुक्तिः करस्थैव निमज्जताम्।
मुक्तिक्षेत्रमिदं ज्ञानाभ्यासे षण्डधियां नृणाम्॥ ७

तत्र सन्निहितं देवं देव्या वृषभमास्थितम्।
किन्नरैर्देवगन्धर्वैरप्सरोभिश्च सेवितम्॥ ८

सर्वे प्राञ्जलयो भूत्वा मार्कण्डेयपुरोगमाः।
सपत्नीकाः सपुत्राश्च बन्धुवर्गैः समन्विताः॥ ९

नत्वा नत्वा पुनर्नत्वा स्तुत्वा स्तुत्वा यथाबलम्।
अकृत्रिमैर्वाक्यवरैः सद्योजातादिपूर्वकैः॥ १०

प्रसादयामासुरीशं भक्त्या यज्ञेन च द्विजाः।
तेषां प्रसन्नो भवान् कृपामधुरया गिरा॥ ११
वरं वृणीध्वमित्येवमुवाच स्मितगर्भया॥ १२

ईश्वरः—

भो भो मुनीन्द्रा भवतान्तु यागे
तृप्तोऽहमुच्छ्रायवति स्थलेऽस्मिन्।
वरं वृणीध्वं वरदोऽहमद्य
यथारुचि स्याद्भवतां द्विजेन्द्राः॥ १३

सूतः—

इत्युक्तास्ते मुनिवरा देवदेवेन शम्भुना।
ऊचुः प्राञ्जलयः सर्वे कृपालुं भक्तवत्सलम्॥ १४

*"அத்தியாயம்" - 7*

*லிங்கத்தின் தென்மேற்கில் ஹரிச்ருதா நதி. மஹேசனின் கிரீடத்திலுள்ள கங்கை உருவமேற்று காவேரி (ஹரிச்ருதா) யுடன் இணைந்தாள். லிங்காபிஷேகத்தின் போது தோன்றிய பாலாறு (க்ஷீரநதி) அத்துடன் கலந்தது. இது ஒரு திரிவேணீ ஸங்கமம்.*

*கங்கை காவேரியுடன் கூடிய நாள் மகரமாதத்து பூச நக்ஷத்திரம். அதனால் அந்த முக்கூடலை 'புஷ்யதீர்த்தம்' என்பர். மேற்கிலும் ஐந்து கோசதூரம் வரை புண்ய தீர்த்தம். அதில் மார்க்கண்டேயர் முதலிய முனிவரனைவரும் நீராடினர். பகவானை வணங்கி வேதவாக்கியங்களால் துதித்தனர். அவர்களுக்கு அருள்புரியத் தோன்றிய ஈசன் வரம் கேட்கும்படி கூற முனிவர்கள் கருணை மிக்க பக்தவத்ஸலனை இறைவனிடம் வேண்டினர். (1-14)*

मुनयः—

स्वामिन् कृतार्था वयमद्य शम्भो भवत् प्रसादस्य च पात्रभूताः ।।
त्वद्दर्शनं पुण्यवतां हि लभ्यं तस्माद्वयं धन्यतमा हि लोके ।। १५

अस्य क्षेत्रस्य सदृशन्न भूतन्न भविष्यति ।
सम्पूर्णकलया यत्र भवान्देव्या समागतः ।। १६

तृषार्तस्य जलं देयं क्षुधार्तस्यान्नमेव च ।

न तृषार्ता न क्षुधार्तास्तृप्तास्त्वद्दर्शनाद्वयम् ।
तस्मात्किमपि नास्त्येव वरणीयं हि नः प्रभो ।। १७

इतः परन्तु कर्तव्यं कार्यं त्वय्येव वर्तते ।
त्वदुक्तकारिणः सर्वे लोकपालास्तथा वयम् ।। १८

अस्मानप्यनुशाधीह कर्तव्यं लोकरक्षक ।
अप्रमेयमनिर्देश्यमतीन्द्रियमगोचरम् ।। १९

अनाथं जगतान्नाथं कारणातीतमव्ययम् ।
अरूपं सर्वरूपञ्च त्रिलोक्यां को नु पश्यति ।। २०

दर्शनादन्यदस्माकं देयन्नास्ति महेश्वर

सूतः—

इति विज्ञापितो देवो मुनिभिश्चैव विष्णुना ।। २१

वरं ददौ वराहार्णां लोकानुग्रहणाय च।

உம் அருளுக்கு உகந்தவராகப் பெரும் பாக்கியம் செய்துள்ளோம். உமது தரிசனம் புண்யவானுக்கு கிட்டும். நாங்கள் தன்யர்கள். இந்த க்ஷேத்திரத்திற்கு ஈடானது வேறில்லை. பூர்ணகலையுடன் நீங்கள் தேவியுடன் இங்கு கோயில் கொண்டுள்ளீர்கள், எங்களுக்குப் பசியோ, தாகமோ தேவை ஏதுமோ இல்லை. அதனால் வரனுகப் பெற ஏதுமில்லை. எங்களது பணி என்ன என்று குறிப்பிடுவீர்! அளவீட்டிற்கும் குறிப்பீட்டிற்கும் உட்படாதவரும் புலப்படாதவரும் உலகின் நாதருமான உம்மை - உருவமற்றவர், ஆனால் எல்லாமாகத் தோன்றுகிற உம்மை எங்கும் காண இயலாது. எனினும் எமக்குப் புலப்படுகிறீர். இதை விடச் சிறந்த பேறு இல்லை என்றனர். ஈசன் தானே இவ்வாறு அவர்களுக்கு வரமளித்தார். (15-21)

ईश्वरः—

मार्कण्डेयमुखास्सर्वे शृणुध्वं वचनं मम २२

युष्माभिरुक्तन्तत् सत्यं तथाऽप्येकं वचो मम।
कार्यं स्थलविशेषेऽस्मिन्नाकाशनगराह्वये॥ २३

मद्विमानस्य परितः पञ्चबाणप्रपातने।
चतुर्षु दिक्षु लिङ्गानि विधिवत् स्थापयन्तु च॥ २४

स्वदिक्ष्विन्द्रादयश्चैव कुर्वन्तु मम चाज्ञया।
तीर्थानि चैव कुर्वन्तु लोकानां हितकाम्यया॥ २५

तेन सर्वे जना विप्राः स्नानदर्शनपूजनैः।
मुक्ता भवन्तु सर्वे च सत्यमेव मयोच्यते॥ २६

मम क्षेत्रेषु सर्वेषु क्षेत्रमेतद्विशिष्यते।
विष्णोस्तपःप्रभावेन यथा ध्यातो हृदम्बुजे॥ २७

तथा विमानेनागत्य स्थितोऽहं तेजिनीवने।
सुमेरोरागते शृङ्गे निमग्नेऽत्र हि भूतले॥ २८

तेन क्षेत्रमिदं पुण्यं मम प्रीतिकरं शुभम्।
प्रलयेऽपि स्थिरीभूतं लिङ्गमेतत्तु मे स्थले॥ २९

त्रिजटाधारिणं लिङ्गं ये पश्यन्ति स्थलोत्तमे।
सिंहवाहे विमाने च ते वै कैलासवासिनः॥ ३०

दिशामि मम वर्णञ्च पञ्चवर्णं सनातनम्।
जपं कुर्वन्तु सततं विष्णोश्च सविधे स्थिताः॥ ३१

विष्णुश्च कलया चात्र सदा तिष्ठतु भूसुराः।
इत्युक्त्वा परमं तेषां मन्त्रं पञ्चाक्षरं ददौ॥ ३२

மார்க்கண்டேயரை முன்னிட்ட முனிவர்களே! என் விருப்பம் இது. ஆகாச நகரம் என்ற இந்த க்ஷேத்திரத்தில் என் விமானத்தைச் சுற்றி நான்குதிக்குகளிலும் 5 வில்லடி தூரத்தில், இந்திரன் முதலிய நான்கு திக்பதிகளும் தம்தம் பெயருடன் நான்கு லிங்கங்களையும் அவற்றின் எதிரில் நான்கு தீர்த்தங்களையும் உலக நன்மைக்காக அமைக்கட்டும். ஆங்காங்குள்ள மக்கள் அவற்றில் நீராடி, ஈசனுன என்னைக் கண்டு வழிபட்டு துயர் நீங்கப் பெறட்டும். இந்த க்ஷேத்திரம் மற்ற க்ஷேத்திரங்களை விடத் தனிச்சிறப்பு பெற்றது. விஷ்ணு கடுந்தவமிருந்து என்னை உள்ளத்தில் தியானித்ததால் கைலாயத்திலிருந்து விமானத்திலேறி இங்கு வந்தேன். மேருவின் சிகரமொன்றும் இங்கு விழுந்து பூமியில் பதிந்துள்ளது. அதனுலும் இது எனக்கு மிகப்பிரியமானது. என் லிங்கம் பிரளயத்திலும் அழியாது நிலைத்திருப்பது. என் லிங்கத்தில் என் மூன்று சடைகள் பதிந்துள்ளன. ஸிம்ஹவாஹனம் கொண்ட விமானத்தில் என்னைக் காண்பவர் கைலாஸமடைவர். பஞ்சாக்ஷரமந்திரத்தை விஷ்ணுவின் அருகில் அமர்ந்து ஜபிப்பீர். விஷ்ணு இங்கேயே எப்போதும் பூர்ணராக இருப்பார்'' என வாழ்த்தி அனைவருக்கும் பஞ்சாக்ஷர உபதேசம் செய்தார். (22-32)

सिद्धपञ्चाक्षरास्ते च तथाऽकुर्वन्दिगीश्वराः।
लिङ्गानि च प्रतिष्ठाप्य कृत्वा तीर्थवराणि च॥ ३३

कलया च स्थिता ह्यासन् शिवाज्ञाकारिणश्च ते।
मार्कण्डेयमुखाश्चापि तथाऽकुर्वन्मुनीश्वराः॥ ३४

नवलिङ्गमयं क्षेत्रं विमानेन समन्वितम्।
आसीत्पुरातनं क्षेत्रं तपोयोगेन शार्ङ्गिणः॥ ३५

ब्रह्मणेदं पुरा सृष्टं पुण्यैश्च परमाणुभिः।
तीर्थपुष्करिणी भाति तद्विमानस्य सन्निधौ॥ ३६

देनस्य पश्चिमे भागे विष्णुतीर्थं महत्तरम्।
देवस्य नैरृऋते भागे पद्मतीर्थं च भासते॥ ३७

तत्तीरे वर्तते लिङ्गं विष्णुना च प्रतिष्ठितम्।
ब्रह्मण्येश्वरनामानं तमाहुर्ब्रह्मवित्तमाः॥ ३८

तस्य दक्षिणभागे च नदी भाति हरिश्रुता।
भोगमोक्षप्रदात्री च स्वर्गलोकाधिरोहिणी॥ ३९

देवस्य पूर्वदिग्भागे पञ्चबाणप्रमाणके।
ऐन्द्रं लिङ्गञ्च तीर्थञ्च वर्तते सर्वकामदम्॥ ४०

देवस्य दक्षिणे भागे बाणत्रितयपातने।
याम्यं लिङ्गञ्च तीर्थञ्च वर्तते मृत्युनाशनम्॥ ४१

विष्णोश्च पश्चिमे भागे बाणपातद्वयान्तरे।
वर्तते वारुणं लिङ्गं तीर्थञ्च भवपाशहम्॥ ४२

उत्तरे देवदेवस्य बाणषट्कप्रमाणके।
कौबेरं वर्तते लिङ्गं कामितार्थप्रदायकम्॥ ४३

देवस्याग्नेयदिग्भागे क्रोशषट्कप्रमाणके।
वसिष्ठेश्वरलिङ्गञ्च तीर्थं वासिष्ठमेव च ॥ ४४

तस्य दर्शनमात्रेण ब्रह्मत्वं संप्रजायते।
देवस्य नैरृते भागे बाणत्रितयपातने ॥ ४५

हरिश्रुतायास्तीरे च दक्षिणे गौतमेन तु।
कृतं तीर्थञ्च लिङ्गञ्च वर्तते पापनाशनम् ॥ ४६

तस्य दर्शनमात्रेण दुश्चारादपि मुच्यते।
वायव्यभागे देवस्य क्रोशद्वितयमानके ॥ ४७

मार्कण्डेयं महातीर्थं लिङ्गञ्चातिप्रकाशते।
तस्य दर्शनमात्रेण कालमृत्युर्विनश्यति ॥ ४८

देवस्यैशानभागे तु बाणषट्कप्रमाणके।
वैश्वामित्रं महालिङ्गं वर्तते तीर्थमेव च ॥ ४९

तस्य दर्शनमात्रेण हीनवर्णो द्विजो भवेत्।
एतानि चाष्ट तीर्थानि लिङ्गानि च तथैव च ॥ ५०

பஞ்சாக்ஷரமந்திர ஜபஸித்தி பெற்ற திக்பாலகர்கள் நான்கு திக்குகளிலும் லிங்கங்களையும் தீர்த்தங்களையும் அமைத்து வழிபட்டனர். சிவனின் ஆணைப்படி தாமும் ஒரு கலைவடிவில் அங்கு தங்கி ஈசனை வழிபட்டனர். விஷ்ணுவின் தவயோகத்தால் இது மிகச் சிறந்த க்ஷேத்திரமாகியது. புண்யமிக்க பரமாணுக்களைக் கொண்டு பிரும்மா இந்த ஊரைப் படைத்தார். விமானத்தின் எதிரே தீர்த்த புஷ்கரிணீ. ஈசனின் மேல்புறத்தில் விஷ்ணு தீர்த்தம். தென்மேற்கு மூலையில் பத்ம தீர்த்தம் எனும் தாமரைக்குளம். அதன் கரையில் விஷ்ணு வழிபட்ட லிங்கம் - 'பிரும்ஹண்யேசுவரர்' என்ற பெயருடையது. அதன் தென்புறத்தில் ஹரி சொல்லாறு (ஹரிச்ருதா). இம்மையிலும் மறுமையிலும் இன்பமளிப்பது. தேவனின் கிழக்கில் 5 வில்லடி

தூரத்தில் 'இந்திரலிங்கம்' விரும்பியதைத் தரும் தேவனின் தென்புறத்தில் மூன்று வில்லடி தூரத்தில் 'யமலிங்கம்' - மரண பயம் நீக்கும். மேல் புறத்தில் இரு வில்லடி தூரத்தில் 'வருணலிங்கம்' - ஸம்ஸாரக் கட்டை விலக்கும். வடக்கில் ஆறு வில்லடி தூரத்தில் 'குபேரலிங்கம்' - விரும்பிய செல்வத்தைத் தரும். தேவனின் தென்கிழக்கில் ஆறு குரோச தூரத்தில் 'வஸிஷ்டேசுவரலிங்கமும்' 'வஸிஷ்டதீர்த்தமும்'. அந்தணர் தன்மை தரக்கூடியது. தென் மேற்கில் மூன்று வில்லடி தூரத்தில் ஹரிசொல்லாற்றின் தென்கரையில் 'கௌதமேசுவரமும் கௌதம தீர்த்தமும்' நவக்கிரகபீடை விலகும். வடமேற்கில் இருவில்லடி தூரத்தில் 'மார்க்கண்டேசுவர லிங்கமும் மார்க்கண்டேய தீர்த்தமும்' காலமரண பயத்தை நீக்கும். வடகிழக்கில் ஆறு வில்லடி தூரத்தில் 'விச்வாமித்ரேச்வர லிங்கமும்' 'விச்வாமித்ர தீர்த்தமும்' கீழ்வர்ணத்தில் பிறந்தவனையும் உத்தம குலத்தில் பிறக்கச் செய்யும். இவையே அந்த எட்டு லிங்கங்களும் தீர்த்தங்களும். *(33-50)*

हरिश्रुता नदी पुण्या तथा पद्मसरोवरम्।
विष्णुना च कृतं तीर्थं तीर्थपुष्करिणीति च ॥ ५१

तानि द्वादश तीर्थानि सर्वपापहराणि च।
तेषां भूरि च माहात्म्यं वर्णयिष्ये क्रमेण वः ॥ ५२

यस्मिन्वै नव लिङ्गानि विमानसहितानि च।
तत्क्षेत्रसदृशं क्षेत्रं नास्ति नास्ति महीतले ॥ ५३

पापघ्नमिष्टार्थफलप्रदन्तद् ध्येयं च सर्वैरपि योगिबृन्दैः।
संसेवितं सिंहविमानयुक्तं सन्दर्शनात्सर्वसुखावहञ्च ॥ ५४

इति सप्तमोऽध्यायः।

புனிதமான ஹரி சொல்லாறு தாமரைக்குளம் தீர்த்தபுஷ்கரிணீ, விஷ்ணு தீர்த்தம் என இவை சேர்க்க 12 தீர்த்தங்கள். இவை உள்ளடங்கிய க்ஷேத்திரம் மிகப்புனிதமானது.

இதற்கு ஈடான க்ஷேத்திரமில்லை. பாபத்தை நீக்கும். விரும்பியதைத் தரும். யோகியருக்குத் தியானம் நன்கு அமையும். ஸிம்ஹ விமானம் கொண்ட இதனைக் காண இன்பமனைத்தும் கூடும். (51-54)

—*—

## अष्टमोऽध्यायः

सूत पौराणिकश्रेष्ठ सर्वतत्वार्थसत्तम।
एतावन्त्येव तीर्थानि किमन्यान्यपि सन्ति वै॥ १

आहत्य कति तीर्थानि कति लिङ्गानि चात्र हि।
सर्वान्नो विस्तरादब्रूहि शुश्रूषा महती हि नः॥ २

सूतः—
जैगीषव्याश्रमे पूर्वमविमुक्तेश्वरान्तिके।
देवस्य नैरृऋते भागे बाणपातद्वयान्तरे॥ ३

दशाश्वमेधानाजह्रे शिवप्रीत्यै पितामहः।
तदा यज्ञावसाने तु ब्रह्मा लोकपितामहः॥ ४

निर्ममेऽवभृथं कर्तुमविमुक्तेशसन्निधौ।
स्वनाम्नैवोत्तमं तीर्थं ब्रह्मतीर्थमिति श्रुतम्॥ ५

सरस्वत्या कृतं तीर्थं तस्य पश्चिमभागतः।
उत्तरे तस्य सावित्र्या कृतं तीर्थमनुत्तमम्॥ ६

गायत्र्या ब्रह्मकुण्डस्य पूर्वभागेऽघनाशनम्।
महालक्ष्म्या कृतं कुण्डं तस्य दक्षिणतः शुभम्॥ ७

पार्वत्या विहितं कुण्डं तदुपान्ते विराजते।
भूमिदेवीकृतं कुण्डं ब्रह्मकुण्डस्य वै पुरः॥ ८

रुद्रविष्ण्वोश्च कुण्डे द्वे भातस्तत्पार्श्वतो द्विजाः।
नव तीर्थानि पुण्यानि राजन्ते तेजिनीपुरे॥ ९

तत्रापि दिक्पालकृतं गूढतीर्थमिति स्मृतम्।
ब्रह्मकुण्डस्य वै पार्श्वे दक्षिणे तारकाभिधम्॥ १०

गुहेन विहितं तीर्थं भाति संसारतारकम्।
तीर्थं तदुत्तरे देशे बाणपातप्रमाणके॥ ११

कापिलं नाम विख्यातं सर्वपापप्रणाशनम्।
तीर्थानि द्वादशैतानि द्वादशोक्तानि वै पुरा॥ १२

*'அத்தியாயம்' - 8*

*ஸூதர் விளக்கிய லிங்க - தீர்த்த மகிமைகளைக் கேட்ட முனிவர்கள் மேலும் அங்குள்ள லிங்க - தீர்த்தங்களை விளக்கக்கோர, ஸூதர் கூறுகிறார். ஜைகீஷவ்யரின் ஆசிரமத்தருகே அவிமுக்தே சுவரத்தின் அருகில் தேவனின் தென்மேற்கில் இரு வில்லடி தூரத்தில் பிரும்மா சிவனை மகிழ்விக்க 10 அசுவமேதங்களைச் செய்தார். அவபிருதஸ்நானத்திற்காக அவிமுக்தேசரின் அருகே 'பிரும்ம தீர்த்தம்' எனத்தன் பெயரில் ஒரு தீர்த்தம் அமைத்தார். உடன் ஸரஸ்வதி அதன் மேற்கிலும், ஸாவித்ரீ வடக்கிலும் கிழக்கில் காயத்ரியும் மஹாலக்ஷ்மி தெற்கிலும், பார்வதி அதன் அருகிலும், பூதேவி பிரும்ம குண்டத்தின் எதிரிலும் அதன் அருகில் ருத்திரனும் விஷ்ணுவும் தம் பெயரில் தனித்தனியாக குண்டங்கள் (தீர்த்தங்கள்) அமைத்தனர். திக்பாலர்கள் அமைத்தது கூட தீர்த்தம். குகனால் தாரகம் என்ற குண்டம் அமைக்கப்பட்டது. அதன் வடக்கில் கபில தீர்த்தம் என இவை பன்னிரண்டு ஆக 24 தீர்த்தங்கள் அங்குள்ளன. (1-12)*

चतुर्विंशतिसङ्ख्यानि तीर्थान्याहत्य जाग्रति।
देवस्य दक्षिणे पार्श्वे बाणप्रातप्रमाणके॥ १३

भद्रवल्या कृतं तीर्थं लिङ्गश्चापि विराजते।
पञ्चविंशतितीर्थानि तेन ह्यासन्निह स्थले ॥ १४

लिङ्गसङ्ख्याश्च वक्ष्यामि शृणुध्वं सावधानतः।
मुनीन्द्रैश्च वसिष्ठाद्यैरिन्द्राद्यैश्च दिगीश्वरैः ॥ १५

कृतान्यष्टौ हि लिङ्गानि सन्निधौ लिङ्गमेककम्।
अविमुक्तेश्वरं लिङ्गं ब्रह्मण्येश्वरमेव च ॥ १६

भद्रवल्लीश्वरं लिङ्गं लिङ्गं स्वर्गेश्वरं तथा।
चतुर्दश हि लिङ्गानि प्रधानेन सहाभवन् ॥ १७

मध्यार्जुनारुणाद्रीशप्रमुखाः क्षेत्रदेवताः।
तेजिनीवननाथेन तुष्टेन तपसा हरेः ॥ १८

कृतं चक्रप्रदाने द्रागालोकितुमुपागताः।
तेजिनीशस्य परितो लिङ्गरूपेण सर्वतः ॥ १९

वर्तन्ते बहुना किन्तत्क्षेत्रस्य परितो द्विजाः।
सर्वाश्च सिकता लिङ्गरूपा ह्याक्रोशपञ्चकम् ॥ २०

एतावन्ति च तीर्थानि लिङ्गानि च महर्षयः।
वर्तन्ते कुत्र वा क्षेत्रे तस्मादेतद्विशिष्यते ॥ २१

*தேவனின் தென்புறத்தில் வில்லடி தூரத்தில் பத்ரவல்லி அமைத்த குண்டமும் லிங்கமும் உள்ளன, ஆக 24 தீர்த்தங்கள், லிங்கங்கள். இந்திரன் முதலானோரும் வஸிஷ்டர் முதலானோரும் அமைத்த எட்டு லிங்கங்கள் அவிமுக்தேசுவரர், பிரும்ஹண்யேசுவரர் - பத்ர வல்லீசுவரர், ஸ்வர்கேசுவரர், பிரதானலிங்கமான தேஜினீவனேசுவரர் என க்ஷேத்திரத்தைச் சுற்றிப் பல லிங்கங்கள். சுற்றி 5 கோச தூரத்திற்கு ஒவ்வொரு மணலும் லிங்கமே எனலாம். இந்த அளவு லிங்கங்களும் தீர்த்தங்களும் வேறெங்குமில்லை. இங்கு எந்த மூலையிலிருந்தாலும் சிவபூஜையின் பலன் பெறலாம். (13-21)*

पुनरप्यस्य माहात्म्यं क्षेत्रस्याद्य वदामि वः ।
यः शृणोति प्रतिदिनं तेजिनीवनवैभवम् ।। २२

यत्र कुत्र स्थितस्यापि शिवपूजाफलं भवेत् ।
एवमेव प्रतिदिनं शिबिर्नाम नृपोत्तमः ।। २३

आकाशनगरस्यास्य माहात्म्यप्रतिपादकम् ।
श्रुत्वा श्रुत्वा पुराणांश्च स्वदेशादागतः पुरा ।। २४

तीर्थयात्राश्चिकीर्षुस्सन् परिबभ्राम मेदिनीम् ।
काशीं प्रथमतो गत्वा गङ्गायाश्च तटे शुभे ।। २५

प्रयागश्च ततः प्राप्य धनधान्यसमन्वितः ।
तत्र कृत्यानि निर्वर्त्य गयाश्च तदनन्तरम् ।। २६

पितॄंश्च पिण्डदानेन तिलोदकपुरस्सरम् ।
सन्तर्प्य द्विजवर्यांश्च षड्रसान्नेन तत्र च ।। २७

अक्षय्य वटमूले च ब्राह्मणैरनुमोदितः ।
प्राग्ज्योतिषाननुप्राप्य गोवर्द्धनमनन्तरम् ।। २८

आलम्बुसं महाक्षेत्रमग्निशालेश्वरं महत् ।
ततो गोदावरीं प्राप्य तत्र कृत्यं समाप्य च ।। २८

ततश्च क्रोधिकं प्राप्य धर्मेश्वरमनन्तरम् ।
हिरण्यनाभक्षेत्रञ्च सोमेश्वरमतः परम् ।। २९

अगाध सरितश्चैव घटिकापुरमेव च ।
कालञ्जरं महाशैल करहाट वनन्तथा ।। ३०

काकोलं हस्तिनपुरं कौमारवनमेव च ।
चैत्रारण्यं विशालाञ्च मणिकूटमतः धरम् ।। ३१

चन्दनाचलमासाद्य सम्पातीश्वरमेव च।
अरुणाचलमासाद्य वृद्धाद्रिञ्च ततः परम्॥ ३२

श्रीमुष्णनगरं प्राप्य तिल्लारण्यमवाप्य च।
श्रीमद्ब्रह्मपुरं प्राप्य चक्रवाकेश्वरं ययौ॥ ३३

*சிபி என்ற அரசன் தீர்த்த யாத்திரையாகப் பூமியை வலம் வந்தவன் காசி, கங்கைக்கரை, பிரயாகை, கயை என்ற க்ஷேத்திர தர்சனமும் பித்ருக்களுக்கு உரிய சடங்குகளும் செய்து வந்தவன் அக்ஷயவடம், ப்ராக்ஜ்யோதிஷம், கோவர்த்தனம் அலம்புஸம், அக்னிசாலேச்வரம், கோதாவரீ, க்ரோதிகம், தர்மேச்வரம், ஹிரண்ய நாபம், ஸோமேசுவரம், கடிகாபுரம் (திருக்கடிகை) காலஞ்ஜரம், கரஹாடகம், காகோலம், ஹஸ்திநாபுரம், கௌமாரவனம், சித்ராரண்யம், விசாலா, மணிகூடம், சந்தனாசலம், ஸம்பாதீசுவரம், அருணாசலம், விருத்தாசலம், ஸ்ரீ முஷ்ணம், தில்லைக் காடு , பிரும்மபுரம், சக்ரவாகேசுவரம் என க்ஷேத்திரதர்சனம் செய்தார். (23-33)*

ततो मरुद्वृधातीरे गौरीमायूरमप्यथ।
त्रिकोटिभिश्च कुद्दालं मङ्गलेश्वरमेव च॥ ३४

ततो मध्यार्जुनं प्राप्य कारुण्यामृततीरके।
कुम्भघोणमनुप्राप्य दक्षिणावर्तमेव व॥ ३५

श्रीसुन्दरपुरं गत्वा क्षीरिणीवनमेव च।
ब्राह्मणैः पञ्चसाहस्रैः अन्वितो राजनन्दनः॥ ३६

सेतुं गत्वा महाभागो धनुष्कोटिं ययौ पुरम्।
तत्र कृत्वा च दानानि भूरिशो ब्राह्मणेषु च॥ ३७

कृत्वा पिण्डप्रादानञ्च हालास्यमुपविश्य च।
पुनरावृत्य मार्गे च कैलासं दक्षिणं ययौ॥ ३८

ततः सप्तर्षींश्चैव वटारण्यमनन्तरम्।
पुष्पद्युतिमनुप्राप्य शिरःखण्डेश्वरं परम्॥ ३९

एतेषु कृत्वा दानानि सत्यपर्वतमाप्य च॥ ४०

यत्र चण्डेश्वरो योगी गणत्वमुपलब्धवान्।
तत्र संस्थाप्य विप्रांश्च काश्मीरस्थलवासिनः॥ ४१

तेषां दत्वा गृहारामान्सत्येशस्य तथैव च।
कुम्भघोणमनुप्राप्य तत्रापि स्थाप्य च द्विजान्॥ ४२

असङ्ख्येयं धनं दत्वा नारदं सन्ददर्श ह।
तस्य कृत्वा महापूजां पादसंवाहनादिभिः॥ ४३

तेन पृष्टोऽथ कुशलं स्वयं पृष्ट्वाऽथ तस्य च।
दत्वा मृष्टान्नमप्यस्य सन्तोष्य द्विजपुङ्गवम्॥ ४४

स्वाभीष्टं प्रार्थयामास शिबिनामा नृपो मुनिः।
श्रुत्वा तद्वाक्यमानन्दभरितो नारदोऽचिरात्॥ ४५

तेजिनीवनयात्रार्थं चोदयामास तं मुनिः।

इति अष्टमोऽध्यायः।

காவேரிக் கரையில் கௌரீ மாயூரம், திரிகோடிக்கா, குத்தாலம், மங்களேசுவரம் (திருமங்கலக்குடி) காருண்யா மிருத தீர்த்தக் கரையிலுள்ள மத்யார்ஜுனம் (திருவிடைமருதூர்) கும்பகோணம், ஸுந்தரபுரம், க்ஷீரிவனம், ஸேது, தனுஷ்கோடி என்று யாத்திரை செய்து ஆங்காங்கு தானம், பிண்டபிரதானம் செய்து மதுரை வந்து தென்கைலாயம் ஸப்தரிஷி க்ஷேத்திரம் ஆலங்காடு, பூந்துருத்தி, திருக்கண்டியூர், வஸிஷ்டேசுவரம், ஸப்தமங்களம், ஸத்யபர்வதம் வந்தார். சண்டேசுவரர் அங்கு தான் சிவகணநாதரானுர். காச்மீரத்திலிருந்து தன்னைத் தொடர்ந்து வந்த அந்தணர்களை அங்கு குடியிருக்க செய்தார். ஸத்யேசருக்கு

*ஆலயம் கட்டினார். கும்பகோணம் அடைந்து அங்கும் சில வேதியரைக்குடியிருக்கச் செய்தார். அங்கு நாரதரைக் கண்டு அவருக்குப் பணிவிடை செய்து தன் நோக்கத்தைத் தெரிவிக்க அவர் தேஜினீ வனத்திற்குச் செல்லப் பணித்தார். (34-45)*

—*—

## नवमोऽध्यायः

सूतः—

नारदेन ततस्साकं तेन गत्वा नृपाग्रणीः ।
निश्रेणीं मोक्षमार्गस्यापश्यतां तेजिनीलताम् ॥ १

विष्णोश्च तपसः स्थानं तीर्थपुष्करिणीतटे ।
मार्कण्डेयं गौतमञ्च विश्वामित्रं वसिष्ठकम् ॥ २

नत्वा च मुनिबृन्दांश्च तैरुक्तं स्थानवैभवम् ।
श्रुत्वा शाम्भवयज्ञे च प्रसादं परमेशितुः ॥ ३

श्रुत्वा दशाश्वमेधञ्च क्षेत्रेऽस्मिन् ब्रह्मणा कृतम् ।
चक्रवर्ती शिबिर्नाम नारदस्य च वाक्यतः ॥ ४

तत्स्थले ब्राह्मणैस्साकं शाम्भवं यज्ञमारभत् ।
एतस्मिन्नन्तरे जिष्णुस्तस्य भक्तिपरीक्षया ॥ ५

सहायं वरयामास धर्मिष्ठं जातवेदसम् ।
तदात्वे वृत्रहा श्येनः कपोतोऽग्निरभूत्क्षणात् ॥ ६

### *"அத்தியாயம்" - 9*

*அரசர்களுள் சிறந்த சிபி நாரதருடன் வீழிச்செடி இருக்குமிடம் வந்தான். வீழிச்செடி முக்திப் பாதையின் படி. தீர்த்த புஷ்கரிணிக் கரையில் விஷ்ணு தவம் புரிந்த இடத்தையும்*

*மார்க்கண்டேயர், கௌதமர், விச்வாமித்ரர், வஸிஷ்டர் முதலிய முனிவர்களேயும் வணங்கினுன். அந்த ஸ்தானத்தின் பெருமை, சிவனைக் குறித்த வேள்வியில் சிவன் அருள் புரிந்தது, பிரும்மா பத்து அசுவமேதங்கள் புரிந்தது, முதலியதை அறிந்த சிபிதானும் சிவனைக்குறித்து வேள்விபுரியத் தொடங்கினுன் இந்திரன் சிபியின் பக்தியைச் சோதிக்க எண்ணி அக்னி தேவனின் உதவியை நாடினுன். இந்திரன் கழுகாகவும் அக்னி புறாவுமாக மாறிச்சிபி இருக்குமிடம் வந்தனர். (1-6)*

एवं वेषसमायुक्तौ प्रतस्थातेऽन्तिकं शिबेः ।
तदा कपोतो वित्रासकंपमानकलेबरः ॥ ७

राजानं शरणं गत्वा प्रणिपत्येदमब्रवीत् ।
भो भो राजन्यवर्यस्त्वं शोभनं चरितं तव ॥ ८

श्येनो हिंसितुमुद्युक्तः मां पालय कृपालय ।
यो रक्षति महीपाल भयविह्वलचेतसम् ॥ ९

स स्नातोऽब्दशतं साग्रं गङ्गायां नात्र संशयः ।
इत्यामनन्ति विद्वांसस्तस्मान्मां रक्ष विह्वलम् ॥ १०

इत्युक्त्वा स कपोतो द्राग्राजानं शरणं गतः ।
राजाऽपि भयसंविग्नं कम्पमानं वचोऽब्रवीत् ॥ ११

इत एहि कपोत त्वं शोकं मुञ्च भयन्त्यज ।
मृत्युतोऽपि भयन्नास्ति मत्समीपे स्थितस्य ते ॥ १२

किमुतापरतस्तत्त्वं त्यज कम्पं सुखी भव ।
एवमुक्त्वाऽभये दत्ते कपोताय नृपेण वै ॥ १३

आजगाम नृपस्याग्रे श्येनरूपी सुरेश्वरः ।
आगत्य यज्ञवाटस्थं राजानं वाक्यमब्रवीत् ॥ १४

श्येनः—

राजन् धर्मविदां श्रेष्ठ विख्यातोऽपि जगत्त्रये ।
कपोतोऽयं ममाहारः कथं संरक्ष्यते त्वया ॥ १५

क्षुधाऽस्मि पीडितश्चाहं मुञ्च मुञ्च कपोतकम् ।
न मुञ्चसि यदि त्वं तु कपोतं मम भक्षणम् ॥ १६

प्राणा यास्यन्ति मे तस्मात् प्राणान् रक्ष नृपोत्तम ।

राजा—

प्राणार्थं रक्ष रक्षेति कपोतश्शरणं गतः ॥ १७

कथन्त्यजेऽहमेनन्तु वद द्विजकुलोत्तम ।
श्येन यश्शरणं प्राप्तं विसृजेत् स तु पातकी ॥ १८

प्रायश्चित्तन्न तस्यास्ति शरणागतघातिनः ।
ब्रह्महत्यादिपापानां कथञ्चिन्निष्कृतिर्भवेत् ॥ १९

शरणागतहन्तुस्तु नेहामुत्र च निष्कृतिः ।
अन्यमांसं यथेष्टं ते दास्ये खगकुलोत्तम ॥ २०

तन्मांसं भक्षय त्वं हि पुत्रपौत्रैर्यथासुखम् ।

*(2) புறா நடுங்கிக் கொண்டு சிபியின் காலடியில் விழுந்து சரணடைந்தது. ''அரசே நீர் சிறந்த செயலாளர். இந்தக் கழுகு என்னை இம்சிக்க வருகிறது. காப்பீர். பயந்தவனைக் காப்பது கங்கையின் நீராடலுக்குச் சமம். என்னைக் காப்பீர் எனச் சரணடைந்தது. சிபி புறாவைப்பயப்படாதே. என் அருகில் இருப்பவன் யமனிடம் கூட பயப்படாமலிருக்கலாம். நடுங்காதே! அருகில் வா!'' என அபயமளித்தான். கழுகுவேஷத்திலிருந்த இந்திரன் வேள்விக் கூடத்திலிருந்த அரசனை நெருங்கி, ''நீர் தர்மமறிந்தவர். புறா எனது உணவு. நான் பசியால் வருந்துகிறேன். புறாவை விட்டு விடுவீர். அவ்வாறு*

*செய்யாவிடில் பசியால் நான் உயிர் நீப்பேன். என் உணவைத்தாரீர் என்றது. சிபி கூறினான் - புறாவும் உயிரைக் காப்பாற்று என என்னைச் சரணடைந்தது. சரணடைந்தவனைக் காக்காதவன் மஹாபாபி. இதற்குக் கழுவாயில்லை. வேறு மாமிசம் வேண்டுமெனில் தருகிறேன். அதைஉண்டு வாழ்வாய் என்றான். (7-20)*

श्येनः —

कपोतोऽयं ममाहारः कल्पितो विधिना खलु ॥ २१

अन्यमांसेषु नापेक्षा विद्यते राजसत्तम ।
श्येनाः कपोतान् खादन्तीत्येषा हि प्रथिता श्रुतिः ॥ २२

तस्मादेतं ददस्व त्वं महीं पाहि सबान्धवः ।
किं प्रयोजनमस्तीह यज्ञैर्विपुलदक्षिणैः ॥ २३

प्राणिनां रक्षणं श्रेष्ठं देहं त्यक्त्वाऽपि देहिना ।
एकं रक्षति बह्वर्थे यो मूढः स नृपोत्तमम् ॥ २४

एकन्त्यक्त्वा तु राजेन्द्र बहून् रक्षन् सुखी भवेत् ।
तस्मात्त्वं राजशार्दूल पुत्रपौत्रादिसंयुतम् ॥ २५

मां रक्ष त्यज्यतामेष तथा चेत्ते भवेद्यशः ॥

*கழுகு வாதிட்டது .புறா தான் எனக்கு விதிதந்த உணவு. வேறு மாமிசம் தேவையில்லை. கழுகுக்கு உணவு புறா என உலகத்திற்குத் தெரியும் அதனை எனக்கு அளித்து நாட்டைக் காப்பீர். நிறைய தக்ஷிணை அளித்து வேள்வி புரிவதால் பலனில்லை. தன் உடலைக் கொடுத்தாவது பிற உயிரைக் காப்பதே சிறந்தது. பலர் பொருட்டு ஒருவனைக் காப்பவன் மூடன். ஒருவனைக் கொடுத்துப் பலரைக் காத்து இன்பம் பெறுவீர்! என்னைக் காப்பீர்! இவனைக் கைவிட்டுப் புகழ் பெறுவீர் என்றது. (21-25)*

राजा—

नेच्छा मे धनधान्येषु पुत्रदारेषु न स्पृहा ॥ २६

किन्त्वेकस्य हि रक्षार्थे स्पृहा गुरुतरा मम ।
शरीरं वापि सन्त्यक्ष्ये सुत्यजं सर्वदेहिनाम् ॥ २७

शरणागतमेतन्तु न त्यजेयं खगोत्तम ।
श्येनः—
कपोतं मुञ्च भक्ष्यं मे तदभावे स्वमामिषम् ॥ २८

कपोतदेहमात्रं त्वं प्रयच्छ तुलया धृतम् ।
राजा—
कृतार्थोऽस्मि महाभाग आत्ममांसं ददामि ते ॥ २९

आत्मा हि परतुष्ट्यर्थं भवेद्यदि मम प्रियम् ।
एवमुक्त्वा महाराजः शिबिः सत्यपराक्रमः ॥ ३०

गृहीत्वा निशितं खड्गं स्वदेहं स्म निकृन्तति ।
कपोतमेकिकायां तु धटायामधिरोप्य च ॥ ३१

आत्मीयं मांसमन्यस्यां निकृन्त्य न्यक्षिपन्मुदा ।
मांसेषु बहुषु क्षिप्तेष्वपि साम्यन्न विन्दति ॥ ३२

यदा धटा तदा मांसमस्थिशेषं निकृन्त्य च ।
धटायान्न्यक्षिपत्तूर्णं तदापि न तुलाऽभवत् ॥ ३३

तदा शिबिश्चक्रवर्ती धीरधीरतरो मुदा ।
सर्वात्मना चाध्यरोहद्धटायां स्वयमेव हि ॥ ३४

तदा धटे द्वे समतां वहतःस्म समीक्ष्य तत् ।
औशीनरो नृपः काममभूत्सन्तुष्टमानसः ॥ ३५

ममाधिरोहणेऽप्येषा साम्यञ्चेन्न व्रजेद्धटा ।
कपोतस्य भवेत् प्राणसङ्कटो दुरतिक्रमः ॥ ३६

शरणागतहन्तृत्वं पातकं मम चाप्नुयात् ।
तस्मात् क्षेत्रमहिम्ना च कृपया तेजिनीशितुः ॥ ३७

मांसास्थिकूटेन समं कपोतस्य तुलाऽभवत् ।
इति सन्तोषभारेण नृत्यत्यौशीनरे नृपे ॥ ३८

देवदुन्दुभयो नेदुर्दिव्याः कुसुमवृष्टयः ।
अभवत्तेजिनीशोऽपि प्रससाद महीपतेः ॥ ३९

அரசன் கூறினான் - எனக்குச் செல்வத்திலோ தானியத்திலோ நாட்டமில்லை. புதல்வன் மனைவி என்ற ஆசை இல்லை. இவன் ஒருவனைக் காப்பதில் எனக்கு அக்கரை அதிகம். என் உடலையும் அளிப்பேன். சரணடைந்தனைக் காப்பேன் என. புறாவைத்தராவிடில் புறாவின் உடல் எடையளவு உம் மாமிசத்தைத் தாரீர் என்றது கழுகு. அதனை மகிழ்ச்சியுடன் ஏற்ற அரசன் கத்தியை எடுத்து தன் உடலை நறுக்கித் துலாக்கோலிலிட்டு புறாவின் எடையுடன் சீர்பார்த்தான். பெருமளவு மாமிசத்தை நறுக்கித் தந்தும் புறாவிற்குச் சமமாகாத நிலையில் தானே துலாக்கோலில் ஏறி அமர்ந்தான். எடை சமமானது. அதிருஷ்டவசமாகத்தன் உடலின் எடை புருவிற்குச் சமமானதே. இல்லாவிடில் புறாவிற்குப் பிராண நெருக்கடி ஏற்பட்டிருக்குமே என மனநிறைவு பெற்றான். சரணடைந்தவனைக் கைவிடுவது பெரும் பாபச்செயல் அல்லவா! தேஜினீவனேசனின் கிருபையால் இது நேர்ந்ததென மகிழ்ந்தான். உடன் தேவர்களின் துந்துபி முழங்கச் சிபியின் மீதுபூமாரி பொழிந்தது, தேஜினீசரும் சிபிக்கு அருள் புரிந்தார். (26-39)

श्येनरूपी सहस्राक्षः स्वदेहं प्राप्तवांस्तदा ।
त्यक्त्वा कपोतरूपञ्च स्वरूपं सोऽग्निरावहत् ॥ ४०

इन्द्रः—

साधु साधु महाराज धैर्यं तेऽन्यदुरासदम् ।
त्वय्येव दृष्टमेतद्धि न दृष्टं प्राकृतेषु च ॥ ४१

इन्द्रोऽहं खलु राजेन्द्र कपोतो हव्यवाडयम् ।
त्वत्परीक्षार्थमायातौ शङ्करस्य नियोगतः ॥ ४२

वरं वृणीष्व भद्रन्ते वरदानार्थमागतौ ।
स्वप्राणनिरपेक्षं हि को रक्षेच्छरणागतम् ॥ ४३

राजा—

युवयोर्दर्शनादेव कृतार्थोऽहं न संशयः ।
किमन्यद्वरमाकांक्षे शिवस्तुष्टो भवेन्मम ॥ ४४

*கழுகு வேடமிட்ட இந்திரனும் புறாவேடமிட்ட அக்னியும் வேடத்தைக் கலைத்து முன் நின்று அரசனை வாழ்த்தினர். அரசரே! உன் உறுதி பாராட்டத்தக்கது. வேறு எங்கும் கண்டிராத உறுதி. நான் இந்திரன்! இவர் அக்னி! ஈசனின் ஆணையால் உன்னைச் சோதித்தோம். தன் உயிரைப் பொருட்படுத்தாமல் பிறர் உயிரைக் காக்க எவன் முன் வருவான்? நீ விரும்பியதைக் கேள்! வரமளிக்கவே வந்துள்ளோம்' என்றான் இந்திரன். உங்களிருவரது தரிசனமே போதுமானது. சிவனது அருள் கிட்ட உதவுவீர் என்றார் அரசன். (40-44)*

इन्द्रः—

उपक्रान्तमिमं यज्ञं निर्विघ्नं कुरु भूमिप ।
पूर्वस्मादतिसौन्दर्यं वपुस्तव भविष्यति ॥ ४५

कीर्तिस्तव समृद्धा स्याद्यावच्चन्द्रदिवाकरौ ।
अत्र क्षेत्रवरे विप्रान् प्रतिष्ठापय मा चिरम् ॥ ४६

तेन तुष्टश्शिवस्तुभ्यं सर्वाभीष्टं प्रदास्यति ।
उपदेक्ष्यति ते सर्वं नारदो वैणिको मुनिः ॥ ४७

तदुक्तेनैव मार्गेण चर पार्थिवसत्तम ।
इत्युक्त्वाऽन्तरधादिन्द्रः सहसा जातवेदसा ॥ ४८

इति नवमोध्यायः

*இந்திரன் கூறினார்- ''தொடங்கிய வேள்வியை நிறைவுறச் செய்வீர். உம் உடல் முன்னதைவிட அழகுபெறும். உம் புகழ் ஸூரிய சந்திரர்கள் உள்ளவரை நிலைத்திருக்கும். நல்ல வேதியர்களை இங்கு வசிக்கச் செய்வீர்! சிவனது அருள் விரைவில் கிட்டும். நாரதர் உமக்கு வழிகாட்டுவார் எனக் கூறி மறைந்தனர். (45-48)*

—★—

## दशमोऽध्यायः

सूतः—
तत औशीनरो राजा शिबिस्साङ्गं महाक्रतुम् ।
निर्वृत्यावभृथस्नातस्तीर्थपुष्करणीजले ॥ १

नारदेनैव सहितो गत्वा देवस्य मन्दिरम् ।
सिंहयुक्तविमानञ्च विष्ण्वर्थं समुपागतम् ॥ २

आकाशलिङ्गं दृष्ट्वाऽथ जटाभिः परिशोभितम् ॥
पश्चाद्भागे महापुण्ये वृषाङ्कं चन्द्रशेखरम् ॥ ३

ददौ भूरिधनं तस्य पूजार्थं चोत्सवाय च ।
नत्वा प्रदक्षिणं कृत्वा नारदेन सहर्षिणा ॥ ४

आहूय ब्राह्मणांस्तत्र वेदवेदान्तपारगान् ।
आर्यान् काश्मीरदेशीयान् स्थानेऽस्मिन् लोकपावने ॥ ५

एवं सङ्कल्पयामास शिबिरौशीनरो नृपः ।
शैवा रात्रिरियं पुण्या ह्यस्या यामे द्वितीयके ॥ ६

शीघ्रं पञ्चशतैः क्षेत्रैस्सगृहैस्सहदक्षिणैः ।
गृहोपस्कारसंयुक्तैर्वेदवेदाङ्गवेदिनः ॥ ७

द्राक्पञ्चशतसङ्ख्याकान् ब्राह्मणाञ्छास्त्रकोविदान् ।
तोषयिष्यामि कालोऽयमतिक्रामति चेत्तदा ॥ ८

प्राणांस्त्यक्ष्यामि सङ्कल्पं निष्प्रत्यूहमिमं मुने ।
कुरु नारद योगीन्द्र यद्यनुग्रहभागहम् ॥ ९

इत्युक्त्वा तादृशान् विप्रान्नारदेन परीक्ष्य च ।
महालिङ्गस्य तु प्रादुर्भावकाले समाहितः ॥ १०

वत्सरान्तस्य पर्याप्तं दातुं क्षेत्रं प्रचक्रमे ।

"அத்தியாயம்" - 10

உசீநரதேசத்தரசனை சிபி அங்கங்களுடன் ஒரு பெரும் வேள்வியை அங்கு நடத்தி அவபிருத நீராடலைத் தீர்த்த புஷ்கரிணியில் செய்தான். நாரதருடன் கோயிலுக்குச் சென்றான். விஷ்ணுவிற்காக வந்த ஸிம்ஹ விமானத்திலுள்ள ஜடாதாரியான சிவலிங்கத்தையும் அதன் பின் புறத்தில் விருஷபத்தின் மீதுள்ள சந்திரசேகரரையும் தரிசித்தான். வழிபாட்டிற்கும் உத்ஸவத்திற்கும் நிறைய தனம் தந்தான். வலம் வந்து காச்மீர தேசத்து வேத - வேதாந்தப் பேரறிஞர்களை அழைத்தான். அன்றிரவுசிவராத்திரி- இரண்டாம் யாமத்தில் சிவன் தோன்றுகிற வேளை. உடன் 500 வீடுகள் ஓராண்டுக்குரிய வசதிகளுடன் 500 காச்மீர அந்தணர்களுக்கு வழங்கத் திட்டமிட்டான். இது

*நிறைவுறாவிடில் உயிரை விடத் தீர்மானித்தான். நாரதரிடம் இதனை இடையூறின்றி நடத்தித் தரவும் தக்க அந்தணர்களைத் தேர்ந்தெடுக்கவும் வேண்டினான். தானம் பெற அந்தணர் கூடினதும் தானம் தரத் தொடங்கினான். (1-10)*

शिवस्तत्समये तस्य परीक्षार्थं महीपतेः । ११
योग्यं ब्राह्मणमेकन्तु न्यूनं तत्र चकार ह ।
सर्वेषां ब्राह्मणानान्तु दत्वा वै करपत्रिकाः ।। १२
एकस्य विप्रस्यालाभात्तताप भृशदुःखितः ।
अन्वेषणाय विप्रस्य मनुष्यान्दिक्ष्वचोदयत् ।। १३
ते मनुष्या दिशस्सर्वा विचित्य च मुहुर्मुहुः ।
कमप्यदृष्ट्वा दुःखेन राजानं पुनरासदन् ।। १४
राजा शिबिस्तदालोक्य कालातिक्रमचिन्तया ।
एवं ह्यचिन्तयत् प्राणत्यागाय कृतनिश्चयः ।। १५
किं मया दुष्कृतं पूर्वं कृतं पापात्मना मुने ।
किञ्चित्प्रसूनं पात्रं वा शिवाङ्घ्रौ न समर्पितम् ।। १६
किं वावमानिता विप्रा मया दुष्कृतकारिणा ।
दास्यामीति प्रतिश्रुत्य किन्न दत्तं मनीषिणे ।। १७
मातापितृगुरुद्रोहो मया किं प्रागनुष्ठितः ।
मातृहा पितृहा गोघ्नोऽभिशस्तो गुरुतल्पगः ।। १८
मित्रविश्वासघाती च ब्रह्महा वीरहा तथा ।
कृतघ्नः पाकभेदी च सुरापो ब्रह्मविक्रयः ।। १९
दानविक्रयिणश्चैव दुष्कर्मकृतजीवनाः ।
शठो नैकृतिकः पापो दूषको डाम्भिकस्तथा ।। २०

रसभेदकरा ये च ये च धर्मप्रदूषकाः ।
शूद्रप्रेष्यकरा स्त्रीघ्ना ये च निक्षेपहारिणः ॥ २१

शूद्रान्नभक्षणा ये च ये पुनः पारदारिकाः ।
किं पापैस्तैर्दुराचारैरनुषङ्गो मया कृतः ॥ २२

शिवद्रोहो मया किं वा कृतः स्वप्नेऽपि नारद ।
गुर्वर्थं वा गवार्थं वा यो हिंसां हृदि मन्यते ॥ २३

वदन्ति येऽनृतं विप्रास्ते शिवद्रोहिणो मताः ।
परद्रव्याभिहर्तारः परदाराभिमर्शकाः ॥ २४

परनिन्दापरा ये च ते शिवद्रोहिणो मताः ।
वेदविक्रयिणश्चैव वेदमार्गविदूषकाः ॥ २५

रसविक्रयिणो ये च ते शिवद्रोहिणो मताः ।
अदातारस्समर्था ये द्रव्याढ्या लोभकारणात् ॥ २६

दीनानाथान्न पश्यन्ति ते शिवद्रोहिणो मताः ।
क्षान्तान्दान्तान् कृशान् प्राज्ञांश्चिरकालं सहोषितान् ॥ २७

त्यजन्त्यकृतकृत्या ये ते शिवद्रोहिणो मताः ।
बालानामथ वृद्धानां श्रान्तानाश्चापि ये नराः ॥ २८

अदत्वाश्नन्ति मृष्टान्नं ते शिवद्रोहिणो मताः ।
वेषन्तु शिवभक्तानां धृत्वा ये विष्णुदूषकाः ॥ २९

अबोधोपहतात्मानस्ते शिवद्रोहिणो मताः ।
नान्तर्भावमहं तेषां पश्यामि कथमप्यहो ॥ ३०

केन पापेन मे दानपात्रमद्य न लभ्यते ।
मया हि सदृशः पापो नास्ति नास्ति महीतले ॥ ३१

यद्भक्तवत्सलश्शम्भुर्मयि जातः पराङ्मुखः ।
इति प्राणपरित्यागे मतिं कुर्वति पार्थिवे ॥ ३२

சிவன் சிபியைச் சோதிக்க விரும்பி எண்ணிக்கையில் ஒருவர் குறையச் செய்தார். அனைவருக்கும் தான சாஸனம் அளிக்கப்பெற்றது. ஐநூறுவது அந்தணரைத் தேடப் பணியாளரை ஆங்காங்கு அனுப்பினான். தேடிச் சென்றவருக்கு ஒருவரும் கிட்டவில்லை. இதனை அறிந்த அரசன் தானத்திற்கான காலவரை தாண்டிக் கொண்டிருப்பதை உணர்ந்து உயிரை விடத் தீர்மானித்தான் ''நான் என்ன பாபம் செய்தேன்? வழிபாட்டில் ஏதேனும் குறையா? தானம் செய்வதாக வாக்களித்த பின் என்றுவது வழங்காதிருந்தேனா? பெற்றோருக்கோ குருவிற்கோ துரோக மிழைத்தேனா? பெற்றோரை - பசுவை அந்தணரை - வீரரைக் கொன்றது, செய்நன்றி மறந்தது, உண்டவீட்டிற்கு வஞ்சனை, வேதத்தை விலைக்கு விற்றது, கெட்ட நடைமுறை, அறவழிக்கு இடையூறு. பெண்கொலை, முதலியவற்றை நேரிடையாகச் செய்தோ செய்பவருக்கு உதவியோ பாபம் செய்துள்ளேனா? கனவில் கூடச் சிவத்துரோகம் செய்ததில்லை. பொறுமையும் புலனடக்கமும் கொண்ட ஏழை அந்தணன், தன்னுடன் கூடப் பல்லாண்டு வாழ்ந்தவர், இவர்களுக்கு நம்பிக்கை துரோகம் செய்தேனா? ஏழை எளியவர் அநாதர் சிறுவர் முதலியவருக்கு அன்னமிடாமல் நான் மட்டும் அறுசுவை உணவு ஏற்றேனா? சிவ பக்த வேஷமிட்டு விஷ்ணு நிந்தை செய்பவன், சிவத்துரோகம் செய்தவர் இவர்களுடன் இணைந்தேனா! என்னைப் போல் பாபி உலகில் இல்லை. பக்தவத்ஸலனான சிவனும் என்னிடம் பராமுகமானாரே! என வருந்தி உயிரைவிடத் தீர்மானித்தான். (11-32)

दयालुर्भक्तवर्गेषु तेजिनीपुरनायकः ।
अत्यार्द्रहृदयो भूत्वा देव्यै चेदमचीकथत् ॥ ३३

एवमुक्त्वा गिरीशेन सुन्दरस्तननायिका ।
भगवन्तमुवाचेदं भक्तानुग्रहकांक्षया ॥ ३४

देवी—

स्वामिन्नतिवदान्यस्स चक्रवर्ती शिबिर्नृपः ।
भक्तानामग्रणीस्सोऽयं भवत्कैङ्कर्यतत्परः ॥ ३५

अनुगृह्णीष्व तस्मात्त्वं महदेतन्मम प्रियम् ।
प्रपञ्चमातापितरावित्युक्त्वा वृद्धरूपिणौ ॥
सुब्रह्मण्यं पुरस्कृत्य प्रतस्थाते नृपान्तिकम् ॥ ३६

इति दशमोऽध्यायः

*(3) பக்தரிடம் பேரன்பு கொண்ட சிவன் உள்ளம் கனிந்து தன் துணைவியான ஸுந்தர ஸ்தனியிடம் இதனைத் தெரிவித்தார். தேவியும் பக்தனுக்கு அருள் புரிய விரும்புபவளாக பெருமானிடம் வேண்டினாள். ''பெரும் கொடையாளியான அரசன் உம் அடியார்களில் சிறந்தவன். உமது ஸேவையில் ஆர்வமிக்கவன். இவனுக்கு அருள் புரிவீர். அதுவே என் விருப்பம்'' என. இருவரும் முதியவர் வேடம் பூண்டு ஸுப்பிரஹ்மண்யனை முன்னிட்டு அரசனிடம் வந்தனர். (33-36)*

—★—

## एकादशोऽध्यायः

सूतः—

कात्यायनीविवाहाय कन्दर्पायुतसन्निभः ।
यो वक्ष्यते स एवायं स्वर्गावतरणेश्वरः ॥ १

शनैः प्रतस्थे भगवान् वृद्धवेषधरः शिवः ।
बाहुना दण्डमालम्ब्य प्रस्खलत्पादचंक्रमः ॥ २

शिथिलावयवग्रन्थिः ससिरालिकलेबरः ।
श्रमादुद्वेलनिश्वासः कम्पमानः पदे पदे ॥ ३

गङ्गाधर महादेव शिव गौरीपते इति ।
शनैस्सङ्कीर्तयन्नाम स्वयंपाकार्थतण्डुलम् ॥ ४

अन्यच्च लवणं मुद्गं कालशाकचणादिकम् ।
वस्त्रे निबध्य संभारं वहन्त्या च कटीतटे ॥ ५

अज्ञातपूर्वां बिभ्रत्या पलितंकरणीं जराम् ।
अनुयातोऽधिकश्रान्त्या देव्या पाश्चात्यभागतः ॥ ६

उपनीतिक्रियायोग्यवयसा रूपशालिना ।
मार्गं दर्शयता चाग्रे कुमारेण विराजितः ॥ ७

औशीनरस्य नृपतेरन्तिकं शङ्करो ययौ ।
गत्वा चैवाञ्जलिं बद्ध्वा क्षेत्रार्थी चाहमागतः ॥ ८

जानन्त्याद्यं च भिक्षुं मां लोका बहुकुटुम्बिनम् ।
इतः परं किं वक्तव्यमित्युक्त्वोपरतः श्रमात् ॥ ९

सत्पात्रेषु पुरा दत्तं परीक्ष्य बहुधा मया ।

### "அத்தியாயம்" - 11

காத்தியாயினியை மணக்க வரவிருக்கிற ஆயிரம் மன்மதருக்கு ஒப்பான ஸ்வர்காவதரணேசன் முதியவராக வேஷமிட்டுத் தடியூன்றி நடைதடுமாற, தளர்ந்த உடலமைப்புடன் நடுங்கிக் கொண்டு ஒவ்வொரு அடியிலும் பெருமூச்சுடன் கங்காதர! மகாதேவ! சிவ! கௌரீ பதே! என வாயாறக் கூறிக் கொண்டு தானே சமைத்து உண்பதற்கான அரிசி, பருப்பு, உப்பு, கருவேப்பிலை, கடலை என சிறு மூட்டைகட்டி இடுப்பில் சுமந்து நரைத்த தலையுடன் தன் பின் வருகிற மனைவி

*தொடர, உபனயனத்திற்கு உரிய வயதும் அழகும் கொண்ட குமாரனுடன் உசீநர அரசனின் அருகில் வந்து கைகூப்பி'' வீடு பெற விரும்பி வந்துள்ளேன். நான் பெரும் குடும்பமுள்ளவன். ஏழை. இதற்கதிகமாகச் சொல்லத் தேவை இல்லை. நானும் நன்கு சோதித்து நல்லவருக்குப் பல தடவை தானம் வழங்கியுள்ளேன் எனக் கூறி அமர்ந்தார். (1-9)*

राजा—

किङ्गोत्रस्त्वं किमाचारः किंविधः कस्य वा सुतः ॥ १०

ब्राह्मणस्त्वं न सन्देहो मत्प्रश्नस्योत्तरं वद

ब्राह्मणः—

गोत्रसूत्रादिकं नाहं जाने नृपकुलोत्तम ॥ ११

अस्ति चेन्मे पिता वक्ति गोत्रसूत्रादिकं नृप ।
तादृशं पितरञ्चापि न जाने किं पुनः परम् ॥ १२

अध्यापयति को वेदान् वेदाङ्गान्यथ यः परम् ।
पिताऽध्यापयिता पुत्रमित्याहुर्न हि मे पिता ॥ १३

विचार्यालं योग्यताऽभूत् किन्त्वेतावन्निवेदये ।
न कुत्रचित् गृहं मेऽस्ति न क्षेत्रञ्चापि कुत्रचित् ॥ १४

परेतस्थल एवाहं नित्यं वर्ते स्वतन्त्रकः ।
वस्तुं वासोऽपि न हि मे दारिद्र्यं किमतः परम् ॥ १५

उपनायनकालोऽयमस्य पुत्रस्य मे नृप ।
तस्यापि विभवो नास्ति तं मत्वा क्षेत्रमर्पय ॥ १६

न चेद्देशो विशालोऽयं यास्येऽहं यत्र कुत्रचित् ।
इति वादिनि विप्रेन्द्रे जरार्ते नारदो मुनिः ॥ १७

ध्यानयोगेन तत्प्रोक्तवचनेनापि शङ्करम् ।
अनुग्रहाय राजर्षेरायातमवधारयन् ॥ १८

औशीनराय शिबये राजन्याय न्यवेदयत् ।
तन्निवेदनमात्रेण शिबिरौशीनरो नृपः ॥ १९

अहो भाग्यमहो भाग्यं भाग्यं मेऽभूत् फलोन्मुखम् ।
इति निश्चित्य तद्धस्ते दानोदकमपातयत् ॥ २०

गोत्रसूत्रविलेखानान्ददौ च करपत्रिकाम् ।
आदाय तत्क्षणादेव पार्वतीपरमेश्वरौ ॥ २१

वृद्धवेषं विहायाशु सान्निध्यं तस्य जग्मतुः ।
कुमारोऽपि कुमारोऽभूत् सुकुमाराङ्गयष्टिकः ॥ २२

तस्य दर्शनमात्रेण महेशस्य करे नृपः ।
प्रतिग्रहीतरि स्वस्मात् कोटिमूल्यमणीमयम् ॥ २३

सहस्रकोटिसूर्याभं ददौ भूषणमेककम् ।
वरञ्च वरयामास पार्थिवः पार्वतीपतिम् ॥ २४

''என்ன கோத்திரம்? என்ன கற்றிருக்கிறீர்? எந்த ஊர் நடைமுறை! யாருடைய மகன்? நீர் அந்தணர் என்பதில் ஸந்தேகமில்லை.'' அந்த அந்தணர் கூறினார். கோத்திரத்தையும் ஸூத்ரத்தையும் அறியேன். தந்தை இருந்தால் இதனை அறிய முடியும். அப்படி ஒரு தந்தையை அறியேன். தந்தையிருந்தால் வேதத்தையும் வேதாங்கங்களையும் கற்றுக்கொடுத்திருப்பார். என் தகுதி பற்றிச் சிந்தித்தது போதும். என்னைப் பற்றிக் கூறுகிறேன். எனக்கென வீடோ நிலமோ இல்லை. மயானத்தில் வசிக்கிறேன். உடுத்த ஆடையில்லை. இதைவிட ஏழ்மை ஏது? உபநயனவயதில் மகன் உள்ளான். உபனயனம் செய்விக்க வசதியில்லை. இதனை உணர்ந்து நிலம் தருவாய். தராவிடில் இந்த

*தேசம் விசாலம். எங்கேனும் செல்கிறேன்'' என்றார். நாரதர் சிறிது தியானத்தில் ஆழ்ந்தார். வந்திருப்பது சிவனே என அரசருக்கு உணர்த்தினார் அரசன் தன் பாக்கியத்தை உணர்ந்து பெருமிதமடைந்தான். கையில் நீர்வார்த்து தான சாஸனத்தை அந்தணர் கையில் வழங்கினான். அதனைப் பெற்ற பார்வதியும் பரமேசுவரனும் குகனும் முதியவர் வேஷத்தைக் களைந்தனர். உடன் விலைமதிக்க இயலாத பேரொளி ஆபரணத்தை அளித்து ஈசனிடம் வரம் வேண்டி நின்றான். (10-24)*

मत्तः प्रतिग्रहीतृत्वप्रसिद्धिस्तव शङ्कर ।
आचन्द्रतारकं भूयात् मत्क्षेत्रानुभवोऽपि च ॥ २५

त्वत्पादे निश्चला भक्तिर्भवेदेतद्वरं मम ।
इत्युक्तो जगतां नाथस्तस्मै दत्वा यथावरम् ॥ २६

उत्सवं कारयेत्युक्त्वा देव्यान्तर्द्धिमगान्मृडः।
अन्तर्द्धानं गते देवे वरं दत्वाभिकांक्षितम् ॥ २७

देवस्य पश्चिमे भागे विष्णुतीर्थस्य पश्चिमे ।
कृत्वा नृपो वास्तुपूजां कृत्वा वास्तु यथाविधि ॥ २८

ब्राह्मणेभ्यो विभज्यादात्सोपस्कारैर्गृहाणि सः ।
शिबिः कृतार्थमात्मानं मन्यते स्म महीभुजाम् ॥ २९

स्वयं प्रतिग्रहीताभूद्येन सर्वेश्वरो विभुः ।
धन्यधन्येन हि मया पुण्यं महदुपार्जितम् ॥ ३०

मत्पुण्यसदृशं लोके न भूतं न भविष्यति ।
इत्येवं मन्यमानश्च श्लाघितो नारदेन च ॥ ३१

*ஈசனே! (நீரே கொடுப்பவர் என்ற நிலைமாறி) நீர் கொடுத்ததை ஏற்பவர் என்ற புகழ் ஏற்பட்டது. எனக்கு இந்த க்ஷேத்ரத்தின் அனுபவம் சந்திர ஸூர்யர் உள்ளவரை*

*தொடரட்டும். உம்திருவடிகளில் திடமான பக்தி அமையட்டும் என்ற சிபியின் கோரிக்கையைச் சிவன் ஏற்ருர். உத்ஸவத்தை நடத்த ஆணையிட்டு மறைந்தார். தேவனின் மேற்குபக்கத்தில் விஷ்ணு தீர்த்தத்தின் மேல் கரையில் அக்கிரஹாரம் அமைத்து அரசன் அதில் அந்தணர்களை வாழவைத்தான். பகவானுல் ஏற்கப்பட்டதை உணர்ந்து மன நிறைவு பெற்ருன். செல்வத்தை நன்கு பகிர்ந்தளித்த அரசனை நாரதரும் பாராட்டினுர். (25-31)*

स्तुतः किन्नरगन्धर्वैः शिबिरौशीनरो नृपः ।
उत्सवं कारयामास कैङ्कर्यं बहुधाऽकरोत् ॥ ३२

पूर्वोक्तकाले विधिना वसन्ते मासि चैत्रके ।
तमुत्सवं द्रष्टुकामाः समायाता दिगन्तरात् ॥

ब्रह्मक्षत्रियविट्शूद्राः पुनर्जात्यन्तराण्यपि ।
रथवीथ्यां महेशस्य दर्शनात् कृतिनोऽभवन् ॥ ३४

चित्रायां पूर्णिमायोगे तीर्थसेवामथाकरोत् ।
शिबेर्वंशभुवस्सर्वे तेन पुण्येन नारकाः ॥ ३५

कैलासं पितरो जग्मुः पुनरावृत्तिवर्जितम् ।
वनस्थानां यतीनां च नैष्ठिकानां च लिङ्गिनाम् ॥ ३६

देवस्य पश्चिमे भागे प्रथमावरणाद्बहिः ।
धर्मशलास्तथा कृत्वा माठापत्याष्टकं तथा ॥ ३७

तेषां भिक्षाविशेषाय शिवपूजार्थमादरात् ।
प्रत्येकं निष्कसाहस्रं प्रतिवर्षं शिबिर्ददौ ॥ ३८

दृष्ट्वा च नारदः सर्वं धर्मसंस्थापनं महत् ।
सन्तुष्टः परमप्रणीतो देवं नत्वा पिनाकिनम् ॥ ३९

कृत्वोपवीणितं सर्वैर्ब्राह्मणैरनुमोदितः ।
ययौ स तीर्थचरणं कर्तुं लोकहितो रतः ॥ ४०

*சித்திரை மாதத்தில் உற்சவம் நடந்தது. எண்ணற்ற மக்கள் கூடினர். ரத வீதியில் இறைவனைக் கண்டு மகிழ்ந்தனர். சித்திரா பௌர்ணமியன்று தீர்த்தவாரி நடந்தது. சிபியின் முன்னோர்கள் மேனிலை பெற்றனர். ஈசனின் மேற்கே முதல் பிராகாரத்திற்கு வெளியே தர்மசாலைகள் 8 மடங்கள் வானப்பிரஸ்தர் துறவி பிரும்மசாரி லிங்கதாரி முதலானோருக்கு தங்குமிடம் அமைத்து அவற்றை மேற்பார்வையிட சிவபூஜை செய்ய ஒவ்வொருவருக்கும் ஒவ்வோராண்டும் ஆயிரம் பொன் அளித்தார். நாரதர் மிகவும் திருப்தியடைந்து சிபியை மேலும் தீர்த்த யாத்திரை செய்ய அழைத்துச் சென்றார். (32-40)*

ब्राह्मणास्स्थापितास्तत्र न्यवसन् प्रीतिपूर्वकम् ।
अग्निहोत्ररताः शान्ताः पञ्चाक्षरपरायणाः ॥ ४१

त्रिकालपूजानिरताः शिबेर्वंशविवृद्धये ।
कृताशीर्वचना वेदशास्त्रघोषसमुज्ज्वलाः ॥ ४२

कृत्वा ब्रह्मप्रतिष्ठां च कैङ्कर्यं विनिवर्त्य च ।
राजाप्यौशीनरः श्रीमान् स्वां पुरीमभ्युपेयिवान् ॥ ४३

कालेन पुत्रान् संस्थाप्य स्वपदे देशकारकान् ।
निजेन पुण्याधिक्येन शिवसायुज्यमाप्तवान् ॥ ४४

पुण्याधिक्ये क्षेत्रवरे पुराणे दानं कृतश्चेदणुमात्रमेव ।
तन्मेरुतामेति शिवप्रसादाद्दातुर्ग्रहीतुश्च फलं भवेच्च ॥ ४५

मध्याह्नकाले क्षुधिताश्च काकाः सिक्थं तु भुक्त्वा द्विजवर्यगेहे ।
ते चात्र मुक्ता द्विजरूपमापुर्द्विजोपि सायुज्यमवाप सत्यम् ॥ ४६

इति एकादशोऽध्यायः

*அங்கு குடியேறிய அந்தணர்கள், அக்னி வழிபாடு, பஞ்சாக்ஷர மந்திர ஜபம். சிவனுக்கு முக்கால வழிபாடு, சிபியின் வம்சம் வளர வாழ்த்துக்கள் இவற்றுடன் அமைதியாக வாழ்ந்தனர். சிபியும் யாத்திரையை முடித்துக் கொண்டு உசீநரம் சென்று அரசாண்டு தன்வழி நடக்கிற புதல்வரிடம் அரசை ஒப்படைத்து சிவனோடு இணைந்தான். புனிதக்ஷேத்திரங்களில் செய்த தானம் அணுவளவாயினும் மேருஅளவு பலன் தரும். கொடுப்பவரும் ஏற்பவரும் நன்மை பெறுவர். நடுப்பகலில் புண்யக்ஷேத்திரத்தில் அந்தணர் வீட்டில் தனக்காக இறைக்கப் பெற்ற அன்னப்பருக்கையை உண்ட காக்கைகளும் மேனிலையடையும். வேதியரும் சிவபதமடைவர். (41-46)*

—*—

## द्वादशोध्यायः

सूतः—

अन्यदप्यस्य माहात्म्यं क्षेत्रस्याहं वदामि वः ।
शृणुध्वं सावधानेन सर्वपापप्रणाशनम् ॥ १

आसीत्पुरूरवा नाम प्रतिष्ठानगरे पुरा ।
राजा समस्तधर्मज्ञः शशास पृथिवीमिमाम् ॥ २

कदाचिद्भार्गवस्तस्य राज्ञस्सन्निधमभ्यगात् ।
दृष्ट्वाऽथ भार्गवं तत्र भार्यया स पुरूवाः ॥ ३

सपर्ययाऽतनोत् प्रीतं विष्टरस्थं व्यजिज्ञपत् ।
अद्य मे सफलं जन्म मुने मे पावनं गृहम् ॥ ४

वीक्षा ते हन्ति पापानि गङ्गेव करुणानिधे ।
किञ्चित्त्वां प्रष्टुमिच्छामि वद मे करुणानिधे ॥ ५

केन कर्मविपाकेन को रोगः प्राप्यते नरैः ।
एतद्रहस्यं मे ब्रूहि सर्वज्ञस्त्वं यतो भुवि ॥ ६

### "அத்தியாயம்" - 12

*பிரதிஷ்டா என்ற நகரின் அரசன் புரூரவஸ். அறவழி அறிந்தவன். பார்க்கவர் என்ற ருஷி அவனது சபைக்கு வந்தார். அரசன் அவரை அணுகி மனைவியுடன் உபசரித்து ஆஸனத்தில் அமர்த்தி விண்ணப்பித்தான். இன்று என் பிறவி பலன் பெற்றது. என் மாளிகை புனிதமானது. என் விண்ணப்பம் இது. நோய்கள் பாதிப்பதற்கு முன் வினை காரணம் என்பர். இந்த கெட்ட செயலின் பின்விளைவு இந்த நோயை உண்டாக்கும் என்ற வரையறை உண்டா? நீர் எல்லா மறிந்தவர். இதன் ரகசியத்தைக் கூறுவீர் என்று வேண்டினார். (1-6)*

भार्गवः—

श्रुत्वा तद्वचनं दीनं वक्तुं तमुपचक्रमे ।
ये लोलुपाः परस्त्रीषु ता वीक्षन्तेऽनुरागतः ॥ ७

कामक्रोधादिभिः प्राज्ञानन्धीकुर्वन्ति ये द्विजान् ।
ते कालवशमापन्ना यमदण्डेन दण्डिताः ॥ ८

नरकानुभवस्यान्ते मानुषं जन्म चेद्भवेत् ।
तदाक्षिरोगसम्पन्ना जात्यन्धा वा भवन्ति च ॥ ९

भाषन्ते कर्णकटुकां गुरूनन्यानथापि वा ।
ये पैशुन्यस्य वक्तारस्ते जिह्वारोगिणो मताः ॥ १०

ये पुराणादिषु प्रोक्तं हितं पथ्यं न शृण्वते ।
नरकान्ते पूर्ववत्ते जायन्ते कर्णरोगिणः॥ ११

आत्मार्थमेव पक्वान्नं ये कामवशगा नराः ।
भुञ्जते निरपेक्षास्ते पुनर्जन्मनि मानुषम् ॥ १२

अवाप्य देहं बाध्यन्ते कुक्षिरोगैश्च दुस्सहैः ।
ये पुरा परदारेषु वर्तन्ते स्म बलान्नराः ॥ १३

तिर्यग्योनिषु यागार्थं कन्यासु विधवासु च ।
चरन्ति तेऽश्मरीमेहश्लेष्माद्यैर्दधते व्यथाम् ॥ १४

*பார்க்கவர் கூறினார் :- பிறர் மனைவியரைக் காமக் கண்ணுடன் பார்ப்பதும் வேதியரைக் காமத்தாலும் கோபத்தாலும் கண்ணில் தாக்குவதும் பார்வை இழத்தலை உண்டாக்கும். இவர்கள் நரகதண்டனை பெற்று மறுபிறவியில் பார்வை நோய் - குருடு பெறுவர். பெரியோர்களிடம் கடும் சொல்லால் பேசுபவர் நாக்கில் நோயுறுவர். நல்வழி கூறப்படுவதைக் கேட்கமறுப்பவர் காதில் நோயுறுவர். சமைத்த உணவைப் பிறருக்கு அளிக்காமல் தன் வயிற்றை மட்டும் நிரப்புபவர் வயிற்று நோய் பெறுவர். பிறர் மனைவியை வலுவில் தீண்டுபவர் சிறுநீர்க்கட்டு, நீரிழிவு, நீரில்கல், நீரில் சீழ் முதலிய வாதைகளை அனுபவிப்பார். (7-14)*

प्राणिनां प्राणहिंसार्थं प्रवर्तन्ते च ये नराः ।
दण्डाघातकशाघातशस्त्राग्रोत्कृन्तनादिभिः ॥ १५

ते नरा हि पुनर्जन्मन्यङ्गवैकल्यमाप्नुयुः ।
ये पुरा मनुजा देहे ग्रन्थिभेदकरा नृणाम् ॥ १६

मुष्टिप्रहारनिरतास्ते ग्रन्थिपिडकायुताः ।
ये पुनर्ब्राह्मणा देवान् पादाग्रेण स्पृशन्ति वै ॥ १७

पीड्यन्ते पादरोगैस्तैः पुनर्जन्मन्यनेकधा ।
ये पुनर्धान्यमानानि क्रयविक्रयकारणात् ॥ १८

विकुर्वन्ति परं रूपगर्वेणापि हसन्ति च ।
विशिष्य च गुरूंस्ते तु पैशाच्योन्माददूषिताः ॥ १९

ये निर्दयाः शिशून् हन्ति त्यक्त्वा तान् भुञ्जते च ये ।
परपुत्राभ्यसूया ये तेषां स्यादनपत्यता । २०
भविता पुत्रशोकश्च न तस्यास्ति विचारणा ।
अश्वत्थं वृक्षराजन्तु ये वृथैव नराधमाः ॥ २१

छिन्दन्ति तस्य काष्ठैर्ये स्वार्थमेव पचन्ति च ।
ते पापिष्ठा नरा लोके परेत्य नरकान्बहून् ॥ २२

अत्यन्तदुस्सहान् घोराननुभूय ततः परम् ।
तिर्यग्योनिशतं प्राप्य कीटयोनिशतं तथा ॥ २३

अन्तेषु मानुषं जन्म प्राप्य रोगशतार्दितः ।
पश्चाद्घोरसिराग्रन्थिबाधितो भवति ध्रुवम् ॥ २४

ये दूषका ब्राह्मणानां विशिष्य शिवयोगिनाम् ।
कथञ्चित्ते तु सम्प्राप्य मानुषं जन्म कुत्सितम् ॥ २५

भजेरन्दुष्परिहरं कण्ठमालाव्रणं नरः ।
अज्ञात्वा महतान्नृणां माहात्म्यं ये नराधमाः ॥ २६

यत्किञ्चिद्भृतिदानेन भारं ये वाहयन्ति च ।
शिरोरोगं दुस्सहं ते प्राप्य यास्यन्ति वेदनाम् ॥ २७

*உயிரினத்தை வீணேதடியாலோ சாட்டையாலோ கூர் மிக்க ஆயுதத்தாலோ அடித்துச் சிதைப்பவர் அங்க ஊனம் அடைவர். அவயவப்பூட்டுகளைச் சிதைப்பவர் முஷ்டியால் குத்துபவர் கட்டி, கிரந்தி நோயுறுவர். தெய்வத்திருமேனியைக் காலால் தொடுபவர் மறுபிறவியில் கால்நோய் பெறுவர். வியாபாரத்தில் கொடுக்கல் வாங்கலில் எடை - அளவு கோலால் ஏமாற்றுபவர், பெரியோர்களைச் செருக்குடன் அவமதிப்பவர் பிசாசபாதை பித்து நோயுறுவர். சிசுக்கொலை சிசுவிற்கு உணவிடாமல் தான் மட்டும் உண்பவர் பிறரது குழந்தைகளை வெறுப்பவர்,*

மக்கட்பேறற்றவராவர். புத்திர சோகத்தில் வாடுவர். அரசமரத்தைச் சிதைத்து எரிபொருளாகப் பயன்படுத்துபவர் நரகவாதனையுடன் கால்நடை பூச்சி புழுவாகப் பிறந்து மனிதப்பிறவி பெற்று ரத்தக் குழாய் நோய் பெறுவர். சிவனடியாரையும் வேதியரையும் நிந்திப்பவர் கண்டமாலை நோயுறுவர். பெரியோரின் பெருமை உணராமல் குறைந்த கூலி தந்து பெருஞ்சுமை சுமக்கச் செய்பவர் தலைநோயால் வேதனைப்படுவர். (15-27)

मर्मभेदीनि कृत्यानि कृत्वा ये तु महात्मनाम् ।
नित्यं दुर्विषहं घोरं कुर्वन्ति हृदयज्वरम्।। २८

तापज्वरेण पीड्यन्ते ते क्रूरेण दिवानिशम् ।
परीक्षासमये ये तु भीषयन्ति द्विजान् शठाः ।। २९

पवनव्याधिना ते तु पीड्यन्ते च सभान्तरे ।
इत्यादयोऽपि बहवो विपाकाः क्रूरकर्मणाम् ।। ३०

अन्यैरप्राकृतैः किन्ते साम्प्रतं पार्थिवोत्तम ।
भवतः कुष्ठरोगस्य पत्न्यास्ते विस्मृतेरपि ।। ३१

हेतुभूतञ्च दुष्कर्म परिहारमपि ब्रुवे ।
देवो वा मानुषो वापि ब्रह्मा विष्णुर्हरोऽपि वा ।। ३२

अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते ।

பெரியோரின் உள்ளத்தைச் சிதைக்கிற செயலைச் செய்பவன் இதயநோயும் தாபஜ்வரமும் அனுபவிப்பான். ஸபையின் நடுவே பரீக்ஷையில் வேதியரை அச்சுறுத்துபவர் வாயுநோய் கொள்வார். கொடுஞ் செயலுக்கேற்ப கொடும் விளைவுகள் நேரும். மற்றவர் பற்றிய சிந்தனை போதும். உமக்கு வந்துள்ள குஷ்டநோய்க்கும் உம்மனைவிக்கு உள்ள அபஸ்மார நோய்க்கும் காரணத்தையும் பரிஹாரத்தையும் கூறுவேன். தேவனோ மனிதனோ

மும்மூர்த்திகளோ எவராயினும் அளவுமிக்க புண்ய - பாபங்களுக்குரிய பலனை உடனே இப்பிறவியிலேயே அனுபவிக்க நேரும். (28-32)

माघमासे त्वया राजन् स्नात्वा लावण्यशालिना ॥ ३३

एकादश्यां पुण्यतिथावुपवासव्रतं कृतम् ।
अहर्मुखे हि द्वादश्यां तैलाभ्यङ्गमकारि च ॥ ३४

स्नात्वा कोष्णाम्बुनाऽकारि पारणा सामिषाशनैः ।
अवामन्यन्त सर्वेऽपि त्वया सौन्दर्यगर्वतः ॥ ३५

तेन कर्मविपाकेन कुष्ठरोगी भवानभूत् ।
सुन्दर्या ते भद्रवल्लीनाम्न्या च तव भार्यया ॥ ३६

रजोगुणाविष्टहृदा माघस्नानं कृतं त्विह ।
अन्येषाञ्चैव धर्माणां प्रत्यूहो बहुधाकृतः ॥ ३७

सौन्दर्यगर्वतस्तस्याः पर्यहास्यन्त च प्रजाः ।
तद्दुष्कर्म प्रेयसीं ते फेनिलाननपङ्कजाम् ॥ ३८

अपस्मारेण विकृतामकरोत्पृथिवीपते ।
तत्पापस्य विशुध्यर्थं सहितो भार्ययाऽनया ॥ ३९

कवेरेकन्यां गच्छ त्वं दानं कृत्वा द्विजन्मनाम् ।
सा कवेरमुनेः कुण्डीनालिकारन्ध्रनिर्गता ॥ ४०

धर्मद्रवा महांहोघ्नी पूगरम्भातटोज्ज्वला ।
नानादेवालयोदञ्चच्छंखदुन्दुभिनादिता ॥ ४१

उमाश्रीवाक्सुतापुण्या स्वर्गलोकाधिरोहिणी ।
ब्रह्मविष्णुशिवाद्यैश्च सेव्या देवैर्मुनीश्वरैः ॥ ४२

ख्याता हरीनदीत्यस्यास्तीरे पनसकानने ।
तेजिनीनगरं तस्य माहात्म्यं शृणु मन्मुखात् ।। ४३

நீர் அழகாயிருந்தவர் மாசிமாதத்தில் ஏகாதசி புண்ய திதியில் உபவாஸ விரதம் ஏற்றிருந்தீர். துவாதசியன்று காலையிலேயே எண்ணெய் தேய்த்து வெந்நீரில் குளித்தீர். மாமிச உணவு கொண்டீர். அழகின் செருக்கால் பிறரை அவமதித்ததால் அதன் விளைவாக குஷ்ட நோயாளியானீர். உம்மனைவி பத்ரவல்லி ரஜோகுணம் மிகுந்து பிறரது அறச்செயலில் இடையூறுகளை விளைவித்தாள். மக்களைப் பரிகசித்தாள். அதனை விளைவு தான் இந்த அபஸ்மாரம் என்ற வலிப்பு நோய். பாபச் செயலுக்கு பரிஹாரமாக மனைவியுடன் காவேரியை அடைவாய். கவேரர் என்ற அகஸ்தியரின் கெண்டியின் குழாய் வழியே வெளியானவள். தர்மத்தையே நீராகப்பெருக்குபவள். பெரும் பாபத்தையும் அகற்றுபவள். பாக்கும் வாழையும் நிரம்பிய கரைகளுள்ளவள். இவளது கரையிலுள்ள எண்ணற்ற தேவாலயங்களிலிருந்த சங்கொலியாலும் துந்துபி முழக்கத்தாலும் எதிரொலிப்பவள். உமைக்கும் லக்ஷ்மிக்கும் ஸரஸ்வதிக்கும் புதல்வி. வானுலகம் வரை கொண்டு சேர்ப்பவள். மும்மூர்த்தியரும் மற்ற தேவரும் முனிவரும் புரிகிற ஸேவையை ஏற்பவள். ஹரிநதீ (அரிசிலாறு) என புகழப்பெறுபவள். அவளது கரையில் பலாக்காடு. அங்கு தேஜினீ நகரம். அதன் பெருமை கூறுகிறேன். (33-43)

सा सृष्टा ब्रह्मणा पुण्या पुण्यैश्च परमाणुभिः ।
एकपार्श्वफलैर्वृक्षैरन्यपार्श्वप्रसूनकैः ।। ४४

स्निग्धपत्रैकपार्श्वैश्च नवपल्लवपार्श्वकैः ।
चूताम्रपनसैश्छन्ना दाडिमीवकुलावृता ।। ४५

पुन्नागचम्पकोपेतजम्ब्वा शिंशुपयाऽन्विता ।
तालैस्तमालैर्न्यग्रोधैः प्लक्षतिन्दुकबिल्वकैः ।। ४६

मालतीमल्लिकाजाजीमाधवीकुटजावृता ।
फुल्लकल्हारकमलकैरवेन्दीवरादिभिः ॥ ४७

वापिकानां प्रपूर्णानां सहस्रैः शोभितान्तरा ।
नानापक्षिगणैर्जुष्टा नानामृगसमाकुला ॥ ४८

एष्यन्मानुष्यजननैर्लतागुल्मशतैर्वृता ।
एष्यद्वर्णान्तरैर्नानाशूद्रैश्च परिशोभिता ॥ ४९

एष्यद्ब्राह्मणवर्णैश्च क्षत्रियैः परितो वृता ।
एष्यन्मोक्षैस्तथा विप्रैर्वेदविद्भिरभिष्टुता ॥ ५०

पशुपक्षिमृगादीनां क्षेत्रे निवसतामिह ।
तिर्यग्योनित्वदुष्कर्मनिराकरणलम्पटा ॥ ५१

कृतानां पुण्यराशीनां कोटिकोटिफलप्रदा ।
कृतानां पापराशीनां सद्यस्संक्षयकारिणी ॥ ५२

अनल्पशक्तिसारेण शिवेन परमात्मना ।
संकल्पेन ज्ञानमयी केवलं निर्मिता पुरा ॥ ५३

இந்த புனித பூமி பிரும்மாவால் புனிதமான பரமாணுக்களை இணைத்து உருப்பெற்றது. மரங்களின் ஒருபுறம் பழமாக, மறுபுறம் பூவாகக்காட்சி தரும். அவற்றின் இலை ஒரு புறம் நெய்ப்பு மிகுந்து முதிர்ந்திருக்கும். மறுபுறம் இளந்துளிராயிருக்கும். மா, பலா, மாதுளை, மகிழம், புன்னை, சம்பகம், நாவல், வாகை, பனை, தமாலம், ஆல், அத்தி, பனச்சி, வில்வம் முதலிய மரங்கள், ஜாதி, மல்லி, வாடாமல்லி, வெப்பாலை, கழுநீர் - தாமரை - அல்லி நிரம்பிய ஓடைகள் பலவகைப்பறவைகள் பிராணிகள் மனிதர்கள், கொடி, புதர் நிரம்பிய இடம். நான்கு வருணத்தினரும் கூடிக் குடியிருக்குமிடம். வேதமோதியவரும் முக்தியை நாடுபவரும் தேர்ந்தெடுக்குமிடம். இங்குள்ள பசு - பக்ஷி - மிருகங்களின்

*பிராணிப்பிறவி இத்துடன் முடிந்ததென வினைதீருமிடம். புண்யச்செயலுக்கு பன்மடங்கு பலனை தருமிடம். பாபச்செயலின் பின் விளைவை அறவே நீக்குமிடம். பரமாத்மாவான சிவ பெருமான் தன் முழுவலிவைக் காட்டி பேரானந்தத்தின் இருப்பிடமாக அமைத்த இடம். (44-53)*

पञ्चभिः प्राकृतैर्भूतैरस्पृष्टपदपांसुला ।
अविमुक्ता कदाप्येषा प्रलयेऽप्यन्तकारिणा ॥ ५४

तेजिनीनाथकारुण्यप्रवाहैरेव केवलम् ।
प्रवहन्त्या दक्षिणतो हरिनद्याऽपि शोभिता ॥ ५५

चोलभूमिहृदाकारा सप्तानामष्टमा पुरी ।
स्नात्वा तत्रत्यतीर्थेषु क्रियाः कृत्वा विधानतः ॥ ५६

अभ्यर्च्य तेजिनीनाथं मुच्यन्ते सर्वदेहिनः ।
साक्षान्नारायणस्तत्र तेजिनीवननायकम् ॥ ५७

कावेर्या दक्षिणात्कुण्डात्समुद्धृत्यामलं जलम् ।
कृत्वाऽभिषेकं विधिना पयसा गोधृतेन च ॥ ५८

अभिषिच्य महेशानमतोषयदुमापतिम् ।
तस्मात्त्वमपि राजेन्द्र सहैव तव भार्यया ॥ ५९

तपः कुरुष्व भद्रं ते पावने तेजिनीवने ।
प्रसादय महादेवं रोगान्मुक्तो भविष्यसि ॥ ६०

इति तद्वाक्यमाकर्ण्य तपः कर्तुं पुरूरवाः ।
स्वराज्ये मन्त्रिणः स्थाप्य प्रतस्थे तेजिनीवनम् ॥ ६१

इति द्वादशोऽध्यायः

*பிரளயத்திலும் அழிவைத்தருபவரே அழிவற்றதாகக் காப்பாற்றிய இடம். சிவபெருமானை விட்டகலாததால்*

அவிமுக்தம். தேஜிநீநாதப் பெருமானின் கருணையுருக் கொண்ட நீர்ப்பெருக்குள்ள ஹரிநதியால் விளங்குவது. சோழபூமியின் மடுஇது. ஏழு புரிகளை ஒட்டி எட்டாவது புரீ. இங்குள்ள நீர்நிலைகளில் நீராடி முறைப்படி தேஜினீ நாதனை வழிபடுபவர் அனைவரும் முக்தியைபெறுவர். நாராயணனே இங்கு காவேரியின் தென்புறமுள்ள குண்டத்திலிருந்து தூய நீர் எடுத்து ஈசனை நீராட்டிப் பாலாலும் நெய்யாலும் நீராட்டி மகிழ்வித்த ஸ்தலம் இது, நீ மனைவியுடன் அங்கு சென்று தவம் செய்து ஈசனை மகிழ்வித்து அவரருளால் நோய் நீங்கப் பெறுவாய் என்றூர். பார்க்கவரின் சொல் கேட்டு அரசன் ஆட்சியை மந்திரிகளிடம் ஒப்படைத்துத் தேஜினீ வனம் சென்றடைந்தான். *(54-61)*

—*—

## त्रयोदशोऽध्यायः

सूतः—

दक्षिणाभिमुखो भूत्वा गच्छन्दूरं पुरूरवाः ।
भार्गवेण मुनीन्द्रेण सेऽभ्यगात् तेजिनीवनम् ॥ १

कदाचित् कालपर्याये ब्रह्मकल्पावसानके ।
निर्जने भुवने पूर्वमनावृष्टया च दूषिते ॥ २

अरण्यभूतं गहनं नानामृगसमाकुलम् ।
इदं क्षेत्रमिदं तीर्थं विमानमिदमित्यपि ।
अविज्ञातं मनुष्यैश्च दुर्गमं तेजिनीवनम् ॥ ३

प्राप्य भार्गववाक्येन तत्तत्तीर्थमिदं क्रमात् ।
आलयं च विमानं च लिङ्गानि च पृथक् पृथक् ॥ ४

ज्ञात्वोष्ट्रसंघैः स्वपुराद्धनमानीतवान् बहु ।
प्रदृष्टानां च तीर्थानां तीरबन्धमकल्पयत् ॥ ५

लिङ्गानामालयं कृत्वा स्नात्वा तीर्थेषु सर्वतः ।
संसेव्य बाह्यलिङ्गानि तेजिनीमूललिङ्गकम् ॥ ६

निषेव्य भार्यया साकं भार्गवस्योपदेशतः ।
प्रत्यहं बहुधा चक्रे स्नानं दानं तपस्तथा ॥ ७

*''அத்தியாயம்'' - 13*

*தெற்கு நோக்கி வந்த புரூரவஸ் பார்க்கவருடன் தேஜினீவனம் சேர்ந்தான். பிரும்மகல்ப முடிவில் மக்கள் அழிந்து மழையின்மையால் காய்ந்து அடர்ந்த காடும் விலங்குகளும் மீதமாயிருந்த நிலையில் இது க்ஷேத்திரம், இது தீர்த்தம், இது விமானமெனக் கண்டறிய இயலாதவாறு பாழடைந்திருந்தது. பார்க்கவர் கூறியபடி தன் நகரத்திலிருந்து ஒட்டகைகள் மூலம் நிறையப் பொருளும் செல்வமும் கொணர்ந்து க்ஷேத்திரத்தைச் செப்பனிட்டான். கண்ணில்பட்ட தீர்த்தங்களுக்கு கரை படிக்கட்டு அமைத்தான். லிங்கங்களுக்கு ஆலயங்கள் அமைத்தான். தீர்த்தங்களில் நீராடி தேஜினீசுவரரை மனைவியுடன் பார்க்கவர் சொற்படி வழிபட்டான். தீர்த்தஸ்நானமும் தானமும் தவமுமாக நாட்கள் சென்றன. (1-7)*

तस्य भार्या भद्रवल्ली वचसा भार्गवस्य तु ।
देवस्य दक्षिणे भागे बाणपातप्रमाणके ॥ ८

लिङ्गं प्रातिष्ठिपत् स्वेन नाम्ना तीर्थं तथैव च ।
स्नात्वा ये तत्र तल्लिङ्गं सेवं ते भक्तिपूर्वकम् ॥ ९

निर्धूतकल्मषास्ते तु शिवसायुज्यमाप्नुयुः ।
प्रत्यहं स्नानपूजाभिर्देवदेवमतोषयत् ॥ १०

तदाह दक्षिणामूर्तिः स्स्वप्ने तां भद्रवल्लिकाम् ।
तव कल्याण्यपस्मारो मया दूरे निरासितः ॥ ११

मत्पादपीडितो भीत्या ययौ कलितरुं प्रति ।
योऽङ्गे तव च दुर्गन्धो दुस्सहो वर्ततेऽधुना ।
सौन्दर्यगर्वकलितः परिहासोपजृम्भितः ॥ १२

स पुनर्मात्रिहत्यायाः पञ्चांगुलिषु निष्ठितः ।
तव योजनगन्धत्वं सत्यवत्या इवार्पये ॥ १३

भविष्यति वरारोहे मद्वचो नान्यथा तव ।
तव विश्वासहेत्वर्थमाक्रान्ता च मदंघ्रिणा । १४

निराकृताऽपस्मृतिश्च पश्य पश्चात् सुखीभव ।
इत्युक्ता देवदेवेन दक्षिणामूर्तिना हि सा ॥ १५

तीर्थे स्नात्वा समागत्य दक्षिणामूर्तिसन्निधौ ।
पादपीठमपश्यत्तदपस्मारविनाकृतम् ॥ १६

स्वदेहं पूतिगन्धं च नापश्यत् प्रत्युत क्षणात् ।
अभूद्योजनगन्धा सा परमेशप्रसादतः ॥ १७

अद्यापि दक्षिणामूर्त्तेरङ्घ्रिपीठे ह्यपस्मृतिः ।
न दृश्यतेऽद्भुतं ह्येतत्सर्वभूतस्य भूसुराः ॥ १८

अपस्मारविनिर्मुक्ता भद्रवल्ली व्यराजत ।
मेघावरणनिर्मुक्ता रेखा चान्द्रमसी यथा ॥ १९

அவனது மனைவி பத்ரவல்லியும் பார்க்கவரின் உபதேசப்படி மூலலிங்கத்தின் தெற்கில் வில்லடி தூரத்தில் பத்ரவல்லீசர் எனத்தன் பெயரில் லிங்கமும் தீர்த்தமும் அமைத்து நீராடி வழிபட்டாள். இவளது வழிபாட்டில் மகிழ்ந்த ஈசன் கனவில் தக்ஷிணாமூர்த்தியாகத் தோன்றினார். ''மங்களமானவளே! உனது வலிப்பு நோய் என்னால் நீக்கப்பட்டு

என் காலடியால் அழுத்தப் பெற்றுப் பயந்து தான்றிமரத்தில் ஒளிந்து கொண்டான். உன் உடலில் இது காறுமிருந்த துர்நாற்றம் அகற்றப்பட்டது. உன்னைச்சுற்றி யோசனை தூரத்திற்கு நறுமணம் வீசுவதாக்கப்பட்டது. அந்த துர்நாற்றம் உன் அழகுச் செருக்கால் பிறரைப்பரிகசித்ததன் விளைவு, அது இங்குள்ள பிடாரியின் ஐந்து விரல்களில் சிக்கியுள்ளது. ஸத்யவதி போன்று யோஜநகந்தி நீயும் ஆனாய். என் சொல்மாறாது. நீ நம்புவதற்கெனவே அபஸ்மாரத்தை என் காலடியிலிருந்து அகற்றியுள்ளேன். சுகமாயிருப்பாய் என. உடன் எழுந்து தீர்த்தத்தில் நீராடி தக்ஷிணாமூர்த்தி அருகே வந்து அவரது பாத பீடத்திலிருந்த அபஸ்மாரன் அங்கு இல்லாமையையும் உடலிலிருந்து நறுமணம் வீசுவதையும் உணர்ந்தாள். இன்றும் தக்ஷிணாமூர்த்தியின் பாதபீடத்தில் அபஸ்மாரன் இல்லை. மேகமூட்டம் நீங்கியதும் நிலவு தெளிவாகத் தெரிவது போல் பத்ரவல்லி அபஸ்மாரம் நீங்கித்தெளிவுற்றாள். (8-19)

पुरूरवा नृपश्चापि गोपुरावरणादिकम् ।
कैङ्कर्यं बहुधा चक्रे तेजिनीशस्य तुष्टये ॥ २०

तेजिनीवननाथश्च स्वयमाहूय तं नृपम् ।
विमानमुच्चं सुदृढं कारयेत्यवदत् स्वयम् ॥ २१

नृपः—
अन्तःस्थिते भगवति प्रमथानामधीश्वरे ।
कथं मनुष्यः कैङ्कर्यं करिष्यत्यधिरुह्य वै ॥ २२

इति विज्ञापितो राज्ञा देवदेवो महेश्वरः ।
प्रहसन्नवदद् भूपं भयमस्य निवारयन् ॥ २३

विमानात् बहिरेवाहं स्थास्यामि तव तुष्टये ।
निर्भयं कुरु कैङ्कर्यं राजन् भक्ताग्रणीरसि ॥ २४

प्रतिष्ठापय लिङ्गं त्वं पश्चिमाभिमुखं पुरः ।
तत्र स्थास्येऽहमधुना तव विश्वासहेतवे ॥ २५

प्रत्यङ्मुखो वृषश्चायं प्राङ्मुखो भवतु ध्रुवम् ।
त्वया प्रतिष्ठितं लिङ्गं मूललिङ्गमिति प्रथाम् ॥ २६

जगत्येष्यति तल्लिङ्गदर्शनात् सर्वजन्तवः ।
गमिष्यन्ति परां मुक्तिं तल्लिङ्गमनिषेव्य च ॥ २७

प्रधानलिङ्गसेवायां फलं मृग्यं महीतले ।
सदाऽपि स वृषस्तत्र प्राङ्मुखो वर्ततामिति ॥ २८

*புரூரவனும் கோபுரம் சுற்றுச்சுவர் முதலியவற்றை அமைத்தான். ஈசன் தன் விமானத்தையும் உயர்த்தி திடமாகக்கட்டப் பணித்தார். ஈசன் கருவறையிலிருக்கும் போது மனிதன் விமானத்தின் மீதேறிச் செப்பனிடுவது அபசாரமாகுமே எனச் சிந்தித்து ஈசனிடம் அரசன் விண்ணப்பித்தான். ஈசன் சிரித்துக் கொண்டே அவனது பயத்தை நீக்குபவராக, திருப்பணி முடிகிற வரை விமானத்திற்கு வெளியே தான் இருப்பதாகவும் பயமின்றி பணியைத்துவக்கக் கூறினார். என் லிங்கத்தை விமானத்திற்கு வெளியே மேற்கு நோக்கி வைப்பாய். மேற்கு நோக்கியுள்ள விருஷபமும் கிழக்கு நோக்கி இருக்கட்டும். அதனை மூலலிங்கம் என உலகம் வழிபடட்டும்! அதனை வழிபடாமல் என்னை வழிபடுபவர் பூஜை பலனைப் பெறமாட்டார். எப்போதும் அங்கு விருஷபம் கிழக்கு நோக்கி இருக்கட்டும் என்றார். (20-28)*

इत्युक्तो देवदेवेन राजा सोऽपि पुरूरवाः ।
पूर्वभागे स्वयं लिङ्गं प्रतिष्ठाप्य वृषं तथा ॥ २९

प्राङ्मुखं विनिवृत्तं च दृष्ट्वा विश्वासमेत्य च ।
कोटिस्वर्णैर्विमानं तदुच्चं दृढमकारयत् ॥ ३०

यथा यथा कुट्टिमन्तदुन्नतं समजायत ।
तथा तथा पीठशक्त्या लिङ्गमुच्चैरदृश्यत ॥ ३१

अनेनापि स विश्वासं परं लेभे महीपतिः ।
कैङ्कर्यमेवं बहुधा कृत्वा राजा पुरूरवाः ॥ ३२

क्षेत्राणां पञ्चशतकं भक्त्या प्रादात् द्विजन्मनाम् ।
ब्रह्मप्रतिष्ठया भूयः कैङ्कर्येण च हर्षितः ॥ ३३

ददौ वरानभिमतांस्तेजिनीवननायकः ।
भद्रवल्लीश्वरं चैव मूलनाथं तथैव च ॥ ३४

विमानं च सकृद्दृष्ट्वा मुक्तो भवति मानवः ।
दुर्गा च क्षेत्रपालश्च चण्डः स्कन्दविनायकौ ॥ ३५

महाकालश्च नन्दी च तेजिनीशमुपासते ।
ब्रह्मा विष्णुश्च शास्ता च सर्वावरणदेवताः ॥ ३६

परितस्तेजिनीनाथं तिष्ठन्ति क्षेत्रपालकाः ।
क्षेत्रप्रतिग्रहीतारो विप्राश्चाधिकभक्तितः ॥ ३७

सेवन्ते तेजिनीनाथं भस्मरुद्राक्षधारिणः ।

*ஈசன் இவ்வாறு கூறியதும் முன்னர் ஒரு லிங்கத்தை அமைத்ததும் விருஷபம் தானே கிழக்கு நோக்கித் திரும்பியது. அரசன் நம்பிக்கை அடைந்தான். கோடிக் கணக்கான பொன்னுல் விமானத்தை உயர்த்தி வலிவடையச் செய்தான். சுற்றுச்சுவர் உயர உயர லிங்கத்தின் பீடமும் பீட சக்தியால் உயர்ந்தது. இதனுலும் அவனது நம்பிக்கை அதிகமானது. சுற்றி 500 வீடுகள் அமைத்து வேதியரைக் குடியிருக்கச் செய்தான். இந்த திருப்பணியில் மகிழ்ந்த ஈசன் அரசன் விரும்பியதனைத்தையும் அளித்தான். இந்த பத்ரவல்லீசுவரரையும் மூலநாதரையும் விமானத்தையும் தரிசிப்பவர் மேனிலே பெறுவர். துர்க்கை*

*க்ஷேத்ரபாலர், சண்டர், ஸ்கந்தர், விநாயகர், மஹாகாலர், நந்தீ எனப்பரிவார தேவதைகள் தேஜினீசனை வழிபடுகின்றனர். பிரும்மா, விஷ்ணு, சாஸ்தா மற்ற ஆவரண தேவதைகள் க்ஷேத்திரத்தைக் காக்கின்றன. க்ஷேத்திரத்தில் குடியிருக்க வசதியாக வீடுகளைப் பெற்ற வேதியர்கள் பக்தி மிகுந்தவராக விபூதி - ருத்ராக்ஷம் தரித்தவராக தேஜினீசனை வழிபடுகின்றனர். (29-38)*

उपोष्य शिवरात्र्यां ये चतुर्यामं शिवार्चकाः ॥ ३८

कोटीनां शिवरात्रीणां लभन्ते पुण्यमुत्तमम् ।
इत्थं पुरूरवाः कृत्वा तपस्यां तेजिनीपुरे ॥ ३९

लेभे राज्यश्रिया सार्धमुर्वश्यामयमात्मजम् ।
उर्वशीं वीक्ष्य रेतो भूम्यां पुरूरवसार्पितम् ॥ ४०

अश्वत्थोऽभूच्छमीगर्भो व्याच्छिद्यामुं पुरूरवाः ।
मुनीन्द्रवचनात्तत्र तं विभिद्यारणिद्वयम् ॥ ४१

उत्तरारणिरेवाभूदधरारणिरूर्वशी ।
अभून्मथनदण्डोऽस्य शेफोऽस्यास्सुषिरङ्गतः ॥ ४२

हिरण्यरेतास्तनयस्तयोरभवदुज्ज्वलः ।
अयष्ट तेजिनीनाथं तेनाप पुनरूर्वशीम् ॥ ४३

तेजिनीनगरे विप्राः कृताध्वरपरम्पराः ।
पुत्रपौत्रैः परिवृता वर्द्धन्ते स्म मुदान्विताः ॥ ४४

तेजिनीकानने ये तु पश्चिमद्वारके सकृत् ।
शम्भोर्मन्त्रजपं कृत्वा पूजयन्ति तमादरात् ॥
मन्त्रसिद्धिं लभेयुस्ते तेजिनीशस्य च क्षणात् ॥ ४५

इति त्रयोदशोऽध्यायः

சிவராத்திரியன்று உபவாசமிருந்து இங்கு நான்குயாமங்களிலும்சிவனை வழிபடுபவர் கோடி சிவராத்திரிபூஜைகள் செய்தவராவர். தேஜினீ வனத்தில் தவமிருந்த புரூரவன் ஊர்வசியைக் கண்டதும் காமத்தால் அவனது சுக்லம் நழுவிப் பூமியில்விழ வன்னிமரத்தை (வைரமாக) உள்ளே கொண்ட அரசமரமானது. முனிவர் கூறியபடி அதை இருதுண்டாக்க மேல்பக்கம் உத்தராரணி என்ற அரணிக்கட்டையானது. இது அரசனின் பகுதி. கீழ்பக்கம் ஊர்வசியின் பகுதியாக கீழ் அரணிக்கட்டையானது. அரசனது மறைவிடம் கடைகிற குச்சியாகவும் ஊர்வசியின் மறைவிடம் கடையுமிடமுமானது. இந்த அரணிக்கட்டைகளைக் கடைய அதிலிருந்து உண்டான நெருப்பில் அரசன் வேள்வியை நடத்தினான். அதிலிருந்து 'ஹிரண்யரேதஸ்' என்ற மகன் தோன்றினான். ஊர்வசி அவனது மனைவியானாள். தொடர்ந்து வேள்விகளைச் செய்தான். புத்திரர்பௌத்திரர் என வம்சம் வளர்ந்தது. தேஜினீ வனத்தில் மேற்கு வாயிலிலமர்ந்து சிவமந்திர ஜபம் செய்ய சிவனது அருளால் மந்திரம் ஸித்திபெறும். (38-45)

—*—

## चतुर्दशोऽध्यायः

ऋषयः—

सर्वशास्त्रार्थतत्वज्ञ सूत पौराणिकोत्तम ।
त्वया न विदितं किंचिन्नास्ति नास्ति जगत्त्रये ।
भस्मरुद्राक्षपञ्चार्णशिवपूजाविधेः फलम् ॥ १

जाबालमुख्योपनिषद्गीतं देवर्षिसम्मतम् ।
सम्यग्विचार्य नो ब्रूहि सर्वज्ञोऽसि ऋषीश्वर ॥ २

सूतः—

तेषां रहस्यं को वेद शङ्करो वेत्ति वा नवा ।
कोटिकोटिसहस्रेषु पूर्वजन्मसु सङ्गताः ॥ ३

आर्जितानेकपुण्यानां श्रौतस्मार्तानुसारिणाम् ।
भूतिरुद्राक्षपञ्चार्णपूजादिषु मतिर्भवेद् ॥ ४

यूयं तथाविधा नूनं येनासीदिह वो मतिः ।
अन्येषां गोप्यमप्येतद्रहस्यं तु वदामि वः ॥ ५

### *"அத்தியாயம்" - 14*

*ருஷிகள் ஸூதரை அணுகினர். "நீர் எல்லாமறிந்தவர். பஸ்மதாரணம், ருத்ராக்ஷதாரணம், பஞ்சாக்ஷர ஜபம், சிவபூஜை இவற்றைப் பற்றி ஜாபாலோபநிஷத் முதலியவற்றில் கூறப்பட்டதையும் முனிவர்களின் கருத்தையும் நன்கு ஆராய்ந்து விளக்குவீர் என்று வேண்டினர். ஸூதர் விளக்கினார் - இவை ரஹஸ்யமானவை. இதனை முழுவதும் அறிந்தவர் சிவபெருமான் ஒருவரே! முன்பிறவிகளில் நற்செயல் புரிந்தவர் - வேதமும் ஸ்மிருதியும் கூறியதைப் பின்பற்றுபவர் இவர்களே விபூதி தாரணம் முதலியவற்றில் ஆர்வம் கொள்வர். இந்த ரகசியத்தை விளக்குகிறேன். (1-5)*

विभूतिर्भूतिदानाच्च रक्षा भीतेश्च रक्षणात् ।
पापानां भर्त्सनाद्भस्म भसितं भासनान्मतम् ॥ ६

दोषान् क्षारयते यस्मात्तेन क्षारमितीर्यते ।
तस्मात्तद्भस्मना तुल्यं न भूतं न भविष्यति ॥ ७

मणिमन्त्रौषधैर्लिङ्गपञ्चाक्षरविभूतिभिः ।
दिव्यं रूपं समासाद्य मुक्तिस्त्रीं वशयेत् पुमान् ॥ ८

देवतासु च विख्यातो यथा विश्वाधिकः शिवः ।
तथा सर्वेषु पुण्ड्रेषु त्रिपुण्ड्रश्च प्रशस्यते ॥ ९

कीकटेष्वपि देशेषु यत्र भूतिविभूषणः ।

नित्यं मनुष्यो निवसेत् काशीक्षेत्रसमो हि सः ॥ १०

त्रिपुण्ड्रयोग्यं कृतवान् ललाटं तिर्यगात्मभूः ।
तिस्रो रेखा विहितवान् दृश्याकारः शरीरिणाम् ॥ ११

न दानेन न यज्ञेन न तपोभिश्च दुश्चरैः ।
न तीर्थयात्रया पुण्यं यत्त्रिपुण्ड्रेण लभ्यते ॥ १२

*'விபூதி, பஸ்மம். பஸிதம், க்ஷாரம், ரக்ஷா' என இதற்கு ஐந்து பெயர்கள். பூதி எனும் நல்வாழ்வைத் தருவதால் 'விபூதி.' அது பயத்திலிருந்து காப்பது பாபத்தைச் சுட்டெரிப்பது. (பஸ்மம்) நன்கு விளங்கச் செய்வதும் கூட. பஸிதம். குறைகளைக் கரையச் செய்வதால் க்ஷாரம் என்பர். இது சாம்பல். இதனை விடச் சிறந்த ரக்ஷைப் பொருள் வேறில்லை. லிங்கபூஜை பஞ்சாக்ஷரஜபம் விபூதி இடல் இவற்றால் தெய்வத்தன்மை கொண்ட உருவம் பெறுகிறான். தேவதைகளில் மிகச் சிறந்தவர் சிவன். புண்டிரங்களில் மிகச் சிறந்தது விபூதி எனும் திரிபுண்டிரம். கேடமான இடமாயினும் விபூதி பூசியவன் ஒருவனிருக்க அது காசிக்கு ஈடாகும். நெற்றியைத் திரிபுண்டிரம் தரிக்க ஏற்றதாக விதி அமைத்திருக்கிறது. நெற்றியில் மூன்று கோடுகள் (வரிகள்) உள்ளன. விபூதி இடுவதால் கிடைக்கிற நன்மை தானம், வேள்வி, தவம், தீர்த்தயாத்திரை முதலியவற்றால் கிட்டாது. (6-12)*

दुरक्षराणि दैवेन लिखितानि ललाटके ।
त्रिपुण्ड्राणि विलुम्पन्ति भस्मना रचितानि च ॥ १३

त्रिपुण्ड्राङ्कितफाला ये शिवभक्ताः शिवप्रियाः ।
ते वै भागवता ग्राह्या इति नारदभाषितम् ॥ १४

भस्मदिग्धशरीराय यो ददाति धनं मुदा ।
स पापान्मुच्यते मर्त्य इति गारुडभाषितम् ॥ १५

सितेन भस्मना कुर्यात्त्रिसन्ध्यं यस्त्रिपुण्ड्रकम् ।
शिवलोकं स गन्तेति शिवेनापि च गीयते ॥ १६

महापातकयुक्तो वा युक्तो वा सर्वपातकैः ।
भस्मनानेन तत्सर्वं दहत्यग्निरिवेन्धनम् ॥ १७

त्रैवर्णिकानां सर्वेषामग्निहोत्रसमुद्भवम् ।
विरजानलजं चैव धार्यं भस्म द्विजोत्तमाः ॥ १८

औपासनसमुद्भूतं गृहस्थानां विशेषतः ।
समिदग्निसमुद्भूतं धार्यं वै ब्रह्मचारिणाम् ॥ १९

शूद्राणां श्रोत्रियागारे पचनाग्निसमुद्भवम् ।
अन्येषामपि सर्वेषां धार्यं दावानलोद्भवम् ॥

*நெற்றியில் விதியால் எழுதப்பட்ட (தலை) எழுத்தை விபூதி புண்டிவம் அழித்துவிடும். விபூதியின் மூன்று கோடுகள் உள்ள சிவனடியார்களே சிவபெருமானுக்கு உகந்தவர்கள் என நாரதர் கூறுவார். விபூதியை உடலில் பூசிக்கொண்டவனுக்கு அளிக்கப்பெறுகிற தானமே பாபத்தை விரட்டும் எனக் கருடர் கூறுவார். வெண்ணிற விபூதி பாபமனைத்தையும் சுட்டெரிக்கும். அக்னி ஹோத்திரத் தீயில் உண்டானது, விரஜா ஹோமம் செய்தெடுத்தது, இந்த விபூதி இரண்டும் மூவர்ணத்தினருக்கும் ஏற்றது. ஔபாஸன விபூதி இல்லறத்தானுக்கு நல்லது. ஸமிதாதானம் செய்து பெற்ற விபூதி பிரும்ம சாரிக்கு ஏற்றது. நல்ல அந்தணர் வீட்டு அடுப்புச் சாம்பல் நான்காம் வருணத்திற்கும் காட்டுத்தீச் சாம்பல் அனைவருக்கு ஏற்றது. (12-20)*

अग्निरित्यादिभिर्मन्त्रैः षड्भिराथर्वणैस्तथा ॥ २०

जाबालैस्सप्तभिर्वापि भस्म वामकरे स्थितम् ।
अभिमन्त्र्योद्धूलनं च पञ्चब्रह्ममनूत्तमैः ॥ २१

ईशानतश्च मूर्द्धानं वक्त्रं तत्पुरुषेण च ।
हृदयं तदघोरेण नाभिदेशं च वामतः ॥ २२

सद्योजातेन पादौ च सम्यगुद्धूलयेद्द्विजः ।
त्रियायुषेण मन्त्रेण मेधावीत्यादिनाथ वा ॥ २३

भस्मना च सदा धार्यं त्रिपुण्ड्रं ब्रह्मचारिणाम् ।
सोङ्कारेण त्र्यम्बकेन तथा पञ्चाक्षरेण च ॥ २४

ललाटे हृदये चैव दोर्द्वन्द्वे च द्विजोत्तमाः ।
त्रिपुण्ड्रं धारयेन्नित्यं गृहस्थश्च वनाश्रमी ॥ २५

*அக்நிரிதி பஸ்ம என்ற மந்திரம், அதர்வவேதத்து ஆறு வாக்யங்கள், ஜாபாலோபநிஷத்தின் ஏழு மந்திரம் இவற்ருல் இடது கையிலுள்ள திருநீற்றை மந்திரித்து பஞ்சபிரும்ம (ஸத்யோஜாத - வாமதேவ - அகோர - தத்புருஷ - ஈசான) மந்திரங்கள் ஜபித்து ஈசானத்தால் தலையிலும் தத்புருஷத்தால் முகத்திலும் அகோரத்தால் இதயத்திலும் வாம தேவத்தால் தொப்புளருகிலும் ஸத்யோ ஜாதத்தால் கால்களிலும் இட்டுக் கொள்வர். திரியாயுஷம் மேதாவீ பூயாஸம் முதலிய மந்திரங்களால் பிரும்மசாரிகள் இட்டுக் கொள்வர். ஓங்காரத்துடன் திரியம்பகமும் இவற்றில் பஞ்சாக்ஷரமும் கூறி நெற்றி, இதயம், இருதோள்கள் இவற்றில் துறவியும் இட்டுக் கொள்வர். (21-25)*

आत्ममन्त्रेण हंसेन प्रणवेन समाहितः ।
त्रिपुण्ड्रं धारयेन्नित्यं सन्यासाश्रममाश्रितः ॥ २६

नमोऽन्तेन शिवेनैव शूद्रः शुश्रूषणप्रियः ।
उद्धूलनं त्रिपुण्ड्रं च कुर्यादन्ये त्वमन्त्रकम् ॥ २७

अकारोऽनामिका प्रोक्तो ह्युकारो मध्यमाङ्गुली ।
मकारस्तर्जिनी तस्मात् त्रिभिः कुर्यात्त्रिपुण्ड्रकम् ॥ २८

मध्यमानामिकाङ्गुष्ठैरनुलोमविलोमतः ।
धारयेद्यस्त्रिपुण्ड्राङ्कं स रुद्रो नात्र संशयः ॥ २९

ये भस्मधारणं त्यक्त्वा श्रौतस्मार्तानुवर्तिनः ।
तत्कर्मणः फलं नेति दक्षिणामूर्तिरब्रवीत् ॥ ३०

त्रिपुण्ड्रधारणं त्यक्त्वा कर्माणि कुरुते तु यः ।
तत्कृतं कर्म विफलमित्याह च पराशरः ॥ ३१

सपवित्रस्त्रिपुण्ड्राङ्को नमेत्सन्ध्यामिति स्मृतिः ॥ ३२

*ஆத்மமந்திரம் ஹம்ஸமந்திரம், ஓங்காரம் இவற்றால் துறவி இட்டுக் கொள்வர். சிவாயநம: என ஈசஸேவை செய்கிற நான்காம்வர்ணத்தவர் இட்டுக் கொள்வர். மற்றவர் மந்திர உச்சாரண மின்றியே இட்டுக் கொள்வர். பவித்ரவிரல் அகாரம். நடுவிரல் உகாரம். ஆள்காட்டி விரல் - மகாரம். இவற்றால் இடதிலிருந்து வலமும் வலத்திலிருந்து இடமுமாக திரிபுண்டிரமிடுபவன் ருத்திரனே. பஸ்மதாரணமின்றிச் செய்கிற சடங்குகள் பலனற்றவை என தக்ஷிணாமூர்த்தி கூறுவார். விபூதி பூசாமல் செய்கிற சடங்கு வீணே என்பார் பராசரர். நீராடி ஆசமனம் செய்து உடலையும் உள்ளத்தையும் தூயதாக்கி கிழக்கு நோக்கி அமர்ந்து உத்தரீயம் தரித்து பவித்ரம் பூண்டு முப்பட்டை இட்டு ஸந்தியையை வந்தனம் செய்யவேண்டும் என ஸ்மிருதி கூறும். (26-32)*

श्राद्धं होमं जपं चैव देवतातिथिपूजनम् ।
धृतत्रिपुण्ड्रः कुर्वीतेत्याह कात्यायनो मुनिः ॥ ३३

दशपूर्वांस्त्रिपुण्ड्राङ्कः स्वात्मना च दशावरान् ।
नयति ब्राह्मणः स्थानमिति बोधायनोऽब्रवीत् ॥ ३४

ब्रह्मचारी गृही वानप्रस्थो यतिवरोऽपि वा ।
धृतत्रिपुण्ड्रः सर्वस्मात् पूतो भवति पापकैः ॥ ३५

ध्यातो भवति देवांश्च तीर्थेषु सकलेषु च ।
स्नातो भवति श्रीरुद्रजापी भवति भोगभुक् ॥ ३६

शिवसायुज्यमेत्यान्ते पुनर्नावर्तते भुवि ।
इति कालाग्निरुद्रोपि माहात्म्यं भस्मनोऽब्रवीत् ॥ ३७

*சிராத்தமோ ஹோமமோ ஜபமோ தேவபூஜையோ அதிதிபூஜையோ, புண்டிரமிட்டே செய்யவும் என்று காத்யாயனர் கூறுகிறார். புண்டிரமிட்டவன் தன் முன்னோர் பத்து, பின்னோர் பத்து, தான் என 21தலைமுறைகளை பிரும்ம நிலைக்கு இட்டுச் செல்வதாக போதாயனர் கூறுகிறார். நான்கு ஆசிரமத்தினரும் புண்டிரம் தரிப்பதாலேயே தூயவராவர். தேவர்களைத் தியானம் செய்ய இவர்களால் தான் முடியும். தீர்த்தங்கள் அனைத்திலும் நீராடிய புண்ணியம் கிட்டும். ருத்ரபிரச்னம் ஓதிய பலன் கிட்டும். சிவனுடன் இணைந்து மறுபடி பிறவி பெறமாட்டான் எனக் காலாக்னி ருத்ரர் கூறுவார். (33-37)*

जलेन सहितं भस्म यस्त्रिसन्ध्यं तु धारयेत् ।
स शैवं लोकमाप्नोतीत्याह शातातपो मुनिः ॥ ३८

उद्धूलनं त्रिपुण्ड्रं च वहन् कौपीनवाससी ।
पाणिपात्रो मुक्तिमेति यतिरित्याह मद्गुरुः ॥ ३९

त्रिपुण्ड्रधारी विप्रेन्द्रः प्राप्य माहेश्वरं पदम् ।
मोदते पुत्रपौत्रैश्चेत्याह कूर्मः सनातनः ॥ ४०

त्रिपुण्ड्रं धारयेद्भक्त्या मनसापि न लङ्घयेत् ।
श्रुत्या विधानात्तत्त्यागे दोषादिति बृहस्पतिः ॥ ४१

भूत्यैवोद्धूलनं तिर्यक्त्रिपुण्ड्रस्य च धारिणः ।
नैव प्रमदितव्या हीत्यस्मद्देशिकभाषितम् ॥ ४२

उद्धूलनं त्रिपुण्ड्रं च मायापाशनिवृत्तये ।
आमनन्ति मुनिश्रेष्ठा अथर्वशिरसि स्थिताः ॥ ४३

शिवेन विष्णुना चैव ब्रह्मणा वज्रिणाऽमरैः ।
धृतं धार्यं सदा विप्रैस्त्रिपुण्ड्रमिति जैमिनिः ॥ ४४

*நீரிட்டுக் குழப்பி மூன்று வேளைகளிலும் தரிக்க சிவலோகம் செல்வான் என்பார் சாதாதபர். நீரின்றி விபூதியைத் தூவி மூன்று கோடுகளிட்டுக் கொள்கிற துறவி கௌபீனம் உடுத்தி கையை பாத்திரமாக்கி உணவேற்க முக்தி அடைகிறான் என என் குருவியாஸர் கூறுவார். திரிபுண்டிரம் தரித்த சிறந்த அந்தணன் புத்திர - பௌத்திரர் முதலானவருடன் சிவநிலை பெறுகிறான் என்பார் கூர்மர். பக்தியுடன் விபூதியின் முப்பட்டை பூசவேண்டுமென்பது வேதத்தின் கட்டளை. அதனை மனத்தளவில் மீறுவது கூடக் குற்றமே என்பார் பிருஹஸ்பதி. விபூதி தூவிப் பூசி திரிபுண்டிரம் தரிப்பதை மீறக் கூடாதென என் குரு கூறுவார். விபூதி தூவிக் கொள்வதும் புண்டிரமிடுவதும் மாயைக்கட்டு விலகவே என அதர்வ உபநிஷத் ஓதுகிற முனிவர் கூறுவர். சிவன், விஷ்ணு, பிரும்மா, இந்திரன், தேவர்கள் இவர்களும் விபூதியைத் தரித்திருப்பதால் நாமும் தரிக்க வேண்மென்பார் ஜைமினி. (38-44)*

तेनाधीतं श्रुतं तेन तेन सर्वमनुष्ठितम् ।
त्रिपुण्ड्रं धार्यते येन विप्रेणेत्यत्रिरब्रवीत् ॥ ४५

शिरोव्रतं तु विधिवद्यैस्तु चीर्णं द्विजोत्तमैः ।
तैः पुष्कलं व्रतं सर्वमनुचीर्णमिति श्रुतिः ॥ ४६

विधिवच्छ्रद्धया सार्धन्न चीर्णं यैश्शिरोव्रतम् ।
श्रौतस्मार्तसमाचारा निष्फला इति भास्करः ॥ ४७

श्रुतिराथर्वणी सूक्ष्मा सूक्ष्मार्थस्य प्रकाशिनी ।
यदुवाच व्रतं प्रीत्या तन्नित्यं सम्यगाचरेत् ॥ ४८

விபூதி பூசியவன் மட்டும் வேதம் ஓதலாம். வேதம் கேட்கலாம். வேதச்சடங்குகளைச் செய்யலாம் என்பார் அத்ரி. மந்திரம் கூறி விபூதி தரிப்பது சிரோ விரதம் எனப்படும். சிரத்தையுடன் முறைப்படி சிரோ விரதம் செய்து கொண்டவர் எல்லா விரதத்தையும் செய்தவராவர். சிரோவிரதம் செய்து கொள்ளாதவர் புரிகிற வேத ஸ்மிருதிகள் கூறிய கருமங்கள் பலனற்றவை என்பார் ஸூரியன். அதர்வ வேதத்திய உபநிஷத் கூறுகிற முறை ஸூக்ஷ்மமானது. ஸூக்ஷ்ம உட்பொருள் கொண்டது. (45-48)

अग्निरित्यादिभिर्मन्त्रैः षड्भिः शुद्धेन भस्मना ।
सर्वांगोद्धूलनं कुर्याच्छिरोव्रतसमाह्वयम् ॥ ४९

उद्धूलनं त्रिपुण्ड्रं च ज्ञानाङ्गत्वेन सादरम् ।
आमनन्ति मुनिश्रेष्ठाः श्वेताश्वतरशाखिनः ॥ ५०

उद्धूलनं त्रिपुण्ड्रं च ज्ञानाङ्गत्वेन केवलम् ।
आमनन्ति मुनिश्रेष्ठास्सदा कैवल्यशाखिनः ॥ ५१

त्रियायुषेण मन्त्रेणोद्धूलनं च त्रिपुण्ड्रकम् ।
प्रमादादपि मोक्षार्थी न त्यजेदिति हि श्रुतिः ॥ ५२

भस्मनोद्धूलनं चैव तथा तिर्यक् त्रिपुण्ड्रकम् ।
महापातकनाशाय विधत्ते वैदिकी श्रुतिः ॥ ५३

அக்நிரிதி பஸ்ம என்று தொடங்குகிற மந்திரங்கள், த்ரியாயுஷம் ஸத்யோஜாதம் முதலிய ஐந்து மந்திரங்கள் முதலியவற்ருல் மந்திரித்த பஸ்மத்தை உடல் முழுவதும் தூவித்தடவ இது சிரோவிரதம். ஜ்ஞானயோகஸாதகமாக உத்தூலனம் எனும் தனிபஸ்மத்தைப் பூசுதலும் நீரிட்டுக் குழைத்து மூன்றுவிரல் கோடுகளாக இட்டுக் கொள்வதும் (புண்டிரம்) சிறந்தது என சுவேதாச்வதர சாகையினர் கூறுவர். கைவல்ய சாகிகளும் அவ்வாறே கூறுகின்றனர். திரியாயுஷம் என்ற மந்திரத்தால் உத்தூளனமும் புண்டிரமும் கவனக்குறைவால்

मा त्वा रुद्रेति मन्त्रो यत् सह पूजां निषेधति ।
तस्मादन्येन देवेन सह शम्भुं न पूजयेत् ॥ ४१

मन्दवारे प्रदोषोऽयं दुर्लभः सर्वदेहिनाम् ।
तत्रापि दुर्लभतरः कृष्णपक्षे समागतः ॥ ४२

प्रदोषसमये नेत्रार्पणपुर्यां नटाधिपः ।
आनन्दनटराजाख्यो नृत्तं नित्यं करोति च ॥ ४३

स्तुतः किन्नरगन्धर्वैस्सिद्धविद्याधरादिभिः ।
अतः पूजा जपो होमस्तत्कथा तद्गुणस्तवः ।
कर्तव्यो नियतं मर्त्यैश्चतुर्वर्गफलार्थिभिः ॥ ४४

## इति एकविंशोऽध्यायः

*தன் மந்திரத்தையும் ஜபமாலையையும் எவருக்கும் காட்டக் கூடாது. வில்வதளத்தை வணங்க, தொட, காண, பாபம் நீங்கும். மனிதப்பிறவி பெற்று சிவனை வழிபடாதவன் தன்னைத்தானே அழித்துக் கொள்கிறான். சிவபூஜை செய்வதவசியம் என்பார் ஹனுமான். திரயோதசிதிதியன்று மாலையை பிரதோஷம் என்பர். அப்போது சிவனை வழிபடுவது மிகச் சிறந்தது. அப்போது மற்ற தேவதைகளையும் சேர்த்து வழிபடுவதில்லை. மாத்வா ருத்ர என்ற வேதவாக்யம் அதனை உறுதிபடுத்துகிறது. சனிக்கிழமையன்று பிரதோஷம் மிக மிகச் சிறந்தவேளை. அதிலும் கிருஷ்ணபக்ஷமானால் மிகச் சிறந்தது. அவ்வேளையில் வீழிக்காட்டில் ஆனந்த நடராஜர் நடனமாடுகிறார். கின்னரர் கந்தர்வர் முதலானோர் பாடிக்களிப்பர். தினமும் சிவனைக் குறித்து பூஜை மந்திரஜபம் ஹோமம் அவனது பெருமை பற்றிய கீர்த்தனம் இவை அறம் பொருள் இன்பம் முக்தி விரும்புபவரால் செய்யத்தக்கது. (34-44)*

—★—

## द्वाविंशोऽध्यायः

सूतः—
तिथिनक्षत्रवाराणां विशेषेषु शिवार्चनैः ।
वक्ष्ये फलविशेषं तच्छृणुध्वं मुनिपुङ्गवाः ॥ १

प्रथमायां द्विजश्रेष्ठः स्नात्वा भक्तिसमन्वितः ।
आकाशनगरीमुख्यक्षेत्रेष्वन्येषु वा पुनः ॥ २

गोमयेनोपलिप्य क्ष्मामासनं परिकल्प्य च ।
तस्मिन्नावाह्य वृषभं लिङ्गमूर्तिं सदाशिवम् ॥ ३

पुण्योदकेन संस्नाप्य पञ्चार्णमनुना वृषे ।
प्रतिष्ठाप्य सुगन्धीनि नीलोत्पलमुखानि च ॥ ४

बिल्वपत्रप्रधानानि नानापत्राणि वा पुनः ।
सम्पाद्य तैस्तण्डुलैर्वा देवदेवं समर्चयेत् । ५

धूपदीपादिकं दत्वा अन्नपानादिकं तथा ।
प्रदक्षिणत्रयं कृत्वा स्तुत्वा स्तोत्रैः प्रणम्य च ॥ ६

ब्रह्महत्यार्जितं पापं हित्वा स्वर्गमवाप्नुयात् ।
द्वितीयायां तिथौ स्नात्वा ब्रह्मचर्यव्रते स्थितः ॥ ७

पञ्चाक्षरेण मन्त्रेण लिङ्गं संस्नाप्य भक्तितः ।
तिलैश्च तण्डुलैः पुष्पैस्सम्पूज्य प्रोक्तमन्त्रतः ॥ ८

एवं निवेद्य मतिमान् दिनमेकमुपोषितः ।
हव्यं निषेद्य मतिमान् दिनमेकमुपोषित : ॥ ९

सुरापानकृतं पापं त्यक्त्वा स्वर्गे महीयते ।

"அத்தியாயம்" - 22

திதி, நக்ஷத்திரம், வாரம் இவைகளுக்கேற்ப சிவபூஜையின் பலன் வேறுபடும். பிரதமையன்று நீராடி வீழிக்காடு முதலிய புண்ணிய க்ஷேத்திரத்தில் கோமயத்தால் தரையை மெழுகி ஆஸனமமைத்து விருஷபத்தின் மீது சிவனின் லிங்கத்தை வைத்து ஆவாஹனம் செய்து புனித நீராட்டி பஞ்சாக்ஷரம் கூறி நறுமணமிக்க அல்லி வில்வம் அக்ஷதை இவற்றால் அர்ச்சித்து தூப - தீப நிவேதனங்கள் செய்து மூன்று தடவை வலம் வந்துத் துதித்து வழிபட பிரும்மஹத்தி நீங்கும். துவிதீயையன்று பிரம்மசரிய விரதத்துடன் பஞ்சாக்ஷர மந்திரத்தால் சிவனை அமரச் செய்து நீராட்டி புஷ்பம் அக்ஷதை எள் இவற்றால் அர்ச்சித்து நிவேதனம் செய்து ஒரு நாள் உபவாஸமிருக்கமது குடித்த பாபம் நீங்கும். (1-9)

एवमेव तृतीयायां लिङ्गं सम्पूज्य भक्तितः ।
प्रीणयित्वा द्विजानन्नैः स्वर्णस्तेयाद्विमुच्यते ॥ १०

पूर्वोक्तमार्गतः शम्भुं चतुर्थ्यां परिपूज्य च ।
ब्राह्मणाय यथाशक्ति धनं दत्वा च भक्तितः ॥ ११

गुरुतल्पस्पर्शदोषान्मुच्यते नात्र संशयः ।
पञ्चम्यां तण्डुलेनैव पञ्चार्णेन प्रपूज्य च ॥ १२

महापातकसंस्पर्शदोषादाशु विमुच्यते ।
स्नापयित्वा घृतेनापि चन्दनोदकधारया ॥ १३

तिलैस्सम्पूज्य मुक्तिः स्यादुपपातकदोषतः ।
सप्तम्यां गन्धतोयेन स्नाप्य पुष्पैस्समर्च्य च ॥ १४

क्षुद्रपापाद्विमुच्येत नात्र कार्या विचारणा ।
अष्टम्यां पञ्चगव्येन स्नाप्य तोयेन शङ्करम् ॥ १५

सर्वपापविनिर्मुक्तः शिवसायुज्यमाप्नुयात् ।

இவ்வாறு திருதீயையில் வழிபட்டு அந்தணரை உபசரிக்க தங்கத் திருட்டால் விளைந்த பாபம் விலகும். சதுர்த்தியில் வழிபட்டு வேதியருக்குத் தானம் செய்ய குருதல்பகமன பாபம் விலகும். பஞ்சமி ஷஷ்டியில் அரிசியில் பஞ்சாக்ஷர பூஜை செய்ய பெரும்பாபமனைத்தும் விலகும். ஷஷ்டியில் நெய்யும் சந்தன நீரும் கொண்டு அபிஷேகம் செய்து எள்ளால் உபசரிக்க சிறிய பாபங்கள் விலகும். ஸப்தமியில் சந்தன நீரால் நீராட்டி பூக்களால் அர்ச்சிக்கச் சிறுபாபங்கள் விலகும். அஷ்டமியன்று பஞ்சகவ்யத்தாலும் தூயநீராலும் நீராட்டி வழிபட பாபம் விலகும். சிவஸாயுஜ்யம் பெறுவர். *(10-15)*

नवम्यां मधुना तोयैः स्नाप्य लिङ्गं सुनिर्मलैः ॥ १६

कुलैकविंशमुत्तार्य प्रयाति परमं पदम् ।
दशम्यां क्षीरतःस्नाप्य कुशपुष्पोदकेन च ॥ १७

मुक्तः पापैस्समस्तैश्च ज्ञानं सम्यगवाप्नुयात् ।
एकादश्यां शुचिः स्नात्वा कृतकृत्य उपोषितः ॥ १८

शिवं शुद्धोदकैः स्नाप्य शिवलोके महीयते ।
द्वादश्यां पूजयित्वेशं गुल्गुलं धूपयेन्नरः ॥ १९

आप्नोति ब्रह्मणो लोकं नात्र कार्या विचारणा ।
पूजितन्तु त्रयोदश्यां शिवं कर्पूरचन्दनैः ॥ २०

उपलिप्य विमुच्येत सर्वपापैर्न संशयः ।
पञ्चार्णेन चतुर्दश्यां तिलप्रसवतण्डुलैः ॥ २१

शिवं पूज्याभिलषितं लब्ध्वा शिवपदं व्रजेत् ।
पञ्चदश्यां शुचिः स्नात्वा शुद्धोदेनाभिषिच्य च ॥ २२

पुष्पैर्बहुविधैः पूज्य कृतब्राह्मणभोजनः ।
ऐश्वर्यमतुलं लब्ध्वा प्रेत्य स्वर्गे महीयते । २३

*நவமியில் தேனாலும் தூய நீராலும் நீராட்ட 21 தலைமுறையினர் நன்னிலை பெறுவர். தசமியில் பாலாலும் தர்ப்பையும் பூவும் போட்ட நீராலும் நீராட்டப் பாபம் நீங்கி ஞ்ஞானியாவர். ஏகாதசியில் நீராடிக் கடமைகளை முடித்து உபவாஸமிருந்து சிவனைத் தூயநீரால் நீராட்டச் சிவலோகமடைவர். துவாதசியில் ஈசனை வழிபட்டு சாம்பிராணி தூபமிட்டு வழிபட பிரும்ம லோகம் செல்வர். திரயோதசியில் கற்பூரம் கலந்த சந்தனம் பூசி வழிபடப்பாபங்கள் நீங்கும். சதுர்தசியில் பஞ்சாக்ஷரம் கூறி எள் அரிசி பூ இவற்றால் வழிபட சிவநிலை பெறுவர். பௌர்ணமியன்று நீராடி ஈசனைத் தூயநீரால் நீராட்டி பூக்களால் அர்ச்சித்து அந்தணருக்கு உணவிட பெருஞ்செல்வமும் ஆளுமையும் பெற்று ஸ்வர்க்கம் செல்வர். (16-24)*

अश्विन्यादिषु ऋक्षेषु पूजयित्वा महेश्वरम् ।
तत्तन्नक्षत्रदेवानां लोकमाप्नोति मानवः ॥ २४

शिवस्य पूज्यते लिङ्गं सर्वैर्देवासुरैर्नृभिः ।
शिवेन पूजितः को वा वदन्तु द्विजपुङ्गवाः ॥ २५

तस्मादेतादृशं भेदं समाश्रित्याथ शाश्वतम् ।
आराधयेन्महादेवमिति विष्णुवचस्त्विदम् ॥ २६

अराधयेद्वै सहर्षं सगुणं वाऽथ निर्गुणम् ।
मया प्रोक्तो हि भवतां योगः प्रागेव निर्गुणः ॥ २७

आरुरुक्षुस्तु सगुणं पूजयेत् परमं शिवम् ।
पिनाकिनं त्रिनयनं जटिलं कृत्तिवाससम् ॥ २८

पद्मासनस्थं रुक्माभं चिन्तयेद्वैदिकी श्रुतिः ।

*அசுவினி முதலிய நக்ஷத்திரங்களில் ஈசனை நன்கு வழிபட நட்சத்திர தேவதையின் லோகமடைவர். தேவர்களனைவரும்*

சிவனை வழிபடுகின்றனர். சிவனால் வழிபடப்பெறுகிற தேவர் எவருமில்லை. ஸகுணவடிவிலோ நிர்குணவடிவிலோ தேவனை வழிபடலாம். சிவபக்தி நிலையடைய விரும்புவர் ஸகுணநிலையையே வழிபடுவர். பிநாகம் ஏந்தியவாறு முக்கண்ணராக, சடையாளராக யானைத்தோலாடை அணிந்தவராக பத்மாஸனத்தில் அமர்ந்தவராக தங்கவண்ண மேனியராகத் தியானம் என வேதம் கூறும் (25-28)

ऋषयः—

अहो तव हि माहात्म्यं सूत सर्वविदं वर ॥ २९

सर्वेष्वपि पुराणेषु वचनं तत्तदीरितम् ।
सर्वे चोपनिषन्मुख्या श्रुतिभेदाश्च साम्प्रतम् ॥ ३०

तव वक्त्रे यौगपद्यात् कथमेतदुपस्थितम् ।
एतदाश्चर्यमालोकयितुमेव सकौतुकैः ॥ ३१

अस्माभिरुक्तं तत्तत् संमतिपूर्वं वदेति च ।
क्षम्यतामपराधोऽयं तव वक्त्रविनिस्सृते ॥ ३२

सिद्धान्तसारे वाग्जाले संमते सर्वयोगिनाम् ।
लोके को वाऽत्र सन्दिग्धे सोढ्वा सर्वमितः परम् ॥ ३३

यथेच्छमनुगृह्णीष्व शिष्याणां नो हिताय च ।

ஸூதர் இவ்வாறு கூறியதும் முனிவர்கள் வேதம் கூறும் உபநிஷத்புராணம் என அனைத்திலிருந்தும் பல உண்மைகளைத் தொகுத்து விளக்கிய ஸூதரைப் பாராட்டித் தாம் அறிய வேண்டியதனைத்தையும் விளக்கக் கோரினர். (29-33)

सूतः—

युष्माभिरेवं प्रष्टव्यं वक्तव्यञ्च तथा मया ।
भवेन्मनसि दार्ढ्यं वो न भवेदुक्तिकोटिभिः ॥ ३४

एतत्क्षेत्रनिवासगौरवजुषो जिह्वा ममैषां पुनः
सन्नह्यत्यभिधातुमीषदपि वा मौनन्तु नालम्बते ॥
उक्तैः किं बहुभिस्सदा शशिकलोत्तंसस्तु साम्बः शिवो
रुद्राक्षाभरणैस्त्रिपुण्ड्रविलसद्गात्रैः समाराध्यताम् ॥ ३५
वर्णी वाऽथ गृही वनी च कुसुमैर्नीलोत्पलाद्यैर्दलैः
बिल्वाद्यैश्च महेश्वरं घृतमधुक्षीराभिषिक्तं पुनः ।
अभ्यर्च्यानुदिनं त्रिवारमथवा भक्तस्सकृत्पूजयेत्
पञ्चार्णेन यतिर्यदि प्रणवतस्सम्पूजयेत् केवलम् ॥ ३६
सर्वश्रौतार्थसारं परममधनिनां सर्वसम्पन्निदानं
संसारारण्यजाग्रत्तृणतरुलतिकाच्छेदनं मुक्तिवल्ल्याः ॥ ३७
आलम्बोऽविघ्नमन्तर्बहिरुदितभयापोहनं गाढमाया-
ध्वान्तादित्यप्रकाशं कथमिव विनुमः शङ्कराराधनं तत् ।
वर्णानाञ्च त्रयाणां श्रुतिनुतपठितेनैव पञ्चाक्षरेण
स्त्रीशूद्राणां नमोन्तेन शिवपदचतुर्थ्यन्तशब्देन पूजा ॥ ३८

*ஸூதர் கூறுகிறார் - நீங்கள் கேட்க நான் விளக்குகிறேன். உங்களது ஆர்வமிகுதியைக் கண்டு என்னால் சொல்லாமலிருக்க முடியவில்லை. இவ்விளக்கத்தின் முடிவு ஒன்றே. எப்போதும் பிறைசூடிய ஈசனை ருத்ராக்ஷ விபூதியணிந்து வழிபடுவீர்! பிரும்மசாரி இல்லறத்தான் மற்றும் வானப்பிரஸ்தன் அல்லி முதலிய பூக்களாலும் வில்வம் முதலிய தளங்களாலும் அர்ச்சிப்பீர்! நெய், பால் மற்றும் தேனால் நீராட்டுவீர். மூன்று வேளைகளிலும் வழிபடுவீர். துறவியர் பஞ்சாக்ஷரமந்திரஜபம் செய்தால் போதுமானது வேதத்தின் ஸாரம். எல்லாச் செல்வங்களையும் அளிப்பது. ஸம்ஸாரக் கட்டை அழிப்பது. முக்திக் கொடிக்கு ஊன்றுகோல். உள்ளும் வெளியிலும் நேர்கிற பயத்தைப் போக்குவது. அடர்ந்த மாயை இருளை அகற்றி*

*வெளிச்சம் தருவது. அத்தகைய சிவபூஜையை எவ்வாறு பாராட்டுவேன்? மூவர்ணத்தினரும் ருத்ராத்யாயத்தின் நடுவிலுள்ள பஞ்சாக்ஷரத்தை ஜபிக்கலாம். பெண்களும் சூத்திரர்களும் சிவாய நம: எனக் கூறி வழிபடலாம். (34-38)*

मन्त्रेण प्रणवेन प्रभवति यतिनां पूजनं तत्परेषां
शैवानामालयानामवनमनविधौ दर्शने चाधिकारः ।
किं वेदैः किं पुराणैः किमधिकविततैः शब्दतर्कादिशास्त्रैः
नानासिद्धान्तभेदप्रसृमरकलहोत्पादकैः किं परैर्वा ॥ ३९

एकं लिङ्गं पुरस्तान्मणिमयमथवाऽन्यन्निवेश्यार्चयन्तो
ध्यायन्तो वा नमन्तो झटिति परिणयन्त्येव कैवल्यलक्ष्मीम् ।
लिङ्गे वा गार्दभं वा यदशनमुदितं मांसमाः कौणपं वा
स्वीयं वा पूतिगन्धं मलमिदमथवा तन्निगूढक्रिमिर्वा ॥ ४०

पूजाद्रव्यायते तत्सकलमपि विभोः कल्पितं सन्मुनीन्द्राः
मुक्तायन्ते प्लवस्त्रीवनचरवरगोदस्रभृङ्गोतुगृध्राः।
शैवे लिङ्गवरे सदाशिवमनस्सम्प्रीतये यः पुमान्
यत्किञ्चित् सलिलं प्रसूनमथवा पत्रं सकृन्निक्षिपेत् ॥ ४१

दानानां महतां तथैव तपसामप्यध्वराणां महा-
तीर्थेष्वाप्लुतिकर्मणामपि फलं सद्यः प्रयात्येव सः ।
धार्यं भस्म च वैरजं शकलहोमौपासनोत्थं दलैः
बिल्वैर्दग्धशकृद्भवन्तु भसितं न्यस्तं शिवाग्रेऽथवा ॥ ४२

आदायाकलितत्रिपुण्ड्रमजहद्रुद्राक्षमालं लसत्
पञ्चार्णं शिवपूजकं शिवमहं मन्ये मनुष्याकृतिम् ।
पूजेयं यदि तेजिनीशनगरे पुण्यातिरेकाद्भवेत्
केषाञ्चिच्छिवयोगिनां भसितरुद्राक्षैः क्रियां कुर्वताम् ॥ ४३

श्रीरुद्रं जपतां हृदि प्रविलसत् पञ्चाक्षराणां तदा
ह्येतेनैव कलेबरेण मुदिता यास्यन्ति शैवं पदम् ॥ ४४

भक्ताग्रण्यः परमपुरुषस्यान्वहन्दर्शनं त-
न्नेत्रोन्मीलच्चरणवृषभारूढगौरीशसेवा ।
शृङ्गं मेरोः शिवगिरिविमानञ्च तीर्थानि लिङ्गा-
न्येतत् सिन्धुत्रितयमिति को वेत्ति भूमानमेषाम् ॥ ४५

इति द्वाविंशोध्यायः

—*—

துறவிகள் ஓங்காரத்துடன் கூடிய (வேத) பஞ்சாக்ஷரம் ஜபித்து வழிபடலாம். எல்லோருக்கும் சிவாலயம் சென்று கண்டு வணங்கித் துதிக்கிற தகுதி உண்டு. வேதம், புராணம் மற்றும் சாஸ்திரங்களில் சித்தாந்த வேறுபாடு காணப்படலாம். அதனால் ஆவதொன்றுமில்லை. ஒரு லிங்கத்தை முன் வைத்து வழிபடுபவர், தியானிப்பவர், வந்தனம் செய்பவர் எளிதில் முக்தி லக்ஷ்மியை அடைவர். எந்த உணவையும் ஈசுவரார்பணம் என்ற கருத்துடன் அளிக்கலாம். நீரும் பூவும் இலையும் ஈசுவரனுக்குப் பிடித்தமானதே. அவற்றை ஈசுவரார்ப்பணமாக அளிக்க பெரும் தானமும் தவமும் வேள்வியும் க்ஷேத்திர தரிசனமும் புண்யதீர்த்த நீராடலும் தருகிற புண்யபலன் கிட்டும். விரஜா ஹோம விபூதி தாரணம், சகல ஹோமம் ஔபாஸனம் வில்வதளார்பணம் இவற்றைச் சிவனெதிரே செய்ய சிவோऽஹம் சிவனே நான் என உணர சிவபூஜகனே சிவனாகிறான். விழிக்காட்டில் இவ்வாறிருக்கப் பெரும் புண்யம் செய்திருக்க வேண்டும். விபூதி ருத்ராக்ஷம் தரித்த சிலருக்கே இப்புண்யம் கிட்டும். ஸ்ரீ ருத்ர ஜபம் பஞ்சாக்ஷரமந்திரஜபம் இவற்றாலேயே பக்தரின் முன்னணியில் இருப்பவராக பரமபுருஷனின் தரிசனத்தை அன்றாடம் பெற்று கண் முன்னே விருஷபவாஹனத்தில் அமர்ந்த கௌரீ மணாளரைக் கண்டு வழிபட்டு மேருவின் கொடுமுடியில்

*கைலாஸ விமானக் காட்சியையும் கண்டுகளிப்பர். மேருவின் சிகரமும் சிவகிரி (கைலாஸ) விமானமும் அதனருகே உள்ள தீர்த்தமும் லிங்கமும் முக்கடலுமாக எல்லாமாக உள்ள ஈசனை எவர் அறிவர். (39-44)*



## त्रयोविंशोऽध्यायः

ऋषयः-

कर्णामृतानि वाक्यानि श्रुतानि भवतो मुखात् ।
इत्योऽन्यदपि तेजिन्या वनमाहात्म्यमद्भुतम् ॥ १

इच्छामः श्रोतुमुक्त्वा तदनुगृह्णीष्व नो मुने ।
सूतः–
देशेषु मगधेष्वासीद्राजा कश्चन धर्मवित् ॥ २

पालयामास चात्मीयान्देशान्न्यायेन भूपतिः ।
तदाऽत्रिकुलसम्भूतो ब्राह्मणो योगिनां वरः ॥ ३

विधूम इति विख्यातो वेदवेदाङ्ग पारगः ।
ब्रह्मिष्ठो ब्रह्मवादी च ब्राह्मणप्रियपूजकः ॥ ४

अग्निहोत्रपरो नित्यं यायजूको जितेन्द्रियः ।
भस्मोद्धूलितसर्वाङ्गस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः ॥ ५

रुद्राक्षमालाभरणः प्रियवादी पियातिथिः ।
एतैश्च सद्गुणैर्युक्तो दीक्षां कर्तुमनास्तदा ॥ ६

यज्ञस्य रक्षणार्थाय राजानं तं नियोज्य च ।
स्वयं दीक्षाविधिं कृत्वा ब्राह्मणैर्वेदपारगैः ॥ ७

शालां प्रविश्य कर्माणि कुर्वंस्तत्र स्थितः पुरा ।
तदा मगधराजोऽपि तद्ब्राह्मणनिवेदितम् ॥ ८

विस्मृत्य यौवनवयोविजृम्भितमदोद्धतः ।
अन्तःपुरे स पत्नीनां शतेन परिमोहितः ॥ ९

पर्यक्रीडत वैधूमवचनं नास्मरन्नृपः ।
अवकाशे पुनस्तस्मिन्नतिघोरा निशाचराः ॥ १०

आगत्य यज्ञवाटञ्च गोमत्याश्च तटे शुभे ।
यज्ञभागहरान्देवान्निगृह्य स्वयमास्थिताः ॥ ११

हविर्गृहीत्वा महता वेगेन क्रोधमास्थिताः ।
विघ्नं यज्ञस्य ते चक्रुश्शिलापांसुप्रवर्षणैः ॥ १२

*''அத்தியாயம்'' - 23*

*தேஜினீ வனத்தின் பெருமையை மேலும் விளக்கக்கோரிய ருஷிகளுக்கு ஸூதர் விளக்குகிறார். மகததேசத்தரசன் நேர்மையுடன் ஆண்டு வந்தான். அத்ரி குலத்தில் பிறந்த அந்தணர் விதூமர் என்பவர் வேத வேதாங்கங்களில் தேர்ந்த பேரறிஞர். நல்ல பிரும்மஞானி, அக்னி ஹோத்ரம் புரிபவர். தினமும் வேள்விகளில் ஈடுபடுவர். விபூதி ருத்ராக்ஷ மணிந்தவர், இனிது பேசுபவர். அவர் நீண்ட காலம் தொடர்கிற வேள்வி புரிய விரும்பினார். வேள்விக்கு இடையூறு புரிபவரிடமிருந்து பாதுகாப்பு தரவேண்டி அரசனிடம் விண்ணப்பித்தார். அதனை அரசன் ஏற்றான். ஆனால் வாலிப முறுக்கும் யௌவனமும் அவனை அந்தப்புரத்தில் நூற்றுக்கணக்கான மனைவியருடன் லீலைபுரிய வைத்தன. வேள்விபுரிகிற விதூமரின் வேண்டுகோளை மறந்தான். கோமதி நதிக்கரையில் நடந்த வேள்வி அரக்கர்களால் கெடுக்கப்பட்டது. ஹவிஸாகத் தேவர்களுக்கெனத் தரவிருந்ததைப்பறித்து கற்கள் வீசி வேள்வி சாலையைக் குலைத்தனர். (1-12)*

अस्थिमांसासृगादीनामन्येषाञ्चैव वर्षणात् ।
अभवद्दूषितो यज्ञः कौणपानां शतैः क्षणात् ॥ १३

विधूमः किमिदञ्चेति त्यक्त्वा कर्माणि दुःखितः ।
चिन्तयामास तत्कर्म राक्षसानां विचेष्टितम् ॥ १४

अज्ञात्वा नृपदौरात्म्यं विश्वस्तोऽहमिति ब्रुवन् ।
राज्ञे निवेद्यतामेतदिति शिष्यानचोदयत् ॥ १५

शिष्याश्च गत्वा तस्याथ नृपे सर्वं न्यवेदयन् ।
तथापि राजा दुर्बुद्धिः पूर्वकर्मवशेन सः ॥ १६

तद्वाक्यमवमत्येव गम्यतां गम्यतामिति ।
चेटीमुखेन ब्रूते स्म तच्छ्रुत्वाऽतीव दुःखिताः ॥ १७

*எலும்புகளும் மாமிசங்களும் ரத்தமும் மழையாகக் கொட்டியதில் வேள்விச்சாலை நிலை குலைந்ததைக் கண்ட விதூமர் அரக்கர் பாதிப்பால் நொந்து அரசன் காமவசப்பட்டுக் கவனிக்காமல் இருப்பதை உணராமல் சீடர்களை அரசிடம் நிலைமையைத் தெரிவிக்க அனுப்பினார். அரசன் விதிவசத்தால் தன் பொறுப்பை உணராமல் தன் காமலீலைக்கு இடையூறு விளைவிப்பதாகக் கருதிச் சீடர்களை விரட்டினான். (13-17)*

शिष्याः पुनस्समागत्य राज्ञस्सर्वं व्यजिज्ञपन् ।
तद्वाक्यं नृपतेः श्रुत्वा विधूमो ब्राह्मणोत्तमः ॥ १८

प्रलोभितोऽहमित्येव वदन्मध्ये द्विजन्मनाम् ।
कर्मविघ्नेन दुःखार्तो दुःखादेवमुवाच ह ॥ १९

विधूमः—
भो भो राजन्महापापं कृतं हि भवताऽधुना ।
विश्वस्य हि भवन्तञ्च समारब्धः क्रतूत्तमः ॥ २०

अरक्षित्वा कथं स्थाने स्थितस्त्वं मदविह्वलः ।
उदासीनेन भवता मम कर्म विनाशितम् ॥ २१

उन्मत्तवत् स्थितो यस्मात् गृहे स्त्रीपरिवारितः ।
त्वञ्च ताश्च स्त्रियस्सर्वा उन्मत्ताश्च भविष्यथ ॥ २२

इत्युक्त्वा शिष्यमुखतः श्रावयामास तन्नृपम् ।
तच्छ्रुत्वा मागधो राजा स्त्रीभिस्सह तथाऽभवत् ॥ २३

राजा च पत्नीसहितः शापेन ब्रह्मवादिनः ।
त्यक्त्वा राज्यञ्च भोगांश्च पुत्रांश्चैव धनानि च ॥ २४

वनमेवाविशत्तूर्णं नष्टस्मृतिरघान्वितः ।
शतेन साकं पत्नीनामुन्मादाविष्टचेतसा ॥ २५

महानुभावस्स मुनिर्विधूमो हि द्विजोत्तमः ।
पुनः कर्म समारभ्य शिवभक्त्याऽनुभावितः ॥ २६

शिवेन रक्षितः पश्चाच्छम्भोः प्रीतिमथाकरोत् ।
शिवोऽपि कर्मणा तेन शाम्भवेन प्रतोषितः ॥ २७

ऋत्विग्भिश्शिवभक्तैश्च साङ्गोपाङ्गकृतेन च ।
ददौ तस्य फलं सर्वं यथेष्टमविचारतः ।
देहान्ते तस्य मुक्तिञ्च प्रददौ स महेश्वरः ॥ २८

इति त्रयोविंशोध्यायः



சீடர்கள் விதூமரிடம் நடந்ததைத் தெரிவிக்க தான் ஏமாற்றப்பட்டதை உணர்ந்த விதூமர், ஸபையின் நடுவே வேள்விக்கு நேர்ந்த இடையூறு கண்டு வருந்தி அரசனைச் சபித்தார்.

''உம்மை நம்பி வேள்வியைத் தொடங்கினேன், வேள்விக்குப் பாதுகாப்பும் தராமல் தன்னிடத்திலேயே இருந்து கொண்டு என் வேள்வி நிறைவுறாமல் செய்ததால் நீரும் உம்மைச் சூழ்ந்துள்ள பெண்களும் பித்துப் பிடித்துத் துயரடைவீர்'' என. உடன் அரசனும் அவனது மனைவியரும் மனநிலை கெட்டனர். அரசன் ராஜ்யத்தை விட்டு வெளியேறி மனைவி மக்களுடன் காட்டிற்குச் சென்றான். விதூமர் மறுபடி சிவனது அருள் பெற்று வேள்வி தொடங்கி அதனால் சிவனை மகிழ்வித்தார். சிவபெருமான் வேள்வியை நிறைவுறச் செய்து நல்வாழ்வு தந்து இறுதியில் முக்தியுமளித்தார். *(18-28)*

## चतुर्विंशोध्यायः

सूतः—

ततो मगधराजोऽपि स्त्रीभिरुन्माददूषितः ।
वनाद्वनं परिक्रम्य देशाद्देशं प्रविश्य च ॥ १

पूर्वपुण्यविपाकेन किञ्चिच्छेषेण तत्र च ।
वसिष्ठस्याश्रमोपान्ते बदरीकाननान्तरे ॥ २

प्रविश्य स कदाचित्तु नर्मदायास्तटे शुभे ।
रुरोद भृशमार्तस्स हा हतोऽस्मीति चाऽब्रवीत् ॥ ३

स्त्रीणां शतेन सहितो भृशदुःखाकुलेन च ।
वसिष्ठस्तु तदा श्रुत्वा रोदनं कृपयान्वितः ॥ ४

मा भैरिति वचश्चोक्त्वा ज्ञातवान् तस्य चेष्टितम् ।
अवश्यं मोचनीयोऽयमिति मत्वा वचोऽब्रवीत् ॥ ५

वसिष्ठः—

भो भो राजन्यबन्धो त्वं विश्वस्य ब्राह्मणं यथा ।
अकृत्वा यज्ञरक्षाञ्च पापं विश्वासघातजम् ॥ ६

प्राप्तवानीदृशं घोरं रोदनात्किं फलं तव ।
पापानाञ्चैव सर्वेषां पापं विश्वासघातकम् ॥ ७

शास्त्रेषु निष्कृतिर्नास्य्य प्रायश्चित्तशतैरपि ।
विश्वासघातजनुषा पापेन नरकं गताः ॥ ८

शक्तो गणयितुन्नैव ब्रह्मापि चतुराननः ।
तथाप्युन्माददुष्टस्त्वं ममाश्रममुपागतः ॥ ९

ममाश्रमं प्रविष्टानां दुःखं नैव भविष्यति ।
मदीयञ्च तपस्सर्वं विनियुज्य च पार्थिव ॥ १०

उन्मादान्मोचयिष्यामि भवन्तं पापदूषितम् ।
तथापि मे तपांस्यद्य न प्रयास्यन्ति हि क्षयम् ॥ ११

उपकारेण महता तपसां वर्धते फलम् ।
इत्येवमामनन्त्यार्या लोके धर्मार्थकोविदाः ॥ १२

दुःखाविष्टं नरं ज्ञात्वा शक्तो यस्तु न रक्षति ।
स पतेन्नरके घोर इति धर्मविदां वचः ॥ १३

परोपकारात्परमं पुण्यं नास्ति कदाचन ।
परोपकारः कर्तव्यः प्राणांस्त्यक्त्वाऽपि मानवैः ॥ १४

परोपकारिणं दृष्ट्वा सर्वे धर्मास्सनातनाः ।
अधः कृता भवन्त्येवमुलूकास्तपनं यथा ॥ १५

परोपकारव्यापारपरो यः पुरुषस्सदा ।
परं पदमवाप्नोति परादपि च यत्परम् ॥ १६

विश्वासघातिनं दृष्ट्वा कम्पते रविमण्डलम् ।
सञ्चारात्कम्पते भूमिस्तथा क्रोशन्ति भूसुराः ॥ १७

तीर्थानि वेपथुं यान्ति तत्पापस्पर्शशङ्कया ।
तस्मिन् समागते देवा निर्गमिष्यन्ति चालयात् ॥ १८

ज्ञात्वाऽपि तादृशं पापममोच्यं दैवतैरपि ।
तवाद्य मोचयिष्यामि पार्थिवाहं कृपान्वितः ॥ १९

*''அத்தியாயம்'' - 24*

*மகத அரசன் தன் மனைவியருடன் காடுகளைக் கடந்து முன் பிறவியால் செய்த புண்ய வினைவாக பதரிகா வனத்தில் வஸிஷ்டா சிரமமடைந்தான். நர்மதை நதிக்கரையிலமர்ந்து தன் நிலைபற்றி உரக்கப் புலம்பினான். வஸிஷ்டர் இதனைக்கேட்டு பரிவுடன் அபயமளித்து அவன் நிலை உணர்ந்து, அந்த நெருக்கடியிலிருந்து காக்க முன் வந்தார் 'அரசே! நீர் நம்பிக்கைத்துரோகம் செய்தீர். வேள்வியைக் காப்பதாக உறுதி கூறிப்பின் வேள்வியைக் காக்காமல் கடமை தவறியதால் ஏற்பட்ட வினையின் விளைவு இது. நம்பிக்கைத் துரோகம் பெரும் பாபம். இதற்குப் பிராயச்சித்தமேதுமில்லை. இதனால் நரகம் சென்றவர் பலர், பைத்தியம் பிடித்து என்னிடம் வந்தீர். இந்த ஆசிரமம் துயரம் நீக்கவல்லது. என் தவமனைத்தையும் பயன் படுத்தியாவது உம்மைக் காப்பேன். ஆனால் கேடுற்றவரின் துயர் நீக்க உதவிய தவம் குறைவதில்லை என்பது மட்டுமல்ல; தவம் மேலும் வளரும். சக்தியிருந்தும் துயருற்றவனைக் காக்காவிடில் நரகம் நேரும் என்பர். உயிரைக் கொடுத்தாவது பிறரைக் காப்பது அவசியம். மற்ற அறச்செயல்கள் பரோபகாரத்திற்கு இணையாகா. பரோபகாரம் செய்தவன். மிகச் சிறந்த மேனிலை பெறுவான். நம்பிக்கைத்துரோகியைக் கண்டதும் சூரியமண்டலம் நடுங்கும். பூமி நடுங்கும். வேதியர் அழுவர். புனிததீர்த்தங்கள் அவன் நம்மைத் தொடுவானோ எனப்பயமடையும். ஆலயத்திலிருந்து தேவதைகள் வெளியேறும். அத்தகைய கொடும் பாபத்திலிருந்து உம்மை விடுவிப்பேன். (1-19)*

येन केनाप्युपायेन कर्तव्यं दीनरक्षणम् ।
विश्वासघातजं दोषं मित्रद्रोहकृतं तथा ॥ २०

मातापित्रोर्दूषणञ्च तेषां वाक्यविलङ्घनम् ।
पित्रोररक्षणश्चैव शास्त्रस्याकरणं तथा ॥ २१

शिवपूजोपघातञ्च शिवकैङ्कर्यघातनम् ।
शिवभक्तेषु च द्रोहं श्रुतिस्मृतिविलङ्घनम् ॥ २३

महापातकमेवाहुरेतानि मुनिपुङ्गवाः ।
तेषां त्वमग्रगण्योऽसि परं विश्वासघातनात् ॥ २४

तथापि स्त्रीजनैर्दुःखी मदाश्रममुपागतः ।
तेन त्वां मोचयिष्यामि मद्दृष्टिपथगो यतः ॥ २५

*துயருற்றவனைக் காப்பது கடமை. காக்காதவன் நம்பிக்கைத் துரோகம் செய்தவனுவான். நம்பிக்கைத் துரோகம், நண்பருக்குத் துரோகம், தாய்தந்தையரை நிந்திப்பது, அவர்களது சொல்லை மீறுவது, பெற்ருேரைக் காக்கத்தவறுவது, சாஸ்திர முறையை மீறுவது, சிவசொத்தைப் பறிப்பது, சிவமந்திரத்தைத் தூஷிப்பது, சிவபூஜையைத் தடுப்பது, சிவகைங்கரியத்திற்கு இடையூறு விளைவித்தல், சிவனடியாருக்குத் துரோகம், வேதஸ்மிருதி வழியை மீறுவது அனைத்தும் பெரும் பாபங்களே. அத்தகைய பாபம் செய்த நீர் முன் நிற்கிறீர். உன் மனைவியரும் உன் காரணமாகத் துன்பமடைந்தனர். என் பார்வையில் பட்டுவிட்ட படியால் உங்களைக் காப்பேன். (20-25)*

अस्ति क्षेत्रं महापुण्यं शिवक्षेत्रोत्तमोत्तमम् ।
कावेर्या दक्षिणे तीरे तेजिनीवननामकम् ॥ २६

विष्णोरपि तपोभूमिः शिवप्रीतिकरं शुभम् ।
कैलासादागतं तत्र विमानं सिंहसंयुतम् ॥ २७

तीर्थेन सहितं तत्र वर्तते लोकपूजितम् ।
ममापि मार्कण्डेयादिमुनीनामपि पार्थिव ॥ २८

यज्ञभूमिस्तीर्थलिङ्गप्रतिष्ठापनभूरपि ।
हरिश्रुता नाम नदी कावेर्या भिन्नरूपिणी ॥ २९

तत्र क्षेत्रे प्रवहति सर्वपापापहारिणी ।
परब्रह्ममयी साक्षाद्दर्शनाद्भोगमोक्षदा ॥ ३०

पुनः सन्ति च तीर्थानि इन्द्राद्यैः कलितानि च ।
पातकानि प्रणश्यन्ति तेषां दर्शनमात्रतः ॥ ३१

*காவேரியின் தென்கரையில் வீழிக்காடு மிகச் சிறந்தபுண்ய க்ஷேத்திரம். விஷ்ணு தவம் செய்த இடம். சிவனது அன்புக்குரியது. கைலாஸத்திலிருந்து சிங்கங்கள் தாங்குகிற விமானம் இறங்கிய இடம். தீர்த்த புஷ்கரிணீ முதலிய தீர்த்தங்கள் நிறைந்தது. எனக்கும் மார்கண்டேயர் முதலிய முனிவர்களுக்கும் வேள்விபுரியுமிடமும் அவரவர் தனக்கென லிங்கமும் தீர்த்தமும் அமைத்துக் கொண்ட இடம், காவேரியின் மற்றொரு பிரிவான ஹரிச்ருதா (அரி சொல்லாறு) பாபத்தை நீக்க அங்கு ஓடுகிறது. அதைக் கண்டாலே பாபம் விலகும். இந்திரன் முதலிய தேவர்கள் அமைத்த தீர்த்தங்கள் பல உண்டு. அவையும் பாபம் நீக்குபவையே. (26-31)*

वैशाखे पूर्णिमायोगे तीर्थपुष्करिणीजले ।
स्नात्वा गच्छन्ति ये तत्र तेषां केशाग्रबिन्दुभिः ॥ ३२

स्त्रीभिस्त्वं मोक्ष्यसे सद्यस्तीर्थबिन्दुप्रपातनात् ।
पुनश्च तस्मिन् तीर्थे च स्नाहि स्त्रीभिस्समन्वितः ॥ ३३

सद्योजातेन मन्त्रेण साक्षाच्छिवमयेन च ।
पत्नीभिस्सह मुक्तिश्च देवस्यानुज्ञया परम् ॥ ३४

कुरु तत्रैव वासञ्च शिवकैङ्कर्यकारकः ।
अहमप्यागमिष्यामि त्वां द्रष्टुं देवमेव च ॥
गच्छ शीघ्रमितो राजन्निति तं समचोदयत् । ३५

इति चतुर्विंशोध्यायः

வைகாசி பௌர்ணமியன்று தீர்த்த புஷ்கரிணீயில் நீராடியவரின் கேசங்களிலிருந்து சொட்டுகிற நீர் உன் மீதும் உன் மனைவியர் மீதும் பட்டவுடன் பித்து நீங்கிவிடும். உடன் நீ உன்மனைவியருடன் அதில் நீராடி சிவனது மற்றொரு வடிவான ஸத்யோஜாத மந்திரம் ஜபித்துக் கொண்டு அங்கேயே இருந்து சிவகைங்கரியம் செய்வாய். நானும் அங்கு வந்து உன்னைத் காண்பேன் .விரைவில் செல்வாய் என்று தூண்டினார். (32-35)

---★---

पञ्चविंशोऽध्यायः

सूतः—

एवं वसिष्ठस्य वचो निशम्य मगधाधिपः ।
तेजिनीवनमन्विष्यन् पत्नीभिस्सह निर्गतः ॥ १

कैलासादागतं तीर्थं विष्णुनेत्रार्चितः शिवः ।
वैशाखे पूर्णिमायोगे मासे कालो विशिष्यते ॥ २

इति स्नानाय गच्छद्भिर्ब्राह्मणानां शतैर्युतः ।
तेजिनीविपिनं पुण्यं आससाद नृपाग्रणीः ॥ ३

आसाद्य तत्र स्नातानां जनानां केशबिन्दुभिः ।
अङ्गेषु सिक्तैरुन्मादान्मोचितोऽभूत्स पार्थिवः ॥ ४

पत्न्यश्च मोचिता आसन् तत्क्षणेन महीपतेः ।
ततस्तु विस्मयाविष्टो राजा पत्नीसमन्वितः ॥ ५

तीर्थपुष्करिणीतोये पुनः स्नात्वा कृतक्रियः ।
उन्माददोषान्मुक्तोऽभून्मेघेभ्य इव चन्द्रमाः ॥ ६

ततो देवालयं गत्वा सेवमानोऽवनीपतिः ।
अत्यन्तशिथिलीभूततुङ्गप्राकारगोपुरम् ॥ ७

अदीपमन्धकाराढ्यं नानागुल्मलतावृतम् ।
निर्मानुष्यं नृपो दृष्ट्वा किमेतदिति चिन्तयन् ॥ ८

विचारमकरोत्तत्र कैङ्कर्यकृतनिश्चयः ।
धनमानयत क्षिप्रमिति दूतानचोदयत् ॥ ९

तद्दूता राजवाक्येन गत्वा तु नृपमन्दिरम् ।
तेजिनीनगरप्राप्तिं तत्रोन्माद विमोचनम् ॥ १०

कैङ्कर्यं कर्तुकामेन धनमानयतेति च ।
राज्ञा संप्रेषणं सर्वं मन्त्रिभ्यो विनिवेद्य च ॥ ११

वाहयित्वा धनान्युष्ट्रैर्दूता मन्त्रिजनैः सह ।
पुनराकाशनगरमाजग्मुर्मुदिताः क्षणात् ॥ १२

*''அத்தியாயம்'' - 25*

*வஸிஷ்டரின் உபதேசத்தைக் கேட்ட அரசன் தேஜினீ வனத்தைத் தேடிச் சென்றான். கைலாயத்திலிருந்து வந்த தீர்த்த புஷ்கரிணீ, விஷ்ணுவின் கண்களால் அர்ச்சிக்கப் பெற்ற சிவன் வைகாசியின் பௌர்ணமி என்ற நன்னாள், என்று கூறிக்கொண்டு செல்கிற வழிப்போக்கர்களுடன் கூடி வீழிக்காட்டை அடைந்தான். தீர்த்த புஷ்கரிணீயில் நீராடியவரின் கேசத்திலிருந்து சொட்டுகிற நீர்த்துளியை விரும்பித் தன்மீது ஏற்ற அரசனும் அவனது மனைவியரும் நோய் நீங்கப் பெற்றனர். இதனைக் கண்டு வியந்த அரசன் மனைவியருடன் தீர்த்த புஷ்கரிணீயில் நீராடினான். சிவனை வழிபட்டான். ஆலயத்தை வலம் வந்த அவன் சுற்றுச் சுவர்களும் கோபுரமும் சிதைவுற்றும் தீபங்களின்றி இருள் சூழ்ந்துமிருப்பதைக் கண்டு திருப்பணி செய்யத் தீர்மானித்தான். தன் தலைநகரிலிருந்து தனம் கொண்டு வரத் தூதரை அனுப்பினான்.*

*அவர்கள் அரசன் நோய் நீங்கிச் சுகமாயிருப்பதையும் கோயில் திருப்பணி நடக்க விருப்பதையும் தெரிவித்தனர். மந்திரிகள் அளித்த தனத்தை ஒட்டகை மீதேற்றி ஆகாசநகரம் (வீழிக்காடு) வந்தனர். (1-12)*

आगत्य मन्त्रिभिस्सार्धं दूता भूमिपतेः पुरः ।
धनानि निक्षिपन्ति स्म राजा चातीव हर्षितः ॥ १३

तेन द्रव्येण सहसा जीर्णोद्धारमथाकरोत् ।
नानारत्नोज्ज्वलाकारं नानालङ्कारशोभितम् ॥ १४

आलयं सर्वमतुलं विमानं मण्टपं ततः ।
प्राकारं गोपुरञ्चापि वीथीस्तीर्थानि चादरात् ॥ १५

सुधालिप्तानि सुदृढञ्चकार मगधो नृपः ।
आलयं दीपमालाभिः अलङ्कृतमथातनोत् ॥ १६

नैवेद्यं कल्पयामास भोजयामास च द्विजान् ।
नृत्तवादित्रघोषैश्च पूरयामास तत्पुरम् ॥ १७

ततान धर्मशालाश्च मठानपि तपस्विनाम् ।
ब्रह्मप्रतिष्ठामकरोद्यथापूर्वमनेकशः ।
उत्सवं कारयामास पताकाध्वजसङ्कुलम् ॥ १८

रथोत्सवं तीर्थयात्रां यथा पूर्वमकारयत् ॥ १९

शिखरैः स्वर्णकुम्भैश्च तथा मङ्गलतोरणैः ।
अवतारितमाकाशात्त्रिविष्टपमिवाबभौ ॥ २०

*அரசன் தன் முன் தூதர்கள் கொணர்ந்த தனத்தைக் கண்டதும் மிகவும் மகிழ்ந்து உடன் ஆலயத்திருப்பணி செய்தான். ஆலயமும் விமானமும் மண்டபமும் ரத்தின ஒளி பெற்று இணையற்று விளங்கின. மதிற்சுவர், கோபுரம், வீதிகள், நீர்*

*நிலைகள், இவற்றை வலுப்படுத்தி சுண்ணும்பு பூசி, தீபவரிசை அமைத்து ஈசனுக்கு நிவேதனமும் அந்தணருக்கு உணவும் அளித்து நடனமும் வாத்ய கோஷமும் துலங்க உற்சவம் நடத்திஞன். தர்மசாலைகள், தவசிகள் தங்க மடங்கள் கொடியேற்றத்துடன் உற்சவங்கள், ரதோத்ஸவம், தீர்த்தவாரி முதலியவற்றை முறைப்படி நடத்திஞன். கோவிலின் சிகரத்தில் ஸ்வர்ணகலசம், மங்கள தோரணம், ரத்னத்தால் அமைத்த முகப்பட்டம் அமைத்து, வானிலிருந்து இறங்கிய ஸ்வர்கலோகமாக அப்புரத்தை அமைத்தான். (13-20)*

अखिलभूसुरवासगृहाङ्गणैः मुनिवरैरुषितैरुटजान्तरैः ।
अथ वसद्यतिभिश्च मठान्तरैः कृतमनेन पुरं गगनाह्वयम् ॥ २१

तस्यैव तेजिनीनाथो भगवान्भूतभावनः ॥ २२

प्रसन्नश्चाभवत्तत्र श्रीसुन्दरकुचाम्बया ।
वरं ददौ वराहाय यथेष्टं मनसेप्सितम् ॥ २३

स तु दत्तवरो राजा देवेन च कृपालुना ।
उषित्वा सुचिरं कालं शिवपूजापरायणः ॥ २४

देहान्ते शिवलोके तु गणत्वेन नियोजितः ।
प्रसादसुमुखो नाम कारितोऽयं शिवेन च ॥ २५

अग्रणीः शिवदूतानामभवन्मगधाधिपः ।
पत्न्यश्च तत्र तस्यैव निवसन्त्यो यथासुखम् ॥ २६

देहान्ते शिवसायुज्यं प्रापुः परमशोभनाः ।
अरण्यभूतं नगरं जनैश्च निबिडीकृतम् ॥ २७

भूलोके ब्रह्मलोकस्तु समागत इवाऽभवत् ।
शिबिना स्थापितं विप्रा देशान्तरगताः पुनः ॥ २८

आगत्याकाशनगरे निवासं चक्रुरुत्तमे ।
पुत्रपौत्रैः परिवृता महाभाग्यसमन्विताः ॥ २९

अग्निहोत्ररताश्चासन् देशोऽपि सास्थ्यमासदत् ।

வேதியரின் திருமாளி கைகள் முனிவர்களின் குடில்கள், துறவியரின் மடங்கள் என ஆகாசநகரம் ஒளியுற்றது, ஸுந்தர குசாம்பிகையுடன் தேஜினீவனேசன் அரசனின் எதிரில் தோன்றி அருள் புரிந்தார். சிவபூஜையில் ஆழ்ந்த அரசன் பல்லாண்டுகள் வாழ்ந்து இறுதியில் கைலாஸமடைந்து பிரஸாதஸுமுகன் என்ற சிவதூதர்களின் தலைவனானான். அவனது மனைவியரும் சிவநிலையடைந்தனர். காடாயிருந்த அந்தத்தலம் பிரம்மலோகம் போன்றானது. சிபியரசன் முன் அமைத்த புரம் இன்று மகதஅரசனால் புதுப்பிக்கப்பெற்றது. வெளியேறிய அந்தணர்கள் மறுபடி அங்கு குடியேறினர். முன்போல் புத்திரபௌத்ரர்கள் சூழ செழிப்புடன் அக்னி ஹோத்ரம் முதலியவற்றில் ஈடுபட்டனர். தேசமும் நன்னிலை பெற்றது. (21-29)

कथैषा सर्वपापघ्नी श्रवणादेव पावनी ॥ ३०

पठतां शृण्वताञ्चापि सर्वसौभाग्यदायिनी ।
लभ्यते क्षेत्रवासोऽयं महतां भाग्यशालिनाम् ॥ ३१

आकाशनगरस्यास्य माहात्म्यं केन वर्ण्यते ।
मयापि किञ्चित्कथितं ज्ञातमात्रं गुरोः श्रुतम् ॥ ३२

एतावता शिवः प्रीतो भविष्यति न संशयः ।
सत्यं सत्यं पुनस्सत्यं वेदसिद्धं पुरातनम् ॥ ३३

दूरतः शिखरं दृष्ट्वा तेजिनीशस्य मानवः ।
स एव भूभुजां श्रेष्ठो भविष्यति न संशयः ॥ ३४

भिक्षामात्रं प्रदायापि यतये ब्रह्मचारिणे ।
काले समागते मर्त्यस्स कैलासपतिर्भवेत् ॥ ३५

पञ्चारत्निप्रमाणञ्च यस्तु गेहं प्रयच्छति ।
साम्राज्यं लभते मर्त्यः केवलं गृहमात्रतः ॥ ३६

क्षेत्रारामादि दत्तश्चेत् कुटुम्बभरणाय तु ।
तस्य पुण्यमियन्मात्रमिति वक्तुं न शक्यते ॥ ३७

इति पञ्चविंशोध्यायः

*இந்த வரலாறு கேட்டதும் தூய்மை தரும். இந்த க்ஷேத்திரவாஸம் பாக்கியமுள்ளவருக்கே கிட்டும். தூரத்திலிருந்து கோயிலின் சிகரத்தைக் கண்டாலே பெருநிலை கிட்டும். துறவிக்கும் பிரும்மசாரிக்கும் பிக்ஷைதர மனிதன் உரிய நேரத்தில் சிவநிலை பெறுவான். வீடற்றவனுக்கு ஒரு ஆள் தங்க இடமளித்தவன் ஸாம்ராஜ்யம் பெறுவானெனில், வீடும் தோட்டமும் தந்து குடும்பம் நடத்த வசதி செய்து தருபவனின் புண்யத்தை அளவிட இயலாது. (30-37)*

—★—

षड्विंशोध्यायः

सूतः—

पुनरप्यस्य माहात्म्यं क्षेत्रस्याहं वदामि वः ।
यस्य श्रवणमात्रेण भाग्यवन्तो भवन्ति हि ॥ १

पुरा कात्यायनो नाम मुनीन्द्रः सर्ववित्तमः ।
षण्णाञ्च सूत्रकाराणां सोयमेकतमो मतः ॥ २

कृतोपकर्ममोक्षश्च वेदव्रतमवाप्य सः ।
व्रतं कृत्वा सगोदानं धन्यां कन्यां सुमेधसः ॥ ३

उपयेमे विधानेन स्वसूत्रेण सुमङ्गलाम् ।
सीमन्तपुंसवनकर्मोज्ज्वलायां महामुनिः ॥ ४

सुमङ्गलायां भार्यायां दश पुत्रानजीजनत् ।
सुशीलान्नीतिसम्पन्नानाश्रमाचारतत्परान् ॥ ५

स गार्हस्थ्यमवाप्याथ स्वाश्रमाचारनिर्मलः ।
आवहन्तीं यजन्नित्यं मखेष्वपि विशेषतः ॥ ६

औदुम्बरसमिद्भिश्च हविष्याज्येन चाजुहोत् ।
तदा मुनेराविरासीदन्नानामधिदेवता ॥ ७

''அத்தியாயம் - 26

பாக்யமளிக்கிற க்ஷேத்திரத்தின் பெருமையில் இதுவும் ஒன்று. காத்யாயனர் என்ற முனிவர், ஸூத்ரங்கள் எழுதிய (ஆபஸ்தம்பர் முதலான) வரில் இவர் ஒருவர். வேதம் ஓதியபின் உபாகர்மாவும் ஸ்நாதக விரதமும் வேதவிரதமும் முடித்து கோதானம் செய்து ஸுமேதஸ் என்பவரின் பெண் ஸுமங்களா என்பவளை மணந்தார். அவளிடம் முறைப்படி பும்ஸவனம் ஸீமந்தம் செய்து பத்து புதல்வரைப் பெற்றார். நல்ல நடைமுறையில் பழக்கி நேர்மையுடன் அந்தந்த ஆசிரமத்திற்கேற்ற நடைமுறையை அமைத்துக் கொடுத்தார். ஆவஹந்தீ ஹோமத்தை அத்திஸமித்துகளாலும் நெய்யாலும் நிறைவுறச் செய்தார். அவர்முன் அன்ன தேவதை தோன்ற, அவளைத்துதித்தார். (1-7)

## देवीस्तोत्रम्

''वामेन पाणिना पात्रं पायसेन प्रपूरितम् ।
हैमीमन्येन दर्वीञ्च जपावर्णां जपाकृतिम् ॥ ८

मन्दस्मितलसद्वक्त्रां वल्गत्कनककुण्डलाम् ।
रक्ताम्बरधरां रम्यां शिञ्जन्मञ्जीरमेखलाम् ॥ ९

मुक्तादामपरिष्वक्ततुङ्गपीनपयोधराम् ।
मणिकेयूरपतककटकैरपि शोभिताम् ॥ १०

नमद्भ्रुवं विशालाक्षीं करुणापूर्णवीक्षणाम् ।
कोकिलालापमधुरामासेचनकदर्शनाम् ॥ ११

सखीभिस्सहितां देवीं भारत्या रमया क्ष्मया ।
कल्पवृक्षवनान्तस्थचिन्तामणिगृहस्थया ॥ १२

कामधेन्वा च सहितां वटपत्रमितोदरीम् ।
सप्तलोकैकजननीं क्षामक्षेपार्थमागताम् ॥ १३

आराधयामि नियतमानतोऽस्मि दयान्विताम् ।''
इति स्तुवन्तं हृष्टाङ्गमानन्दाश्रुपरिप्लुतम् ॥ १४

कात्यायनमुनिं वीक्ष्य गौरी वचनमब्रवीत् ।
वरं वृणीष्व भद्रन्ते यत्ते मनसि रोचते ॥ १५

*''தேவீஸ்துதி'' - இடது கையில் பாயஸம் நிரம்பிய பாத்திரமும் வலது கையில் தங்கக் கரண்டியும் ஏந்தி செம்பரத்திப்பூ போன்ற மேனி வண்ணமும் உருவமைப்பும் கொண்ட தேவி. புன்சிரிப்பால் மலர்ந்த முகம், காதுகளில் தங்கக்குண்டலம், செந்நிற ஆடை, கொஞ்சுகிறமணி கொண்ட இடுப்பணி, முத்துமாலை துலங்குகிற பருத்த மார்பகம், ரத்ன கேயூரம், பதக்கம், கால்காப்பு அணிந்தவள், குனிந்த புருவம், விசாலமான கண்கள், கருணைத்தும்புகிற பார்வை, குயில் போன்ற குரல், மனத்தை நிறைக்கிற தோற்றம், ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் பூதேவியும் தோழிகள், கல்பகமரக்காட்டின் இடையே உள்ள சிந்தாமணிகிருஹத்தில் வாஸம். ஆலிலை போன்ற வயிறு. முன் காமதேனு, ஏழு உலகிற்கும் ஒரே தாய், பஞ்சம் நீக்க வந்தவள். பரிவு மிக்கவள். இந்த அன்னபூர்ணையை வணங்குகிறேன். வழிபடுகிறேன் எனக் கண்ணீர் மல்கத்துதிக்கிற காத்யாயனரை கௌரிதேவி விரும்பியதைக் கேட்கப்பணித்தாள். (8-15)*

देवीवाक्यमथाकर्ण्य दयायुक्तं मुनीश्वरः ।
अब्रवीत्प्राञ्जलिर्वाक्यं देवर्षीणाञ्च शृण्वताम् ॥ १६

वीक्षणात्तव कल्याणि कृतार्थोऽस्मि च सिद्धिमान् ।
पुत्रीत्वं प्राप्नुया मे त्वं सर्वसम्पत्करी शुभा ॥ १७

इति तद्वाक्यमाकर्ण्य किञ्चित्स्मित्वाऽन्नदेवता ।
तथास्त्विति समाभाष्य तत्क्षणेऽन्तर्हिताभवत् ॥ १८

मुनिः कात्यायनः पश्चात् कांक्षन् पुत्रीसमुद्भवम् ।
तेजिनीविपिनक्षेत्रे तीर्थपुष्करिणीतटे ॥ १९

देवीमुद्दिश्य सुचिरं तपस्तेपे सुदुस्तरम् ।
देवी च वृत्तान्तममुं त्रिनेत्राय निवेद्य च ॥ २०

अनुज्ञाता शिवेनारादागत्य परमेश्वरी ।
तीर्थपुष्करिणीतोये विकचेन्दीवरोदरात् ॥ २१

आविर्बभूव सा देवी कन्यारूपेण सुन्दरी ।
दृष्ट्वा त्रिवर्षदेशीयां देवीं कात्यायनो मुनिः ॥ २२

ज्ञात्वाऽङ्गलक्षणैर्देवीमादायातिप्रहृष्टधीः ।
सुमङ्गलाया भार्याया हस्ते दत्वा ह्यवर्द्धत ॥ २३

तस्यान्तु स्मेरवक्त्रायामुदितायां तटिद्युतौ ।
दिवि दुन्दुभयो नेदुः पुष्पवृष्टिः पपात ह ॥ २४

ननृतुश्चाप्सरस्सङ्घा ववुर्वातास्सुखावहाः ।
प्रसन्नास्स्युर्दिशस्सर्वाः प्रशशंसुर्मुनीश्वराः ॥ २५

*தேவியின் பரிவுமிக்க வாக்கைக் கேட்டுக் கைகூப்பி காத்யாயனர் வேண்டினார். தாயே! மங்களமானவளே! உனது*

*தரிசனத்தாலேயே நிறைவு பெற்றேன். எல்லா செல்வத்தையுமளிக்கிற நீ என் மகளாக வருவாய்'' என. இதனைக் கேட்ட அன்ன பூர்ணி அப்படியே ஆகட்டும் எனக் கூறி மறைந்தாள். மகளின் பிறப்பை எதிர்பார்த்துக் காத்யாயனர் வீழிக்காட்டில் தீர்த்தபுஷ்கரிணிக் கரையில் தேவியைக் குறித்துத் தவமிருந்தார். தேவி பரமேசுவரனிடம் நடந்ததைக் கூறி அவரின் அனுமதி பெற்று தீர்த்த புஷ்கரிணீ நீரில் மலர்ந்த அல்லி மலரினிடையே அழகிய கன்னிகையாகத் தோன்றினாள். மூன்று வயதுள்ள கன்னியைக் கண்டு அவயவ அடையாளங்களால் தேவியாய் உணர்ந்து மகிழ்ச்சி மிக்கவராக, தன் மனைவி ஸுமங்கலையிடம் அவளைத் தந்தார். வானிலிருந்து பூமாரி பொழிந்தது. தேவர்கள் வாத்ய கோஷமிட்டனர். அப்ஸரஸ்கள் நடனமாடினர். இனியமென்காற்று வீசிற்று. திக்குகள் தெளிந்தன. முனிவர்கள் பாராட்டினர். (16-25)*

कात्यायनीति नामास्याः पिता चक्रे मुनीश्वरैः ।
विद्येवोपनिषद्भिस्सा विरराज सखीजनैः ॥ २६

करौ गृहीत्वा सख्यास्तु कराभ्यां पितृवाक्यतः ।
सञ्चरन्ती हसन्ती सा पित्रोः प्रीतिमवीवृधत् ॥ २७

मणिकन्दुकलीलां सा विधाय च कदाचन ।
उच्छ्वासाविचलद्वक्त्रा पित्रोरासीत् प्रियङ्करी ॥ २८

मात्रा निवर्तिता चेयं मनोज्ञैः स्वसखीजनैः ।
प्रयाति तीर्थेषु स्नातुं सेवने लिङ्गमैश्वरम् ॥ २९

लीलया शिवलिङ्गानि कृत्वा पूजयतेऽपि च ।
निमज्ज्योन्मज्ज्य तीर्थेषु नद्यामपि सखीजनैः ॥ ३०

नाटयन्ती पितृभ्यां संत्रासं गृह मुपैति च ।
गौरीरूपा तु सा कन्या मुनिकन्येव चाश्रमे ॥ ३१

दृश्यमाना स्वलीलाभिः सर्वेषां विस्मयं व्यधात् ।
एवं संवर्धमानायाः कात्यायन्याः क्रमादभूत् ॥ ३२

उज्जीवनं रतिपतेरुद्वाहार्हं वयः शनैः ।
चतुर्दशानां लोकानां नाथो देवः सदाशिवः ॥ ३३

कथं मम समागच्छेत् कन्यायाः परिणीतये ।
इति चिन्ताज्वराक्रान्तं कात्यायनमृषीश्वरम् ॥ ३४

*தந்தை காத்யாயனி (காத்யாயனரின் மகள்) என்றே பெயரிட்டார். பிரும்மவித்யைக்கு உபநிஷத்துகள் தோழியாவது போல் இனிய அழகிய தோழி ஒருவள் கைபிடிக்க, தந்தை சொற்படி நடந்து சிரித்து பெற்றோரை மகிழ்வித்தாள். ரத்னத்தாலான பந்து விளையாடிக்களைத்துப் பெருமூச்சுடன் பெற்றோரின் முன் நின்று ஆனந்தமடையச் செய்தாள். தாயுடனும் தோழியுடனும் தீர்த்தங்களில் நீராடி சிவதரிசனம் செய்தாள். தனக்கென லிங்கமமைத்துக் கொண்டு புனிதநீராட்டி வழிபட்டாள். அரிசிலாற்றில் மூழ்கித் திளைத்துப் பயந்து நடுங்குபவள் போல் பெற்றோரை நடுங்கச் செய்தாள் - முனிவரின் பெண்ணாக அனைவரும் வியப்புறும்படி, நடித்த கௌரி திருமணவயதை அடைந்தாள். இவளை மணக்க பதினான்கு உலகங்களில் நாதனான சிவனை எதிர்பார்தது பரபரப்புற்றார் காத்யாயனர். (26-34)*

ज्ञात्वा तत्र समागच्छद्ब्रह्मपुत्रः स नारदः ।
तमागतं मुनिं दृष्ट्वा पादार्घ्याचमनादिभिः ॥ ३५

सम्पूज्य हृदये लग्नं निवेद्यञ्च न्यवेदयत् ।
तदाकर्ण्य मुनिश्रेष्ठो नारदः प्रत्युवाच ह ॥ ३६

नारदः—

तपसा तोषितः शम्भुस्त्वयातीव मुनीश्वर ।
आकाशनगराल्लिङ्गादाविर्भूय तवात्मजाम् ॥ ३७

परिणेष्यति वात्सल्यात् किन्ते निर्वेदकारणम् ।

कात्यायनः—

भगवन्मुनिशार्दूल तत्तथैव न संशयः ॥ ३८

तथापि कैलासगिरेर्देवर्षीणां गणैस्सह ।

विमानेनागत्य स मे कन्याञ्चेत्परिणेष्यति ॥ ३९

तदा प्रतिष्ठा महती कीर्तिश्च स्यान्ममाधुना ।

एवं मनोरथो मेऽद्य तन्निर्वर्तय नारद ॥ ४०

नारदः—

शनिप्रदोषस्तर्ह्यद्य सर्वे गच्छन्ति सेवितुम् ।

आनन्दताण्डवं शम्भोरधिकैलासमद्भुतम् ॥ ४१

ब्रह्मविष्ण्वादयो देवा वसिष्ठाद्या मुनीश्वराः ।

त्वञ्चागच्छ तवाकांक्षां पूरयिष्यामि माचिरम् ।

इत्युक्त्वा तेन सहसा निरगान्नारदो मुनिः ॥ ४२

इति षड्विंशोऽध्यायः

இதனையறிந்த நாரதர் அங்குவந்தார். நாரதரை முறைப்படி வரவேற்று உபசரித்த காத்யாயனர், மனத்திலுள்ள கவலையை அவரிடம் வெளிப்படுத்தினார். ''உம் தவத்தில் மகிழ்ந்த பரமேசுவரன் ஆகாச நகரத்து லிங்கத்திலிருந்தே வெளிப்பட்டு உம்மகளை அன்புடன் ஏற்பார். கவலை எதற்கு?'' என ஆறுதலளித்தார். நாரதரிடம் காத்தியாயனர் சிவபெருமான் தேவ ருஷி கணங்கள் சூழக் கைலாஸத்திலிருந்து விமானமேறி வந்து என் மகளை மணந்தால் தான் பெருமை எனத்தான் எதிர்பார்த்ததைச் சொன்னார். இன்று சனி பிரதோஷ நன்னாள். கைலையில் சிவபெருமான் ஆனந்த நடனம் புரிகிற நேரம். பிரும்மா விஷ்ணு மற்ற தேவர்கள் வஸிஷ்டர் முதலான முனிவர்கள் நடனத்தைக்காண அங்கு கூடுவர். நீரும் வருவீர். உம்

*விருப்பத்தை நிறைவுறச் செய்கிறேன் எனக்கூறி நாரதர் காத்யாயனருடன் வெளியேறினர். (35-42)*

—★—

## सप्तविंशोऽध्यायः

सूतः—

ततः कात्यायनो वीणामुनिना सह निर्गतः ।
कैलासाचलमासाद्य तास्ताः कक्ष्याः पुरोदिताः ॥ १

दौवारिकानुज्ञयैव विलङ्घ्याशु कथञ्चन ।
नटेशभवनं तुङ्गं विस्तृतं तावपश्यताम् ॥ २

त्रिदशैर्ब्रह्मविष्ण्वाद्यैर्योगिभिः सनकादिभिः ।
मुनिभिर्वालखिल्याद्यैर्नन्दिकेशादिभिर्गणैः ॥ ३

आगमैः शास्त्रनिचयैः पुराणैः कल्पसूत्रकैः ।
अन्यैरपि सभानाथताण्डवस्य दिदृक्षया ॥ ४

आगतैः परितः पूर्णं कोटिसूर्यप्रभोज्ज्वलम् ।
बाणासुरमहाबाहुसहस्रोच्चैः प्रणादितैः ॥ ४

डक्कामृदङ्गमुरवमुरजानककाहलैः ।
ब्रह्माण्डभित्तिदलनप्रवीणैरुपशोभितम् ॥ ६

सहस्रसङ्ख्यवक्त्रेण द्विसाहस्रभुजेन च ।
गणेन मखिनाम्ना चाध्मातैश्शङ्खसहस्रकैः ॥ ७

सहस्रयोजनोन्नम्रजङ्घषट्शतमड्डुकैः ।
भानुकम्पो नाम गणस्तत्कृतैः पटहारवैः ॥ ८

कम्पिनो मञ्जिलश्चोभौ वेणुमड्डुकधारिणौ ।
कुम्भोदरश्च शृङ्गाणि तन्नादैश्च विभास्वरम् ॥ ९

''அத்தியாயம்'' - 27

காத்யாயனர் நாரதருடன் கைலாஸம் சென்று பல கட்டுகளைத் தாண்டி வாசற் காப்போரின் அனுமதி பெற்று மிகப்பெரிய நடன அரங்கினுள் சென்றார். பிரும்மா விஷ்ணு முதலான தேவர்கள், ஸநகர் முதலான யோகிகள், வாலகில்யர் முதலான முனிவர்கள், நந்தி முதலிய சிவகணங்கள் வடிவேற்ற வேதம் ஆகமம் புராணம் கல்பஸூத்ரம் எனப் பலர் சிவநடனக் காட்சியைக் காண அங்கு கூடியிருந்தனர். பாணாஸுரன் தன் ஆயிரக்கணக்கான கைகளால் மிருதங்கம் முதலிய வாத்தியங்களின் ஒலியை எழுப்ப பிரும்மாண்டத்தின் சுற்றுச்சுவர் வெடிக்கும் நிலை ஏற்பட்டது. மகி என்ற கணத்தலைவன் ஆயிரம் வாய்களாலும் ஆயிரம் கைகளாலும்சங்கொலி எழுப்பினான். பானுகம்பன் என்ற கணத்தலைவன் உடுக்கு அடிக்க கும்போதரன் கொம்பு ஊதப்பேரொலி எழுந்தது. (1-9)

तत्र कात्यायनो वीणामुनिरप्युपसृत्य तत् ।
बहुकोटिप्रमाणस्य सभेशसदसः पुरः ॥ १०

लक्षषष्टिसमुन्नम्रद्वारं प्राप्य हि तत्र तु ।
पीठे रत्नमये षष्टिलक्षमाने नटेश्वरम् ॥ ११

पञ्चाशल्लक्षसङ्ख्याकयोजनाभ्युन्नतं शिवम् ।
विंशल्लक्षं पदाभ्यां तमंघ्रिभ्यां पञ्चलक्षकम् ॥ १२

चतुर्ल्लक्षप्रमाणेन कटिदेशेन राजितम् ।
देहविस्तारेण चतुर्दशलक्षेण शोभितम् ॥ १३

लक्षद्वयप्रमाणेन वृत्तकण्ठेन भास्वरम् ।
तत्सङ्ख्याकमुखं घ्राणौन्नत्येनायुतमानिना ॥ १४

सुन्दरं बाहुदैर्घ्येण विंशल्लक्षप्रमाणकम् ।
विंशत्सहस्रमानाढ्यकरपद्माङ्गुलीदलम् ॥ १५

तत्तुल्यसंख्याभ्रूनेत्रकर्णयुग्ममनोहरम् ।
एतदाकारानुरूपपरिमाणगणैर्युतम् ॥ १६

रोमान्तरालविलसद्ब्रह्माण्डायुतकोटिकम् ।
एवं भूतं नटेशानं दृष्ट्वा चानन्दताण्डवम् ॥ १७

अनुभूयानन्दसुधावारिधौ तौ ममज्जतुः ।
कात्यायनो नारदश्च तावानन्दभरालसौ ॥ १८

अत्रागमनकार्यञ्च विसंस्मरतुरञ्जसा ।
ततः सभेशस्सर्वेषां परमानन्दताण्डवम् ॥ १९

दर्शयित्वोपरम्याथ सौम्यामालम्ब्य चाकृतिम् ।
मणिपर्यङ्कमध्ये तु स्थित्वा सर्वान् सभासदः ॥ २०

காத்யாயனரும் நாரதரும் ரத்ன மண்டபத்தினுள் நுழைந்தனர். வரையற்ற உயரமும் பரப்பும் கொண்ட மண்டபத்தில் ரத்னமயமான மேடை. 50லக்ஷயோசனை உயரமுள்ள நடராஜர், தன் பேருருவத்தை ஆட்டிஆட அதனைக்கண்டு எல்லோரும் மகிழ்ந்தனர் காத்யாயனருக்கும் நாரதருக்கும் தாம் வந்தகாரியம் மறந்தது. நடனம் முடிந்ததும் நடராஜர் தன் உருவைச்சுருக்கி இயல்புக்கு வந்து ரத்தின கட்டிலின் மீது அமர்ந்தார். (10-20)

प्रेषयामास वाक्येन यथायोग्यं सभेश्वरः ।
गतेषु सर्वेष्वामन्त्र्य पश्चात्तौ मुनिपुङ्गवौ ॥ २१

कात्यायनो नारदश्च प्रापतुः सविधं प्रभोः ।
प्रणिपत्य तु साष्टाङ्गं प्राञ्जली तस्थतुः पुरः ॥ २२

भवतः परमानन्दताण्डवं विस्मयावहम् ।
आलोक्यावां कृतार्थौ स्व इति व्याहरतां वचः ॥ २३

तदाकर्ण्य स्मितं कृत्वा भगवान्परमेश्वरः ।
जानामि हृद्गतं कार्यं मास्तु विज्ञापनं मम ॥ २४

मदीयं खलु तत्कार्यं मन्मनस्तत्र वर्तते ।
चैत्रे मासि दशम्यान्तु सर्वैर्देवर्षिपुङ्गवैः ॥ २५

कन्यां त्वदीयामुद्बोढुमागमिष्यामि सम्भ्रमात् ।
नैवात्र संशयः कार्यो गम्यतामित्यचोदयत् ॥ २६

पश्चादत्यन्तसन्तुष्टौ तौ मुनी प्रणिपत्य तम् ।
सन्ध्यानटं समामन्त्र्य निर्जग्मतुरुभावपि ॥ २७

इति सप्तविंशोऽध्यायः

*நடனத்தைக் காணவந்தவருக்குத் தக்கபடி விடை கொடுத்தனுப்பினார். காத்யாயனரும் நாரதரும் அருகில் வந்து வணங்கிக் கைகூப்பித்தாம் ஆனந்த நடனத்தைக்கண்டு மகிழ்வுற்றதைத் தெரிவித்துக் கொண்டனர். அதனைக் கேட்ட பெருமான் புன்சிரிப்புடன் ''உம் விருப்பத்தை அறிந்தேன். இதை விண்ணப்பிக்க அவசியமில்லை. அது என்பணி. என் மனம் அதில் உள்ளது. சித்திரை மாதத்து தசமியன்று தேவரும் முனிவரும் கூடவர உன் மகளைப் பெருவிழாவில் மணப்பேன். ஐயம் வேண்டாம். செல்வீர்'' எனக் கூறி விடையளித்தார். ஈசனின் அனுமதி பெற்று இருவரும் திரும்பி வந்தனர். (21-27)*

—★—

अष्टाविंशोऽध्यायः ।

सूतः—
महाकैलासप्रधान शिखराद्वनतीर्य तौ ।
तद्बहिः शिवलोकांस्तांस्तत्तदावरणानि च ॥ १

पर्यन्तोद्यानवाटीश्च पश्यन्तौ गगनाध्वना ।
सत्यलोकेऽवतीर्याशु तपोलोके ततः परम् ॥ २

अवतीर्य ध्रुवपदे सप्तर्षीणां पदे ततः ।
मन्दजीवभृगुज्ञेन्दुभास्कराणां पदे क्रमात् ॥ ३

अवतीर्याथ दिक्पालपदे द्वीपान्विलङ्घ्य षट् ।
सप्तापि जलधीन् पश्चान्मेरोर्दक्षिणपार्श्वतः ॥ ४

आगत्य निषधं वर्षाचलमेत्य हिमाचलम् ।
ततो बहुविधान् देशानरण्यानन्तरान्तरम् ॥ ५

आलोकयन्तौ कावेर्या दक्षिणं देशमेत्य च ।
क्रमेणाकाशनगरं पुण्यक्षेत्रमवापतुः ॥ ६

ततस्स्वाश्रममासाद्य कन्यामङ्के निवेश्य च ।
मूर्धन्याघ्राय कल्याणवृत्तं सर्वमचीकथत् ॥ ७

''அத்தியாயம்'' - 28

*மஹாகைலாஸத்தின் பிரதான சிகரத்திலிருந்து இறங்கி பல பிராகாரங்கள் கொண்ட சிவலோகங்களையும் தோட்டங்களையும் தாண்டி பிரும்மாவின் இருப்பிடமான ஸத்யலோகம், தபோலோகம், துருவமண்டலம், ஸப்தரிஷி மண்டலம், சனி, குரு, சுக்ரன், புதன், சந்திரன், ஸூரியன் இவர்களின் மண்டலம். திக்பாலர்களின் லோகம்; பூமண்டலத்தின் ஆறு துவீபங்கள் ஏழு கடல்கள் என இவற்றைக் கடந்து மேருவின் தென்புறத்தில் நிஷதமலை, ஹிமாசலம் கடந்து, பலநாடுகள், காடுகள் தாண்டி காவேரியின் தென்கரையிலுள்ள ஆகாசநகரம் வந்து தன் ஆசிரமத்தில் காத்யாயனர் நுழைந்து மகளை உச்சி முகர்ந்து நடந்ததனைத்தையும் கூறினார். (1-7)*

कात्यायनस्ततो वीणामुनिं प्रति वचोऽब्रवीत् ।
चैत्रशुक्लदशम्यां हि कन्योद्वाहाय शङ्करः ॥ ८

आगमिष्यति सा चाद्य ह्यासन्ना तद्भवानिह ।
स्थित्वा कर्तव्यकार्याणि निर्वर्तय महामुने ॥ ९

करणीयं लौकिकं तु नाहं जानामि किञ्चन ।
त्वदायत्तमिदं सर्वं तथा कुरु कृपावशात् ॥ १०

इति कात्यायनेनोक्तो नारदः प्रत्युवाच ह ।
नारदः—
तथैवाहं साधयामि सर्वं मा व्याकुलो भव ॥ ११

इत्युक्त्वा विश्वकर्माणमाहूय भुवि नारदः ।
कात्यायनाश्रमं तेन स्वर्गतुल्यमकारयत् ॥ १२

नानाप्रतोलिकारम्यनानास्थलरथोज्ज्वलम् ।
मणितोरणमालाढ्यं चन्द्रशालाविराजितम् ॥ १३

अभ्रङ्कषमणीहर्म्यैः केलिशैलैरलङ्कृतम् ।
सहस्रादित्यसङ्काशं मणिदर्पणमञ्जुलैः ॥ १४
आस्थानमण्टपैस्तत्र तत्राधिकविभासुरम् ।
क्रीडासरोभिरुल्लोलकल्लोलोल्लोलपङ्कजैः ॥ १५

चन्द्रकान्तशिलाबद्धतीरसोपानपङ्क्तिभिः ।
आरामैश्चम्पकाशोकपुन्नागवकुलावृतैः ॥ १६

मालतीमल्लिकाजाजीकुटजैलालतान्वितैः ।
मकरन्दरसास्वादिमधुव्रतकुलाकुलैः ॥ १७

कलकोकिलसल्लापकाहलीरवमेदुरैः ।
नानाप्रसूनगन्धानिलामोदितदिगन्तरैः ॥ १८

नित्यं षड्तुसान्निध्यसमृद्धसुमनोहरैः ।
एवमादिभिरन्यैश्च नयनानन्दकारकम् ॥ १९

तत्र कल्याणवेदीश्च कारयामास सुन्दरम् ।
गारुत्मतमणीक्लृप्तकदलीकाण्डशोभिताः ॥ २०

कपोतपालीविलसत्कपोतकलनिस्वनाम् ।
मुक्ताविद्रुमस्तम्भां रत्नसोपानमण्डिताम् ॥ २१

मुक्तावितान सञ्छन्नां मणिदीपविराजिताम् ।
कल्पस्तबककल्हारमल्लीचम्पकदामभिः ॥ २२

भूषितां गन्धकर्पूरकुङ्कुमालिप्तभित्तिकाम् ।
कृत्वैव गृहनिर्माणं कैलासभवनोपमम् ॥ २३

நாரதரிடம் கூறினார். சித்திரை மாதத்துசுக்ல தசமியில் என்மகளை மணக்கச் சிவன் வரவிருக்கிறார். நீர் கூட இருந்து அனைத்து ஏற்பாடுகளையும் நடத்திக் கொடுப்பீர். நான் இதில் திறமையற்றவன். கிருபையுடன் இவற்றை நடத்திக் கொடுப்பீர் என. நாரதர் அதனை ஏற்று விச்வகர்மா என்ற வானுலகச்சிற்பியை அழைத்து காத்தியாயனரின் ஆசிரமத்தை ஸ்வர்கம் மாதிரி அமைக்கச் செய்தார். வீதிகள் எங்கும் ரத்தினத் தோரணங்களும் ரத்தின மாலைகளும் அலங்கரித்தன. ஆயிரம் ஸௌரியர்களின் ஒளி கொண்ட ரத்ன கல்யாணமண்டபம், தாமரைகள் மலர்ந்த நீச்சல் குளங்கள், சந்திர காந்தக் கற்களாலான படிகள் கொண்டவை. சண்பகமும் அசோகமும் - புன்னையும் வகிழும் பூத்துக் குலுங்கும் தோட்டங்கள். மல்லி ஜாதி வெட்பாலை, ஏலம் முதலிய நறுமணமிக்க விடுதிகள், தேனைநாடி அலைகிற வண்டுகளின் இனிய ஒலி, குயில் கூவல், வஸந்தம் முதலிய ஆறு பருவங்களின் அழகு ஒருங்கே விளங்கும்படி சூழலை

*அமைத்து நடுவே மிக அழகிய விவாஹ மேடை, பச்சைரத்னங்கள் பதித்த வாழைமரங்கள், புருக்கள் தங்கும்படி முன்ஞேடி. பவழத்தூண்கள், ரத்தினப்படிகள், முத்துமேல் விரிப்பு, ரத்ன தீபங்கள், கற்பகப் பூக்கள், செங்கழுநீர்ப்பூ, மல்லி, சம்பகப்பூ இவற்றின் மாலைகள் சந்தனமும் கற்பூரமும், குங்குமப்பூவும் அரைத்துப் பூசிய சுற்றுச்சுவர்கள். மற்ருெரு கைலாஸமே உருவெடுத்து நின்றது. (8-23)*

आहूय कामधेनुञ्च नारदो वाक्यमब्रवीत् ।
कात्यायन्या विवाहाय समागच्छति शङ्करः ॥ २४

त्वदायत्तो हि सामग्रीनिर्वाहस्तद्विचिन्त्यताम् ।
कामधेनुः—
सम्पादयाम्यन्नराशीन् रजताचलसन्निभान् ॥ २५

तप्तकार्तस्वराभांश्च सूपराशीननेकधा ।
सृजामि शर्कराकूटान् सुवर्णाचलसप्रभान् ॥ २६

पनसाम्रकदल्यादिफलराशीन्विभावये ।
घृताब्धीनिक्षुसाराब्धीन् क्षीराब्धीन्दधिसागरान् ॥ २७

सद्यस्सम्पादयिष्यामि परानपि यथेप्सितान् ।
कामधेनोर्वचश्शुत्वा परमानन्दनिर्भरः ॥

तत्तत्कार्ये तथाऽन्यांश्च नियोज्य मुदितोऽभवत् ॥ २८

उपनतसम्भारौ तौ नारदकात्यायनौ प्रहृष्टधियौ ।
परमेशितुरागमनं प्रतिपाल्य तिष्ठतां मुनिश्रेष्ठौ ॥ २९

इति अष्टाविंशोऽध्यायः

*நாரதர் காமதேனுவை அழைத்து, ''காத்யாயனியை மணக்க சிவபெருமான் வருகிருர். விவாஹம் சிறப்பாக*

*நிறைவுறுவது உன் பொறுப்பில் உள்ளது. அதனைச் சிறப்பாக நடத்த திட்டமிடுவாய் எனப்பணித்தார். வெள்ளிமலை (கைலாஸம்) போன்ற அரிசி, சொக்கத்தங்கம் போன்ற பருப்பு, சர்க்கரை குன்றுகள், பலா, மா, வாழை முதலியவற்றின் பழக்குவியல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், பாற்கடல், தயிர்க்கடல் என அனைத்தையும் விரும்புமளவிற்குச் சேமித்துத் தருவதற்குக் காமதேனு இசைந்தாள். மற்ற ஏற்பாடுகளையும் முறைப்படி சீரமைத்த காத்யாயனரும் நாரதரும் சிவனது வருகையை எதிர்பார்த்து நின்றனர். (24-29)*



## एकोनत्रिंशोऽध्यायः

कात्यायनीविवाहाय भूलोकं गच्छतीश्वरः ।
सर्वैरागन्तव्यमिति पटहः समताड्यत ॥ १

प्रयाणपटहध्वानं कैलासान्निर्गतं बहिः ।
श्रुत्वा सर्वे समाजग्मुरुत्सवालोककांक्षिणः ॥ २

ब्रह्मा विष्णुश्च दिक्पालाः पुष्पवन्तौ च भ्रातरः ।
गन्धर्वाः किन्नरा यक्षाः सिद्धविद्याधरास्तथा ॥ ३

पिशाचा गुह्यका भूताः सप्ताम्भोनिधयोऽद्रयः ।
नद्यस्सरांसि तीर्थानि वेदशास्त्रागमास्तथा ॥ ४

तथोपनिषदस्सर्वा दिशो दिक्करिणस्तथा ।
कलाश्च निधयो मन्त्रा लोकालोका नव ग्रहाः ॥ ५

वेतालग्रहसाध्याश्च मार्कण्डेयादितापसाः ।
सर्वे प्रपञ्चा आयाताः शङ्करोत्सवकांक्षिणः ॥ ६

सर्वेषामागमं श्रुत्वा चन्द्ररेखाशिखामणिः ।
कन्दर्पकोटिसौन्दर्यवशीकृतवधूजनः ॥ ७

शरीरकान्तितेजिष्ठसर्वरत्नविभूषणः ।
वयसा मन्मथाज्ञाया वशगेन विभासुरः ॥ ८

कोटिसूर्यप्रतीकाशो विमानाभ्यन्तरे पुनः ।
कैलासधवलं तुङ्गं घण्टामणिविभूषितम् ॥ ९

पार्श्वद्वयलसद्गौरीचामरालिविशोभितम् ।
वृषपुङ्गवमारूढः प्रतस्थे सर्वशक्तिभिः ॥ १०

*''அத்தியாயம்'' - 29*

*''காத்யாயனியை மணம்புரியப் பெருமான் பூலோகம் செல்கிறார். அனைவரும் உடன் வருவீர் எனத்தமுக்கு அடிக்கப்பட, எல்லோரும் அவ்விழாவைக்காணக் கைலாஸத்தில் கூடினர். பிரும்மா, விஷ்ணு, திக்பாலர், ஸூரிய - சந்திரர், யக்ஷர், ஸித்தர், வித்யாதரர், பிசாசர், குஹ்யகர் பூதங்கள் என்ற தேவகணங்கள், ஏழு கடல்கள், குலபர்வதங்கள், நதிகள், ஓடைகள், தீர்த்தங்கள், வேதங்கள், சாஸ்திரங்கள், ஆகமங்கள், உபநிஷத்துகள், திக்கஜங்கள், கலைகள், நதிகள், மந்திரங்கள், லோகாலோகமலை ஒன்பது கிரகங்கள், வேதாளர், ஸாத்யர், மார்க்கண்டேயர் முதலிய முனிவர்கள் என உலகங்கள் அனைத்துமே அங்கு கூடியது. சந்திரசேகரரும் கோடிமன்மதர்களின் அழகுடன் ரத்தின ஆபரணங்கள் அணிந்து மன்மதனின் ஆணைக்கு ஆட்படுகிற வயதினராக விமானத்தின் நடுவே கைலாஸம் போன்ற வெள்ளை ருஷபத்தின் மீதமர்ந்து சக்திகள் புடைசூழக்கிளம்பினார். (1-10)*

तदा जगृहतुः श्वेते चामरे वरुणारुणौ ।
पवनेन्दू तालवृन्तद्वयमग्निः प्रदीपिकाम् ॥ ११

छत्राणि वसवः कालनैरृताद्याः पताकिकाः ।
निधयो नव माणिक्यभूषापेटिकधारिणः ॥ १२

ब्रह्मा विष्णुश्च पुरतो जग्मतुस्सामगायकौ ।
षट्कोटयः शक्तयस्तु स्वैः स्वैर्दिव्यैश्च वाहनैः ॥ १३

शङ्करं परितो जग्मुस्सर्वकामसमृद्धिदम् ।
गणानां कोटयो जघ्नुः भेरीपटहदुन्दुभीन् ॥ १४

मृदङ्गढक्कापणवमड्डुडिण्डिममद्दलान् ।
दध्मुः काहलिकाशङ्खान् विषाणादीन् परे गणाः ॥ १५

सिद्धकिन्नरगन्धर्वा वादयन्ति स्म वल्लकीः ।
केचिद्देवास्तु विजयी भवेति जगदुर्मुहुः ॥ १६

अस्तुवन् केचन स्तोत्रैर्वेदवाक्यैस्तथा परे ।
काश्चिदप्सरसोऽगायन्ननृत्यन् काश्चनापराः ॥ १७

एवं तद्घोषतः पूर्णं जगदण्डमभूत्तदा ।
ध्येयं हृदम्बुजे यस्तु साक्षाद्दीक्ष्याद्ययोगिनः ॥ १८

आनन्दबाष्पविसरैरभिषिञ्चन्निजं वपुः ।
नन्दीश्वरप्रभृतिभिर्गणेशैर्वेत्रपाणिभिः ॥ १९

पुरः प्रसृज्य विरलीकुर्वद्भिस्सङ्घमुत्कटम् ।
आनन्दमतुलं बिभ्रदशेषभुवनेश्वरः ॥ २०

पश्यंस्तत्तत्र देशानां वैचित्र्यं विस्मयावहम् ।
कावेर्या दक्षिणन्देशमेत्य कात्यायनाश्रमम् ॥ २१

द्वितीयमिव कैलासं भासमानं महौजसा ।
आलोक्य तत्र शनकैरवरोढुं मनो दधे ॥ २२

வருணனும் அருணனும் சாமரம் வீச, வாயுவும் சந்திரனும் விசிறியால் விசிற, அக்கினி விளக்கேற்றி (தீவட்டி ஏந்தி) நிற்க, வஸுக்கள் குடைபிடிக்க, யமன் நிர்ருதி முதலானோர் கொடிபிடிக்க, ஒன்பது நதிகள் ஆபரணப்பெட்டி சுமக்க, பிரும்மாவும் விஷ்ணுவும் முன் நின்று ஸாமகானம் செய்ய, ஆறு

கோடிசக்திகளும் தம் தம் வாகனங்களில் பின் தொடர, சிவகணங்கள் பேரி, தம்பட்டம் தமுக்கு, மிருதங்கம், உடுக்கை மட்டுகம் டிண்டிமம், மத்தளம் வாசிக்க, கொம்பு சங்கு முதலியவற்றை ஊத, ஸித்தர், கின்னரர், கந்தர்வர் கூடி வீணை வாசிக்க தேவர்கள் ஜய விஜயீபவ எனக் கோஷமிட வேதங்களும் துதிகளும் ஓங்கி ஒலிக்க அப்ஸரஸுகள் நடனமாட பிரும்மாண்டமே அந்நாதத்தில் எதிரொலிக்க, யோகிகள் தமது உள்ளங்களில் கண்டானந்தித்த மேனியை கண்ணெதிரே கண்டு கண்ணீர்மல்கக் காணப்பட்டு, சாட்டை ஏந்திய நந்தி முதலியவர்களால் வழிகாட்டப் பெற்றுப் பல தேசங்களைக் கடந்து காவேரியின் தென்கரையில் மற்றொரு கைலாஸமாகத் துலங்குகிற காத்யாயனரின் ஆசிரமத்தை நோக்கிப் பகவான் இறங்கினார். *(11-22)*

कात्यायनस्तत्क्षणेन नारदाद्यैस्सुरर्षिभिः ।
वसिष्ठाद्यैर्मुनीन्द्रैश्च शिवमभ्युद्गतोऽभवत् ॥ २३

शिवस्तदञ्जलिं स्पृष्ट्वा करेण बहु मानयन् ।
तदादिष्टेन मार्गेण तेजिनीपुरमभ्यगात् ॥ २४

चक्रायुधप्रदानाय निर्दिष्टं विष्णवे पुरा ।

उन्नम्रतोरणमुदारवितानचीन
वस्त्रावलम्बिनवमौक्तिकपुष्पमालम् ।
उद्यन्मणीमुकुरभास्वर राजवीथी
भूस्यन्दनावलि ददर्श पुरं तदीशः ॥ २५

वीथीपार्श्वयुगाधिहर्म्यविलसत्सीमन्तनीसन्तति
प्रोत्कीर्णामललाजपुष्पनिचयैरापूर्यमाणान्तराम् ।
पश्यंस्तां नगरीं सुवर्णकदलीं कात्यायनस्याश्रम-
द्वारं प्राप्य वृषादवातरदयं कैलासशैलोपमात् ॥ २६

इति एकोनत्रिंशोध्यायः

காத்யாயனரும் நாரதரும் முனிவர்களுடனும் தேவர்களுடனும் பெருமானைக் கைகூப்பி வரவேற்றனர். பெருமான் அவர்களது அஞ்ஜலியை ஏற்று அவர்களது வழிகாட்டலில் தேஜினீபுரத்தினுள் நுழைந்தார். விஷ்ணுவிற்குச் சக்ராயுதமளிக்க முன்னர் வருகை தந்த இடம் அது. தோரணங்கள் விதானங்கள் சீனப்பட்டால் மேல் விரிப்பு முத்தாரங்களாலான தொங்கட்டான், ரத்னக்கண்ணாடிகள் ஒளியை இருபுறங்களிலும் பிரதிபலிக்க ஒளி மிக்க ராஜவீதி, பலதரப்பட்ட தேர்வரிசை, இத்துடன் காட்சிதருகிற நகரை ஈசன் கண்டார். வீதியின் இருபுறங்களிலும் அமைந்த மாளிகை உப்பரிகைகளிலிருந்து ஸுமங்கலிப் பெண்கள் பூமாரி பொழிய இருபுறமும் வாழைமரத்தோரணங்களால் அழகிய காத்யாயனரின் ஆசிரம வாயிலை அடைந்து கைலாஸம் போன்ற விருஷபத்திலிருந்து இறங்கினார். (23-26)

—★—

## त्रिंशोऽध्यायः

सूतः—

अवरूढे वृषाधीशे हरिपद्मभुवौ पुरः ।
हस्तावलम्बं ददतुः पार्श्वयोरुभयोरपि ॥ १

निवेशयामास पुरो भृङ्गी च मणिपादुके ।
तयोः पादौ निवेश्याऽसौ भगवान् फाललोचनः ॥ २

निवेद्यमाना मुनिभिस्तास्ताः कक्ष्या विलोकयन् ।
चतुर्मणीभङ्गजुषि चारुमुक्तावितानके ॥ ३

कल्याणवेदिकामध्ये कल्पवृक्षोपशोभिते ।
रत्नपीठे निषण्णोऽभूद्द्विभुजो वरवेषधृक् ॥ ४

कन्दर्पकोटिलावण्यः शरच्चन्द्रकलाधरः ।
प्रत्युप्तरत्नकेयूरः प्रवालरुचिराधरः ॥ ५

राकाशशाङ्कवदनो राजीवायतलोचनः ।
कुरुविन्दमणिप्रोतकुण्डलेन विराजितः ॥ ६

उत्तुङ्गनासिकोदारः कम्बुग्रीवातिशोभनः ।
रुद्राक्षहारपतकरुचिरोरस्तटान्वितः ॥ ७

पीताम्बरधरः स्रग्वी स्मेराननसरोरुहः ।

*''அத்தியாயம்'' - 30*

*விருஷபத்திலிருந்து இறங்குகிற பெருமானுக்கு இருபுறமும் விஷ்ணுவும் பிரும்மாவும் கைலாக்கு கொடுத்தனர். பிருங்கி ரத்ன பாதுகையை முன் வைக்க பெருமான் அதனை ஏற்று முனிவர்கள் காட்டுகிற பலகட்டுகளைப் பார்த்துக் கொண்டே ரத்ன ஒளிமிக்கதும் முத்துப்பந்தல் கொண்டதும் கற்பகமரங்களால் அலங்கரிக்கப் பெற்றதுமான விவாஹ மேடைக்கு வந்து மாப்பிள்ளை வேஷமேற்று இருகைகளுடன் ரத்ன பீடத்தின் மீது அமர்ந்தார். கோடிமன்மதர்களின் அழகு ஒருங்கே கூட சரத்காலத்து சந்திரனைச் சூடி, ரத்னம் பதித்த தோள்வளை, பவழச்சிகப்பு கொண்ட உதட்டழகு, பௌர்ணமி சந்திரன் போன்ற இனிய முகம், தாமரை இதழ் போன்ற நீண்ட பரந்த கண்கள் மாணிக்கக்கல் பதித்த குண்டலம், உயர்ந்தழகிய மூக்கு, சங்கு போன்று கழுத்து, ருத்ராக்ஷஹாரமும் பதக்கமும் கொண்ட மார்பு, பீதாம்பர ஆடை, கழுத்து நிறைய பூமாலை, புன்னகை என மாப்பிள்ளையின் தோற்றம் உள்ளத்தைக் கவர்ந்தது. (1-7)*

कात्यायनी ततस्सा च शिञ्जन्मञ्जीर निस्वना ॥ ८

माणिक्यपादकटकमरालीमृदुचङ्क्रमा ।
मुक्तासुवर्णरेखाच्छदश्चलाम्बरशोभिता ॥ ९

नासिकाचम्पकाघ्रायिकस्तूरितिलकालिका ।
कर्णातिलङ्घनेत्राभागर्हितेन्दीवरप्रभा ॥ १०

कौमारवाहनटनकर्मणायितकेशिका ।
सखीभिरावृता सा च कात्यायनकुमारिका ॥ ११

तस्थौ मन्दं समागत्य तस्य पार्श्वे महेशितुः ।
दम्पत्योरनयोर्योगो रत्नकाञ्चनयोरिव ॥ १२

अनुरूप इति प्राहुरन्तिकस्थो वधूजनः ।
सा सलज्जं तमैक्षिष्ट किञ्चित्स च मुनेस्सुताम् ॥ १३

अभूदन्योन्यमुभयोर्लज्जामिश्रितमीक्षणम् ।

*காத்யாயனியும் கொஞ்சும் சதங்கை கொண்ட காலணிகள், மாணிக்கக் கல்பதித்த கால்காப்பு, பெண்அன்னம் போன்ற மென்நடை, முத்தும் தங்கநூலும் (ஜரிகையும்) கொண்ட இடுப்பாடையும் மேலாடையும், சம்பகப்பூ போன்ற நாசிமீது நெற்றியில் கஸ்தூரியாலான திலகம், காதுகள் வரை நீண்டகண்கள், மயிலின் நடனம் போன்றுடுகிற கூந்தல் பின்னலழகு, இவ்வாறு தோழிகள் சூழ, மென்னடையாக மெள்ள வந்து பெருமானின் அருகே நின்றாள். ரத்தினமும் தங்கமும் போல் இருவரும் ஒருவருக்கொருவர் பொருத்தமானவர் என அருகிலுள்ள பெண்மணிகள் பாராட்டினர். வெட்கத்துடன் இவள் அவரைப்பார்க்க அவரும் புன்முறுவலுடன் இவளைப்பார்க்க நாணம் கலந்த பார்வை இருவரிடமும் மீண்டும் மீண்டும் கலந்தது. (8-13)*

देवा देवर्षयस्सर्वे मुनयश्च यथाक्रमम् ॥ १४

रत्नासनान्यारुरुहू रमणीयानि तत्र हि ।
नारदाद्या मुनिश्रेष्ठाः सदस्यान्महतोऽखिलान् ॥ १५

स्रक्चन्दनैश्च ताम्बूलैर्यथायोग्यमपूजयन् ।
लग्ने शुभे तत्र विधिः पुरस्तादङ्कुरार्पणम् ॥ १६

कृत्वा चाग्निं प्रतिष्ठाप्य विध्युक्तेनैव वर्त्मना ।
उद्वाहहोममीशेन कारयामास हृष्टधीः ॥ १७

*தேவர்களும் முனிவர்களும் அழகிய ரத்ன ஆஸனங்களில் அமர்ந்து இக்காட்சியைக் கண்டனர். நாரதர் முதலான முனிவர்கள் வந்திருந்த ஸபையோர் அனைவரையும் பூவும் சந்தனமுமளித்து உபசரித்தனர். சுபலக்னத்தில் பிரும்மா அங்குரார்பணம் செய்து அக்னியை மூட்டி முறைப்படி விவாஹத்திற்கான மந்திரங்களால் சிவபெருமானை ஹோமம் செய்யச்செய்தார். (14-17)*

सुमङ्गलाहस्तगृहीतनानारत्नावभास्वत्कनकाम्बुधाराम् ।
कात्यायनो गृह्य निजां तनूजां समर्पयामास महेश्वराय ॥ १८

कन्यां दत्वा महेशाय कात्यायनमुनीश्वरः ।
कृतकृत्यमथात्मानं मन्यते स्म स्त्रिया सह ॥ १९

मुनीनां मुनिपत्नीनां सर्वासामप्यनुग्रहात् ।
बबन्धारुन्धती कण्ठे तस्या माङ्गल्यसूत्रकम् ॥ २०

पश्चात्पाणिग्रहादीशः त्रिः परिक्रम्य पावकम् ।
लाजहोमं ततश्चक्रे पत्न्याः पाण्यम्बुजेन सः ॥ २१

अश्मन्यास्थापयामास पादं पल्लवकोमलम् ।
कात्यायन्या महेशानः करेणाम्बुजबन्धुना ॥

पादानि सप्तोत्क्रामय्य दर्शयित्वा ध्रुवं ततः ॥ २२

समाप्य वैवाहिककर्म निर्मलं मुनीश्वराणां मुदितस्तथाशिषा ।
बुभुक्षितान् भोजयितुन्तदाऽखिलान् कटाक्षतश्चोदयति स्म
शङ्करः ॥ २३

इति त्रिंशोऽध्यायः

ஸுமங்களா ரத்ன பாத்திரத்திலிருந்த நீரைவார்க்க காத்யாயனர் தம் மகளை மஹேசுவரருக்குத் தானம் செய்தார். இந்த கன்யா தானத்தால் உள்ளத்தில் பெரும் நிறைவை அவரும் அவரது மனைவியும் பெற்றனர். முனிவர்களின் பத்னிகளும் அருளாசி வழங்க அருந்ததி பெண்ணின் கழுத்தில் மங்கள ஸூத்திரத்தை முடிச்சு போட்டாள். கன்னிகையின் கையைப் பிடித்து அக்னியை மூன்று தடவை வலம் வந்து பெண்ணின் கையால் பொரியை அக்னியிடம் அளித்து தாமரை போன்ற திருக்கரத்தால் பெண்ணின் காலை அம்மி மீது அமர்த்தி அவளுடன் ஏழடி கூட நடந்து துருவனைக் காட்டி விவாஹச் சடங்குகளை இனிது நிறைவுறச் செய்து முனிவர்களின் வாழ்த்துக்களைப் பெற்று விவாஹத்தைக் காண வந்தவர்களுக்கு விருந்தளிக்க கடைக்கண் பார்வையால் பெருமான் தூண்டினார். (18-23)

—★—

## एकत्रिंशोऽध्यायः

सूतः—

देवानामथ दैत्यानां मुनीनां भावितात्मनाम् ।
गणानां बहुरूपाणामन्येषाञ्च यथोचितम् ॥ १

एकैकस्यैकैकघटे तैलं चम्पकवासितम् ।
स्नानीयमुष्णमुदकं कटाहे हेमनिर्मिते ॥ २

अनर्घाणि च वासांसि भूषणं कुण्डलादिकम् ।
कर्पूरचूर्णसहिता नागवल्लीदलावलिः ॥ ३

क्रमुकाणान्तथा राशिः प्रत्येकं परिकल्पितः ।
यथेष्टं तत्र सर्वेऽपि यद्यदिष्टतमं हि तत् ॥ ४

आकण्ठं परिभुज्याथ परां तृप्तिमुपागमन् ।
सर्वे च दिव्यवस्त्रेण परिवीताः सुगन्धिभिः ॥ ५

आलिप्ताङ्गाश्चन्दनैश्च ताम्बूलास्वादमोदिताः ।
आरुह्याभरणच्छन्नमतिमात्रं वृषोत्तमम् ॥ ६

पुरप्रदक्षिणकृते प्रस्थितं सुन्दराकृतिम् ।
उद्वाहोचितनैपथ्यवेषालङ्करणोज्ज्वलम् ॥ ७

पश्चात्कात्यायनीदेव्या परिष्वक्तकलेबरम् ।
किरीटहारपतककेयूरादिविभूषणम् ॥ ८

वितानचामरच्छत्रध्वजादिपरिशोभितम् ।
प्रदीपमालिकादीप्तिप्रकाशितदिगन्तरम् ॥ ९

एवंभूतमुमाकान्तं पर्यवृण्वन् सुरादयः ।
अस्तुवन् केचिदपरे स्वस्तिवाचनमाचरन् ॥ १०

आनन्दबाष्पमितरेऽमुञ्चन्दृष्ट्वा परात्परम् ।
सुमङ्गलाद्याः पत्न्यस्तु मुनीनां सप्तमातरः॥ ११

अनन्तशक्तिरन्याश्चापूजयन्नुपचारतः ।
अग्रेऽनृत्यन्नप्सरसो गन्धर्वा गानपाटवम् ॥ १२

दर्शयामासुरखिला दम्पत्योराद्ययोः पुरः ।
द्वारेषु ऋषिपत्न्यश्च विराजद्दीपिनोऽर्चिषा ॥ १३

आरार्तिकविधिं कृत्वाऽपूजयन् लाजवृष्टिभिः ।
पार्श्वद्वितयसौधाग्रवातायन समाश्रिताः ॥ १४

लाजपुष्पाक्षतादीनि विकीर्यैवं बभाषिरे ।

*''அத்தியாயம்'' - 31*

*திருமணத்தை காண விருந்தினராக வந்த தேவர் முனிவர் அஸுரர் சிவகணங்கள் என ஒவ்வொருவருக்கும் சம்பகப்பூ*

மணம் கொண்ட எண்ணெய் ஒருகுடம், நீராடத்தங்கக் குடங்களில் வென்னீர், விலைமதிக்க இயலாத ஆடைகள், குண்டலம் முதலிய புது நகைகள், கர்பூரமும் சுண்ணும்பும் பாக்கும் கூடிய வெற்றிலைக்கட்டு இவ்வாறு விரும்பத்தக்க ஸாதனங்களை அளித்து கழுத்து வரை இனிய உணவு, உண்டதும் சந்தனப் பூச்சு தாம்பூலம் அளித்து உபசரித்தனர். பகவானின் வாஹனமான விருஷபம் ஆபரணங்களால் அலங்கரிக்கப் பெற்றது. அதன் மீதேறி சிவன் மற்றவர் தன்னை வலம் வரும்படி முன் நின்றார். திருமணத்திற்காக தனித்துச் சிறப்பாக அலங்கரிக்கப் பெற்றிருந்தார். காத்யாயனி அவரை உளமாரக்கட்டியணைத்தாள். கிரீடம் ஹாரம் பதக்கம் கேயூரம் முதலியவற்றை அணிந்திருந்தார். சாமரம் விசிறி குடை கொடி முதலிய உபசாரங்களை ஏற்றார். சுற்றிலும் தீபவரிசைகள் ஒளி கூட்டின. சிவபெருமானைத் தேவர்கள் சூழ்ந்து நின்றனர். ஸ்வஸ்திவாசனம் கூறித்துதித்தனர். மேலானவருக்கும் மேலான அந்தப் பெருமானைக் கண்டு ஆனந்தக்கண்ணீர் விட்டனர். ஸுமங்களாவும் மற்ற ருஷிபத்னிகளும் பிராம்மீ முதலிய மாதாக்களும் தம்பதிக்கு உபசாரம் செய்தனர். அப்ஸரஸ்கள் நடனமாடினர். கந்தர்வர்கள் பாடினர். ஊர்வலமாகத் வந்த தம்பதிக்கு ஒவ்வொரு வீட்டிலும் தீபத்துடன் ஹாரத்தி எடுத்து பொரி தூவி வாழ்த்தினர். இருமருங்கிலும் இருந்த வீடுகளில் மேல்மாடியில் நின்று அக்ஷதை பொரி - பூமாரி பொழிந்தனர். *(1-14)*

अहो सुमङ्गलाकात्यायनयोर्भाग्यगौरवम् ॥ १५

यदेतयोः कन्यकायाः पाणिं जग्राह शङ्करः ।
रूपेणान्योन्यसदृशा वयसा यौवनेन च ॥ १६

अनयोरिह दम्पत्योरानुरूप्यं तदद्भुतम् ।
किञ्चित्पत्रं जलं वापि ददत्कैवल्यमृच्छति ॥ १७

साक्षात्कन्यां महेशस्य पाणावर्पयतोरिह ॥
किं वा सुमङ्गलाकात्यायनयोस्तु फलं भवेत् ॥ १८

अहो सौन्दर्यमस्यास्तु कात्यायन्या महत्तरम् ।
कामान्तकोऽपि येनेमां कन्यां वक्रे वशीकृतः ॥ १९

इत्यादिमुनिपत्नीनां वाक्यं शृण्वन्महेश्वरः ।
मूर्ध्ना गृह्णन्नाशिषश्च लाजवृष्टीश्शनैरगात् ॥ २०

*''ஸுமங்கலையும் காத்யாயனரும் மிகப்பெரும் பாக்யசாலிகள். சிவன் இவர்களது பெண்ணை ஏற்றாரே! இதைவிடப்பாக்கியம் ஏது? இருவரும் தோற்றத்தாலும் அழகாலும் வயதாலும் யௌவனத்தாலும் ஒருவருக்கொருவர் ஏற்றவரே! இலையோ பூவோ நீரோ கொடுத்தாலே முக்தி பெறலாம் எனும் நிலையில் மகேசனின் கையில் நேரே பெண்ணைத் தானம் செய்த ஸுமங்கலைக்கும் காத்யாயனருக்கும் கிட்ட என்ன மீதமுள்ளது? காத்யாயனியின் அழகே அழகு .காமனை வென்றவரே இவள் வசமாகி இவளை மணந்துள்ளாரே!'' என்று முனிவர்களின் பத்னிகளின் வாழ்த்தொலி கேட்டும் அவர்களிட்ட பூச்சொரியலையும் மனதார ஏற்று மகிழ்ந்தும் மெள்ள மெள்ள ஊர்வலம் வந்தார். (15-20)*

एवं प्रदक्षिणीकृत्य नगरं नवयवौनः ।
कात्यायन्या सहेशानः कृतकल्याणनाटकः ॥ २१

तेजिनीशालयं प्राप्य नत्वा लिङ्गं स्वयम्भुवम् ।
लिङ्गस्य पुरतः किञ्चिदैशान्याञ्च दिशि स्थितः ॥ २२

दक्षिणाभिमुखः कात्यायन्या वृषभपुङ्गवात् ।
अवातरद्दिव्यतेजाः पाणिग्रहणवेषधृत् ॥ २३

तदा पुरस्तात्पदयोरन्तरे विष्णुलोचनम् ।
पश्चात्कपित्थफलमप्यदृश्यत निवेदितम् ॥ २४

कल्याणार्थं समायातान् सर्वांस्तत्रैव शङ्करः ।
सम्भाव्य बहुधा भूयः कात्यायनमृषीश्वरम् ॥ २५

नारदं पुनरन्यांश्च ब्रह्मादींश्च दिवौकसः ।
आलोक्याभीप्सितं यूयं वरं वृणुत साम्प्रतम् ॥ २६

நகரவலம் வந்த சிவன் புதுவாலிபமிடுக்குடன் விவாஹம் என்ற நாடகத்தை நன்கு அரங்கேற்றினார். தேஜினீசரின் ஆலயம் வந்தார். லிங்கத்தை வழிபட்டார். லிங்கத்தின் முன் சற்று வடகிழக்கில் தெற்கு நோக்கி காத்யாயனியுடன் விருஷபத்திலிருந்து இறங்கி காத்யாயனியைக் கைபிடித்த கோலத்தில் நின்றார். அவரது திருவடி முன் விஷ்ணுவின் கண்மலரும் வேடனளித்த விளாம்பழமும் காட்சியளித்தன. விவாஹத்திற்காகக் கூடிய அனைவரையும் பாராட்டி உபசரித்தார். காத்யாயனரையும் நாரதரையும் பிரும்மா முதலிய தேவர்களையும் விரும்பியதை வேண்டக்கோரினார். (21-26)

इत्यब्रवीत्तदा सर्वैरनुज्ञातः पितामहः ।
प्रणम्य परया भक्त्या कृताञ्जलिपुटोऽब्रवीत् ॥ २७

कन्दर्पकोटिलावण्यः करुणापूर्णविग्रहः ।
सुवर्णरुचिराकारः स्वर्गावितरणाह्वयः ॥ २८

कात्यायनीं करे गृह्णन् कामितार्थप्रदायिनीम् ।
अरालकुन्तलेत्याख्यान्तरेणापि विराजिताम् ॥ २९

एवं भवानत्र नित्यं सन्निधानं करोत्विति ।
एतत्सुमङ्गलाकात्यायनौ तु श्वशुरौ तव ॥ ३०

नारदाद्यास्तथाऽन्ये च मुनयः सर्वदेवताः ।
प्रार्थयन्तो वरमिदं दीयताम्नान्यदस्ति नः ॥ ३१

பிரும்மா முன் வந்து கைகூப்பி பக்தியுடன் வணங்கி வேண்டினார் - "ஈசன் இதே திருமணக் கோலத்தில் கோடி மன்மத அழகராக கருணை வடிவினராக தங்கவண்ணராக "ஸ்வர்காவதரணர்" என்ற திருநாமத்துடன் காத்தியாயனியைக்

*கையில் பிடித்தவராகக் காட்சி தரவேண்டும். காத்யாயனி இனி "அராளகுந்தளாம்பிகா" என்ற பெயரும் ஏற்பாள். இக்கோலத்தில் என்றும் தரிசனம் தரவேண்டும். இவ்வாறு ஸுமங்களா காத்யாயனர் நாரதர் முதலான இங்கு கூடியுள்ள முனிவரும் தேவரும் கோருகின்றனர். வேறு கோரிக்கை ஏதுமில்லை" என்றார். (27-31)*

इत्याकर्ण्य वचो धातुस्तथैवाकांक्षितं हि वः ।
पूरयामि स्थलमिदं कैलासादतिरिच्यते ॥ ३२

तस्माद्दक्षिणकैलास इति ख्यातिश्च यास्यति ।
कल्याणनगराख्यश्च मम कल्याणवेषतः ॥ ३३

अरालकुन्तलापाणिं गृह्णन्नत्रैव सर्वदा ।
सन्निधास्ये प्रणमतां सर्वाभीष्टानि योजयन् ॥ ३४

जन्मकोटिषु मद्रूपं सकृद्वा यो निषेवते ।
न दारिद्र्यं तस्य भवेत् भोगानिन्द्रातिशायिनः ॥ ३५

प्रदास्यामि शरीरान्ते मुक्तिं दास्यामि चोत्तमाम् ।

सन्निधौ मामके ये तु दीपमारोपयन्ति च ॥ ३६
इयदेव फलन्तेषामिति वक्तुन्न शक्नुयाम् ।
इत्युक्त्वा प्रेषयामास प्रेषणीयान्यथोचितम् ॥

सर्वसंरक्षणार्थाय सर्वदेवर्षिपूजितः ॥ ३७
कात्यायनेन प्रतिपादितां तां कात्यायनीं गृह्य करारविन्दे ।
अद्यापि सान्निध्यमसौ करोति सन्दृश्य तं पूर्णकामा भवन्ति ॥ ३८

इति एकत्रिंशोऽध्यायः

*இதனைக்கேட்ட பெருமான் அதனை ஏற்றார். "இந்த ஸ்தலம் கைலாஸத்தை விடச் சிறந்ததாகும். அதனால் "தென்கைலாஸம்*

- தக்ஷிணகைலாஸம்'' எனப் புகழ்பெறும். எனது திருமணக் கோலத்தைக் கண்ட இடமானதால் ''கல்யாணநகரம்'' எனப்படும். அராளகுந்தளையின் கைபிடித்த கோலத்தில் எப்போதும் தரிசனம் தருவேன். அடியார் விரும்பியதை வழங்குவேன். ஏதோ ஒருபிறவியில் என்னை ஒருதடவை கண்டவருக்கும் விரும்பிய தனைத்தையும் வழங்குவதுடன் இறுதியில் முக்தியும் தருவேன். என் ஸந்நிதியில் விளக்கேற்றுபவர் பெறுகிற நலனுக்கு எல்லை இராது என்று அருள் வழங்கி விடையளித்தார். காத்யாயனர் அளித்த காத்தியாயனியைக் கைபிடித்த கோலத்தில் இன்றும் காட்சிதருகிற ஈசனைக் காண்பவர் விரும்பியதை நிறைவுறப் பெறுவர். *(32-38).*

—★—

## द्वात्रिंशोऽध्यायः

ऋषयः—

कात्यायनस्य चरितं गौरीपरिणयोत्सवम् ।
सर्वपापप्रशमनं सर्वाभीष्टप्रदायकम् ॥ १

श्रावयित्वाऽखिलानस्मान्कृतार्थानकरोद्भवान् ।
विवाहात्परतस्तस्य श्रुतं वृत्तं महामुने ॥ २

विवाहात्प्राक्तनं वृत्तं श्रोतुमिच्छामि साम्प्रतम् ।

सूतः—

स तु कात्यायनः पूर्वं वेदवेदान्तपारगः ।
कथञ्चिदप्यमनसाऽगृहीतां गुरुदक्षिणाम् ।
श्रुतीरधीत्वा गुरवे दत्वा बोधायनाय च ॥ ४

पुनरध्ययनेच्छुस्स रूपैरष्टनिधिर्ययौ ।
ब्रह्मचारी महामेधाः प्रकृष्टं तेजिनीवनम् ॥ ५

तत्राखिलेषु तीर्थेषु माघे स्नात्वा यथाविधि ।
तेषु सन्तर्प्य तीर्थेषु देवर्षिपितृदेवताः ॥ ६

शिवं सूर्यं समुद्दिश्य तपस्तेपे सुदुश्चरम् ।
अप्रस्खलद्ब्रह्मचर्यो ब्रह्मचारी विशेषतः ॥ ७

तत्र जग्मुस्तपः कर्तुं नैष्ठिकब्रह्मचारिणः ।
तानाह साम्बो भगवान्वृणीध्वं वरमित्यपि ॥ ८

वव्रे वरञ्च ते साम्बाद्ब्रह्मविष्ण्वोश्च सन्निधौ ।
क्रमेण वितरास्माकमीश मुक्तिश्चतुर्विधाम् ॥ ९

तथास्त्विति ददौ देवस्तेभ्यो मुक्तिश्चतुर्विधाम् ।
सारूप्यधारिणः सर्वे ते सायुज्यं प्रपेदिरे ॥ १०

एतदाख्यानमायुष्यं यशस्यं सर्वसिद्धिदम् ।
सर्वपापहरं दिव्यं सारूप्यादिफलप्रदम् ॥ ११

इति द्वात्रिंशोऽध्यायः

*''அத்தியாயம்'' - 32*

*காத்தியானரின் முன் வரலாறுபற்றி அறிய விரும்பிய முனிவர்களுக்கு ஸூதர் விளக்குகிறார். காத்யாயனர் வேதங்களிலும் உபநிஷத்துகளிலும் கரை கண்டவர். போதாயனரிடம் வேதம் கற்றார். குருவிற்குத் தக்ஷிணை தரமுன் வந்தபோது குரு இவரிடமிருந்து தக்ஷிணைபெற விரும்பவில்லை. காத்யாயனர் நிர்பந்தித்து வேண்டிய போது கோபித்த குரு தான் உபதேசித்த வேதத்தை திருப்பி கேட்க வேதத்தை அவரெதிரே வைத்து விட்டு மறுபடி வேதம் கற்கவிரும்பி சிறப்புற்ற தேஜினீவனம் வந்தார். பிரும்மசரிய விரதத்துடன் மாசிமாதத்தில் தேவ - ரிஷி - பித்ருக்களுக்குத் தர்பணம் செய்து சிவஸ்வரூபனுன ஸூரியனைநோக்கிக் கடும் தவமிருந்தார். பிரும்மசரியத்திலிருந்து வழுவாதிருந்தார். இவர் போன்ற பல நைஷ்டிக பிரும்மசாரிகள்*

தவமிருந்தனர். சிவன் இவர்களது தவத்தில் மகிழ்ந்து நேரில் வந்து விரும்பியதைக் கேட்கச் சொன்னார். அவர்கள் பிரும்மாவிற்கும் விஷ்ணுவிற்கும் எதிரில் ஸாம்பபரமேசனிடம் ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் என்ற நான்கு முக்திகளைக் கிரமமாகப் பெற அருள் பெறவேண்டி ஸாரூப்யம் பெற்று பின்னர் ஸாயுஜ்யமடைந்தனர். இந்த வரலாற்றைக் கேட்க அந்த நான்கு முக்திகளையும் பெறலாம். (1-11)

—★—

## त्रयस्त्रिंशोऽध्यायः

कात्यायनो मुनीन्द्रोऽथ मुक्तिं यातेषु तेषु च ।
शिवं सूर्यं समाराध्य वेदाध्ययनसिद्धये ॥ १

ब्रह्मचर्यव्रतं नित्यं सोऽथ साधु समाचरत् ।
नमस्सवित्रेमन्त्रेणोक्तैर्गन्धाक्षतैस्सुमैः ॥ २

तर्पणैश्च जपैर्होमैः प्रीणयामास तं रविम् ।
ततः प्रसन्नो विश्वात्मा दीननाथो दयानिधिः ॥ ३

संज्ञाछायापतिः श्रीमान् प्रादुरासीन्मुनेः पुरः ।
तं दृष्ट्वाऽग्रे समायातं सपर्याभिः प्रपूज्य च ॥ ४

मित्रस्य चर्षणी धृत इति मन्त्रेण साञ्जलिः ।
भक्त्योपतस्थे शान्तात्मा कात्यायनमुनीश्वरः ॥ ५

ततः प्रसन्नो भगवान् त्वाष्ट्रीच्छायावतीप्रभुः ।
हस्ताब्जेन मूर्ध्नि वरान्वृणीष्वेति च सोऽब्रवीत् ॥ ६

'அத்தியாயம்'' - 33

அந்த பிரும்மசாரிகள் முக்தியடைந்ததும் காத்யாயனர் சிவஞான ஸூரியனிடம் வேதாத்யயனம் பெற வேண்டி

*பிரும்மசரிய விரதத்திலிருந்து தவமிருந்தார் ''நம: ஸவித்ரே'' என்ற மந்திரம் கூறி சந்தனம் அக்ஷதை மற்றும் புஷ்பங்களால் வழிபட்டு தர்பணம் ஜபம் ஹோமம் இவற்றால் ஸூரியனைத் திருப்தி செய்வித்தார். உலகின் ஆத்மாவும் எளியவரைக் காப்பவரும் கருணையின் இருப்பிடமும் ஸம்ஜ்ஞா சாயா என்ற இரு மனைவியருடன் கூடியவருமான ஸூர்யன் முனிவரின் முன் தோன்றினார். அவரை உபசாரங்களால் உபசரித்த காத்யாயனர் ''மித்ரஸ்ய சர்ஷணீத்ருத:'' என்ற மந்திரத்தால் கைகூப்பித்துதித்தார். சாயைக்கும் ஸம்ஜ்ஞைக்கும் பதியான ஸூர்யன் தாமரை போன்ற தனதுகையை அவர்தலை மீது வைத்து அவரை ஏற்று வரம் கேட்கச் சொன்னார். (1-6)*

स मुनिर्वरयन् भक्त्या वाचमूचे प्रभाकरम् ।
बोधायनो मम गुरुर्वेदानध्यापयच्च माम् ॥ ७

का दीयते मया तुभ्यन्दक्षिणेति मयोदिते ।
दक्षिणा मास्तु ते मह्यं वरिवस्यैव दक्षिणा ॥ ८

इति शंसन्मया भास्वन् क्रियासमभिहारतः ।
निर्बन्धितोऽसौ कोपेन मामुवाच मुनीश्वरः ॥ ९

मत्सकाशादधीतास्त्वं श्रुतीर्देहि पुनर्द्रुतम् ।
इत्युक्तवत्यहं वेगाद्गुरुं नत्वा भयाकुलः ॥ १०

मनोमेधाभिरदिताः श्रुतीरुदगिरं रवे ।
निर्गताश्च श्रुतीस्सर्वाः पललीभूतविग्रहाः ॥ ११

तास्सर्वास्तित्तिरी काचित् बभक्ष क्षणामात्रतः ।
तस्या अध्यापयामासुःशिष्या बोधायनस्य च ॥ १२

तित्तिर्या निर्गताः शाखास्तैत्तिर्य इति चाभवन् ।

*காத்யாயனர் ஸூரியனிடம் விண்ணப்பித்தார்- என்குரு போதாயனர் எனக்கு வேதத்தைக் கற்பித்தார். என்ன தக்ஷிணை*

*தரவேண்டுமென நான் கேட்டதும் தக்ஷிணை வேண்டாம். உன் பணிவிடையே எனக்கு தக்ஷிணைதான் என்றார். மறுபடி நான் வற்புறுத்த "என்னிடமிருந்து கற்ற வேதத்தை உடன் திருப்பிக் கொடுப்பாய் என்று கூறினார். நான் பயந்து குருவை வணங்கி மனத்தாலும் மேதையாலும் உண்ட வேதத்தைக் கக்கினேன். வெளிவந்த வேதப்பகுதிகள் வைக்கோல் போலாயின. அதனை ஒரு தித்திரிப்பறவை நொடியில் விழுங்கியது. அதன் வாயிலாக மறுபடி அந்த வேதம் வெளிப்பட்டதால் தைத்திரீயம் எனப்பெயர் பெற்றது. அதனை போதாயன சிஷ்யர்கள் ஓதிக் கற்றனர். (7-12)*

गुरुणाऽहमनुज्ञातो ब्रह्मोज्झ इव दुःखितः ॥ १३

तेजिनीवनमासाद्य त्वामहं शरणं गतः ।
अपि सूर्याभिनिर्मुक्तः सन्ध्यात्रयविभेदकः ॥ १४

अनधीतश्रुतिश्चैव सूर्योज्झं च मृषा वदन् ।
अवकीर्णमहापापी प्रोच्यते बुधसत्तमैः ॥ १५

अहं ब्रह्मोज्झ एवाहं त्राहि मां त्वद्गताशयम् ।
अधीतवेदं मां शीघ्रं कुरुष्वाद्य त्रयीतनो ॥ १६

द्युतिमांश्च निशम्यैनमिति कात्यायनीं गिरम् ।
वाणीमभाणीदन्वर्थां वरदानप्रयोजनाम् ॥ १७

श्रुतीश्श्रोतुं मम त्वं हि पश्चाद्भागे न शक्नुयाः ।
रथस्याधिकवेगत्वात्तिष्ठ मे सन्निधौ रथे ॥ १८

अहमध्यापयिष्यामि श्रुतीश्च सकलाः कलाः ।
सप्तसप्तेरिदं वाक्यं श्रुत्वा कात्यायनोऽवदत् ॥ १९

गुरोरेकासने स्थेयन्न च्छात्रेणेति वै श्रुतिः ।
कुत्र स्थित्वा श्रुतीस्सर्वा गृहीष्ये काश्यपात्मज ॥ २०

*குருவின் அனுமதியுடன் வெளியேறிய நான் பிரும்மத்தால் துப்பப்பட்டவனாக கற்ற வேதத்தை மறந்த பாபியாக என்னை நொந்து கொண்டு தேஜினீவனம் வந்து உம்மைச் சரணடைந்தேன். ஸூரியனிடம் அபசாரம் செய்தவன், முக்காலமும் ஸந்தியா வந்தனம் செய்யாதவன். வேதம் கற்காதவன், ஸூரியனை மறந்தவன், பொய் சொல்பவன், இவர்களை அவகீர்ணீ - தனது உறுதிமொழியைக் காப்பாற்றாத பாபி என்பர். நான் வேதத்தை மறந்தபாபி. என்னைக் காப்பீர்! என்னை வேத மோதியவனாக உடன் ஆக்குவீர்! வேதமூர்த்தியான நீர் பரிவு காட்டுவீர் என வேண்டினார். ஸூரியன் இதனை உடன் ஏற்று ''என் பின் நின்று என் உபதேசத்தைக் கேட்க இயலாது. அதனால் என் எதிரில் ரதத்தில் அமர்வாய். நான் வேதங்களனைத்தையும் கலைகளையும் கற்பிக்கிறேன் என்றார். இதனைக் கேட்ட காத்யாயனர் குருவோடு ஒரே ஆஸனத்தில் சிஷ்யன் அமரக்கூடாதென்பர். நான் எங்கு அமர்வேன்? எனக் கேட்டார். (13-20)*

इति तद्वाक्यमाकर्ण्य विशेषात्प्रीतमानसः ।
कात्यायनमिदं वाक्यमुवाच मधुरं रविः ॥ २१

तिष्ठ त्वं वाजिनः कर्णे विशाले मुनिपुङ्गव ।
अधीहि वेदानखिलान् सांगांश्च सकलाः कलाः ॥ २२

त्वत्पूजया प्रसन्नोऽस्मि दीर्घायुर्भव सुव्रत ।
संज्ञा छाया च भिक्षान्ते भिक्षवे दास्यतेऽनिशम् ॥ २३

इति श्रुत्वा रवेर्वाक्यं तं प्रणम्य मुनीश्वरः ।
स्नात्वाऽथाकाशगङ्गायां स्वीयाः कृत्वाऽखिलाः क्रियाः ॥ २४

उपवीतोत्तरासङ्गमेखलादण्डमौञ्जिभृत् ।
रवेस्सन्निधिमासाद्य प्रणम्याष्टाङ्गपूर्वकम् ॥ २५

भस्मरुद्राक्षसंच्छन्नो वाजिकर्णान्तरेऽविशत् ।

स तमध्यापयामास ब्रह्माञ्जलिलसत्करम् ॥ २६

कात्यायनः श्रुतीस्साङ्गा रवेरध्यैष्ट वै कलाः ।
भिक्षां भुक्त्वा शुचिर्भूत्वा संज्ञाच्छायासमर्पिताः ॥ २७

कलाश्च जगृहे सर्वा देवर्षीणाञ्च शृण्वताम् ।
आदित्यरथवेगेन श्रुतीरेकस्वरा मुनिः ॥ २८

यथावज्जगृहे भक्त्या रवेः कात्यायनो मुनिः ।
अपि शुक्लयजुर्वेत्ता सर्वज्ञोऽभूच्छरत्त्रयात् ॥ २९

*இதனைக் கேட்ட ஸூரியன் மிகவும் மகிழ்ந்து காத்யாயனரிடம் கூறினார் "என் குதிரையின் காது விசாலமானது. அதில் அமர்ந்து கற்பாய். உன் மதிப்புணர்வால் நான் மகிழ்ந்தேன். நீண்ட நாள் வாழ்வாய். என் மனைவியரான சாயையும் ஸம்ஜ்ஞையும் உனக்கு பிக்ஷை உணவிடுவர் என்றார். ஆகாயகங்கையில் உடன் நீராடி தன் அன்றாடக்கடன்களை முடித்து உபவீதம் மேலாடை இடுப்பணி மௌஞ்சிக்கயிறு தண்டம் ஏந்தி ஸூரியனின் எதிரில் வந்து ஸாஷ்டாங்கமாய் வணங்கி விபூதி - ருத்ராக்ஷம் தரித்துக் குதிரையின் காதின் இடைவெளியில் அமர்ந்தார். ஸூரியன் உபதேசித்த வேதங்களை அவற்றின் சிக்ஷை முதலிய ஆறங்கங்களுடன் கற்றார். ஸம்ஜ்ஞையும் சாயையும் இட்ட பிக்ஷை உணவை ஏற்றார். ஸூரியனின் ரதவேகத்திற்கேற்ப ஓடி, மூன்று ஆண்டுகளில் யஜுர் வேதத்தைக் கற்றார். சுக்லனை (வெண்ணிறமூர்த்தியான) ஸூரியனிடம் கற்றதால் அது சுக்லயஜுர்வேதம். (21-29)*

तत उत्थाय मतिमान् समासश्रुतिसङ्ग्रहः ।
प्रणम्यार्कं स्वमात्मानमर्पयत् गुरुदक्षिणाम् ॥ ३०

संज्ञाच्छायापतिश्चाथ समाप्ते निगमे विधौ ।
कृताशीर्वचनश्चायं प्रेषयामास कांक्षितम् ॥ ३१

तेजिनीवनमासाद्य मुनिः कात्यायनः पुनः ।
बोधायनन्नमस्कृत्य तत्पार्श्वे प्राञ्जलिः स्थितः ॥ ३२

तमागतं समुद्वीक्ष्य भक्तं बोधायनश्च सः ।
आशीर्भिरभिनन्द्यामुं सूत्रकर्तारमातनोत् ॥ ३३

षण्णाञ्च सूत्रकर्तॄणामसावेकतमोऽभवत् ।
कृतोपकर्मवेषश्च वेदव्रतमवाप्य सः ॥ ३४

व्रतं कृत्वा स गोदानं सुमेधःकन्यकां शुभाम् ।
उपयेमे विधानेन स्व सूत्रेण सुमङ्गलाम् ॥ ३५

विवाहानन्तरं कृत्यं कात्यायन्योत्सवादिकम् ।
कथितञ्च पुनश्चाद्य वक्तव्यं पृच्छत द्विजाः ॥ ३६

इति त्रयस्त्रिंशोऽध्यायः

*வேதம் ஓதி முடிந்ததும் ஸூரியனுக்கு தக்ஷிணையாகத் தன்னையே அளித்தார். ஸூரியனிடம் அனுமதி பெற்று தேஜினீவனம் வந்து மறுபடி போதாயனரிடம் வந்து வணங்கி எதிரில் கைகூப்பி நின்றார். போதாயனர் ஆசிவழங்கி அவரை வேதச்சடங்குகளின் செய்முறை கூறுகிற ஸூத்திரமியற்றச் செய்தார். ஆறு ஸூத்ரகாரர்களில் இவரும் ஒருவர். பின்னர் வேதவிரதம் முடித்து கோதானம் செய்து தன் ஸூத்திரமுறையில் ஸுமங்களையை மணந்தார். அதன் பின் அவரது வரலாறு முன்னரே கூறப்பெற்றது. (30-36)*

—★—

## चतुस्त्रिंशोऽध्यायः

स्वर्गावतरणेशस्य पादयोरन्तरे पुनः ।
अदृश्यत हरेर्नेत्रमित्युक्तं ज्ञातमेव तत् ॥ १

पश्चात्कपित्थफलमप्यदृश्यत निवेदितम् ।
इत्युक्तं तन्न जानीमस्तत्कथाश्रवणे हि नः ॥ २

परं कौतूहलं सूत वर्तते सर्ववित्तम ।
सूतः-
अस्य क्षेत्रस्य माहात्म्यं को वा शक्नोति भाषितुम् ॥ ३

कैलासमागतो लुब्धः कपित्थफलदानतः ।
हत्वा सर्वस्वमपि च हरिनद्यास्तटे शुभे ॥ ४

चौर्यञ्च कृत्वा बहुशस्सर्वदा प्राणिघातकः ।
ऋषयः—
अतिपापी लुब्धकश्च चौर्यणोदरपोषकः ॥ ५

देवद्रव्यापहारी च ब्रह्मद्रव्यापहारकः ।
हिंसकोऽतीव मूर्खश्च कथं मुक्तिमवाप्तवान् ॥ ६

परोपकारी भगवान्सर्वदा शिवपूजकः ।
व्यासशिष्यो विशेषेण पृच्छामस्तेन सादरम् ॥ ७

पुराणानां रहस्यञ्च धर्माधर्मरहस्यकम् ।
त्वमेव वेत्सि नान्योऽस्ति सर्वलोकोपकारकः ॥ ८

वयं कृतार्था भवता पुराणपठनेन च ।
त्वमेव सर्वलोकानां परोपकरणे रतः ॥ ९

त्वया चैव पुराणानि सरहस्यानि मानद ।
प्रकाशितानि भूलोके बहुशः श्रवणेन च ॥ १०

परोपकारमाहात्म्यं केन वा परिगण्यते ।
परोपकरणार्थाय शिवोऽपि धृतवान्विषम् ॥ ११

न चेन्नष्टं भवेन्नूनञ्जगदेतच्चराचरम् ।
भूमिस्तु दूषिता वाऽपि मलमूत्रादिभिर्जनैः ॥ १२

कर्षिता लाङ्गलेनापि सोढ्वा सर्वञ्च दुस्सहम्।
परोपकरणार्थाय फलिता सर्वदैव भूः ॥ १३

शिवस्य देहभेदाश्च चत्वारस्सन्ति भूतले ।
गावो वृक्षाश्च विप्राश्च पुराणस्य च पाठकाः ॥ १४

येन केनाप्युपायेन यस्य कस्यापि देहिनः ।
आनन्दं जनयेद्यस्तु स शिवो नात्र संशयः ॥ १५

परोपकारजं पुण्यं तुलितुं नैव शक्यते ।
तस्मात्परोपकारी च भवानेव न संशयः ॥ १६

तवैव लोका हि सनातनाश्च तवैव देवो भगवान् प्रसन्नः ।
तवैव वेदास्सफला भवन्ति तवैव कल्याणि च सत्फलानि ॥ १७

तवैव तुष्टाः पितरश्च सर्वे तवैव मातापितरौ च धन्यौ ।
तवैव यज्ञास्सफलास्सदक्षिणास्तवैव संगाद्धरणी च शुद्धा ॥ १८

तवैव माहात्म्यमुशन्ति लोके तस्माद्वयं धन्यतरा हि सत्यम् ।

*''அத்தியாயம்'' - 34*

*ஸ்வர்காவதரணேச்வரர் என்று கல்யாண கோலத்திலுள்ள பெருமானின் திருவடிகளினிடையே காணப்பெறுகிற விளாம்பழத்தைப்பற்றிய வரலாறு பற்றி முனிவர்கள் வினவ, ஸூதர் ''இறைவனுக்கு விளாங்கனி அளித்ததால் ஒரு திருடன் கைலாஸம் சென்றான் அவன் பிராணி ஹிம்ஸை செய்பவன் என்றார். பாபியும் திருட்டைப் பிழைப்பாகக் கொண்டவனும் ஈசனின் பொருளையும் அந்தணர் உடமையையும் திருடியவனும் கொடுஞ் செயலனுமானவன் கைலாஸம் சென்றது எப்படி?*

உம்மைத் தவிர வேறெவர் இதனை விளக்க முடியும்? நீரே பிறருக்கு உதவமுன் வந்தவர். புராணரஹஸ்யம் உணர்ந்தவர். அவற்றை விளக்க வல்லவர். பிறருக்கு உதவவே சிவபெருமான் விஷத்தைப் பருகினார். பூமிதேவியும் மலமூத்திரங்கள் முதலியவற்றால் கெடுக்கப்பட்டாலும் கலப்பையால் உழப்பெற்றாலும் பிறருக்கு உதவவே தன்னுள்ளிட்ட தான்யத்தைப் பல மடங்கு பெருக்கித் தருகிறது. பசுக்களும் மரங்களும் அந்தணர்களும் பௌராணிகர்களும் சிவனது மாற்று வடிவங்களே. ஏதாவது ஒரு உபாயத்தால் எவருக்காவது ஆனந்தம் தருபவன் சிவனே. பரோபகாரத்திற்கு ஈடானது வேறெதுமில்லை. உமக்கு நித்யவாழ்வு கிட்டும். ஈசன் உமக்கு அருள்புரிவார். வேதங்கள் உமக்குப்பயன் தருபவை. பித்ருக்கள் உமக்கு அருள் புரிவர். உமது பெற்றோர் பாக்கியசாலி. நீர் புரிகிற வேள்விகள் நல்ல பலன் தரும். உமது தொடர்பால் இந்த பூமி தூய்மை பெற்றது. உமது பெருமை உலகறிந்தது. உம் உபதேசம் பெறுகிற நாங்களும் பாக்யசாலிகளே!. (1-18)

इति स्तुतो मुनीन्द्रैश्च सूतः पौराणिकोत्तमः ॥ १९

सर्वशास्त्रार्थतत्त्वज्ञः प्रहसन् वाक्यमब्रवीत् ।
युष्माकन्तु मुनिश्रेष्ठाः नैकैकस्यापि चांशतः ॥ २०

समोऽहं तादृशा यूयं कथं मां स्तोत्रपात्रताम् ।
नयध्वं यूयमखिलास्तेजिनीवनवासिनः ॥ २१

भस्मरुद्राक्षसंछन्नाः पञ्चाक्षरपरायणाः ।
शिवध्यानरताश्चैव शिवपूजापरायणाः ॥ २२

शिवालयस्य कर्तारः शिवारामादिकारकाः ।
शिवकैङ्कर्यनिरताः शिवागमविचक्षणाः ॥ २३

शिवस्मरणशीलाश्च शिवधर्मानुसारिणः ।
शिवदर्शनसोत्कण्ठाः शिवाकारा न संशयः ॥ २४

शिवस्यैव च माहात्म्यं भस्मरुद्राक्षयोरपि ।
पञ्चाक्षरस्य माहात्म्यं शिवो वेत्ति न चापरः ॥ २५

जन्मान्तरीयभाग्यं मे मम वक्त्राद्धि किञ्चन ।
श्रोतॄन्विप्रेरयति च तस्माद्वक्ष्ये यथामति ॥ २६

इति चतुस्त्रिंशोऽध्यायः

—★—

இவ்வாறு பாராட்டப்பெற்ற ஸூதர் எல்லா சாஸ்திரங்களின் உட்பொருளறிந்தவர். சிரித்துக் கொண்டே முனிவர்களிடம் கூறினார். முனிவர்களில் சிறந்தவர்களே! உங்கள் சிறப்புகளில் ஒரு அம்சம் கூடப்பெற்றவனல்ல. தேஜினீவன வாசிகள் அனைவரும் விபூதிருத்ராக்ஷதாரிகளாக பஞ்சாக்ஷர ஜபமும் சிவனைக் குறித்தத் தியானமும், பூஜையும் செய்பவர். சிவனது ஆலயத்தை அமைத்துத் தோட்டத்தை உருவாக்கி சிவகைங்கரியத்தில் சிவாகம முறைப்படி ஈடுபட்டவர். சிவனைக் காண ஆர்வமிக்கவர் சிவனேயானவர், விபூதி, ருத்ராக்ஷம் பஞ்சாக்ஷரம் இவற்றின் பெருமையை சிவனே அறிவார். முன்பிறவியில் செய்த புண்யத்தின் வினைவாக என் வாயிலிருந்து வெளியாகிற சொல் உங்களை நற்பணியில் ஈடுபடுத்துகிறது என்றார். (34)

—★—

पञ्चत्रिंशोऽध्यायः

व्याधो वीरतनुर्नाम प्राणिहिंसापरायणः ।
महापातकसङ्केतस्थानं मार्गनिरोधकः ॥ १

हत्वा हत्वा मनुष्यांश्च तेषाञ्चैव धनादिकम् ।
गृह्णाति च सदा पापी धर्मवार्ताविवर्जितः ॥ २

कदाचित्तेजिनीनाथरथयात्रादिदृक्षया ।
काञ्चीपुरनिवासाश्च धनधान्यसमन्विताः ॥ ३

आकाशनगरं याता व्याधोऽपि सहसाऽऽगतः ।
तेषाञ्च धनमाहर्तुं हनने च वने स्थितः ॥ ४

खड्गपाणिर्महाशूरो वेषान्तरमुपाश्रितः ।
ते पान्था रात्रिसमये समायातास्त्वरान्विताः ॥ ५

रथोत्सवं समुद्दिश्य बहवः पुरतो गताः ।
मध्ये च केचिदायाता धनभूषणवाहकाः ॥ ६

खड्गपाणिस्तान्निरुध्य सर्वमापहृतवान्धनम् ।
भूषणानि च वासांसि धनानि विविधानि च ॥ ७

*''அத்தியாயம்'' - 35*

*(1) வீரதனு என்ற வேடன், பிராணிகளை ஹிம்ஸிப்பதில் ஆர்வமிக்கவன். பெரும்பாபங்களின் குடியிருப்பு. வழிப்பறியாக மனிதர்களைக் கொன்று அவர்களின் செல்வத்தைப் பறிப்பவன். தர்மம் என்ற சொல்லையே பயன்படுத்தாதவன். ஒரு சமயம் தேஜினீ வனத்தில் ரதயாத்திரை காண காஞ்சீபுரவாசிகள் பணம் தான்யம் இவற்றுடன் ஆகாசநகரம் வந்தனர். வேடனும் அவர்களின் சொத்தைப் பறிக்க காட்டில் கத்தி ஏந்தி மாறுவேஷத்தில் மறைந்திருந்தான் தேர்த்திருவிழா காணவந்த வழிப்போக்கர்களை இவன் கத்தியைக் காட்டித்தடுத்து பணம் நகை ஆடை அனைத்தையும் பறித்தான். (1-7)*

कपित्थफलभारन्तु विक्रेतुञ्च रथोत्सवे ।
तत्रान्तरे कश्चिदागात्तद्भारं शिरसा वहन् ॥ ८

तञ्च दृष्ट्वा स शबरस्तमागत्याभिगम्य च ।
गृहीत्वा फलभारञ्च विन्यस्य विपिनान्तरे ॥ ९

पुनर्मार्गमुपावृत्य न्यवसच्चौर्यकांक्षया ।
एतस्मिन्नेव समये वैदिको ब्राह्मणोत्तमः ॥ १०

समित्कुशान् समाहृत्य मध्याह्ने क्षुत्पिपासितः ।
क्षेत्रवासी समायातस्तं व्याधं सन्ददर्श ह ॥ ११

तिष्ठ तिष्ठेति च वदन्वेगादागत्य चारुधत् ।
विप्रोऽपि दृष्ट्वा तं व्याधं क्रूरश्चौर्यपरायणम् ॥ १२

निर्धनोऽहं दरिद्रोऽहमिति दीनं वचोऽब्रवीत् ।
तं दृष्ट्वा दीनवदनं भस्मरुद्राक्षधारिणम् ॥ १३

जटावल्कलसंवीतं त्रियम्बकमिवापरम् ।
धनहीन इति ज्ञात्वा समित्पुष्पकुशान्वितम् ॥ १४

कृपया परयाविष्ट इदं वचनमब्रवीत् ।
व्याधः—
भो ब्राह्मण महाभाग तपसा धूतकल्मष ॥ १५

श्रान्तश्च तापयुक्तश्च किमिष्टं तद्वदाधुना ।
इत्युक्तमात्रे व्याधे तु ब्राह्मणोऽतीव दुर्बलः ॥ १६

क्षुधा च परयाविष्टः किं वक्ष्यामीति चिन्तयन् ।
मास्तु किञ्चिदपीत्युक्ते कोपेन प्रहरिष्यति ॥ १७

उपायेन तु गन्तव्यं वनेचरसमीपतः ।
मनसैवं विचार्याथ फलभारं निरीक्ष्यच ॥ १८

ज्ञात्वा गन्धेन च फलं फलं देहीति चावदत् ।
सोपि तद्वाक्यमाकर्ण्य विस्रस्य फलभारकम् ॥ १९

फलद्वयं गृहीत्वा तु तस्य हस्ते समर्पयत् ।
फलग्रहणकाले तु तत्फलस्य च शुद्धये ॥ २०

जग्राह स शिवं स्मृत्वा शिवः प्रीतो भवत्विति ।
सोऽपि गच्छेति चोक्त्वाऽथ वनमध्यं विवेश ह ॥ २१

गृहीत्वा च फलं विप्रः तेजिनीवनमाप्य च ।
स्नानादिकञ्च निर्वर्त्य मध्याह्नसमये तदा ॥ २२

स्वगृहे देवपूजाञ्च कृत्वा नैवेद्यमेव च ।
प्रीयतां तेजिनीनाथ इति तच्च फलद्वयम् ॥ २३

भक्त्या निवेदयामास भोजयामास चातिथीन् ।

*விளாம்பழத்தைத் தேர்த்திருவிழாவில் விற்கப் பெருஞ்சுமையைத் தலையில் தாங்கி வந்தவனை இவன் தடுத்துப் பழமூட்டையைப் பறித்து வேறிடத்தில் பதுக்கி விட்டு மறுபடி வழிமறிக்க வந்தான். ஓர் அந்தணன் மிகவும் ஏழை. நடுப்பகலில் ஸமித்தும் தர்ப்பையும் சேகரிக்க வந்தான். பசிதாகம் மேலிட்டுக்களைத்திருந்தான். திருடனைக் கண்டதும் நான் ஏழை, என்னிடம் பணமேதுமில்லை என்றான். ஜடையும் மரவுரியும் பூண்டு சிவனைப் போன்றிருந்த அவனிடம் திருடனுக்குப் பரிவு ஏற்பட்டது. உனக்கு என்ன வேண்டும்? எனக் கேட்ட திருடனிடம் பயந்து ஒன்றும் வேண்டாமென்றாலும் தவறாகிவிடுமே எனப்பயந்து அருகில் இருந்த பழச்சுமையைக் கண்டு எனக்கு ஒரு பழம் தா என வேண்டினான். அவனும் உடனே மூட்டையை அவிழ்த்து இரண்டு பழங்களை அவன் கையில் தந்தான். அந்தணனே திருட்டுப் பொருள் தூய்மை பெறட்டுமென எண்ணி சிவனுக்கு அர்ப்பணம் ''இதனால் சிவன் திருப்தி பெறட்டும்.'' என மனத்தினுள் கூறி ஏற்றான். வேடனும் சென்றுவா என அனுமதித்ததும் பழத்தை வாங்கிக் கொண்டு தேஜினீவனம் வந்து நீராடி நடுப்பகலில் தன் வீட்டில் சிவபூஜையை முடித்து இரண்டு பழங்களையும் சிவனின் முன்*

*வைத்து தேஜினீநாதர் திருப்தி அடையட்டும் என வேண்டி நிவேதனம் செய்து அதிதி பூஜை செய்தான் (8-23)*

यथाशक्त्यन्नपनेन उत्सवे पञ्चमे दिने ॥ २४

तेनातीव च तुष्टोऽभूत् शङ्करश्चन्द्रशेखरः ।
व्याधश्च पञ्चक्रोशान्ते तत्रैव निधनं गतः ॥ २५

सत्पात्रदानमाहात्म्यात् कैलासभवनं गतः ।
तस्मादवश्यं कर्तव्यं सत्पात्रे दानमण्वपि ॥ २६

तन्मेरुसमतां याति स्थानपात्रादिभेदतः ।
अपात्रं पात्रतां याति पुण्यस्थाननिषेवणात् ॥ २७

चित्तं वित्तं च पात्रञ्च लभ्यते पुण्यशालिनाम् ।
पूर्वपुण्यविपाकेन काकतालीययोगवत् ॥ २८

येन केन प्रकारेण दनं पात्रे विशिष्यते ।
पात्राणामुत्तमं पात्रं भस्मरुद्राक्षधारकः ॥ २९

तस्मादपि च पात्रन्तु दीपसेवापरायणाः ।
तस्मादपि च पात्रन्तु पुष्पमालाप्रदायकाः ॥ ३०

तस्मादपि च पात्रन्तु संमार्जनपरायणाः ।

*உற்சவத்தின் ஐந்தாம் நாளன்று சக்தியுள்ள அளவு அன்னதானம் செய்தான். இதனுல் சிவனருள் பெற்ருன். திருடனும் சிறிது தூரம் சென்றதும் இறந்தான். இறக்கு முன் நல்லோர் ஒருவருக்குப் பழம் அளித்ததால் கைலையடைந்தான். சிறிதளவு செய்த தானமும் மேருபோன்ருகிவிடுகிறது. தானத்தை ஏற்கத்தகுதியற்றவனும் புண்ய க்ஷேத்திரத்தின் பெருமையால் தக்கவனுக ஆவான். புண்ய க்ஷேத்திரவாஸத்தால் தானம் செய்கிற ஆர்வமும் செல்வமும் தானமேற்பவனும் கிட்டும்.*

*காக்கை உட்கார்ந்தது. பனம் பழம் வீழ்ந்ததென்றவாறு எதேச்சையாக இது அமையலாம். விபூதி ருத்ராக்ஷமணிந்தவர் தானம் ஏற்க ஏற்றவர். இறைவனுக்கு தீபஸேவை செய்பவர். பூமாலை சாத்துபவர், ஆலயத்தூய்மையைப் பாதுக்காப்பவர் என வரிசையாக உயர்ந்தவர். (24-30)*

एतानि चान्यानि शिवप्रियाणि शिवागमोक्तानि महाफलानि ।
तस्मान्महापापहराणि नित्यं कुर्वीत सर्वोत्तमसौख्यसिद्ध्यै ॥ ३१

व्याधोऽप्येवं दैवयोगेन दत्वा वर्ये पात्रे तत्कपित्थद्वयञ्च ।
मुक्तस्सद्यो घोरघोराच्च पापाद्धर्मं सूक्ष्मं शङ्करो वेत्ति नान्यः ॥३२

तेजिनीशप्रसादार्थं ब्राह्मणेन निवेदितम् ।
तत्कपित्थफलं पश्चात्पादपीठे महेशितुः॥ ३३

स्वर्गावतरणेशस्य दृश्यतेऽद्यापि भूसुराः ।
तेजिनीवनमाहात्म्यमेतद्धि कथितं शिवम् ॥ ३४
गोप्यञ्चातिरहस्यञ्च पाठ्यं भक्तेषु सर्वदा ।
अहो भाग्यमहो भाग्यं तेजिनीपुरवासिनाम् ।

वर्णितं भवतामग्रे चरितं शङ्करस्य यत् ॥ ३५

इति पञ्चत्रिंशोऽध्यायः

—★—

*இத்தகையநற்பணியைத் தொடர்ந்து செய்வதால் இனிய வாழ்க்கை அமையும். வேடனும் இவ்வாறே செய்து மேனிலை பெற்றான். இரு விளாம்பழங்களை வழங்கியதால் மிகக் கொடியபாபம் அவனை விட்டுவிலகியது. அந்தணன் சிவனுக்கு நிவேதனம் செய்த விளாம்பழமே ஸ்வர்காவதரணேசனின் திருவடியில் காணப்பெறுகிறது. இந்த வரலாறு மிகவும் புனிதமானது. ரகசியமாகக் காப்பாற்றத்தக்கது. (31-36)*

## षट्त्रिंशोऽध्यायः

ऋषयः—

सूत सर्वज्ञ सर्वेषामुपकारैकतत्पर ।
तेजिनीनगरे शंभुः कालपाशेन पाशितम् ॥ १

श्वेतकेतुं ररक्षेति श्रुतं तद्विस्तराद्वद ।
सूतः—
अहो भाग्यमहो भाग्यं भवतां पुण्यगौरवात् ॥ २

श्वेतकेतुचरित्रस्य श्रवणे बुद्धिरागता ।
शृणुध्वमृषयस्सर्वे सावधानेन चेतसा ॥ ३

जयन्तो नाम राजर्षिः पुराऽभूद्भुवि विश्रुतः ।
चतुस्समुद्ररशनां शशास स वसुन्धराम् ॥ ४

दानवैस्सह सङ्ग्रामे साह्यमिन्द्रस्य कुर्वतः ।
तपस्यतश्चिरं कालं तस्य पुत्रो न चाभवत् ॥ ५

पुत्राभावेन सन्तप्तो जयन्तो जगतीपतिः ।
सर्वाभीष्टप्रदं दिव्यं तेजिनीवनमेत्य सः ॥ ६

लक्ष्मीजानौ परे पुंसि दृढभक्तिसमन्वितः ।
श्वेताद्रिनाथं लक्ष्मीशमुद्दिश्य श्वेतकानने ॥ ७

तेजिनीवनलिङ्गस्य पश्चाद्भागे मनोहरे ।
बाणपातद्वयमिते पुण्यक्षेत्रे स पार्थिवः ॥ ८

तपस्तप्त्वा विष्णुतीर्थे ब्रह्मतीर्थेऽथ निर्मले ।
तीर्थपुष्करिणीतीर्थे हरिनद्यास्तथोदके ॥ ९

अन्येष्वपि च तीर्थेषु माघे स्नात्वा यथाविधि ।
महद्दानानि कृत्वाऽथ विष्णुप्रीतिकराणि च ॥ १०

निराहारो भुवं पादाङ्गुष्ठाग्रेणैव संस्पृशन् ।
बिम्बे विवस्वतो दत्तदृष्टिरूर्ध्वं कृताञ्जलिः ॥ ११

तपश्चक्रे तीव्रतरं निश्चलो विजितेन्द्रियः ।
एवं तपस्यतस्तस्य व्यतीयुःशरदः शतम् ॥ १२

*''அத்தியாயம்'' - 36*

*யமனின் பாசத்தால் கட்டுண்ட சுவேதகேதுவைச் சிவன் வீழிக்காட்டில் காப்பாற்றினார் என்ற வரலாற்றை ருஷிகளுக்கு ஸூதர் விளக்குகிறார். ஜயந்தன் என்ற ராஜரிஷி பூமியைச் சிறப்புடன் ஆண்டான். அஸுரர்களுடன் தேவர்கள் போரிடும் போது இந்திரனுக்கு உதவினான். தவமிருந்தும் மகப்பேறு கிட்டவில்லை. இதற்காகத் தேஜினீவனம் வந்து விஷ்ணுவிடம் பரமபக்தி கொண்டவனாக தேஜினிவநேசரின் பின்பகுதியிலுள்ள வெண்மலை நாதனை விஷ்ணுவை வெண்காட்டில் வழிபட்டான். விஷ்ணுதீர்த்தத்திலும் பிரும்மதீர்த்தத்திலும் தீர்த்தபுஷ்கரிணியிலும் அரிசிலாற்றிலும் மாசிமாதத்தில் நீராடினான். விஷ்ணுப்ரீதியாகத் தானம் செய்தான். உணவின்றி கால்கட்டைவிரலை ஊன்றி நின்று —ஸூர்யனை நோக்கி கைகூப்பித் தவமிருந்தான். இவ்வாறு நூறாண்டுகள் கழிந்தன. (1-12)*

आविरासीत्ततस्तस्य करुणापूर्णविग्रहः ।
श्वेताद्रिनायकः श्रीमान् प्रसन्नो गरुडध्वजः ॥ १३

वरं वृणीष्व भद्रन्ते वरदोऽस्मीति चाब्रवीत् ।
ततो जयन्तस्साष्टाङ्गं प्रणिपत्य कृताञ्जलिः ॥ १४

स्तुत्वा च विविधैः स्तोत्रैर्वरं वव्रे स वाञ्छितम् ।
जयन्तः—
स्वामिन् सर्वजगन्नाथ करुणापूर्णविग्रह ॥ १५

मह्यं यदि प्रसन्नोऽसि पुत्राभावव्यथाजुषः ।
अपुत्रस्य न लोकोऽस्तीत्यादिश्रुत्यर्थचिन्तया ॥ १६

अतीव दुःखितस्याद्य पुत्रं देहि सुरूपिणम् ।
इति तस्य वचः श्रुत्वा जयन्तस्य श्रियः पतिः ॥ १७

तथैवास्तु सुपुत्रस्ते सुरूपीति वरं ददौ ।
एवं वरं तस्य दत्वा क्षणेनैव तिरोदधे ॥ १८

तिरोहिते रमाकान्ते जयन्तो हृष्टमानसः ।
स्वमावासमथ प्राप्य कांक्षन्त्यै तनयं चिरात् ॥ १९

स्त्रियै सुचरितानाम्न्यै तपश्चर्याप्रसादितात् ।
लक्ष्मीशाद्वरलाभञ्च वर्णयामास हृष्टधीः ॥ २०

ततस्सा परमानन्दभरितोत्फुल्ललोचना ।
भृशं सुचरिता कान्तं बहु मेने नृपोत्तमम् ॥ २१

ततः कतिपयेष्वेव वासरेषु गतेषु सा ।
दधौ दौहृदचिह्नानि हर्षदायीनि देहिनाम् ॥ २२

*கருணைமிக்க வெண்மலை நாயகன் விஷ்ணு கருடக்கொடியுடன் முன் நின்று விரும்பியதை வேண்டச் சொன்னார். ஜயந்தன் விஷ்ணுவை வணங்கி வேண்டினன் ''புத்திரனைப் பெறாதவனுக்கு நற்கதி இல்லை என்பர். எனக்கு ஒரு நன்மகனைத்தருவீர்'' என வேண்டினன். விஷ்ணு அப்படியே நன்மகன் பிறப்பான் என அருள் கூர்ந்து மறைந்தார். வீடு வந்த*

*ஜயந்தன் மகிழ்ச்சி மிக்கவனாக தன் மனைவி ஸுசரிதாவிடம் தவத்தின் பயனாக விஷ்ணுவிடமிருந்து வரம் பெற்றதைக் கூறினான். அவளும் பெருமகிழ்ச்சியுற்றாள். சில நாட்களில் அவள் கருவுற்று அனைவரையும் மகிழ்வித்தாள். (13-22)*

अङ्गे वलक्षतां नैल्यंवक्षोजयुगचूचुके ।
वलित्रयतिरोधानं रोमरेखाविभावनम् ॥ २३

मध्ये च गौरवं किञ्चित् स्तनयोरतिगौरवम् ।
परिप्लवञ्चयनयोर्दैर्घ्यं निश्वासयोरपि ॥ २४

भोजनेष्वपि चानास्थां भूषणेष्वप्यनादरम् ।
एवमादीनि चिह्नानि दृष्ट्वाऽन्तःपुरिकाजनाः ॥ २५

आमोदमतुलं भेजुर्मुमोद च स पार्थिवः ।
मासे ततो वै जनने महीपतिवधूःशुभे ॥ २६

लग्ने च जनयामास पुत्रं सौन्दर्यशालिनम् ।
तन्दृष्ट्वा दानशीलस्स जयन्तो मुदितोऽभवत् ॥ २७

ज्योतिर्विदश्च विप्रेन्द्रास्तदा तस्यान्तिकं मुदा ।
आगत्य राज्ञे जगदुर्ग्रहचारफलं तथा ॥ २८

अल्पायुषश्च विपदो भयार्ता नाचचक्षिरे ।
ततः प्रीतमना राजा जयन्तस्तान् धनादिभिः
सन्तोष्यानन्दमतुलं स्वयं लेभे नृपाग्रणी : ॥ २९

इति षट्त्रिंशोऽध्यायः

*சில நாட்களில் கருவுற்றதால் ஏற்பட்ட வெளியடையாளங்கள் தோன்றின. மேனியில் பூச்சு, வயிற்று மடிப்புகளின் மறைவு, மார்பகத்தின் நிமிர்வு, பெருமூச்சு, கண்ணீர் மல்கல், உணவில் நாட்டமின்மை, நகைபூணச் சோம்பல்*

*முதலியவற்றைக் கண்டு அந்தப்புரத்துப் பெண்கள் மகிழ்ந்தனர். உரியவேளையில் மகன் பிறந்தான். ஜயந்தன் உடன் சோதிடரை அழைத்துப் பேச அவர்கள் மகன் அற்பாயுள் வாழ்பவன் என்பதைப் பயந்து கூறவில்லை. அரசன் பெருமகிழ்ச்சியுடன் தானமளித்து மகிழ்வுற்றான். (22-29)*

—★—

## सप्तत्रिंशोऽध्यायः

ततो जयन्तस्सञ्जातायां धर्मपत्न्यां नृपोत्तमः ।
श्वेताद्रिनाथभक्तोऽयं श्वेतकेतुरिति प्रभुः ॥ १

चकार नाम पुत्रस्य विप्रेभ्योऽपि ददौ धनम् ।
चौलं तथोपनयनं तस्य कृत्वा नृपः क्रमात् ॥ २

अक्षराभ्यासविधये देशिकान्तिकमानयत् ।
तस्य पुत्रस्य हि श्वेतकेतुनाम्नोऽतिधीमतः ॥ ३

गुरोस्सान्निध्यमात्रेण स्वयं विद्याश्च पुस्फुरुः ।
मासैः पञ्चषडैरेव नानालिपिविशारदः ॥ ४

नानालिपिसमायुक्तपत्रिकावचनोद्धतः ।
अभूत्तदा वेदशास्त्राण्यपि देशिकसन्निधेः ॥ ५

अनायासेन चाद्ध्यैष्ट गुरुसान्निध्यमात्रतः ।
शस्त्रास्त्रविद्याचातुर्यादत्यशेत धनञ्जयम् ॥ ६

स्वयं प्रभातविद्यस्य तस्य चैवं तनूभुवः ।
आविरासीच्च तारुण्यमद्भुतं मदनस्य च ॥ ७

ततो जयन्तः पुत्रस्य मनोभववशंवदम् ।
वयस्समीक्ष्य वैवाहे प्रावर्तत विधौ मनः ॥ ८

नानादेशेषु वै राज्ञां कन्यास्सौन्दर्यशालिनीः ।
विचारयामास नृपो जयन्तश्चारसंसदा ॥ ९

ततस्त्रयोदशे वर्षे त्वङ्गराजतनूभुवम् ।
सौन्दर्येणानवद्याङ्गीं सर्वकन्योत्तमोत्तमाम् ॥ १०

निश्चित्य तां समुद्वोढुं जयन्तः कृतनिश्चयः ।
अभ्यर्थितोऽङ्गराजेन मन्त्रिभिश्चानुमोदितः ॥ ११

सुवृत्तां नाम तां कन्यामङ्गराजस्य धीमतः । १२
प्रतस्थे शीघ्रमुद्वोढुं गजैरश्वैः पदातिभिः ॥

*''அத்தியாயம்'' - 37*

*கருவறைத் தூய்மை பெற்ற மனைவியுடன் சுவேதமலைநாதனை விஷ்ணுவின் அருளால் பிறந்ததால் மகனுக்கு சுவேதகேது எனப் பெயரிட்டான். குழந்தை வளர்ந்தது. சௌளமும் உபநயனமும் நடந்தன. குருகுலத்தில் அக்ஷராப்பியாஸம் எனத் தொடங்கியதும் குருவின் அருகாமையால் 5-6 மாத அளவிலேயே எல்லா லிபிகளையும் கற்று எல்லாகல்வித்துறைகளிலும் ஆயாஸமின்றி தேர்ந்தவனானான். சஸ்திர - அஸ்திரப் பயிற்சி முடிந்ததும் மணவயது நெருங்க, அரசன் பெண் தேடினான். அங்க தேசத்தரசனின் மகள் ஸுவ்ருத்தா, பேரழகி சுவேதகேதுவுக்கேற்றவள் எனக்கண்டு அங்கநாட்டரசனின் அழைப்பை ஏற்று சேனைபரிவாரம் உறவினர் சிற்றரசர்களுடன் புறப்பட்டான். (1-12)*

नानादेशनृपालैश्च बन्धुवर्गैस्समन्वितः ।
प्रयाणपटहध्वानैर्दिगन्तं बधिरीकृतम् ॥ १३

सेनाभिश्चतुरङ्गाभिर्गच्छन्तं पृथिवीपतिम् ।
जयन्तं सुरथो नाम नृपोऽङ्गानामधीश्वरः ॥ १४

अभ्युद्गम्य स्वसेनाभिः स्वीयन्नगरमानयत् ।
नानालङ्कारसंयुक्तं नानातोरणशोभितम् ॥ १५

हर्म्यैरभ्रंलिहैस्सौधैः क्रीडाशैलैश्च राजितम् ।
उत्तुङ्गचन्द्रशालाभिः सुधाधवलकान्तिभिः ॥ १६

पार्श्वद्वयस्थलरथप्रत्युप्तमुकुरालिभिः ।
वीधिकाभिश्च बह्वीभिर्विभासुरमुदंशुभिः ॥ १७

प्रविश्य नगरं राजा बहुमानपुरस्सरम् ।
पार्श्वद्वयमहासौधवातायनलसद्दृशाम् ॥ १८

सुदृशां नेत्रशोभाभिर्बद्धेन्दीवरतोरणम् ।
तत्कृतां पुष्पवृष्टिश्च पश्यन्मन्दं ययौ नृपः ॥ १९

सुरथस्य गृहद्वारि जयन्तः श्वेतकेतुना ।
अवरुह्य गजस्कन्धादवलम्ब्याप्तयोः करौ ॥ २०

*ஸுரதன் என்ற அங்கதேசத்தரசன் தன் சேனைகளுடன் முன்னின்று வரவேற்க அங்கத்தலைநகர்சேர்ந்தான். நகரம் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. வானளாவிய மாளிகைகள், விளையாட்டுத்திடல்கள், வீதியின் இருமருங்கிலும் கண்ணாடி பதித்த மாளிகைகள், மாளிகைகளின் உப்பரிகையிலிருந்தவாறு அழகியவரனைக் கண்டு மகிழ்ந்த பெண்கள் பூமாரி பொழிய ஸுரதனின் அரண்மனைவாயிலில் ஜயந்தன் சுவேத கேதுவுடன் யானையின் தோளிலிருந்து கைத்தாங்கலாக இறங்கிக் கல்யாணமண்டபத்தை அடைந்தான். (13-20)*

अन्तः प्रविश्य कल्याणवेदिकां हारमौक्तिकैः ।
वितानितां मल्लिकाभिश्चम्पकैर्वकुलादिभिः ॥ २१

अभ्येत्य रत्नपीठे स निषसाद नृपाग्रणीः ।
श्वेतकेतुश्च कल्याणपीठे मणिविभासुरे ॥ २२

न्यवसन् पुनरन्ये च राजानो विष्टरेष्वथ ।
यथार्हं न्यवसन् पश्चाद्विध्युक्तेनैव वर्त्मना ॥ २३

पाणिञ्जग्राह तनयो राज्ञः शुभमुहूर्तके ।
स्रक्चन्दनाद्यैस्ताम्बूलैः भूषणैः मृदुलाम्बरैः ॥ २४

सर्वान् सम्भावयामास सुरथः पार्थिवोत्तमान् ।
पुरं प्रदक्षिणीकृत्य कृत्वाऽन्यानुत्सवानपि ॥ २५

अङ्गीकुर्वन्बहुमतिं सुरथेन कृतां च सः ।
सुवृत्तया च स्नुषया सुतेन श्वेतकेतुना ॥ २६

बान्धवैरनुयातैश्च चतुरङ्गैश्च सैनिकैः ।
निर्गत्य स्वपुरं यातो जयन्तः पार्थिवाग्रणीः ॥ २७

पुनः स्वस्मिन्नपि पुरे कृतानेकविधोत्सवः ।
जयन्तः कृतकृत्यस्स मुदं लेभे परात्परम् ॥ २८

इति सप्तत्रिंशोऽध्यायः

—★—

*மேல்விரிப்பு, பூப்பந்தல், ரத்னமாலைகளாலான தொங்கட்டான். இவற்றால் அழகிய மண்டபத்தில் நடுவில் ரத்னபீடத்தின் மீது ஜயந்தனும் விவாஹபீடத்தில் சுவேதகேதுவும் அமர்ந்தனர். மற்ற அரசர்களும் சுற்றி அமர்ந்தனர். முறைப்படி திருமணம் நடந்தது. நல்ல வேளையில் ஸுவ்ருத்தாவின் கையை சுவேத கேது பிடித்தமர்ந்தான். ஸுரதன் எல்லோருக்கும் விருந்தளித்தான். நகரவலம் வந்து விழாவை முடித்து ஸுரதனின் வெகுமதிப்புடன் ஸ்ரீதனம் ஏற்று, ஸுவிருத்தை - சுவேதகேது தம்பதியருடன் ஜயந்தன் நாடு திரும்பி நாட்டிலும் கல்யாண விழா கொண்டாடி மகிழ்ந்தான். (21-28)*

## अष्टत्रिंशोऽध्यायः

सूतः—

एवं प्रमुदितस्यास्य जयन्तस्य धरेशितुः ।
कदाचिद्गृहमायातो नारदो वैणिको मुनिः ।। १

तमागतं समुद्वीक्ष्य भक्त्या परमया युतः ।
अर्घ्यपाद्यादिभिः पूजामातनोन्नृपसत्तमः ।। २

राजर्षिं प्रति देवर्षिस्ततो वचनमब्रवीत् ।
भाविज्ञानविशून्येन भवता किं कृतं नृप ।। ३

अङ्गराजस्य तनया सुवृत्तापि वृथा कृता ।
जयन्तः कर्णनाराचकल्पां सुरमुनेर्गिरम् ।। ४

आकर्ण्य मूर्च्छामगमल्लब्धसंज्ञस्ततः शनैः ।
वर्षन्नश्रूणि चाक्षिभ्यां नारदं पर्यपृच्छत ।। ५

सर्वस्य करुणामूर्ते किमुक्तं भवताऽधुना ।
व्यक्तं ब्रूहि त्वमेनं मां रक्षितुं हि समागतः ।। ६

नारदः-

राजन् पञ्चदशे वर्षे तव पुत्रस्य धीमतः ।
अपमृत्युस्स केनापि विधिना चेन्निवारितः ।। ७

एकोनविंशे वर्षे तु कालमृत्युर्ध्रुवं भवेत् ।
विष्णुं शिवं वाऽराध्य त्वं परिहर्तुं तदर्हसि ।। ८

निवेदनाय कार्यस्य भाविनोऽहं समागतः ।
मा विलम्बस्व मद्वाक्यं पथ्यमूरीकुरुष्व च ।। ९

इत्युक्त्वा नारदो वाक्यं शीघ्रमन्तर्द्धिमातनोत् ।

''அத்தியாயம்'' - 38

ஒருநாள் ஜயந்தனைக் காண வீணைமுனிவர் நாரதர் வந்தார். அரசன் முறைப்படி வரவேற்று அவரை உபசரித்தான். நாரதர் கூறினார் - அரசரே! வருங்காலத்தையறியாமல் வீணே மகனுக்கு மணம் முடித்தீர். அங்கராஜனின் மகள் ஸுவிருத்தையின் வாழ்வும் வீணானதே என்றார். அரசன் திகைத்து விவரமறிய விரும்பினான். நாரதர் விவரித்தார் - அரசே! பதினைந்தாவது வயதில் உம் மகனுக்கு அபமிருத்யு நேரும். அதனை பரிஹாரம் செய்து தடுத்தால் 19வது வயதில் காலமரணம் நேரும். விஷ்ணுவையோ, சிவனையோ வழிபடுவீர். பின்நேரவிருக்கிற துன்பத்தைத் தெரிவிக்கவே வந்தேன். நான் சொல்வதை ஏற்று பரிஹாரம் காண்பீர் என்று கூறிச் சென்றார். (1-9)

गते तस्मिन्नारदे तु जयन्तो नृपसत्तमः ॥ १०

श्वेतकेतुं समुद्वीक्ष्य पुत्रं सौन्दर्यशालिनम् ।
सर्वदोषविनिर्मुक्तं सर्वसद्गुणभूषणम् ॥ ११

सदा स्मेरमुखं सौम्यं क्रोधलोभविवर्जितम् ।
पितृशुश्रूषणोद्युक्तं मातृशुश्रूषणे रतम् ॥ १२

प्रसन्नवदनाम्भोजं पद्मपत्रायतेक्षणम् ।
कम्बुग्रीवं महास्कन्धं विशालोन्नतवक्षसम् ॥ १३

पीतकौशेयवसनं कन्दर्पायुतसुन्दरम् ।
धैर्यमालम्बितुं किञ्चिन्न शशाक महीपतिः ॥ १४

अश्रूणि मुञ्चन्नक्षिभ्यामतिदीर्घं विनिश्वसन् ।
शोकाग्निज्वालयोद्विग्नो भार्यामालोक्य चाब्रवीत् ॥ १५

श्वेताद्रिनाथमुद्दिश्य किमर्थं चरितं तपः ।
किमर्थमयमायातः पुत्रः शोकाय केवलम् ॥ १६

एवं हि नारदेनोक्तं धर्मपत्नि ! ममाग्रतः ।
वर्षे पञ्चदशे सूनोरपमृत्युर्भविष्यति ॥ १७

तस्य चेत्परिहारः स्यात् केनापि विधिना पुनः ।
एकोनविंशे वर्षे तु कालमृत्युर्भवेदिति ॥ १८

न मृषा क्वचिदप्यस्य नारदस्य वचो भवेत् ।
मया पातकिनामग्रेसरेण कलितं तपः ॥ १९

फलितं मा भवेत्त्वेषा त्वया सुचरिते कृता ।
तपश्चर्या कथं नाम न फलं जनयिष्यति ॥ २०

ब्राह्मणाः पूजितास्सम्यक् धनधान्याम्बरादिभिः ।
कृतानि च महादानान्युचितप्रीतिकाम्यया ॥ २१

पातिव्रत्यव्रतं सम्यगवैकल्यमनुष्ठितम् ।
मम पूर्वं न निद्रासि मम पश्चान्न बुद्ध्यसे ॥ २२

यत्तन्ममाभिलषितं तत्तदाचरसि प्रिये ।
परेषामुपकाराय प्रीतिकारायतेनवत् ॥ २३

त्वयाननुष्ठितो धर्मो नास्ति स्मृतिपुराणयोः ।
तथापि तव केनेदं दुःखं प्राप्तं महत्तरम् ॥ २४

सर्वज्ञमभिरूपञ्च समग्रगुणसम्पदम् ।
पुत्रमेवंविधं मृत्योर्दत्वा हस्ते कथं हि नौ ॥ २५

प्राणा न निर्गमिष्यन्ति कठोरमनसोरपि ।

அழகிய மகன், குறையேதுமில்லாதவன், நற்குணங்கள் நிரம்பிய புன்சிரிப்புள்ள முகம், கோபமோ பேராசையோ அற்றவன். பெற்ருேருக்குப் பணிவிடை புரிபவன், தெளிந்தமுகம், தாமரை போன்ற கண்கள், சங்கு போன்ற கழுத்து, பெருந்தோள் விரிந்த மேடிட்ட மார்பு, பல்லாயிர மன்மதர்களுக்கு நிகரான அழகு, இத்தகைய சிறப்பு கொண்ட மகனை இழப்பதா என தைரியமிழந்து கண்ணீர் மல்க, பெருமூச்சுடன் துயரத்தீ வாட்ட, மனைவியிடம் சொன்ஞன் - வெண்மலை நாதனை வழிபட்டு ஏன் மகனைப் பெற்றேன்? துயரமடைய மகன்தேவையோ? ஏனிவன் பிறந்தான்? பதினைந்து வயதில் அபமிருத்யு அல்லது பத்தொன்பது வயதில் காலமரணம் என நாரதர் கூறியது வீணாகாது, நான் பெரும்பாபி! நான் செய்த தவம் வீணே! ஸுசரிதே! நீ செய்த தவமும் வீணாயிற்றே! வேதியரை தனம் தானியம் ஆடை வழங்கி வழிப்பட்டேன். நீயும் பதிவிரதாதர்மத்தை நன்கு பின்பற்றி நடந்தாய்! எனக்கு முன் நீதூங்குவதில்லை. என் விருப்பத்தை நிறைவுறச்செய்கிருய்.! பிறருக்கு உதவிஞய். எல்லோருடனும் இனிது பழகிஞய்! ஏன் இந்த துக்கம் நேர்கிறது? எல்லாமறிந்த ஞானியான சிறந்த குணசாலியான மகனை யமனுக்கு அளிப்பதா? இருவரது மனமும் கடுமைமிக்கது அதஞல் உயிர் நீங்கவில்லை எனப்புலம்பிஞன். *(10-25)*

इति वाक्यं सुचरिता पत्युराकर्ण्य मूर्छिता ॥ २६

श्वेतकेतोस्सुतस्याङ्के निपत्य स्रस्तकैशिका ।
पृथ्वीभिरश्रुधाराभिः प्लावयन्ती सुताङ्गकम् ॥ २७

रुरोदोच्चैर्व्याधबाणविद्धेव कुररी शिशुम् ।
विहर्तुं सवयोभिस्त्वं याते सति बहिः क्वचित् ॥ २८

व्यथामेष्यति मच्चित्तं पुनरागमनिश्चयात् ।
पुनश्शाम्यति तादृक्षे त्वयि मृत्युवशं गते ॥ २९

कथं मे सहते चेतः पुनरावृत्य भावतः ।
बहुधा विलपन्तीं तां पत्नीं सुचरितां नृपः ॥ ३०

स्वयं धैर्यं समालम्ब्य वाचमेवमवोचत ।
मा विषादं प्रिये ! याहि नारदेनैव तेन हि ॥ ३१

विपदः परिहारोऽपि कीर्तितस्तत्वदर्शिना ।
एतद्भयनिवृत्त्यर्थं विष्णुं वा शिवमेव वा ॥ ३२

भक्त्या भजस्व सुदृढं विपत्परिहृता भवेत् ।
इत्युक्तं नारदवचो नान्यथाऽद्य भविष्यति ॥ ३३

तस्मादाकाशनगरमेष्यामः सिद्धिदायकम् ।
वितीर्णतनयं देवं तत्र श्वेताद्रिनायकम् ॥ ३४

तपसा तोषयिष्यामः पृच्छामो दुःखकारणम् ।
इति निश्चित्य नृपतिर्जयन्तो मन्त्रिणः स्वके ॥ ३५

राज्ये तत्र स्थापयित्वा गृहीत्वा च धनं बहु ।
सकुटुम्बः प्रतस्थे च यत्र श्वेताद्रिनायकः ॥ ३६

इति अष्टत्रिंशोऽध्यायः

இதனைக் கேட்ட ஸுசரிதா தன்மகன் சுவேதகேதுவை மடியில் கிடத்திக் கொண்டு அழுதாள். ''நீ சிறிது நேரம் தோழர்களுடன் விளையாட வெளியாடச் சென்றாலே துடிப்பேன். நீ வந்து விடுவாய் என நம்பி ஆறுதலடைவேன். இன்று நீ மரணமடைந்து பிரிந்தால் அதனை எவ்வாறு தாங்குவேன் எனப்புலம்பினாள். அரசன் சிறிது தைரியமடைந்து'' நாரதர் கூறியபடி பரிஹாரம் செய்வோம். விஷ்ணுவையோ சிவனையோ வழிபடுவோம். விபத்தைத்தவிர்ப்போம். ஆகாசநகரம் செல்வோம். கண்ணை சிவனுக்கு அளித்த வெள்ளை மலைநாயகனை

*வழிபட்டுத்துக்கத்தின் காரணத்தை அறிந்து கொள்வோம் என்றான். மந்திரிகளிடம் அரசின் பொறுப்பை ஒப்படைத்து நிறைய தனம் எடுத்துக் கொண்டு சுவேதாசல நாயகனை நோக்கிச் சென்றான். (26-36)*

—★—

## एकोनचत्वारिंशोऽध्यायः

तत्र गत्वा विधानेन स्नात्वा तीर्थेषु पूर्ववत् ।
स्थित्वा पञ्चाग्निमध्ये च तपस्तेपे सुदुश्चरम् ॥ १

पत्नी च तस्य तनयो जयन्तस्य तपस्यतः ।
शुश्रूषणमतन्वातां क्लेशयित्वा वपुर्मृदु ॥ २

गतेषु केषु चिद्वर्षेष्वथ श्वेताद्रिनायकः ।
प्रादुरासीत्पुरस्तस्य भगवानिन्दिरापतिः ॥ ३

आविर्भूतं जयन्तस्तु भगवन्तं निरीक्ष्य सः ।
पादयोः प्रणिपत्याशु बाष्पवर्षं दृशोर्व्यधात् ॥ ४

दत्तं वरं कथं स्वामिन् भवताऽतिकृपालुना ।
आचन्द्रार्कस्थिरतरं तव कार्यं हि सर्वतः ॥ ५

कथं मय्यधुना दीने वैपरीत्यमजायत ।
इति क्रोशन् रुरोदोच्चैर्जयन्तो भृशदुःखितः ॥ ६

तदा तं विष्णुराश्वास्य वाचा मधुरयाऽब्रवीत् ।
विष्णुः—
सौन्दर्यशालिनं पुत्रं देहीत्येव हि याचितम् ॥ ७

न तु दीर्घायुषमिति तदौदासीन्यतया मया ।
दत्तः सौन्दर्यशाली च पुत्रोऽयन्तु कथं मयि ॥ ८

विचार्यमाणे पुत्रस्स पूर्वजन्मनि बालकान् ।
नदीतीरे कूपतटे परिक्रीडनतत्परान् ॥ ९

पातयामास हस्ताभ्यां कूपे नद्यास्तथाऽम्भसि ।
ईदृशा बालसंहारकर्मणाऽल्पायुरास सः ॥ १०

प्राग्जन्मनि भवानासीत् पाञ्चालानामधीश्वरः ।
कदाचिन्मृगयासक्त्या कान्तारं गहनं गतः ॥ ११

तदाश्रमात्तु वासिष्ठात् कस्य चिज्जरतो मुनेः ।
पुत्रो माणवकः पित्रोः शिवपूजार्थमादरात् ॥ १२

शीतबाधानिवृत्त्यर्थमेणचर्मावृताङ्गकः ।
पुष्पाण्याहर्तुकामःसन् तद्वनं प्रविवेश ह ॥ १३

तदा त्वमैणं तच्चर्म दृष्ट्वैणभ्रान्तिमावहन् ।
धनुष्यमोघं सन्धाय बाणं तस्मिन्विसृष्टवान् ॥ १४

तद्बाणेन हतस्सोऽभूद्वृद्धतापसयोस्सुतः ।
एतादृशं पुत्रशोकं तयोः कृतवतस्तव ॥ १५

ब्रह्महत्या विष्णुतीर्थस्नानमात्रेण मोचिता ।
पुत्रशोकस्तु दुर्वारस्तवाद्य समुपस्थितः ॥ १६

अनिवार्यस्य शोकस्य पात्रभूतौ युवां ध्रुवम् ।
तथापि वक्ष्ये शोकस्य निस्तारोपायमद्य वाम् ॥ १७

मम पूजा हि राजर्षे तथा प्रियकरी न मे ।
यथा हि शिवपूजा सा भक्त्या परमया कृता ॥ १८

युवामद्यप्रभृति तन्मम पूजां विहाय च ।
अन्तकान्तकमीशानं मन्नेत्रकमलार्चितम् ॥ १९

दयालुं तेजिनीनाथं गिरितुङ्गकुचाम्बया ।
नित्यं नियमसंयुक्तौ भक्त्या पूजयतां शिवः ॥ २०

स एव सर्वं विपदमपनेष्यति शङ्करः ।
मया तु साध्यमेतावदाकर्णय नृपोत्तम ! ॥ २१

वर्षे पञ्चदशे योऽसावपमृत्युर्भविष्यति ।
तस्याऽहं परिहारन्तु वदामि शृणु पार्थिव ॥ २२

अपमृत्युभटा ये तु त्वत्पुत्रस्य महामतेः ।
आगच्छन्ति पुरस्तात्ते यान्तु प्रत्यक्षगोचराः ॥ २३

अभियान्तमनीकैस्त्वां दृष्ट्वा सन्तु पलायिताः ।
अपमृत्युभये नष्टे निर्वृतिं यास्यसि ध्रुवम् ॥ २४

''அத்தியாயம்'' - 39

ஜயந்தன் எல்லா தீர்த்தங்களிலும் நீராடி 5 அக்னி குண்டங்களுக்கிடையே தவம் செய்தான். மனைவியும் மகனும் பணிவிடை புரிந்தனர். தவத்தால் மகிழ்ந்த ஹரிமுன் தோன்றியதும் அரசன் வணங்கிக் கண்ணீர் மல்க வேண்டினன்- ஸ்வாமி! நீர்! அளித்தவரம் சந்திர - ஸூர்யர்கள் உள்ளவரை நிலைத்திருக்கும். எளியவனுன என்னிடம் மட்டும் அது ஏன் மாறுபட்டது? எனக் கேட்டான். விஷ்ணு அவனுக்கு ஆறுதலளித்து அழகிய மகனை அருளக்கோரினய். நீண்ட ஆயுளுள்ளவனை நீ வேண்டவில்லை. இவன் முன் பிறவியில் சிறுவர்களை ஆற்றங்கரைக்கும் கிணற்று மேட்டிற்கும் அழைத்துச் சென்று ஆற்றிலும் கிணற்றிலும் தள்ளிக் கொல்வான். நீயும் முன் பிறப்பில் பாஞ்சால அரசனுக வேட்டையாட காட்டிற்குள் நுழைந்தவன் அருகிலிருந்த வஸிஷ்டரின் ஆசிரமத்திலிருந்து

வெளியேறிய ஒருகிழ முனிவரின் மகனை அவன் இடுப்பிலிருந்த மான் தோலாடையால் மான் எனத் தவருக எண்ணிக்குறி வைத்துமாய்த்தாய். அதனால் இந்த புத்திர சோகம் உன்னைத் தாக்க உள்ளது. இதற்கு பரிஹாரம் கூறுகிறேன். எனக்குத் தனித்துப் பூஜையை விட சிவபூஜையைப் பெரிதாக மதிக்கிறேன். அதனால் என் கண் பூவால் அர்ச்சிக்கப்பெற்ற ஈசனை இன்றிலிருந்து சிறந்த பக்தியுடன் தேவியுடன் வழிபடுவீர். அவரே உங்களை விபத்திலிருந்து மீட்பார். இவனது 15வது வயதில் நேரவிருக்கிற அபமிருத்யுவிற்குப் பரிஹாரம் கூறுகிறேன் யமபடர்கள் உன் மகனைக் கொல்லவரும் போது அவர்கள் உங்கள் கண்களுக்குப் புலப்படுவார்கள். நீ உன் படையுடன் எதிர்ப்பாய். அவர்கள் பயந்து ஓடுவார்கள். அபமிருத்யுபயம் நீங்கும். நீ அமைதி பெறுவாய். *(1-24)*

तत एकोनविंशे तु वर्षे तव सुतस्य यः ।
कालमृत्युस्समागच्छेत्त्वं तवात्मज एव सः ॥ २५

शुश्रूषितश्श्वेतकेतुर्धर्मपत्न्या सवृत्तया ।
मृत्युञ्जयं समाराध्य त्रिसन्ध्यं परिपूज्य च ॥ २६

तपसा तोषयित्वा च कालमृत्युं निरस्यति ।
अत्राहमपि साहाय्यं करोमि नृप मा शुचः ॥ २७

सर्वं सहे भक्तजनोद्वेगं सोढुं न शक्नुयाम् ।
सत्यमुक्तं महाभाग ! मदुक्तं तं तथा कुरु ॥ २८

इत्युक्त्वा भक्तवात्सल्यात् पुनरन्तर्दधे हरिः ।

इति एकोनचत्वारिंशोऽध्यायः

உன் மகனின் 21வது வயதில் நேரவிருக்கிற காலமரணத்தை, உன் மகன் சுவேதகேதுவே தன் மனைவி ஸுவிருத்தையுடன் மிருத்யுஞ்ஜயப் பெருமானை வழிபட்டுத் தவத்தால் திருப்தியுறச் செய்து காலமரணத்தை வெல்வான்.

அதற்கும் நான் உதவுவேன். எல்லாவற்றையும் என்னால் பொறுத்துக் கொள்ள முடியும். ஆனால் பக்தர் துன்புறுவதைத் தாங்க இயலாது. என் சொல்படி நடப்பாய், எனக் கூறி பக்தவத்ஸலனான ஹரி மறைந்தார். (25-28)

—★—

## चत्वारिंशोऽध्यायः

जयन्तस्तु ततोऽगस्त्यं देशिकं परिचर्यया ।
प्रीणयित्वा तन्मुखेन भस्मरुद्राक्षयोर्विधिम् ॥ १

शिवपूजाविधानञ्च जग्राहान्यानपि क्रमात् ।
तेन च ग्राहयामास पुत्रेण श्वेतकेतुना ॥ २

अगस्त्यस्यानुग्रहेण भयमर्धमपास्यत ।
शिवलिङ्गार्चनाधौरन्धुर्येण तु पुनस्तयोः ॥ ३

जयन्तश्वेतयोर्मृत्युभयं सर्वमपास्यत ।
पञ्चाक्षरदृढासक्त्योर्भस्मरुद्राक्षधारिणोः ॥ ४

शिवपूजातत्परयोर्जयन्तश्वेतयोर्मनः ।
गाढसन्त्रासनिर्मुक्तं किञ्चिन्मुदितमप्यभूत् ॥ ५

''அத்தியாயம்'' - 40

ஜயந்தன் அகஸ்திய முனிவரை அணுகி பஸ்ம - ருத்ராக்ஷ தாரண முறையையும் சிவனது வழிபாட்டு முறையையும் அறிந்து தன் மகன் சுவேதகேதுவிற்கும் உணர்த்தி பயம் நீங்கினவனாக, சிவலிங்க அர்ச்சனையில் முனைந்தான். ஜயந்தனுக்கும் சுவேதகேதுவிற்கும் மரணத்திலிருந்த பயம் நீங்கியது. பஞ்சாக்ஷர ஜபத்தில் திடத்துடன் முனைந்து, பஸ்மருத்ராக்ஷங்கள் தரித்து சிவபூஜையில் ஈடுபட்ட இவர்களின் மனம் சிறிது ஸந்தோஷமடைந்தது. (1-5)

ततः कतिपयैरेव वासरैर्गुणशालिनः ।
श्वेतकेतोस्सुवृत्तायाः पत्न्या आसीद्दतूत्सवः ॥ ६

कल्याणार्थमपि स्वीयं नगरं नाप पार्थिवः ।
तन्मन्त्रिणस्तद्विज्ञाय धनभूषणपेटिकाः ॥ ७

वाहयित्वा गजैरश्वैःसेनाभिश्च समागमन् ।
आगम्याकाशनगरे नानाहर्म्यविराजितम् ॥ ८

चन्द्रकान्तशिलागुप्तचन्द्रशालाविराजितम् ।
देवेन्द्रभवनप्रख्यं राजगेहं विनिर्ममुः ॥ ९

तस्मिन्गेहे प्रविशति जयन्ते श्वेतकेतुना ।
अङ्गाधिराजः सुरथोऽप्यागतः सेनया सह ॥ १०

जयन्तस्य यथा शक्रो जयन्तः स्वात्मजन्मनः ।
श्वेतकेतोस्तु कल्याणं ससंभ्रममकारयत् ॥ ११

सुवृत्तायाः स्वकन्यायाः सुरथोऽपि महीपतिः ।
भूषणादीन्यनर्घाणि जामातुश्च ददौ तदा । १२

*சிலநாட்களில் சுவேதகேதுவின் மனைவி ஸுவிருத்தை பூப்பெய்தினாள். இதனைக் கொண்டாட அரசன் தன் நகருக்குச் செல்லாதிருந்தான். மந்திரிகள் இதனை அறிந்து தனமும் நகையும் நிரப்பிய பெட்டியை வீழிக்காட்டிற்கே கொண்டு வந்தனர். பெரும்படைகளுடன் வந்த மந்திரிகள் வீழிக்காட்டில் அரசருக்கு அழகிய பெருமாளிகை அமைத்துத் தந்தனர். அந்த மாளிகையினுள் நல்ல வேளையில் குடிபுகவிருந்த சமயத்தில் ஸுரதனும் தன்மகளுக்கும் மாப்பிள்ளைக்கும் புத்தாடையாபரணங்களை அளித்து மகிழ்ந்தனர். (6-12)*

अस्मिन्नवसरे घोरा अपमृत्युभटाः क्रुधा ।
आरक्तनयनज्वाला दीप्तकेशा भयङ्कराः ॥ १३

दंष्ट्राकरालवदना महाकाया महास्वनाः ।
आगच्छन्नथ तेऽमीषामागच्छन्दृष्टिगोचराः ॥ १४

कुत्रास्ते श्वेतकेतुस्तं प्रहराहर ताडय ।
पाशैर्बध्वा च कर्षेति वाचोऽपि श्रुतिगोचराः ॥ १५

जयन्तस्तु ततो विष्णोर्वाक्यविश्वासतो भयम् ।
सन्तज्य धैर्यमालम्ब्य खड्गपाणिस्तुरङ्गमम् ॥ १६

आरुह्य सेनाः सन्नाह्य तान् भटानभ्यधावत ।
विष्णुश्च सर्वसेनानामुत्साहं हृदये बलम् ॥ १७

जनयामास तेनैतास्सेनास्तानभिदुद्रुवुः ।
जयन्तस्य श्वेतकेतोःशिवपूजाप्रभावतः ॥ १८

तद्भटाः कालरुद्राभा बभूवुश्च भयङ्कराः ।
भटा मृत्योस्तु तान्दृष्ट्वा पलायन्तेऽतिवेगतः ॥ १९

*அதே சமயத்தில் அபமிருத்யுவின் படைவீரர்களும் கண்கள் சிவக்க பயங்கரத் தோற்றத்துடன் பெரும் சரீரம் கொண்டவர்களாக வந்து ச்வேதகேது எங்கே! அவனைப்பிடியுங்கள்! அடியுங்கள்! கொல்லுங்கள்! பாசத்தால் கட்டி இழுங்கள் என உரக்கக் கூவினர். ஜயந்தனோ விஷ்ணுவின் ஆசிச்சொல்லை நம்பி படைகளுக்கு உற்சாக மூட்டி கத்தி ஏந்திக் குதிரை மீதமர்ந்து யமபடர்களைத் தாக்க முற்பட்டான். விஷ்ணு அவர்களின் உள்ளத்திலமர்ந்து வலிவூட்டினார். ஜயந்தனும் சுவேதகேதுவும் புரிந்த வழிபாட்டின் பயனாக யமபடர்களின் கண்களில் அரசரின் படைவீரர்கள் பயங்கரமாகத் தோன்றியதால் யமபடர்கள் ஓடி மறைந்தனர். (13-19)*

कल्याणवेदिकामध्ये पत्न्या साकं सुवृत्तया ।
श्वेतकेतुं समासीनमाक्रष्टुं पाशपाणिषु ॥ २०

भटेषु मृत्योरायातेष्वन्तकान्तकसंस्मृतेः ।
पलायितेषु वेगेन जयन्तो हृष्टमानसः ॥ २१

कल्याणशेषं निर्वर्त्य प्रेषयित्वा समागतान् ।
बहुमानेन सर्वानप्यथ पूर्ववदेव तौ ॥ २२

जयन्तः श्वेतकेतुश्च शिवपूजापरायणौ ।
अभूतां शिवभक्तस्य श्वेतकेतोर्दिने दिने ॥ २३

दृष्टः प्रत्ययतः पश्चाद्भक्तेर्दार्ढ्यमजायत ।
अग्रणीः शिवभक्तानामथ श्वेतं प्रहृष्टधीः ॥ २४

पुरे कोशगतं सर्वं धनजातमुपानयत् ।
कैङ्कर्यं कारयामास तेजिनीविपिनेशितुः ॥ २५

प्राकारगोपुरादीनि मण्टपानि विशेषतः ।
पूजां सहस्रगुणितां कारयामास पूर्वतः ॥ २६

*யமபடர்கள் ஓடி மறைந்ததைக் கண்ட அரசன் பூப்புவிழா மண்டபத்தில் ஸுவிருத்தையுடன் அமர்ந்திருந்த சுவேதகேதுவைக் கண்டு மகிழ்ந்தான். விழாவை நிறைவுறச் செய்து விருந்தினரை உபசரித்து விடைதந்து அனுப்பி விட்டு மறுபடி அவர்கள் சிவபூஜையில் ஈடுபட்டனர். சுவேதகேதுவிற்கு நம்பிக்கை வளர்ந்தது. பக்தி திடப்பட்டதும் நாட்டிலிருந்து பெரும் தனத்தைக் கொணர்ந்து வீழிநாதனின் கைங்கரியத்தில் ஈடுபட்டு பிராகாரம் கோபுரம் மண்டபம் விமானம் முதலியவற்றைச் சீரமைத்துத் தினசரி வழிபாட்டை முன்னை விட ஆயிரமடங்கு அதிகரிக்கச் செய்தான். (20-26)*

तेजिनीशप्रसादाय ब्राह्मणान् प्रत्यतिष्ठिपत् ।
मठान्यतिवराणाञ्च कारयामास विस्तृतान् ॥ २७

आतनोद्विविधं सत्रं ब्राह्मणानाञ्च भुक्तये ।
तीर्थानां तीरबन्धञ्च पुष्पारामांस्तथा बहून् ॥ २८

एवमाचरतस्तस्य षट्कालं चन्द्रशेखरम् ।
साम्बं पूजयतो भक्त्या दृढयाऽनन्यलभ्यया ॥ २९

अष्टादश व्यतीयुश्च वत्सराः बुद्धिशालिनः ।
अनन्तरं कालमृत्युं प्रत्यासन्नं विचिन्तयन् ॥ ३०

श्वेतकेतुर्निराहारश्चैकाग्रो विजितेन्द्रियः ।
शिवमूर्तिं विहायान्यं मनसाऽपि न चिन्तयन् ॥ ३१

निश्चलो निर्विकारश्च शिलाकाष्ठसमाकृतिः ।
शिवपूजावसानैकवश्यपाणिसरोरुहः ।
एवमेव स्थिरश्चासीच्छिवपूजापरायणः ॥ ३२

भस्मत्रिपुण्ड्रभृतभासुरफालदेशो
रुद्राक्षमौक्तिकमनोहरमल्लिकाढ्यः ।
पञ्चाक्षरीजपपरिस्फुरिताधरोष्ठः
स श्वेतकेतुरभवच्छिवभक्तमौलिः ॥ ३३

इति चत्वारिंशोऽध्यायः ।

—★—

ஈசனை வழிபடமேலும் பல அந்தணர்களை நியமித்தான். துறவிகளுக்கு மடங்கள் கட்டினான். உணவுச்சத்திரங்களை ஆங்காங்கு நிறுவினான். தீர்த்தக்கரைகளைச் சீரமைத்தான். பூந்தோட்டங்களை நிறுவினான். பக்தியுடன் வழிபட்டு வந்த

சுவேதகேதுவிற்கு 18 வயதுகள் நிரம்பின. காலமரணத்தை எதிர்நோக்கி விரதத்தைத் தீவிரப்படுத்தி. சிவனைத் தவிர வேறெதிலும் எண்ணத்தைச் செலுத்தாமல் சிலைபோல் கட்டைபோல் அசையாமல் தவமிருந்தான். விபூதிபூசிய நெற்றி, ருத்திராக்ஷ முத்துமாலை துலங்குகிற மார்பு, பஞ்சாக்ஷர ஜபத்தால் அசைகிற உதடு என சிவபக்தர்களில் தலைசிறந்தவனாக சுவேதகேது விளங்கினான். (27-33)

## एकचत्वारिंशोऽध्यायः

ततः कदाचिच्छ्वेताद्रिनाथो विष्णुः सनातनः ।
श्वेतकेतोः कालमृत्युं निवारयितुमुत्सुकः ॥ १

मर्त्यैरदृश्यमानस्सन् तेजिनीशं महेश्वरम् ।
सुमेरुतुङ्गकुचया वामाक्षीत्यपराख्यया ॥ २

मञ्चे मणिमये तुङ्गे समासीनं दयानिधिम् ।
उपाश्रयत्तदा देवी तमायान्तं व्यजिज्ञिपत् ॥ ३

शिवाक्षिकोणकलितेनेङ्गितेन तदा हरिः ।
उपसृत्य श्वेतकेतोर्भक्तिदार्ढ्यं व्यजिज्ञिपत् ॥ ४

त्वयीदृशं भक्तिदार्ढ्यं न कस्यापि महीतले ।
दृष्टं श्रुतं वात्याश्चर्यं न भूतं न भविष्यति ॥ ५

इति वाचं हरेः श्रुत्वा सन्दिहाने च शङ्करे ।
देवी वाचमुवाचेमां करुणापूर्णविग्रहा ॥ ६

श्वेतकेतोर्भक्तिदार्ढ्यं तथ्यं वाऽतथ्यमेव वा ।
अस्तु लक्ष्मीपतेर्वाक्यमनुष्ठेयं हि नस्सदा ॥ ७

इति देव्या वचः श्रुत्वा शिवे स्मेराननाम्बुजे ।
पतित्वा पादयोश्शम्भोर्विष्णुरेवं व्यजिज्ञपत् ॥ ८

भवतः करुणापात्रं यद्यहं स्यात्तदा विभो ।
भक्तिदार्ढ्यपरीक्षाऽद्य कर्तव्या तस्य मा चिरम् ॥ ९

*"அத்தியாயம்" - 41*

*சுவேதாத்ரி நாதனை விஷ்ணு சுவேதகேதுவின் மரண பயத்தை நீக்கத் தானே முன் வந்து ஸாந்தகுரசாம்பி கையுடனுள்ள தேஜினீவனேசரை அணுகினார். தேவி விஷ்ணுவின் வருகையைத் தெரிவிக்க சிவபெருமான் கண்ணசைப்பால் இங்கிதமாக வரவேற்க விஷ்ணு சுவேதகேதுவின் திடபக்தியைத் தெரிவித்தார். அத்தகைய பக்தியுள்ளவன் வேறில்லை என்றார். இதைப்பற்றி ஐயப்பட்ட ஈசனிடம் இவன்திட பக்தி உள்ளத்தைச் சோதிக்க இது நேரமில்லை. ஹரியின் வேண்டுகோளை ஏற்பதுதான் உகந்ததெனத் தேவி தெரிவிக்க மறுபடி விஷ்ணு தங்களது பரிவுக்கு நான் ஏற்றவனெனில் சுவேதகேதுவின் பக்தியின் திடத்தை இன்றே சோதிப்போம் எனக்கூறினார். (1-9)*

इति प्रसाद्य देवेशं देव्या सह रमापतिः ।
विमानाग्रं समुत्तुङ्गमारोप्य च वरासने ॥ १०

निवेश्य विनयोपेतो वाक्यमेतदुवाच ह ।
स्वामिन् तिलोत्तमामेनोर्वश्याद्याश्च सुराङ्गनाः ॥ ११

प्रेषणीया राजपुत्रमनःक्षोभाय साम्प्रतम् ।
नन्दिकेशमुखाश्चाद्य प्रेषणीया गणेश्वराः ॥ १२

भवान्देव्या सहात्रैव स्थित्वा तत्प्रेक्षतां मुदा ।
इति विज्ञापितो लक्ष्मीजानिना चन्द्रशेखरः ॥ १३

तथैव प्रेषयामास गणानप्सरसस्तथा ।
नातिदूरे ततो गत्वा नन्दीशप्रमुखा गणाः ॥ १४

श्वेतकेतोरप्सरसः प्रेषयामासुरन्तिकम् ।

*தேஜினீவனேசனும் தேவியும் விஷ்ணுவுடன் உயர்ந்த விமானமேறி வந்தனர். ஸ்வாமி! திலோத்தமை மேனகை ஊர்வசி முதலிய அப்ஸரப்பெண்களை சுவேதகேதுவை மயக்க அனுப்பி அதனைக் கண்காணிக்க நந்தி முதலானோரை அனுப்புவீர்! நீர் இங்கிருந்தே தேவியுடன் நிகழ்வதைக் காண்பீர் என விஷ்ணு விண்ணப்பித்தார்.* *(10-14)*

नन्दीश्वरनिदेशेन रम्भाद्यप्सरसां गणाः ॥ १५

नानाविधैर्विलासैश्च परिवव्रुर्नृपात्मजम् ।
काश्चित्कटाक्षविक्षेपैः कामसम्प्रेषणोन्मुखैः ॥ १६

पुरोमनःक्षोभकरैः परिहासविजल्पितैः ।
अपराः कुचकुम्भस्य दर्शनैरक्षिहारिभिः ॥ १७

शृङ्गारचेष्टितैः काश्चिच्चित्ताकर्षणतत्परैः ।
सर्वसंमोहनैरन्याः सङ्गीतागमकौशलैः ॥ १८

लास्यविद्याभिरितरा लम्पटाभिर्वशीकृतैः ।
लीलातामरसाघातैर्लीलावाक्यास्तु काश्चन ॥ १९

ग्राम्यसम्भाषणैः काश्चित् काममन्त्रैर्वशीकृतौ ।
एवमन्याभिरन्याश्च चेष्टाभिः परिवव्रिरे ॥ २०

वशीकृताः श्वेतकेतोः सौन्दर्येण वराङ्गनाः ।
वराङ्गनानां सौन्दर्यैर्नाचलत्तस्य मानसम् ॥ २१

तदाग्रतस्समागत्य रम्भा वचनमब्रवीत् ।
रम्भा -
अये ! राजकुले जन्म दुर्लभं तत्र चाधिकम् ॥ २२

ऐश्वर्यं दुर्लभं तत्राप्यङ्गसौन्दर्यमद्भुतम् ।
दुर्लभं तद्राजपुत्र विफलं कुरुषे कथम् ॥ २४

वयमप्सरसो दिव्या वरणीया दिवं गतैः ।
अस्मदाकांक्षया युद्धे प्राणान्मुञ्चन्ति पार्थिवाः ॥ २५

अस्मदाकांक्षया यज्ञे शरीरक्लेशकारिणि ।
प्रवर्तते बहुद्रव्यव्ययायासविधायिनि ॥ २६

क्षीराब्धिमथनोद्भूताः क्रीडासक्ताश्च नन्दने ।
वशीकृतसुरेन्द्राश्च वयं किं सुलभा नृणाम् ॥ २७

तथापि भूमावागत्य त्वामद्य प्रार्थयामहे।
अस्मासु त्वं विमुख इत्यद्भुतं किमतः परम् ॥ २८

ग्रसितुं कालमृत्युर्मामाक्रमिष्यति तद्भयात् ।
शिवपूजापरोऽस्मीति यदा ब्रूषे तदा शृणु ॥ २९

शिवपूजोपवासाद्यैर्ग्लपयिष्यति किं वपुः ।
मद्भ्रूविलासमात्रेण मम दासायितं क्षणात् ॥ ३०

कालमृत्युं वशीकृत्य तव पादे निपात्य च ।
तद्भयान्मोचयिष्यामि वृथा किं क्लिश्यते वपुः ॥ ३१

इन्द्रादमृतमादाय तव दत्वा ह्यमर्त्यताम् ।
आपादयिष्ये मृदुलं वृथा किं क्लिश्यते वपुः ॥ ३२

इति तस्या वचः श्रुत्वा पूजानियमनिश्चलः ।
हुङ्कारेणैव तास्सर्वा श्वेतकेतुर्व्यदुद्रुवत् ॥ ३३

*சிவன் உடன் நந்தி முதலானவரையும் அப்ஸரஸ்களையும் சுவேதகேதுவின் அருகே அனுப்பினர். அப்ஸரஸ்கள் நந்தியின்*

உத்தரவுப்படி ஆடி சுவேதகேதுவை மயக்கினர். சுவேதகேதுவிடம் இவை எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. ரம்பை சுவேதகேதுவிடம் கூறினள் - "ராஜ குடும்பத்தில் பிறப்பது எளிதில் கிட்டாதது. ஆளுமையும் செல்வமும் உருவழகும் கிட்டுவதுமரிது. நாங்கள் தேவருலகத்து அப்ஸரஸ்கள். எங்களை அணைத்துக் கொள்ளவே வீரர்கள் போரில் மோதி உயிரை விடுவர். பாற்கடலைக் கடைந்த போது நாங்கள் தோன்றினோம். நந்தனவனத்தில் விளையாடுபவர்கள். இந்திரனும் எமது வசப்பட்டவன். மனிதஇனத்திற்குக் கிட்டாதவர்கள். அப்படியிருந்தும் நாங்களே வலிய பூமிக்கு வந்து உன்னை வேண்டுகிறோம். நீயோ திரும்பிப் பார்க்காதிருக்கிறாய். யமன் என்னை விழுங்க வருகிறான் எனப்பயந்து சிவபூஜை செய்கிறேன் என்பாய். சிவபூஜையால் உடலை வாடவிடாதே. எம்புருவ அசைப்பால் யமபடர்களை மயக்கி வசப்படுத்தி உன் காலடியில் வீழ்த்தி உன் பயத்தைப் போக்குவோம். இந்திரனிடமிருந்து அமுதம் கொணர்ந்து உன்னை மரணமற்றவனாக்குவோம். ஏன் உன்மென்மைமிக்க உடலை வாட்டுகிறாய்? எனக்கொஞ்சினள். பூஜை நியமங்களால் அசையாதிருந்த சுவேதகேது ஹூம் என அதட்டியதும் அவர்கள் மிரண்டு ஓடி அகன்றனர். (15-33)

तासां मोघासु जातासु प्रवृत्तिषु सुविस्मिताः ।
प्रमथा मायया सिंहव्याघ्रादीनां वपुर्दधुः ॥ ३४

व्याघ्रादिवपुषो घोरास्तस्यान्तिकमुपेत्य ते ।
भीषयामासुरत्यर्थं मशकैश्च भयङ्करैः ॥ ३५

ददंशुरपि दंष्ट्राभिर्निशिताभिस्तदंगकम् ।
गात्रात्तस्य श्वेतकेतो रक्तधारा विनिःसृताः ॥ ३६

दृष्ट्वा परिचरन्ती सा सुवृत्ता तस्य भामिनी ।
शिवपूजापरं शान्तं विसृजध्वं तपस्विनम् ॥ ३७

तपसा क्लिष्टदेहस्य नाङ्गे तस्य रुचिर्भवेत् ।
भक्षयध्वं मम स्निग्धं तदिदं मृदुलं वपुः ॥ ३८

सन्त्यस्मिन्रक्तधाराश्च रुचिश्चातिगरीयसी ।
शिवपूजाविघाते तु पातकं महदापतेत् ॥ ३९

हिंसायां मम तादृक्षं पातकञ्च न वो भवेत् ।
इत्युक्त्वा सा निजाङ्गानि तेषामास्ये न्यवीविशत् ॥ ४०

तथापि तानि हित्वा सिंहव्याघ्रादयो मृगाः ।
तमेव भक्षयन्ति स्म च्छिन्दन्तो दशनैर्नखैः ॥ ४१

तदाऽस्थिमात्रशेषोऽपि श्वेतकेतुर्धृतिं वहन् ।
रक्तधारास्सुधाधाराः पनसं कोशमामिषम् ॥ ४२

भावयन् चचालास्माच्छिवपूजाविधिक्रमात् ।
दृष्ट्वा ततस्तस्य धैर्यमाश्चर्यं नन्दिकेश्वरः ॥ ४३

प्रीतः प्राक्तनसौन्दर्यादस्मै शतगुणाधिकम् ।
दत्वा सौन्दर्यमङ्गेषु श्वेतकेतोः समीपतः ॥
शिवस्यान्तिकमभ्येत्य यथावृत्तं न्यवेदयत् ॥ ४४

श्रुत्वा तत्तदनु प्रहृष्टहृदयस्तेजिन्यरण्येश्वरो
विष्णुं तत्वनिवेदिनं प्रति मुहुस्सन्तोष्य सम्प्रेष्य च ।
वामाक्ष्या गिरिशृङ्गतुङ्गकुचया देव्या सह स्वालयं
प्राविक्षत् प्रमथाधिपैरपि शिवो नन्दीशमुख्यैर्गणैः ॥ ४५

इति एकचत्वारिंशोऽध्यायः

*அவர்களது முயற்சி வீணானதைக் கண்ட சிவகணங்கள் புலி முதலிய கொடிய விலங்குகளின் வேஷம் பூண்டு மிரட்டினர். வலிவு மிக்க கொசுக்கள் கடித்துப் பிடுங்கின. சுவேதகேதுவிலிருந்து ரத்தம் ஒழுகி ஓடியது. இதனைக்கண்டு சுவேதகேதுவின் பணிவிடையில் ஈடுபட்டிருந்த ஸுவிருத்தா*

அவர்களிடம் வேண்டினள். அவர் சிவபூஜையிலுள்ளார். தவத்தில் உடல் வாடியவர். அவரது உடல் சுவையற்றது. என் உடல் நெய்ப்புமிகுந்து மென்மையுடன் உள்ளது. இதனை உண்பீர். ரத்தம் நிறைய உள்ளது. இனிய சுவை கொண்டது. சிவபூஜைக்கு இடையுறு விளைவிப்பதால் பாபமும் அதிகம். என் உடலைச்சுவைப்பதால் பாபம் இல்லை எனக்கூறி புலி முதலியவற்றின் வாயில் தன் உடலை அளித்தாள். அப்பொழுதும் இவளைத் தொடாமல் சுவேதகேதுவையே கடித்து தின்றன. எலும்பு மட்டும் மீதியுள்ள நிலையிலும் உறுதியுடன் ரத்ததாரையை அமுததாரையாக தசைத்துண்டுகளை பலாச்சுளையாக எண்ணி பூஜையிலிருந்து சலியாமல் இருந்தான். இதனைக் கண்ட நந்தி வியப்புற்று முன்னிருந்த மேனியழகை விட நூறு மடங்கு அழகை அளித்து அங்கிருந்து சிவபெருமானிருக்குமிடம் வந்து நடந்ததைத் தெரிவித்தார் தேஜினீசன் இதனைக் கேட்டு மகிழ்ந்தார். விஷ்ணு கூறியது மெய் என உணர்ந்தார். ஸுந்தரகுசாதேவியுடன் தன் ஆலயத்தினுள் வந்தார். *(34-45)*



## द्विचत्वारिंशोऽध्यायः

**ततः कतिपयैरेव वासरैर्घोरदर्शनः ।**
**कालो दण्डधरः क्रोधताम्राक्षोऽतिभयङ्करः ॥ १**

**भटैः स्वैः पाशमादाय श्वेतस्यान्तिकमाययौ ।**
**तन्दृष्ट्वा भीतभीतस्सन् जयन्तः स्नुषया स्त्रिया ॥ २**

**रुरोद तं समालिङ्ग्य बाष्पपर्याकुलोक्षणः ।**
**अहो रूपमहो रूपमहो सौन्दर्यमेव च ॥ ३**

**अहो ! यौवनसम्पत्तिरहो भाग्यमहो धनम् ।**
**अहो कलत्रसौभाग्यमहो विद्यासु नैपुणी ॥ ४**

अहो विशुद्ध आचार अहो भक्तिः सदाशिवे ।
अनवद्येषु सर्वेषु गुणेष्वायुष्यमेककम् ॥ ५

विकलं कथमासीत्ते मद्भाग्यस्य विपर्ययात् ।
एवं विलप्य सर्वेषु रुदत्सु श्वेतकेतुना ॥ ६

निवार्य सर्वान् कालं प्रत्येवं वागभ्यधीयत ।

*''அத்தியாயம்'' - 42*

*சிலநாட்கள் கழிந்தன. யமன் தண்டமேந்திக் கோபத்தால் கண் சிவக்க, பயங்கரத்தோற்றத்துடன் தன் படர்களுடன் பாசமேந்தி சுவேதனிடம் வந்தார். அவரிடம் பயந்த ஜயந்தன் நடுங்கி மனைவியுடன் மகனையும் மருமகளையும் கட்டி அழுதான். இந்த உருவழகு! இந்த யௌவன நிறைவு! இந்த பாக்யம்! இந்த செல்வம்! இந்த தாம்பத்யம்! இந்த கல்வித்திறமை! இந்த நன்னடைமுறை! இந்த சிவபக்தி! எல்லாமிருந்தும் ஆயுளின் குறைவால் எல்லாம் வீணனதே! அது எனது பாக்கியகுறைவு. இவ்வாறு புலம்புகிறவர்களைத்தடுத்து சுவேதகேது யமனை நோக்கிக் கூறினன். (1-6)*

श्वेतः—

भो भो दण्डधर त्वं हि धर्मराजः कृपानिधिः ॥ ७

समवर्ती शिवे साम्बेऽप्यसाधारणभक्तिमान् ।
ततो भवन्तं नत्वाहमिदानीमिदमर्थये ॥ ८

शिवपूजा समाप्तेयं दैवादद्यतनी मम ।
निषेव्य तेजिनीनाथमागच्छाम्यचिरादिह ॥ ९

दैनन्दिनव्रतं न्यूनं माभूत्करुणया तव ।
इति तस्य वचः श्रुत्वा दीनदीनं समीरितम् ॥ १०

शिवसेवाविघाते तु शिवस्य प्रतिघो भवेत् ।
ईषत्कालविलम्बेन का हानिरधुना मम ॥ ११

इति मत्वा च कालस्स तस्मिन्कारुण्यमावहन् ।
ततो हृष्टमनाः श्वेतो भाविकार्यस्य संशयात् ॥ १२

प्रणम्य पादयोः पित्रोराशिषं प्रतिगृह्य च ।
भक्तिदार्ढ्येन स श्वेतो धैर्यमालम्ब्य पुष्कलम् ॥ १३

प्रणम्य तेजिनीनाथं भक्त्या परमयाऽन्वितः ।
अस्तौषील्लोचनाभ्यां स बाष्पधारां समासृजन् ॥ १४

*''தண்டமேந்திய யமராஜரே! நீர்பரிவு மிக்கவர். ஸமநோக்குள்ளவர். தேவியுடன் கூடிய சிவபெருமானிடம் தனித்து பக்திகொண்டவர். அதனால் உம்மை வணங்கிவேண்டிக் கொள்கிறேன். நல்லவேளையாக இன்றைய சிவபூஜை நிறைவேறியது. தேஜினீவனேசனை வணங்கிவிட்டு விரைவில் வந்து விடுகிறேன். தினந்தோறும் நடைபெறுகிற நடைமுறையில் குறைவேண்டாம். உம் கருணையால் அதுவும் நடந்துவிட்டும் என்று தீனக்குரலில் சுவேதகேது கேட்டுக் கொண்டான். யமன்'' சிறிது காலதாமதத்தால் எனக்கேதும் குறை நேராது என நினைத்துப்பரிவு காட்டினான். சுவேதன் இனிவருவதை நம்ப இயலாது எனக்கருதி பெற்றோரை வணங்கி ஆசிபெற்றான். திடபக்தியுடன் தேஜினீசனை வணங்கித்துதித்தான். (7-14)*

तेजिनीवनेश्वरस्तुतिः—

श्वेतः—

तीक्ष्णोग्रारालदंष्ट्रात् प्रतिभयवदनात् क्रोधदष्टाधरोष्ठात्
नेत्रोद्भ्रान्ताग्निकीलावलयितकुटिलश्मश्रुदीप्तोर्ध्वकेशात् ।
कल्पाम्भोदस्वनोच्चैस्तरकटुनिनदादञ्जनक्ष्माधराभात्
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ १५

''சுவேதகேதுவின் சிவஸ்துதி'' - தேஜினீசனே, சிவபெருமானே! காலமிருத்யுவாக வந்தயமனிடம் பயந்துள்ள என்னைக்காப்பீர். உக்கிரமானதெற்றிப்பற்களால் பயங்கரத் தோற்றமுள்ளவன். கோபத்தால் நற நறவெனப் பற்களைக் கடித்துக் கொண்டிருப்பவன். கண்கள் உமிழ்கிற நெருப்புப்பிழம்பு சூழ்ந்துள்ள மீசையும் வளர்ப்புமிக்க கேசங்களுமுள்ளவன். பிரளயகாலத்து மேகம் போல் பயங்கரமாக கர்ஜிக்கிறவன். கரு மைமலை போன்றவன்.அவனிடமிருந்து காப்பீர். (15)

त्वत्पूजासक्तचित्तं त्वयि निहितधियं चान्यदेवानभिज्ञं
त्वत्कैङ्कर्यानुषक्तं धवलभसितरुद्राक्षमालावृताङ्गम् ।
सौपर्णेयास्यरन्ध्रस्थगितभुजगवद्वेपमानाङ्गयष्टिं
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ १६

நான் உமது பூஜையில் ஈடுபட்டவன். உம்மிடம் உள்ளத்தைப் பதித்தவன். வேறு தெய்வத்தை அறியாதவன். உமது கைங்கரியத்தில் முனைந்தவன். வெண்ணிற விபூதி இட்டுருத்ராக்ஷமாலையால் உடலை மூடியவன். கருடனின் வாயிலகப்பட்ட பாம்பு போல் துடிப்பவன். யமனிடமிருந்து பயந்தவன். தேஜினீச சிவபெருமானே! மங்களத்தின் தோற்றுவாயே! என்னைக் காப்பீர். (16)

आहोस्विद्दुष्टचित्तं कृपणमतितरां धर्मलेशानभिज्ञं
सक्तं पापेषु कर्मस्ववनिसुरगुरुद्रोहिणं वृत्तहीनम् ।
उच्छिष्टैः पादघातैः पितृसुतवनिताद्रोहतस्त्वं प्रसन्नः
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ १७

அல்லது நான் கெட்டபுத்தியுள்ளவன், இரக்கத்திற்கு உரியவன். அறவழியைச் சிறிதும் அறியாதவன், பாபச்செயலில் சிக்கியவன், அந்தணருக்கும் குருவிற்கும் துரோகம் செய்தவன். நடைமுறை தவறியவன், பெற்றோரையும் மகனையும்

மனைவியையும் அழுக்குக்காலால் உதைத்தவன். யமனிடம் பயந்தவன். இவனைப்பரிவுடன் காப்பீர். (17)

यः प्राङ्मन्थानशैलोन्मथितजलनिधेरन्तरुज्जृम्भमाणं
ब्रह्माण्डं निर्दहन्तं त्वरितमतिगले कालकूटं निरुन्धन् ।
भीतान् सर्वानमर्त्यान् चरणमुपगतान् रक्षसि स्माथ स त्वं
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ १८

மந்தரமலையைக் கொண்டு பாற்கடலைக் கடைந்த போது கடலினுள்ளிருந்து பொங்குகிறதும் உலகை எரிப்பதுமான கால விஷத்தைத் தடுப்பவராக, பயந்தோடுகிற தேவரனைவரும் தன் திருவடியை வணங்கியதும் அவர்களை அன்று காத்தருளிய நீர் இன்று யமனிடம் பயந்த என்னைக் காப்பீர். (18)

लोकानाकाशवायुक्षितिरवियजमानाग्निवारीन्दुरूपैः
सर्वानाक्रम्य सम्यङ् नियमसि पशून् कर्मपाशैर्निबद्धान्।
तत्तत्कर्मानुरूपं फलमपि जनयन्मोचयस्यद्य स त्वं
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ १९

ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி, சூரியன், வேள்வித்தீ, சந்திரன் என்ற எட்டு உருவங்களால் உலகினுள் நுழைந்து பரவி, கருமபாசத்தால் கட்டுண்டவர்களை அவரவரது கர்மங்களுக்கேற்ப பலன் தந்து கட்டிலிருந்து விடுவிக்கிற நீர் யமனிடம் பயந்த என்னைக் காப்பீர். (19)

मार्कण्डेयप्रधानाः कति कति भवता रक्षिता नाभवन् प्राक्
को वा देवेषु देव त्वमिव सुविदितां प्राप मृत्युञ्जयाख्याम् ।
तस्मादस्मिन्नुपेक्षां मयि कृपणतरे मा कुरु त्वं कृपालो
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ २०

மார்க்கண்டேயர் முதலான பலபக்தர்கள் உம்மால் காக்கப் பெற்றனர். மிருத்யுஞ்ஜயர் (யமனை வென்றவர்) என்ற புகழ் உம்மைத் தவிர வேறெவர் பெற்றுள்ளார்? இந்த மிக

எளியவனிடம் உதாசீனம் காட்டாதீர். கிருபை மிக்கவரே? யமனிடமிருந்து பயந்த என்னைக் காப்பீர். (20)

यत्नेनापि त्वदङ्गं न हि ददृशतुराद्यन्तवत् ब्रह्मविष्णू
तस्मात्पादादिकेशावधि तव नुतौ कः परः साङ्गपूजाम् ।
एवं त्वन्मन्त्रपूजाजपविधिनियमक्लेशलेशानभिज्ञं
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ २१

ஆதியும் அந்தமும் கொண்ட உம் உடலை முயன்றும் பிரும்மாவும் விஷ்ணுவும் காணஇயலவில்லை. அதனால் காலிலிருந்து தலைவரை உம் அழகைத் துதிக்க எவரால் இயலும்? ஸாங்கமாக வழிபட மந்திர ஜபம் செய்ய பூஜை செய்ய நியமங்களை அறியாதவனும் யமனிடம் பயந்தவனுமான என்னைக் காப்பீர். (21)

कर्तारं पातकानामहह सुमहतां जन्मसु प्राक्तनेषु
क्रोशन्तं शश्वदुच्चैः प्लवमिव भुजगेन्द्रास्यरन्ध्रावलग्नम् ।
मन्त्रे देवे गुरौ वा महति मुनिजने वापि विश्वासहीनं
त्रस्तं मां कालमृत्योरव शिव कृपया तेजिनीनाथ शम्भो ॥ २२

முன்பல பிறவிகளில் பெரும்பாபங்களைச் செய்தவனும் பெரும்பாம்பின் வாயில் சிக்கிய தவளை போல் செய்வகையறியாமல் உரக்கப் புலம்புபவனும். உம்மந்திரம் தைவம் குரு பெரியோர் முனிவர் முதலானோரிடம் நம்பிக்கை இல்லாதவனும் யமனிடம் பயந்தவனுமான என்னை வீழிநாதனான சிவனே! கிருபையுடன் காப்பீர். (22)

इति स्तुवति भक्त्याऽस्मिन् श्वेतकेतौ नृपात्मजे ।
कालश्चिरविलम्बेन क्रोधसंरक्तलोचनः ॥ २३

पाशमादाय वेगेन श्वेतान्तिकमधावत ।
तत्कण्ठे पाशमादाय यदा कर्षति वै यमः ॥ २४

तावद्भिया श्वेतकेतुर्गर्भागारमुपेत्य सः ।
तेजिनीवनलिङ्गस्य पश्चाद्भागमुपेत्य च ॥ २५

शिवलिङ्गं भुजाभ्यां द्रागालिलिङ्ग तदा दृढम् ।
तत्क्षणाद् भैरवाकारो विनिर्गत्याशु लिङ्गतः ॥ २६

कालं वक्षःस्थले गाढञ्जघान गिरिशः पदा ।
तत्क्षणादन्तकस्सोऽपि वज्राहत इवाचलः ॥ २७

गतप्राणः क्षितितले पपात हतविक्रमः ।
चचाल वसुधा तदा महिभृतश्च सप्ताचलाः
पयोनिधिरलङ्घत प्रसभमेव वेलामपि ।
जगत्त्रयभयङ्करे पतति कालमृत्यौ जवा -
दधिक्षितितलं महत्यपहृताञ्जनाद्रेः समे ॥ २८

॥ इति द्विचत्वारिंशोऽध्यायः ॥

*இவ்வாறு அரசகுமாரனை சுவேதகேது துதிக்கும் போது சுவேதகேதுவின் தாமதத்தைப் பொறுக்காத யமன் கண் சிவக்க, பாசமேந்தி வேகத்துடன் சுவேதனருகே வந்தான். பாசத்தை அவன் மீது யமன் வீசுவதற்குள், சுவேதகேது தேஜினீசனின் கருவறைக்குள் நுழைந்து லிங்கத்தின் பின்புறம் சென்று லிங்கத்தை இரு தோள்களாலும் திடமாகக் கட்டிக்கொண்டான். அப்போது திடீரென பயங்கரத் தோற்றத்துடன் லிங்கத்திலிருந்து வெளிப்பட்ட சிவன் யமனைக் காலால் அழுத்தத்துடன் உதைத்தார். வஜ்ராயுதத்தால் அடிபட்ட மலைபோல யமன் உயிரிழந்து தரையில் விழுந்தவுடன் பூமியும் மலைகளும் நடுங்கின. கடல் பொங்கிக் கரையைக் கடந்தது. மூவுலகையும் நடுங்கச் செய்கிற யமன் கருமையாலான மலைபோல் தரையில் விழுந்தான். (23-28)*

—★—

## अथ त्रिचत्वारिंशोऽध्यायः

सूतः—

त्रैलोक्ये कम्पमाने तु तदा देवाश्च दानवाः ।
गन्धर्वाः किन्नरास्सिद्धा यक्षराक्षसचारणाः ॥ १

बहुना किमुपाजग्मुर्भयं ब्रह्माच्युतावपि ।
ब्रह्माच्युतादयस्सर्वे देवाश्शम्भोस्तु सन्निधौ ॥ २

सन्त्रासेन शनैरद्य स्तोत्रैस्सन्तुष्य शङ्करम् ।
पुनः प्रणम्य साष्टाङ्गं वाचं प्राञ्जलयोऽवदन् ॥ ३

देवाः—

भवता भक्तवात्सल्यमिदानीं प्रकटीकृतम् ।
संहृत्य घोररूपं तं कालं कालान्तक प्रभो ॥ ४

देवी भूमिरियं भारं वोढुं न क्षमतेऽधुना ।
जरायुजैरण्डजैश्च स्वेदजैरुद्भिजैरपि ॥ ५

अक्षयैर्वर्धमानैश्च भूरेषा निबिडीकृता ।
भूमिभारावरोहाय कालमुज्जीवय प्रभो ॥ ६

भारवाहाक्षमतया पतितायामधो भुवि ।
सर्वे नष्टा भविष्यन्ति प्राणिनो नात्र संशयः ॥ ७

इति प्रसाद्य देवेशं तं कालमुदजीवयन् ।
शिवप्रसादादुत्थाय प्रणिपत्य कृताञ्जलिम् ॥ ८

त्रासेन वेष्टमानाङ्गं कालं देवा वचोऽब्रुवन् ।

"அத்தியாயம்" - 43

மூன்று உலகங்களும் நடுங்கின. தேவர் அஸுரர் என அனைவரும் பிரும்மாவும் விஷ்ணுவும் கூட நடுங்கினர். சிவபெருமானை வணங்கித் துதித்தனர். பக்தனிடம் கொண்ட அன்பை வெளிப்படுத்தினீர். கோரஉருவம் கொண்ட யமனை அழித்தீர். ஆனால் உயிரினப் பெருக்கால் சுமை தாங்காமல் பூமி தத்தளிக்கிறது. சுமை தாங்காமல் பூமி நிலை தவறினால் எல்லா உயிரினமும் நசிக்கும் என சிவனை ஸமாதானப்படுத்தி யமனை அவரருளால் உயிர்ப்பித்தனர். எழுந்து வணங்கிக் கைகூப்பி நிற்கிற யமனிடம் தேவர் கூறினர். (1-8)

देवाः—

शिवस्य दासदासा ये भस्मरुद्राक्षधारिणः ॥ ९

तान्दूरे त्वं परिहर काल तत्सङ्गिनोऽपि च ।
इत्येवमुपदिश्यैनं यमं ब्रह्मादयस्सुराः ॥ १०

प्रणमय्य शिवं तेन प्रेषयमासुरञ्जसा ।
ब्रह्मादयस्सुराश्चैव ततः स्तुत्वा त्रिलोचनम् ॥ ११

आमन्त्र्य तदनुज्ञाताः स्वं स्वं स्थानं प्रपेदिरे ।
अद्यापि तेजिनीशानलिङ्गस्य चरमाङ्गके ॥ १२

तिस्रो जटाः श्वेतकेतोर्दृढाश्लेषेण वक्षसः ।
रुद्राक्षमालिका त्वन्तर्घटनेनापि किञ्चन ॥ १३

अन्तर्मग्ना इवाभान्ति दर्शनात् किल्बिषावहाः ।
ये भक्त्या लिङ्गमालिङ्गन्त्यवेक्षन्ते च ता जटाः ॥ १४

तेषां मृत्युभयं नास्ति सायुज्यञ्च करे स्थितम् ।
ततः स्थितं सन्निधाने पित्रोरन्तिकसीमनि ॥ १५

श्वेतकेतुं समुद्वीक्ष्य शिवो वचनमब्रवीत् ।
तपसा तेऽस्मि सन्तुष्टः कालमृत्योस्तदास्यतः ॥ १६

मोचितश्चासि तेन त्वं पितृभ्यां भार्यया सह ।
अचिराद्भाविभिः पुत्रपौत्राद्यैश्च समावृतः ॥ १७

संसारसौख्यमतुलमनुभूय चिरं भुवि ।
कैङ्कर्यं बहुधा कृत्वा स्थित्वाऽत्र मम चालये ॥ १८

प्रत्यब्दं मम कुर्वीथाश्चैत्रयात्रामहोत्सवम् ।
स्थित्वैव बहुकल्पं त्वमन्ते सर्वैश्च बन्धुभिः ॥ १९

प्राप्स्यसे मम सायुज्यं नात्र कार्या विचारणा ।
इत्युक्त्वा प्रेषयामास गृहं तं बन्धुभिस्सह ॥ २०

*விபூதி ருத்திராக்ஷம் தரித்த சிவனது அடியார்க்கு அடியாரையும் அவரோடு இணைந்தவரையும் அணுகாதே! தூரத்தில் ஒதுங்கி நிற்பாய் எனத் தெரிவித்துச் சிவனை வணங்கி விடை பெற்றுச் சென்றனர். தேஜினீவனேசரின் லிங்கத்தின் முதுகுப்பக்கத்தில் சுவேதகேதுவின் மூன்று சடைகளும் மார்பிலிருந்த ருத்ராக்ஷ மாலையின் பதிப்பும் இன்றும் காணப்படுகின்றன. சிவனை அணைத்த அவற்றைத் தரிசிக்க மரணபயம் நீங்கும். தன் எதிரில் பெற்றோரின் பக்கத்தில் நிற்கிற சுவேதகேதுவிடம் சிவன் கூறினார் - ''உன் தவத்தால் மகிழ்ந்தேன். மரண வாயிலிருந்து நீ விடுப்பட்டாய். உன்பெற்றோருடனும் மனைவியுடனும் விரைவில் நீ பெறவிருக்கிற புத்திரன் - பௌத்திரன் முதலானவருடனும் இனிது நீண்ட நாட்கள் வாழ்ந்து என் ஆலயத்தில் கைங்கரியம் செய்து ஆண்டுதோறும் சித்திரைத் திருவிழா கொண்டாடி பல கற்பகாலம் வாழ்ந்து என் ஸாயுஜ்யம் பெறவிருக்கிறாய் என அருளி விடை தந்தார். (9-20)*

श्वेतकेतोरभीष्टार्थप्रदानेनातिहर्षलम् ।
विष्णुञ्च प्रेषयामास स्वालयं प्रति शङ्करः ॥ २१

ततः स्वयं तेजिनीशलिङ्गे शीघ्रं तिरोदधे ।
शिवप्रसादसन्तुष्टः श्वेतकेतुस्ततः परम् ॥ २२

पितृभ्यां बन्धुभिस्सार्धं निर्गत्य च शिवालयात् ।
स्वदर्शनार्थमायाताः सेनाः पौरजनानपि ॥ २३

बहुमान्य दयादृष्ट्या दृशमाधोरणे न्यधात् ।
तस्मादाधोरणानीते भूषिते कुञ्जरोत्तमे ॥ २४

जयन्ते तु समारूढे पितरि प्रेमशालिनि ।
पश्चाद्गजवरं कश्चित् सर्वालङ्कार शोभितम् ॥ २५

आरुरोह श्वेतकेतुः स्त्रियश्च शिबिकान्तरे ।
पश्चादारुरुहुस्तूर्णं प्रतिसीरासमावृताः ॥ २६

विलङ्घ्य वीथिका लाजपुष्पवर्षोपशोभिताः ।
गृहं ययौ श्वेतकेतुः पितृभ्यामनुमोदितः ॥ २७

आस्थानमण्टपे तिष्ठन्ननुयातान्यथोचितम् ।
प्रेषयित्वा नरपतीनन्तःपुरमगाहत ॥ २८

तत्र पित्रोश्चरणयोः साष्टाङ्गं प्रणिपत्य सः।
युवां शुश्रूषितुं भाग्यं लब्धमित्यब्रवीद्वचः ॥ २९

तौ च मूर्धन्युपाघ्राय बाष्पैरङ्गं न्यषिञ्चताम् ।
स्वर्णैश्च नवरत्नैश्च श्वेतकेतुः शिवालयम् ॥ ३०

विचित्रमतनोत् पूजां विविधामप्यकारयत् ।
तेजिनीवननाथोऽयं मृत्युग्रस्तं तनूभुवम्॥ ३१

अमोचयत् कृपालुः स्वं कुलदीपं यतस्ततः ।
जयन्तोऽत्र शिवज्ञानी दीपमाचन्द्रतारकम् ॥ ३२

अतिष्ठिपत् प्रभोः शम्भोर्हरिणा दत्तमन्दिरे ।

சுவேதகேது நன்னிலே பெற்றதைக் கண்டு மகிழ்ந்த விஷ்ணுவையும் அவரது ஆலயத்திற்கு அனுப்பி விட்டுத்தானும் தேஜினீ லிங்கத்தினுள் மறைந்தார். சிவனது அருள் பெற்ற சுவேதகேது தன் பெற்றோர் உறவினருடன் ஆலயத்திலிருந்து வெளியேறித் தன்னைக் காண வந்த ஊர்மக்களை வெகுமதித்து யானைப் பாகனை அழைத்து வந்த யானை மீது அன்புள்ள தந்தை ஏறிஅமர்ந்ததும் தானும் ஒரு யானை மீது ஏறி அமர்ந்தான். பெண்கள் திரையிட்ட பல்லக்குகளில் அமர்ந்தனர். மக்கள் பூ பொரி தூவி வாழ்த்த வீதிகளைக் கடந்து தம் மாளிகையை அடைந்தனர். சுவேதகேது பெற்றோரை வணங்கி அவர்களுக்குப் பணிவிடை புரிய வாய்ப்பு கிட்டியதை நினைத்து மகிழ்ந்தான். சுவேதகேது ஆலயத்தைச் சீரமைத்து அலங்கரித்துச் சிவனை வழிபட்டு வந்தான். தன் குலவிளக்கை அணையாது காத்ததற்காக சிவஜ்ஞானியான ஜயந்தன் ஸூர்ய சந்திரர் உள்ளவரை கோயிலில் தீபமெரிய வகை செய்தான். (21-32)

श्वेतकेतोरभिज्ञानं ये शृण्वन्ति पठन्ति च ॥ ३३

लिखन्ति वा लिखित्वा तत् बुधेभ्यः प्रदिशन्ति वा ।
ते भुक्त्वा विविधान् भोगान् शिवसायुज्यमाप्नुयुः ॥ ३४

श्वेतकेतुकृतं स्तोत्रं तेजिनीनाथसन्निधौ ।
ये पठन्ति सकृद्भक्त्या कालमृत्युं तरन्ति ते ॥ ३५

अष्टैश्वर्यं पुत्रपौत्रैरनुभूय ततः परम् ।
भजन्ति शिवसायुज्यं नात्र कार्या विचारणा ॥ ३६

श्वेतकेतुचरितं मनुजानां श्रोत्रपद्धतिसुधारसवर्षि ।
यः शृणोति पठति स्फुटभक्त्या तस्य मुक्तिरधुनैव करस्था ॥ ३७

इति त्रिचत्वारिंशोऽध्यायः

சுவேதகேதுவின் வரலாற்றைக் கேட்பவரும் சொல்பவரும் எழுதுபவரும் எழுதி அறிஞரிடம் தருபவரும் இனிது வாழ்ந்து சிவநிலை பெறுவர். சுவேதகேது செய்த ஸ்தோத்திரத்தைத் தேஜினீசனின் ஸந்நிதியில் படிப்பவர் காலமரணத்தைத் தவிர்ப்பர். இம்மையில் இன்பத்துடன் வாழ்ந்து சிவனோடு இரண்டறக் கலப்பர். *(33-37)*

—★—

## चतुश्चत्वारिंशोऽध्यायः

ऋषयः-

इतोऽन्यदप्यविदितं तेजीनीवनवैभवम् ।
वर्णय त्वं मुनिश्रेष्ठ सूत पौराणिकोत्तम ॥ १

सूतः—

पुरा वै वैद्युते कल्पे कैलासे गिरिजापतिः ।
प्रणवे भद्रपीठे तु स्थित्वा व्याहरतोमया ॥ २

इदं भवस्य वामाङ्गात् साक्षाद्विष्णुः श्रियः पतिः ।
ब्रह्मा तु दक्षिणादङ्गात् सरस्वत्याः पतिस्तथा ॥ ३

अतिष्ठत तयोर्मध्ये भगवानम्बिकापतिः ।
तदा वेदा जगुस्साङ्गा गिरीशं सकलाः कलाः ॥ ४

हरितश्च समुद्राश्च तथा देवी वसुन्धरा ।
सर्वाणि च पुराणानि स्मृतयस्समागताः ॥ ५

द्वात्रिंशोपनिषद्देव्यो देवं साम्बमुपावसन् ।
ब्रह्मणा च तदा सृष्टाः पालिता विष्णुना प्रजाः ॥ ६

असेवन्त महादेवं सुधाकरमिवोडवः ।
मुनयो देवताश्चैव गन्धर्वाप्सरसां गणाः ॥ ७

नृत्तैर्गीतैश्च विविधैः प्रीणयामासुरीश्वरम् ।

"அத்தியாயம்" - 44

தேஜினீவனத்தின் பெருமை பற்றி ருஷிகள் மேலும் விளக்கக்கோர, ஸூதர் கூறினார் - முன் வித்யுத்கல்பத்தில் கைலாஸத்தின் ஓங்காரத்தாலான பத்ரபீடத்தில் சிவன் உமாதேவியுடன் பேசிக் கொண்டிருந்தார். சிவபெருமானது இடதுபாகத்திலிருந்து லக்ஷ்மிபதியான விஷ்ணுவும் வலது பாகத்தில் ஸரஸ்வதீபதியான பிரும்மாவும் வெளியாயினர். நடுவில் அம்பிகா பதியான பகவான் நின்றார். வேதங்கள், கலைகள், திக்குகள், கடல்கள், பூமிதேவி, புராணம், ஸ்மிருதி, 32 உபநிஷத்துகள் எல்லோரும் அருகில் நின்றனர். பிரும்மா படைத்தார். விஷ்ணு உலகைக் காத்தார். சந்திரனைச் சுற்றி நக்ஷத்திரங்கள் போல் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸூகளும் நடனம் கீதம் முதலியவற்றால் ஈசனை உபசரித்தனர். (1-7)

पाणिग्रहणकल्याणवेषालोकनलालसम् ॥ ८

अगस्त्यं पार्श्वतो दृष्ट्वा मुनीन्द्रं सुस्मिताननः ।
श्रुत्यागमान् पुराणानि तथाऽन्यास्सकलाः कलाः ॥ ९

लोकेष्वत्युत्तमं स्थानं वदतेत्यब्रवीच्छिवः ।
तदा प्रणम्य देवेशं पुराणान्यब्रुवन् वचः ॥ १०

देव देव महादेव सर्वज्ञ करुणानिधे ।
त्वया न विदितं किञ्चित् त्रिषु लोकेषु विद्यते ॥ ११

बहु मानयितुं ह्यस्मानपृच्छः परमेश्वर ।
ज्ञातमात्रं वयं ब्रूमस्सर्वेषामिह संमतम् ॥ १२

तिस्रः कोट्यर्द्धकोट्यश्च यानि तीर्थानि सन्ति वै ।
अस्मिन् ब्रह्माण्डगोले तु पुण्यानि विविधानि च ॥ १३

तेषूत्तमं पञ्चविंशत्तीर्थाढ्यं तेजिनीवनम् ।
सृष्टं तद्वेधसा सर्वं पुण्यैश्च परमाणुभिः ॥ १४

वरिष्ठं ह्यमृतस्थानसप्तके तेजिनीवनम् ।
कावेरीतीरनिलयं योगीन्द्रैश्चिरसेवितम् ॥ १५

तेजिनीकल्पवल्याढ्यं स्थलानामुत्तमं स्थलम् ।
स्वर्गे तु नन्दनवनं द्वैतं बृन्दावनं तथा ॥ १६

छायावनं काम्यकञ्च कृतमालावनं तथा ।
वनश्चैत्रवनं तेषामुत्तमं तेजिनीवनम् ॥ १७

*திருக்கல்யாணக் கோலத்தில் தன்னைக் காணவந்த அகஸ்தியரை அருகில் கண்ட சிவன் புன் சிரிப்புடன் வேத - சாஸ்திர - புராணாதிகளைப் பார்த்து ''உலகில் சிறந்த இடம் எது எனக்கேட்க'' தேவதேவ! கருணையின் இருப்பிடமே! உமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை எங்களைப் பெருமைப் படுத்தக் கேட்டுள்ளீர். மூன்றரை கோடி தீர்த்தங்கள் உலகில் உள்ளன. அவற்றில் 25 தீர்த்தங்கள் கொண்ட தேஜினீவனம் பிரும்மாவால் புண்ய பரமாணுக்களால் படைக்கப்பட்டது. அமிருதஸ்தானங்களான ஏழில் இதுசிறந்தது. காவேரீ தீரத்தில் அமைந்தது. யோகீந்திரர்கள் வசிக்குமிடம் - வீழிக் கொடி ஒரு கல்பலதையாகும். ஸ்வர்கத்தில் நந்தனவனம், த்வைதவனம், பிருந்தாவனம் சாயாவனம் (சாய்க்காடு) காமியகம், கிருதமாலவனம், சைத்ரவனம் தேஜினீவனம் இவை சிறந்த காடுகள். அவற்றில் தேஜினீவனம் சிறந்ததெனப் புராணங்கள் கூறின. (8-17)*

पुराणानां वचः श्रुत्वा स्वस्यापि हृदयङ्गमम् ।
अगस्त्यं तत्र हि क्षेत्रे प्रेषयामास शङ्करः ॥ १८

क्षेत्राणामुत्तमं क्षेत्रं तेजिनीवननामकम् ।
तत्र गत्वा तपश्चर्यां कुरु पश्चादहं मुने ॥ १९

आभ्याञ्च ब्रह्मविष्णुभ्यां प्रमथैर्दैवतैः सह ।
आगत्य पाणिग्रहणवेषं ते दर्शयाम्यहम् ॥ २०

पुत्रञ्च दास्येऽभिमतमित्युक्त्वा प्राहिणोन्मुनिम् ।
प्रहितः शम्भुनाऽगस्त्यस्तेजिनीवनमेत्य सः ॥ २१

तपश्चचार सुचिरं शिवप्रीणनकाम्यया ।
ततः कतिपयैः कालैर्भगवान् पार्वतीपतिः ॥ २२

सहितो ब्रह्मविष्णुभ्यां देवर्षिगणसेवितः ।
वृषमारुह्य मार्तण्डं कल्याणोचितवेषभृत् ॥ २३

गन्धर्वाप्सरसोऽपश्यन् गीतनृत्तमनोरमम् ।
समग्रवाद्यघोषेण संपूरितदिगन्तरः ॥ २४

पाण्यब्जेन स्पृशन् देव्या गौर्याः पाणिसरोरुहम् ।
द्विभुजः शीघ्रमभ्येत्य तेजिनीवनमालयम् ॥ २५

स्वर्गावतरणं देवो मुनये कुम्भजन्मने ।
पाणिग्रहोचितं वेषं दर्शयामास शङ्करः ॥ २६

ददौ पुत्रञ्च यो भूमाविध्मबाहरिति श्रुतः ।
तिष्ये चोलस्तमभ्यर्च्य दीर्घमायुरवाप्तवान् ॥ २७

இதனைக் கேட்ட ஈசன் தானும் அவ்வாறே நினைப்பதாகக் கூறி அகஸ்தியரிடம் அங்கு சென்று தவம் செய்யச் சொல்லி தேஜினீவனம் சிறந்த க்ஷேத்திரம் - பிரும்மாவுடனும் விஷ்ணுவுடனும் வந்து எம் கல்யாணக் கோலத்தைக் காட்டுவேன். உனக்குப் பணிவிடை செய்ய ஒரு புதல்வனையும் தருவேன் என்றார். அகஸ்தியர் அங்கு சென்று சிவனைக் குறித்துத் தவமிருந்தார். சிவன் பிரும்மாவுடனும் விஷ்ணுவுடனும் தேவ - ரிஷிகளுடனும் விருஷபமேறிக் கல்யாணக் கோலத்தில்

*சென்றார். தேவர் முதலானோர் ஆடிப்பாடி மகிழ்விக்க வாத்யங்களின் கோஷத்துடன் இரு கைகளுள்ளவராகக் கௌரியின் திருக்கரத்தைப் பிடித்தார். ஸ்வர்காவதரணக் கோலம் மீண்டும் காணக் கிடைத்தது. அகஸ்தியருக்கு இத்மபாஹு என்ற புதல்வனையும் தந்தார். சோழ அரசனும் பூசநக்ஷத்திரத்தில் அவரை வழிபட்டு நீண்ட ஆயுளைப் பெற்றான். (18-27)*

सुमुखो नाम गन्धर्वस्तस्यापि गानमीशितुः ।
उपवीणनसम्प्राप्तं गाणापत्यं तदोन्नतम् ॥ २८

दत्वा च पुनरन्येषां तत्तदाकांक्षितं फलम् ।
ब्रह्मादीनपि देवांस्तान् संप्रेष्य स्वं स्वमालयम् ॥ २९

स्वर्गावतरणं नाम्ना प्राच्यां मूर्तौ पुनश्च सः ।
ऐक्यं प्राप च सर्वेषां भुक्तिनिर्वाणहेतवे ॥ ३०

एतादृक् क्षेत्रमाहात्म्यं मया वक्तुं न शक्यते ।
वदेद्वक्त्रसहस्रेण शेषो यदि दिवानिशम् ॥ ३१

लिखेत् करसहस्रेण भूपत्रे चेदिहार्जुनः ।
इन्द्रो नेत्रसहस्रेण पश्येद्यदि च पत्रिकाम् ॥ ३२

अमीभिर्नैव पार्यन्ते वक्तुञ्च लिखितुन्तथा ।
दक्षिणं चरणं शम्भोर्दक्षिणाक्ष्यर्चितं हरेः ॥ ३३

व्याधस्य वामनेत्रेण वामपार्श्वः समर्चितः ।
ब्रह्मणा विष्णुना साम्बस्तेजिनीवननायकः ॥ ३४

पूज्यतेऽहरहस्साक्षात्तथा देवासुरैरपि ।
द्वात्रिंशोपनिषन्मूर्ध्नि योगिनां हृदयाम्बुजे ॥

तेजिनीवल्लरीमूले जगन्मूलं विराजते ॥ ३५

इति चतुश्चत्वारिंशोऽध्यायः

ஸுமுகன் என்ற கந்தர்வன் ஈசனை வீணையுடன் கானம் செய்து மகிழ்வித்து கணத்தலைவனானான். மற்றும் பலருக்கு நன்னிலை அளித்த ஈசன் பிரும்மா முதலிய தேவர்களுக்கு விடையளித்துத் தான் ஸ்வர்காவதரண மூர்த்தியில் நுழைந்து மறைந்தார். இவ்வரலாற்றை ஆயிரம் நா படைத்த ஆதிசேஷனே விளக்கிக் கூற இயலும். ஆயிரம் கைபடைத்த கார்த்த வீர்யார்ஜுனனே எழுதமுடியும். இக்காட்சியை ஆயிரம் கண்படைத்த இந்திரனே காணமுடியும். சிவனது வலது திருவடியை விஷ்ணு தன் வலதுகண்ணால் அர்ச்சித்தார். வேடனால் (காளஹஸ்தியில்) தன் இடதுகண்ணால் சிவனது இடது கண் அர்ச்சிக்கப் பெற்றது. பிரும்மாவும் விஷ்ணுவும் தேவரும் அஸுரரும் தினமும் இவரை வணங்குகின்றனர். 32உபநிஷத்துகளின் சிரஸில் யோகிகளின் இதயத்தாமரையில் வீழிக் கொடியின் வேரில் உலகின் வேரான சிவபெருமான் உள்ளார். (28-35)

—★—

## पञ्चचत्वारिंशोऽध्यायः

अस्य क्षेत्रस्य माहात्म्यं पुनश्चाहं वदामि वः ।
शृण्वतां सर्वपापघ्नं सर्वसौभाग्यवर्द्धनम् ॥ १

देवर्षीणां हितार्थाय देवेन्द्रः प्राग्युधि द्विषः ।
दैत्यान् संहृत्य तद्दोषशान्तये तेजिनीवनम् ॥ २

आसाद्य तपसा देवं सन्तोष्याघाद्विमुक्तवान् ।
''श्रीकण्ठ पार्वतीनाथ तेजिनीपुरनायक ॥ ३

आयुर्बलं श्रियं देहि हर मे पातकं हर'' ।
इत्यानुष्टुभमन्त्रेण जपसन्तर्पणाहुतीः ॥ ४

कुर्वन्नभीष्टान्याप्नोति कुरुकाख्यो द्विजो यथा ।
अस्यानुष्टुभमन्त्रस्य वसिष्ठ ऋषिरुच्यते ॥ ५

छन्दोऽनुष्टुप् देवता तु पार्वतीनाथ ईरितः ।
ओं बीजं स्यात् उमा शक्तिः शिवप्रीत्यां नियोजयेत् ॥ ६

आदौ नामत्रयं पश्चादेहीत्यन्तं ततः परम् ।
हर मे पातकमिति हरेत्युच्चार्य खण्डशः ॥ ७

विन्यस्य च षडङ्गानि ततो ध्यायेन्महेश्वरम् ।
मूले कल्पकवृक्षस्य ह्यासीनममुमया सह ॥ ८

तप्तहाटकशोभाढ्यं चन्द्ररेखावतंसकम् ।
वराभयपरश्वेणान् बिभ्रतश्च चतुर्भुजैः ॥ ९

कटाक्षैः करुणासारवर्षिभिश्च विराजितम् ।
एवं ध्यात्वा जपेन्नित्यं तेजिनीनाथसन्निधौ ॥ १०

तस्य नासुलभं किञ्चिद्विद्यते मुनिपुङ्गवाः ।

*''அத்தியாயம்'' - 45*

*தேவர்களுக்கும் ருஷிகளுக்கும் நன்மைபுரிய இந்திரன் அஸுரர்களைப் போரிட்டு அழித்தான். அந்தப் பாபம் நீங்க தேஜினீவனேசனைத் தவத்தால் மகிழ்வித்தான். ஸ்ரீ என்ற விஷத்தைக் கழுத்தில் கொண்டவரே! பார்வதியின் நாதரே! வீழிநாதரே! ஹரனே! ஆயுளையும், வலிவையும் சீரையும் அருள்வீர்! என் பாபத்தைப் போக்குவீர்! எனப் பொருள்படுகிற 'ஸ்ரீகண்ட பார்வதீநாத தேஜினீபுரநாயக! ஆயுர் பலம் ச்ரியம் தேஹி ஹர மே பாதகம் ஹர' என்ற அனுஷ்டுப் சந்தஸில் அமைந்த மந்திரத்தை ஜபம் செய்து அதனால் தர்ப்பணமும் ஹோமமும் செய்ய குருகன் என்ற அந்தணனைப்போல் விரும்பியதைப் பெறுவான். இந்த மந்திரத்திற்கு வஷிஸ்டர் ருஷி, அனுஷ்டுப் சந்தஸ். பார்வதி நாதன் தேவதை. ஓம் பீஜம். உமா சக்தி. சிவப்பிரீதிக்காக என விநியோகம் (1) ஸ்ரீ கண்ட (2) பார்வதீநாத (3) தேஜினீவனநாயக (4) ஆயுர் பலம் ச்ரியம் தேஹி*

(5) ஹர (6) மே பாதகம் ஹர எனப்பிரித்து அங்க நியாஸ -கர நியாஸம் செய்யவும். பின்னர் தியானம் செய்யவும். கல்பக விருக்ஷத்தினடியில் உமையுடன் அமர்ந்திருப்பவர், சொக்கத்தங்க வண்ணம் கொண்டவர், சந்திரக் கீற்றைச் சிரஸில் சூடியவர். வரமுத்ரை, அபயமுத்ரை, கோடரி, மான் இவற்றை நான்கு கைகளில் தாங்கியவர். கருணைமழை பொழிகிற கடைக்கண்பார்வையால் அழகர். இவ்வாறு தியானித்து வீழிநாதனின் ஸந்நிதியில் ஜபம் செய். விரும்பிய தனைத்தும் கிட்டும். (मूले कल्पद्रुमस्य द्रुतकनकनिभं चारुपद्मासनस्थं, वामाङ्कारूढगौरी निबिडकुचभराभोगगाढोपगूढम् । नानालङ्कारकान्तं वरपरशुमृगाभीतिहस्तं त्रिणेत्रं वन्दे बालेन्दुमौलिं गजवदनगुहाश्लिष्ट पार्श्वं महेशम् என இதற்கான தியான சுலோகம்) (1-10)

पञ्चकोणान्तरालिख्य प्रणवं तस्य चान्तरे ॥ ११

लिखित्वाऽऽनुष्टुभं मन्त्रं बीजशक्तिसमन्वितम् ।
पञ्चाक्षराणि पत्रेषु पञ्चस्वपि लिखेत्ततः ॥ १२

कोणाग्रेषु लिखेच्छूलं दिक्ष्वष्टासु ततः परम् ।
लिखेदिन्द्रादिबीजानि भूपुरं च ततः परम् ॥ १२

कोणाग्रेषु लिखेच्छूलं दिक्ष्वष्टासु ततः परम् ।
लिखेदिन्द्रादिबीजानि भूपुरं च ततः परम् ॥ १३

मनोरानुष्टुभस्येदं यन्त्रमित्यच्यते बुधैः ।
स्वर्णे च रजते वापि ताम्रे वा भूर्जपत्रके ॥ १४

आलिख्य शक्तिमारोप्य षोडशैरुपचारकैः ।
अभ्यर्च्य सोमवारे तु शुक्ले माघेऽथवेतरे ॥ १५

जपित्वा तर्पयित्वा च पयोभिः पायसैर्घृतैः ।
हुत्वा बिल्वदलैः पत्रैः भोजयित्वा च भूसुरान् ॥ १६

पटसूत्रैर्यन्त्रमेतत् परिस्यूतं विधाय च ।
पुमांश्चेद्दक्षिणभुजे नारी वामभुजे तथा ॥ १७

साम्राण्या धूपितं कृत्वा तेजिनीशं हृदि स्मरन् ।
धारयेत्परया भक्त्या पुत्रारोग्यश्रियो लभेत् ॥ १८

भूतप्रेतपिशाचैश्च ग्रहैरपि न बाध्यते ।
राजा विजयते शत्रून्राज्यं भाग्यञ्च विन्दति ॥ १९

सर्वज्ञो जायते विप्रो वैश्यो बहुधनी भवेत् ।
कृषिः फलति शूद्रस्य सत्यमेतन्मयोदितम् ॥ २०

*இதற்கான யந்திரம் - 5 கோணங்கள், நடுவில் பிரணவம் பீஜமும் சக்தியும் சேர்த்து 5-5 அக்ஷரமாக ஐந்து தளங்களில், அவற்றின் முனையில் 8 திக்குகளிலும் சூலம், இந்திரன் முதலான எட்டு திக்பாலர்களின் பீஜாக்ஷரம் (லம், ரம், யம், ஷம், வம், யம், ஸம், ஐம்) எட்டுதிக்குகளில். அதன் வெளியே பூபுரம். இது வெள்ளி, தாமிரம், தங்கம், இவற்றில் ஒன்றாலான தகடு அல்லது பூர்ஜபத்திரத்தில் எழுதி பிராணசக்தியை ஏற்றி 16 உபசாரங்கள் செய்து மாசிஸோம வாரத்தில் (சுக்லம் அல்லது கிருஷ்ணபக்ஷத்தில், ஜபித்து பாலால் தர்ப்பணம் செய்து, பாயஸம், நெய், மற்றும் வில்வ இலையால் ஹோமம் செய்யவும் வேதியருக்கு உணவிட்டு யந்திரத்தின் மீது பட்டு நூல் சுற்றி ஆணுக்கு வலதுகையிலும் பெண்ணிற்கு இடதுகையிலும் கட்டி ஸாம்பிராணியால் தூபமிடவும். மக்கட்பேறு, நோயின்மை அரசருக்கு சத்ருஜயம் ராஜ்யப்ராப்தி, இவை பெறலாம். அந்தணன் எல்லாமறிந்தவனாவான். வைசியன் பெருஞ் செல்வந்தனாவான். சூத்திரனுக்கு பயிர் செழிக்கும். (11-20)*

त्रिरात्रन्तु निराहारस्तेजिनीनाथसन्निधौ ।
प्रायोपवेशं रचयन् सर्वान् कामानवाप्नुयात् ॥ २१

दूरदर्शी भवेदन्धः पङ्गुर्जंघालतां व्रजेत् ।
आनुष्टुभेन मन्त्रेण मधुनाक्तैस्तु हल्लकैः ॥ २२

रक्ताब्जैर्वाथ जुहुयादष्टोत्तरसहस्रकम् ।
तेन वश्याः स्त्रियस्सर्वा भवन्त्येव न संशयः ॥ २३

दासभूताश्च राजानः स्युस्तस्य वशवर्तिनः ।
अपामार्गसमिद्भिस्तु घृताक्तैरुत्पलैश्च वा ॥ २४

तथैव जुहयात्तेन सहस्राकर्षणं भवेत् ।
सर्षपैः करवीरैर्वा विद्वेषो जायते ध्रुवम् ॥ २५

करञ्जकुसुमैर्वापि स्तम्भः स्यान्नात्र संशयः ।
स्नुहीक्षीरसमक्ताभिः किम्पाकसमिदालिभिः ॥ २६

शत्रूनुच्चाटयेच्छ्रीघ्रं स्वस्माद्देशान्न संशयः ।
अजक्षीरेण चाभ्यक्तैरशोकसमिधां गणैः ॥ २७

जुहुयात्तेन तरसा व्यामोहो भवति ध्रुवम् ।
बहुधा किमयं मन्त्रो जपमात्रेण केवलम् ॥ २८

यद्यदिच्छति तत्सर्वं साधयेन्नात्र संशयः ।

வீழிநாதனின் ஸந்நிதியில் மூன்று நாட்கள் உபவாஸமிருந்து ஜபம் செய்து அசையாதமர்ந்திருந்தால் விரும்பியதைப் பெறலாம். குருடன் தூரப்பார்வை பெறுவான். அல்லது செந்தாமரையைத் தேனில் தோய்த்து 1008 தடவை. நாயுருவிஸமித்தை நெய்யில் தோய்த்து, அல்லியை நெய்யில் தோய்த்து ஹோமம் செய்ய ஆகர்ஷண சக்தி பெறலாம். ஆலம்ஸமித்தை வேப்பெண்ணெயில் தோய்த்தும் கடுகையும் அரளியையும் ஹோமம் செய்ய வெறுப்பை உண்டாக்கலாம். ஆலம்பாலில் தோய்த்த இலுப்பைஸமித்தையோ புங்கன்

பூவையோ ஹோமம் செய்ய ஸ்தம்பிக்கச் செய்யலாம். கள்ளிப்பாலில் நனைத்த எட்டிக்குச்சியை ஹோமம் செய்ய சத்துருவை அவனிருப்பிடத்திலிருந்து விரட்டலாம். ஆட்டுப்பாலில் நனைத்த அசோகக் குச்சியால் ஹோமம் எதிரியைக் கலக்கமடையச் செய்யும். (இவை சிறிதுமுறை தவறிச் செய்தாலும் கேடுதரக் கூடியவை. அதனால் அறிஞர் இதனைப் பயன்படுத்துவதில்லை). ஜபம் செய்தாலே விரும்பியதனைத்தும் கைகூடும். (22-27)

तत्रापि तेजिनीनाथसन्निधाने विशेषतः ॥ २९

एकवारजपः कोटिगुणितं फलमादिशेत् ।
आज्यैर्यः सोमवारेषु दीपलक्षान् प्रदीपयेत् ॥ ३०

दीपैर्विमुक्तपापः सन् याति सर्वज्ञतां भुवि ।
पुरा कुदुकनामास्ति विप्रो दारिद्र्यकर्शितः ॥ ३१

जपन्नानुष्टुभं मन्त्रं कृच्छ्राल्लब्धं गुरोर्मुखात् ।
यन्त्रेऽभ्यर्च्य विधानेन धनदस्य समोऽभवत् ॥ ३२

तेजिनीनाथविद्येयं कल्पवल्लीव कामधुक् ।
तेजिनी मन्त्ररूपेयं यन्त्रमूलाऽक्षरच्छदा ॥ ३३

ऐश्वर्यसुमनोजाला श्रुतषट्पदमण्डली ।
सा निवृत्तिपरागा च ब्रह्मानन्दरसावहा ॥ ३४

तस्य मूले सदा साम्बस्सन्निधत्ते मुनीश्वराः ।
साम्बस्तत्र करोतीशः सम्भोगानन्दताण्डवम् ॥ ३५

तेजिनीशदशनामस्तुतिः-

भूकैलास निवासाय कल्याणपुरवासिने ।
पञ्चाक्षरपुरेशाय दक्षाका शीविहारिणे ॥ ३६

षण्मङ्गलस्थलेशाय श्वेतकाननवासिने ।
आकाशनगरेशाय पनसारण्यवासिने ॥ ३७

नेत्रार्पणसुरेशाय तेजिनीशाय ते नमः ।
एतानि दशनामानि यत्र कुत्रापि च स्थितः ॥ ३८

स्मरन्नमति यस्तस्य नामापि च स्मरेत्सदा ।
ज्ञानं विनापि मुक्तः स्यात्तस्य नास्त्यत्र संशयः ॥ ३९

इति पञ्चचत्वारिंशोऽध्यायः

*ஈசனின் ஸந்நிதியில் ஜபமே கோடி மடங்கு பலன்தரும். நெய்யைக் கொண்டு லக்ஷதீபம், பாபம் நீங்கி அறிவைத் தரும். குடுகன் என்ற அந்தணன் மிகவும் ஏழை, குருமுகமாக முறைப்படி இந்த அனுஷ்டுப் மந்திரத்தின் உபதேசம் பெற்ருன். முறைப்படி ஜபித்து யந்திரத்தில் வழிபட்டுக் குபேரனுஞன். இந்த மந்திரம் கல்பகக் கொடி, காமதேனு, ஐச்வரியம் எனும் பூமாலே. இதனே வேதம் எனும் வண்டுசுற்றிவரும். பற்றின்மை என்ற பூந்தாதுமிக்கது. பிரும்மானந்தமெனும் தேன் நிரம்பியது. இதன் அடியில் அம்பிகையுடன் சிவன் எப்போதும் தங்கி ஆனந்த தாண்டவமாடுகிருன். ''பூகைலாஸத்தில் வசிப்பவன் கல்யாணபுரத்தில் வசிப்பவன், பஞ்சாக்ஷரபுரத்தின் ஈசன், தென்காசியில் (வீழிக்காட்டில்) விளேயாடுபவன், ஷண்மங்களம் என்ற ஸ்தானத்தில் வசிப்பவன், வெள்ளேக் காட்டில் (சுவேதவனத்தில்) வசிப்பவன். நேத்ரார்பணபுரத்தின் ஈசன், தேஜினீசன் என்ற பத்து பெயர்கள் கொண்ட சிவனுக்கு நமஸ்காரம். ('பூகைலாஸநிவாஸாய நம:. கல்யாணபுரவாஸிநே நம:. பஞ்சாக்ஷரபு ரேசாய நம:. தக்ஷகாசீவிஹாரிணே நம:, ஷண்மங்களஸ்தலேசாய நம:. ச்வேதகாநந வாஸிநே நம:. ஆகாசநகரேசாய நம:. பனஸாரண்ய வாஸிநே நம:. நேத்ரார்பணபுரீசாய நம:. தேஜினீசாய நம:. எனப்பத்து நாமங்கள் கொண்ட நாமாவளி இது.) இந்த பத்து நாமங்களேக் கூற இவற்றை நினேக்க ஜ்ஞானமின்றியே முக்தி கிட்டும். (29-39)*

षट्चत्वारिंशोऽध्यायः

सूतः—

स्वर्गेश्वराख्यं लिङ्गं यदास्ते हरिनदीतटे ।
तस्योद्भवञ्च माहात्म्यं वक्ष्ये शृणुत भूसुराः ॥ १

पुरा सारस्वते कल्पे कदाचित् सेनया सह ।
सुविक्रम इति ख्यातः कलिङ्गाधिपतिर्नृपः ॥ २

अन्वर्थनामाङ्कुलया पुरन्दरसमः श्रिया ।
षष्टिसाहस्रसङ्ख्याकैः पुत्रैश्च बलशालिभिः ॥ ३

मृगयायै विनिर्गत्य वनाद्वनमधावत ।
सिंहशार्दूलभल्लूकैर्लुलायैर्मत्तहस्तिभिः ॥ ४

वराहैर्गवयैः कृष्णसारैरन्यैस्तथा मृगैः ।
आवृतं तद्वनं वेगात् प्रविश्य नृपसत्तमः ॥ ५

कल्याणान्तरविन्यस्ततीक्ष्णनानाविधायुधम् ।
तुङ्गं तुरङ्गमारूढस्तमालाभतनुच्छदः ॥ ६

आकर्णान्तसमाकृष्टचापसंहितसायकः ।
समन्ततो वागुरिकैः सारमेयैरनुद्रुतः ॥ ७

इतस्ततश्चरन्वेगाद्धरणीपतिरुद्धतः ।
तत्र क्वापि तपस्यन्तं कण्वं मुनिमतन्द्रितम् ॥ ८

आक्रम्याज्ञानतः सेनापादघातैश्च पांसुभिः ।
अतनिष्ठाभिसङ्क्रुद्धं सुविक्रमनृपो मुनिम् ॥ ९

नानासेनापदाघातपांसुवर्षशरोत्करैः ।
पीडितस्स तपोनिष्ठां विसृज्याशु समुत्थितः ॥ १०

अशपच्च मुनिः क्रुद्धस्सुविक्रममरिन्दमम् ।

''அத்தியாயம்'' - 46

*ஹரியாற்றின் (அரிசிலாற்றின்) கரையில் 'ஸ்வர் கேசுவரம்' என்ற லிங்கம் உள்ளது. 'ஸுவிக்ரமன்' என்ற அரசன் நல்ல விக்கிரமமுள்ளவன். ஸாரஸ்வதகல்பத்தில் கலிங்கத்தை ஆண்டான். அவனுக்கு அறுபதாயிரம் புதல்வர்கள். நல்ல வலிவுமிக்க புதல்வர்களுடன் ஒரு நாள் வேட்டையாட ஒவ்வொரு காடாக அலைந்தான். காட்டைச் சூழ்ந்து நின்று சிங்கம், புலி, கரடி, யானை, காட்டெருமை, காட்டுப்பன்றி, கவயம்,மான் என பலவகை விலங்குகளை உயரமிக்க குதிரை மீதேறி வில்லும் அம்பும் கொண்டு வேட்டையாடினான். வேட்டைநாய்கள் முன்சென்று உதவின. ஒரு மூலையில் கண்வர்தவம் செய்து கொண்டிருந்தார். தன் பரபரப்பால் அரசன் இதனைக் கவனிக்காமல் படைவீரரின் பேரொலியாலும் ஓட்டத்தாலும் புழுதியையும் கூச்சலையும் எழுப்பி அவரது தவத்திற்கு இடையூறு விளைவித்தான். தவம் கலைந்த முனிவர் கோபத்துடன் அரசனைச் சபித்தார். (1-10)*

मुनिः—

अन्धा इव सुतैर्यन्मामाक्रम्य त्वं नृपाधम ॥ ११

व्यथितोहं पदाघातैर्व्यधास्तेन त्वमञ्जसा ।
अन्धो विकलहस्तश्च भवत्पुत्रैश्च सैनिकैः ॥ १२

इति कण्वमुनीन्द्रेण शप्तः स नृपतिस्तदा ।
शापायुधं तमानम्य शापस्यान्तमयाचत ॥ १३

कण्वः सोऽपि कृपालुत्वादुपशान्ततया भृशम् ।
पश्चात्तापसमायुक्तो नृपं वचनमब्रवीत् ॥ १४

युष्मदन्यूनसंख्याकाः पुरुषा यत्र कुत्रचित् ।
सम्भूय चेत् स्थितास्तेषु यूयं हि विकलाङ्गताम् ॥ १५

आन्ध्यमप्यतिरोप्याथ शीघ्रं स्वस्था भविष्यथ ।
इत्युक्तः कण्वमुनिना राज्यभ्रष्टः सुविक्रमः ॥ १६

सेनायास्तनयानाञ्च स्वस्याप्यान्ध्यतया भृशम् ।
मार्गं दर्शयितुं पत्नीं पुरस्कृत्याशु निर्गतः ॥ १७

*''கண்ணில்லாதவர் போல் ஆசிரமத்தை ஆக்கிரமித்து காலடியால் துன்புறுத்திய நீ உன் புதல்வர்களுடனும் படையினருடனும் குருடரும் கைமுடம் கொண்டவருமாவீர் என. உடன் கண்வரை வணங்கி சாபத்திலிருந்து விடுதலையை யாசித்தான். பரிவுமிக்க கண்வரும் கோபமடங்கியவராக பச்சாத்தாபப்பட்டு அரசனிடம் கூறினார் - அரசே! உம் கூட்டத்தை விட அதிக எண்ணுள்ளவர் ஓரிடத்தில் கூடியிருந்தால் அவர்களிடம் உம் பார்வையின்மையையும் கூழைக் கைநிலையையும் சுமத்தி மாற்றிவிட்டு நீங்கள் ஆரோக்யம் பெறுவீர் என்றார். தன் பத்னியைத் தனக்கு வழிகாட்டச் செய்து புதல்வர்களுடனும் படையினருடனும் அரசன் வெளியேறினான். (11-17)*

अस्मदन्यूनसङ्ख्याकान् पुरुषान्निर्गतानहम् ।
द्रक्ष्यामि भुवि कुत्रेति चिन्ताग्रस्तश्चचार ह ॥ १८

एवं चरंस्तत इतः सुविक्रमनृपाग्रणीः ।
कपिलस्याश्रमं दैवादाश्रयत्करुणा निधेः ॥ १९

स चान्धपारम्पर्येणोपानतं राजसत्तमम् ।
विवर्णवदनं दीनमतिविह्वलचेतसम् ॥ २०

सुविक्रमं निरीक्ष्याथ कपिलो वाक्यमब्रवीत् ।
कपिलः—
सुविक्रम महाबाहो लोकरक्षणतत्पर !॥ २१

शापवृत्तान्तमखिलं योगेनाज्ञासिषं तव ।
मासैः शापविमुक्त्यर्थं महत्स्थलमहं ब्रुवे ॥ २२

तेजिनीवनमित्यस्ति पुण्यक्षेत्रं महत्तरम् ।
तत्रत्यतीर्थजालेषु हरिनद्यां विशेषतः ॥ २३

माघस्नानाय सम्भूय वर्त्तते हि महाजनः ।
त्वत्पुत्रसैन्यसङ्ख्यायास्तस्याः शतगुणाधिकाः ॥ २४

सहस्रकोटयो विप्राः श्रद्धाभक्तिसमन्विताः ।
ते सर्वे कण्वशिष्यस्य कस्याप्यतिदुरात्मनः ॥ २५

मिथ्याभिशापमाकर्ण्य तापसं कण्वमेनिरे ।
कृतेन ह्यवमानेन कण्वः सन्तप्तमानसः ॥ २६

एवं तन्निग्रहायैव शापस्यान्तमकल्पयत् ।
यूयं गच्छत तत्राशु शापस्यान्तो भविष्यति ॥ २७

*நம்மை விட எண்ணிக்கையில் குறையாதவர்களை எங்கு காண்பேன் எனக்கவலைப்பட்ட அரசன் தைவவசத்தால் கபிலரின் ஆசிரமத்தை அடைந்தான். அவனைக் கண்ட கபிலர் தவத்தால் நிகழ்ந்ததை உணர்ந்து ஆறுதலளித்தார். ஸுவிக்ரமரே! யோக திருஷ்டியால் நடந்ததை அறிந்தேன். சில மாதங்களுக்குள்ளேயே சாபம் நீங்கவழி கூறுகிறேன். தேஜினீவனம் என்ற க்ஷேத்திரத்தில் மாசிமாதத்தில் அங்குள்ள தீர்த்தங்களிலும் ஹரி நதியிலும் நீராட ஆயிரம் கோடி மக்கள் கூடுவர். ஒரு துஷ்டனுன கண்வசிஷ்யன் தவமுக நடந்ததால் கண்வரே தவறு செய்து விட்டதாக அவர்கள் நினைத்து கண்வரை அவமதித்தனர். அதற்குப் பழிவாங்கவே உன் மீதுள்ள சாபத்தின் வடிவை இவ்வாறு அமைத்துள்ளார். நீங்கள் தேஜினீ வனம் செல்வீர். சாபத்திலிருந்து விடுபடுவீர் என்முர். (18-27)*

इति तद्वचनं श्रुत्वा हृष्टचेताः सुविक्रमः ।
तेजिनीवनमभ्येत्य त्वरया विप्रसत्तमान् ॥ २८

सहस्रकोटिसङ्ख्याकान् माघस्नानाय सङ्गतान् ॥ २९

घोषेण महता ज्ञात्वा तदन्तिकमुपाश्रयत् ।
सुविक्रमस्तु राजाथ तत्क्षणाद्धार्मिकाग्रणीः ॥ ३०

पुत्रैस्सैन्यैश्च तत्याज व्यङ्गतामन्धतामपि ।
माघस्नानार्थमायातास्ते सर्वे मुनयो द्विजाः ॥ ३१

कण्वशापबलादापुरान्ध्यश्च विकलाङ्गताम् ।
किमेतदिति वैक्लब्यं गते सङ्घे द्विजन्मनाम् ॥ ३२

लब्धरन्ध्रास्तदा चोरास्समाक्रम्य द्विजन्मनाम् ।
द्रव्याणि ताम्रपात्राणि वस्त्राण्याभरणानि च ॥ ३३

अन्यानि तण्डुलादीन्यप्याजह्रुरधिकोद्धताः ।
आन्ध्याच्च हस्तवैकल्यात् ते सर्वे ब्राह्मणास्तु तान् ॥ ३४

धिक्कर्तुमक्षमाः सन्तः तेजिनीशं समस्तुवन् ।
आक्रोशं करुणामूर्तिराकर्ण्यैषां द्विजन्मनाम् ॥ ३५

उत्तुङ्गतुरगारूढः राजवेषधरः शिवः ।
प्रमथैः सैनिकैः सार्कं ह्यगाद्धरिनदीतटम् ॥ ३६

तत्र गत्वा च सेनाभिः समाक्रम्य समन्ततः ।
चोरान्निगृह्य सर्वांस्तैः चोरितार्थानशेषतः ॥ ३७

आहृत्य तन्नदीतीरे कञ्चिद्राशीचकार सः ।
नन्दिकेशो भिषग्रूपं समाश्रित्य द्विजन्मनाम् ॥ ३८

आन्ध्यमप्यङ्गवैकल्यमतिशीघ्रमपाकरोत् ।
पूर्वस्माद्रमणीयाङ्गाः ते सर्वेऽथ द्विजोत्तमाः ॥ ३९

இதனைக் கேட்ட அரசன் மனமகிழ்ந்து தேஜினீவனம் வந்தான். ஆயிரம் கோடிமக்கள் மாசியில் தீர்த்தங்களில் நீராட வந்துள்ளதை அவர்களின் கோஷத்திலிருந்து உணர்ந்தான். உடன் இவர்களின் பார்வையின்மையும் அவயவக் குறைவும் மறைந்தது, மாசி நீரோட்டத்திற்காக வந்த வேதியர்கள் நோய் வாய்ப்பட்டனர். ஏனிது நிகழ்ந்தது என அவர்கள் நிலை குலைந்ததைக் கண்ட திருடர்கள் அவர்கள் கொணர்ந்த உணவுப்பொருள் தாமிரபாத்திரங்கள், ஆடைகள், நகைகள், அரிசி முதலிய தானியங்களையும் பறித்துச் சென்றனர். பார்வையின்மையாலும் உடல் ஊனத்தாலும் அதைத்தடுக்க இயலாத அந்தணர்கள் ஈசனை வேண்டித் துதித்தனர். இதனைக் கேட்ட சிவபெருமான் அரசவேடம் தாங்கிப் பிரமதகணங்களைப் படைவீரராக்கிக் குதிரை மீதேறி திருடர்களை அடக்கி அவர்கள் பறித்துச் சென்றதனைத்தையும் ஹரி நதிக்கரையில் குவித்தார். குருட்டையும் அங்க ஹீனத்தையும் நீக்கினார். முன்னைவிட அதிக அழகும் வலிவும் பெற்றவர்களாக்கினார். (28-39)

कर्णाकर्णिकया श्रुत्वा राज्ञा राशीकृतान्निजान् ।
अर्थानादातुमावृण्वन्राजानं दीनचेतसम् ॥ ४०

आवृत्य समयाचन्त स्वस्वानर्थांश्च चोरितान् ।
ततस्स राजा मायावी तत्तदर्थान् प्रदाय च ॥ ४१

कोटिकोटिगुणं भूयोऽप्यर्थान् प्रादिशदीप्सितान् ।
तानादाय ययुः केचित् धाम स्वं भोगलालसाः ॥ ४२

राजाऽथ सिद्धवेषेण महाकालेन मायिना ।
आकल्प्य मायया दीर्घामास्वर्गमधिरोहिणीम् ॥ ४३

स्वर्गार्थिनो बहूनन्यान् प्रापयामास वै दिवम् ।

*இந்தச் செய்தி காதுவழியே பரவ, தம் தம் பொருளைத் திரும்பிப் பெற அவ்வரசவேஷத்திலிருந்தவரைச் சூழ்ந்து நின்றனர். அந்த மாயாவி அரசன் அவரவருடையதைத் திருப்பித் தந்ததுடன் பல மடங்கு அதிகமாகவும் வழங்கினார். அந்த மாயாவி அரசன் ஸித்தர் வேஷமேற்று ஸ்வர்க்கம் வரை ஏறப்படி வரிசையுள்ள ஏணியை மாயையால் அமைத்து ஸ்வர்க்கம் செல்லவிரும்புபவரை ஸ்வர்க்கத்திற்கு அனுப்பினார். (40-43)*

ततस्तु गौतमागस्त्यप्रधाना मुनिसत्तमाः ॥ ४४

योगदृष्ट्या विदित्वाऽमुं राजवेषधरं शिवम् ।
स्तुत्वा बहुविधैः स्तोत्रैः प्रार्थयन्ति स्म शङ्करम् ॥ ४५

स्वामिन्निहैव तीरे त्वं तिष्ठ रक्षन् भयाकुलान् ।
प्रापयन् त्रिदिवं जन्तून् पञ्चक्रोशे तनुत्यजः ॥ ४६

तेषां तद्वचनं श्रुत्वा राजवेषधरः शिवः ।
तथैवानुगृहीतुं तान् आविर्भूते पुरः क्षणात् ॥ ४७

लिङ्गेऽन्तर्धानमकरोत् स्वर्गेश्वरसमाह्वयः ।
पञ्चक्रोशस्य परितो येषां देहाः पतन्ति वै ॥ ४८

अद्यापि तेषां स्वर्गाधिरोहणाय दृशोः पथि ।

आस्वर्गमायता भाति पुरस्तादधिरोहिणी ।
मोक्षार्थिनान्तु मोक्षः स्यात् नात्र कार्या द्विचारणा ॥ ४९

इति षट्चत्वारिंशोऽध्यायः

*அங்கு கூடியிருந்த கௌதமர் அகஸ்தியர் முதலான மஹரிஷிகள் யோகதிருஷ்டியால் சிவன் அரச வேஷத்திலிருப்பதைக் கண்டறிந்தனர். சிவனிடம் வந்து*

வணங்கித் துதித்து வேண்டினர். ''ஸ்வாமி நீர் இங்கேயே இருப்பீர். பயந்தவரைக் காப்பீர். சுற்றி ஐந்து குரோச அளவில் உள்ள மக்கள் உயிர் நீக்கும் போது அவர்களை ஸ்வர்கத்தை அடையச் செய்வீர்'' இதனை ஏற்ற ஈசன் ஸ்வர்கேச்வரராகக் காட்சி தந்து லிங்கத்தினுள் மறைந்தார். இன்றும் அந்த ஸ்வர்கத்திற்கு அழைத்துச் செல்கிற ஏணி உள்ளது. முக்திக்கும் இது இட்டுச் செல்லும். *(49)*



## सप्तचत्वारिंशोऽध्यायः

ऋषयः—

सूत ! पौराणिकश्रेष्ठ तव वक्त्रसरोरुहात् ।
निर्गलन्तीं सूक्तिसुधामस्माकं पिबतां मुने ॥ १

तृप्तिर्न जातु शुश्रूषा जायते नः पुनः पुनः ।
इतः परञ्च माहात्म्यमनुक्तं वक्तुमर्हसि ॥ २

सूतः—

तेजिनीवनमाहात्म्यं साकल्येन मुनीश्वराः ।
आनन्त्येन चतुर्वक्त्रोऽप्यभिधातुन्न शक्नुयात् ॥ ३

कोऽहमल्पमतिर्वक्तुं तथापि महतामिह ।
ज्ञातमात्रं किञ्चिदुक्त्वा स्वात्मानं परिपालये ॥ ४

आदिराजो मनुः पूर्वमश्वमेधं विधाय च ।
पुनर्विश्वजितं कर्तुं चक्रवर्तित्वलब्धये ॥ ५

तेजिनीवनमासाद्य तपश्चक्रे स्त्रिया सह ।
धवया भावयामास वसिष्ठाद्यैर्महर्षिभिः ॥ ६

ततः प्रसन्नो भगवान् हंसो हंसेन्द्रवाहनः ।
तेजिनीविपिनं स्वीयं तपोवनमनुत्तमम् ॥ ७

यागाय मनवे प्रादाच्चतुरश्चतुराननः ।
तत्र कृत्वा मनुर्यागं यथावन्मुनिपुङ्गवाः ॥ ८

तेजिनीशप्रसादेन सार्वभौमोऽभवद्द्विजाः ।
ततो नानोपकरणैः क्षेत्राणि च गृहाणि च ॥ ९

विप्राणां शतसङ्ख्यानां प्रदातुमुपचक्रमे ।
स चाष्टनवतिं तत्र ब्राह्मणानान्ददर्श ह ॥ १०

न दृष्टवानुभौ तत्र मनुश्चिन्तापरोऽभवत् ।
शतानां हि प्रतिज्ञातं न्यूनताभूद्द्वयोरिह ॥ ११

तावद्दृष्ट्वा न भोक्ष्यामि न स्वपामि न मन्दिरम् ।
विशामि बहुना किं वा परित्यक्ष्यामि जीवितम् ॥ १२

''அத்தியாயம்'' - 47

மேலும் க்ஷேத்ரப் பெருமை பற்றி அறிய விரும்பிய ருஷிகளுக்கு ஸூதர் விளக்குகிறார். ஆதியரசனான மனு அசு - வமேத வேள்வியைத் தொடர்ந்து உலகம் முழுவதையும் ஆளத்தகுதி பெற விசுவஜித் வேள்வியைத் தொடங்கு முன் வீழிக்காடு வந்து தவா என்ற மனைவியுடனும் வஸிஷ்டர் முதலான முனிவருடனும் தவமிருந்தார். தவத்தில் மகிழ்ந்த பிரும்மா ஹம்ஸவாகனமேறித் தான் தவம் செய்த இடத்தை வேள்விபுரிவதற்கென மனுவிடம் தந்தார். அங்கு மனு ஈசனது அருளால் வேள்வி புரிந்து பூவுலகச் சக்ரவர்த்தியானார். உடன் அங்கு நூறு அந்தணர் வாழும்படி குடியிருப்புகளை அமைத்து அந்தணர்களுக்கு வழங்கினார். 98 அந்தணர்களே தானம் பெற வந்தனர். இருவர் கிடைக்கவில்லை. தன் உறுதிமொழி வீணானதைக் கண்டு இருவரைப் பெறும் வரை உணவேற்காமல்,

தூங்காமல், வீட்டினுள் நுழையாமல் இருந்தவர் முடிவில் உயிரை விடவும் துணிந்தார். (1-12)

इत्येवं खिन्नमनसं समालोक्य हरिस्तदा ।
विश्वाधिको महर्षिश्च ऋषिणा हरिणा सह ॥ १३

सकुडुम्बः प्रादुरासीद्ददर्श दशमे दिने ।
तौ विलोक्य मनुः प्रीतः प्रत्युत्थाय कृताञ्जलिः॥ १४

पाद्यमर्घ्यं ददौ ताभ्यां मधुपर्कं यथाविधि ।
स्वागतेन प्रयातौ तौ दृष्ट्वा मनुरमोहधीः ॥ १५

सौवर्णरत्नखचितं प्रददौ विष्टरद्वयम् ।
प्राञ्जलिश्चाब्रवीद्वाक्यं सुखासीनौ मनुश्च तौ ॥ १६

पात्रमासीन्मखस्थानं भवदागमनादिह ।
भवत्पादाब्जजन्मेदं रजः पापविनाशनम् ॥ १७

इति मे हृद्गतं पङ्कं शिरसा धृतमप्यहो ।
अतिथिभ्यामहन्तावत् युवाभ्यां करवाणि किम् ॥ १८

இவ்வாறு துயருற்ற முனிவரைக் கண்ட ஹரி விசுவாதிகர் (சிவன்) என்ற அந்தணருடன் தம் தம் குடும்பத்துடன் ருஷி வேஷத்தில் வந்தார். அவரை முறைப்படி பாத்யமும் அர்க்கியமும் தந்து வரவேற்ற மனு தங்கத்தாலான இரு ஆஸனங்களில் அமர்த்தினான். அவர்களிடம் பணிவுடன் தெரிவித்தான். ''இந்த வேள்விச் சாலை இன்று புனிதமானது. உங்களது திருவடித் தூசிபட்டு என் பாபவினை அகன்றது. அதனைச் சிரசில் ஏற்றேன் அதிதிகளாக வந்துள்ள இருவருக்கும் நான் என்ன செய்ய வேண்டும் என. (13-18)

ऋषी—

दर्शनार्थमिहायातौ तव राजर्षिसत्तम ।
नातः परतरं किञ्चिदावयोरस्ति कांक्षितम् ॥ १९

मनुः-

मया शतस्य विप्राणां दातुं क्षेत्रं गृहन्तथा ।
प्रतिश्रुतं युवाभ्यान्तु शतसङ्ख्या हि पूर्यते ॥ २०

अतो गृहञ्च क्षेत्रञ्च युवाभ्यां प्रतिगृह्यताम् ।
इति वाक्यं मनोः श्रुत्वा तावृषी वाचमूचतुः ॥ २१

ऋषी—

राजर्षे सर्वथैवावां प्रतिग्रहपराङ्मुखौ ।
आवयोः पुरतो नेदं वाक्यं वक्तुं त्वमर्हसि ॥ २२

मनुः—

युवयोः कुत्रचिद्वांछा यद्यपीह न विद्यते ।
तथापि दीनं मामेकं कृतार्थीकुरुतं युवाम् ॥ २३

इति तत्पादयो राजा साष्टाङ्गं प्रणिपत्य च ।
यदा न मुमुचे पादौ तदा तावभ्यभाषताम् ॥ २४

*''உன்னைக் காணவிரும்பிறேம். வேறு பணி ஏதுமில்லை என்ற முனிவர்களிடம் மனுவேண்டினன். நூறு அந்தணர்களுக்கு நிலமும் வீடும் கொடுக்க உறுதி கொண்டேன். உங்களிருவரையும் சேர்த்தால் தான் நூறு நிறையும்'' என. முனிவர் கூறினர். அரசே நாங்கள் தானம் வாங்குபவரல்ல. எம்மிடம் இந்தச்சொல் ஏற்கப் பெறுது. என. ''ஐயன்மீர்! உமக்கு விருப்பம் இல்லை எனினும் இந்த எளியவனின் கோரிக்கை ஏற்பீர் எனத்திருவடிகளில் வணங்கிப் பிடித்துக் கொண்ட*

மனுவிடம் முனிவர் கூறினர். (19-24)

प्रतिग्रहे यदि त्वं नौ निर्बध्नासि तदा नृप ।
परीक्ष्य योग्यतामेतदनुरूपं दिशावयोः ॥ २५

राज्यं समस्तमैश्वर्यं तस्य कोशगतं नृप ।
अन्यथा प्रतियास्याव इति निर्गन्तुमैहताम् ॥ २६

ब्राह्मणेभ्योऽष्टनवतिक्षेत्रमात्रमयाचत ।
याचित्वा तदनुज्ञातस्सकलं विभवं निजम् ॥ २७

उद्युक्ते दातुमुर्वीन्द्रे प्रसन्नौ तावृषीश्वरौ ।
मास्तु मास्त्विति विप्रैस्तैः क्षेत्रं गृहमपि द्विजाः ॥ २८

अगृह्णीतां विमुच्यान्यत्ततः प्रीतो नृपो मनुः ।
प्रतिज्ञातार्थनिर्वृत्तिर्जातेति परया मुदा ॥ २९

विश्वकर्माणमाहूय ब्राह्मणानां शतस्य च ।
वास्तुनिर्माणविपुल फलवृक्षसमाकुलम् ॥ ३०

ददौ विप्रशतस्यापि क्षेत्राणि च गृहाणि च ।
ततः स्वं रूपमास्थाय सांबो देवः श्रियः पतिः ॥ ३१

साम्राज्यपदमस्मै च सन्ततिश्रीसमेधिताम् ।
अदातां मनवे राज्ञे मोदन्ते सुमुनीश्वराः ॥ ३२

पुष्पवृष्टिस्तदा चासीद्देवदुन्दुभिनिस्वनैः ।
अद्यापि भगवान् सोमास्कन्दो लक्ष्मीपतिश्च सः ।
अतिष्ठतां प्रमोदेन तेजिनीनगरे द्विजाः । ३३

इति सप्तचत्वारिंशोऽध्यायः

*தானத்தை ஏற்க வற்புறுத்திஞல் உமது ராஜ்யம், பொருள் பொக்கிஷம் என அனைத்தையும் வழங்குவீர். இல்லாவிடில் திரும்பிச் செல்கிருேம் எனத் திரும்பிச் செல்ல முயன்றனர். உடன் மனு 98 பிராமணர்களுக்குத் தானம் செய்தவற்றைத் திரும்ப அவர்களிடம் யாசித்துப் பெற்று தனதென இருந்த தனைத்தையும் இருவருக்கும் அளிக்க முன்வந்த மனுவைத் தடுத்து, ஒரு வீட்டையும் நிலத்தையும் மட்டும் ஏற்றனர். மனு மிகவும் திருப்தியடைந்தான். விசுவகர்மாவிடம் நூறு வேதியருக்கும் நிலத்தைச் சீர்படுத்தி வீட்டைக் கட்டித் தரச்செய்தான். சிவன் வேடம் கலைந்து உலகஸாம் ராஜ்யத்தை மனுவிற்கு அளித்தார். முனிவர்கள் மகிழ்ந்தனர். ஸோமாஸ்கந்தரும் லக்ஷ்மீபதியும் ஆனந்தத்துடன் வீழிக்காட்டில் உள்ளனர். (25-33).*



## अष्टचत्वारिंशोऽध्यायः

सूतः—

अस्य क्षेत्रस्य माहात्म्यं वदामि भवतां पुनः ।
शृणुध्वं सावधानेन शिवभक्ता मुनीश्वराः ॥ १

पुरा देवासुरे युद्धे तुमुले रोमहर्षणे ।
बलवद्भ्यो दानवेभ्यः पराभूतं वलद्विषम् ॥ २

आलोक्य मुचुकुन्दो द्रागभ्येत्य रथमास्थितः ।
शस्त्रास्त्रवर्षैस्सहसा दानवानभिनत्तराम् ॥ ३

केचिन्निकृत्तशिरसः केचिच्छिन्नोरुबाहवः ।
केचित् त्रुटितनासाक्षाः केचिदुद्भिन्नवक्षसः ॥ ४

क्षतोदराः परे केचित् केचित् प्रमथितांघ्रयः ।
एवं पलायितास्सर्वे दानवाः प्रहतौजसः ॥ ५

मुचुकुन्दप्रभावेन भग्नानालोक्य दानवान् ।
प्रहृष्टचेता वृत्रारिर्निवेश्यार्धासने नृपम् ॥ ६

मुचुकुन्दं धर्मचर्यापरं परपुरञ्जयम् ।
स्वर्गेऽपि दुर्लभं तस्य प्रादिशत्पारितोषिकम् ॥ ७

पुनश्च नन्दनवनात् नीलमुद्यानपालकैः ।
अपूर्वं गोस्तनीगुच्छं रसाढ्यममृताधिकम् ॥ ८

आदाय मुचुकुन्दस्य हस्ते दत्वा कथञ्चन ।
प्रेषयामास राजाऽपि मुचुकुन्दं प्रहृष्टधीः ॥ ९

सोमास्कन्दस्य देवस्य तन्निवेदयितुं क्षणात् ।
कमलालयमासाद्य स्थितस्त्यागेशसन्निधौ ॥ १०

*''அத்தியாயம்'' - 48*

*முன்னர் தேவாஸுரப் போரில் வலிவுமிக்க அஸுரர்களிடம் இந்திரன் தோற்றான். இதனைக் கண்ட முசுகுந்தர் என்ற அரசர் தன் அஸ்திர சஸ்திரங்களால் அஸுரர் படையைச் சிதற அடித்தார். தலை, கை, கால், வயிறு, மார்பு, என அங்கமங்கமாக இழந்து அஸுரர்கள் ஓடினர். இதனைக் கண்ட இந்திரன் தன் ஆஸனத்தில் முசுகுந்தரை அமர்த்திப் பாராட்டிப் பரிசளித்தான். ஸ்வர்கத்திலும் எளிதில் கிட்டாத - நந்தனவனத்திலிருந்து கொணர்ந்த திராக்ஷைக் கொத்தைப் பரிசாக அளித்தான். அமுதத்தை விட இனியது. சுவைமிக்கது. முசுகுந்தன் உடனே ஏற்று இந்திரனால் வழியனுப்பப் பெற்று திருவாரூர் கமலாலயத்தில் நீராடி தியாகேசரின் எதிரே திராக்ஷைக் கொத்தை வைக்கச் சென்றான். (1-10)*

तत्राविरभवत् कापि दिव्यवागशरीरिणी ।
तेजिनीनगरे विष्णोश्चक्रदानमहोत्सवम् ॥ ११

द्रष्टुन्तत्तत्क्षेत्रगता ययुर्देवास्समन्ततः ।
त्यागेश्वरोपि देवेशः तदुत्सवदिदृक्षया ॥ १२

गतस्तत्र त्वमचिरादेत्य गुच्छं निवेदय ।
इति दिव्यवचः श्रुत्वा मुचुकुन्दो नृपाग्रणीः ॥ १३

तेजिनीवनमासाद्य त्यागेशं सन्ददर्श ह ।
सोमास्कन्दस्य तस्याग्रे निवेदयितुमादरात् ॥ १४

न्यदधात् गोस्तनीगुच्छमतिमाधुर्यसौरभम् ।
बाहुलेयस्तु तं दृष्ट्वा लालसः प्राङ् निवेदनात् ॥ १५

करं प्रसारयामास गृहीतुन्तत्क्षणादुमा ।
निवेदनात्प्राग्ग्रहणन्नोचितं तव पुत्रक ॥ १६

इति जग्राह गिरिजा स्कन्दस्य करपल्लवम् ।
तदृष्ट्वा शङ्करः प्रीतो मुचुकुन्दाय कांक्षितम् ॥ १७

दत्वा सम्प्रेक्ष्य तद्द्राक्षाफलानि मधुराणि वै ।
शनकैश्शनकैरास्ये गुहस्य न्याक्षिपन्मुदा ॥ १८

अद्यापि पश्चाल्लिङ्गस्य सोमास्कन्दो महेश्वरः ।

அங்கொரு அசரீரி வீழிநகரில் விஷ்ணுவிற்குச் சக்கிரமளிக்கிற உற்சவத்தைக் காணத்தேவர்களுடன் தியாகேசப் பெருமானும் சென்றுள்ளதாக அறிவித்தது. உடன் முசுகுந்தன் தேஜினீவனம் வந்து தியாகேசரை வணங்கி மிகவும் இனியதான திராக்ஷைக் கொத்தை அவர்முன் நீட்ட பாலஸ்கந்தர் தன் கையை நீட்டினார். ஈசனுக்கு நிவேதனம் செய்வதற்கு முன் திராக்ஷையைத் தின்பது பாபம் என மலைமகள் தடுக்க, சிவபெருமான் முசுகுந்தன் விருப்பப்படி ஏற்று ஒவ்வொரு பழமாக பாலமுருகனின் வாயில் ஊட்டினார். இன்றும் அந்தக் கோலத்தை லிங்கத்தின்

பின்பக்கத்தில் காணலாம். (11-18)

पुनश्चान्यत् प्रवक्ष्यामि शृणुध्वं मुनिपुङ्गवाः ॥ १९

पुरा वै सिन्धुमथने त्वमृतैरावृतानि हि ।
चत्वार्याम्रफलान्युच्चैः पूर्णानि च सुधारसैः ॥ २०

उद्भूवन्विधिस्तानि जग्राह चतुराननः ।
दत्वैकं गणनाथाय काञ्च्यामेकं फलन्तथा ॥ २१

एकचक्रपुरे चैकमेकं श्रीतेजिनीवने ।
साम्बप्रसादसिध्यर्थं तद्रसैः प्लाव्य शङ्करम् ॥ २२

न्यधात्तदीयबीजानि तत्तस्थानेषु वृद्धये ।
तद्वृक्षमूलमभजत् काञ्च्यामेकाम्रनायकः ॥ २३

एकचक्रपुरे चैव तन्मूलं वृषभेश्वरः ।
आस्ते सत्यव्रतक्षेत्रे च्छिन्नाम्रफलसङ्गमः ॥ २४

सत्यव्रतप्रभावेन पाण्डवानां हरेः पुरः ।
पाञ्चाल्याश्च विशेषेण सत्यनुन्नं फलं तथा ॥ २५

समजायत विप्रेन्द्राः तेजिनीविपिने पुनः ।
प्राग्भागे धर्मकुण्डस्य प्रचकास्ति ससौरभम् ॥ २६

*முன்பு பாற்கடலைக் கடைந்த போது அமுதம் தோய்ந்த நான்கு மாம்பழங்கள் வெளியாயின. பிரும்மா அவற்றை எடுத்து ஒரு பழத்தை விநாயகருக்கு அளித்தார். மற்ற மூன்றையும் ஒவ்வொன்றாகக் காஞ்சியிலும் ஏகசக்ரபுரத்திலும் தேஜினீவனத்திலும் கொண்டு சேர்த்து அவற்றின் சாற்றால் ஈசனை நீராட்டி, விதையை மண்ணில் விதைத்தார். அதில் முளைத்த மரத்தினடியில் காஞ்சியில் ஏகாம்ர நாதனும், ஏகசக்ரபுரத்தில் விருஷபேசுவரருமாக உள்ளார். ஸத்யவிரதக்ஷேத்திரத்தில்*

*இரண்டாகப் பிளந்த மாம்பழம் ஸத்யவிரதரின் பெருமையாலும் பாண்டவர்களுக்கும் கிருஷ்ணனுக்கும் எதிரே துரௌபதியின் கற்புப் பெருமையாலும் ஒன்றானது. தேஜினீவனத்திலோ கிழக்கில் தர்மகுண்டத்தின் எதிரில் உள்ளது. (19-26)*

देवयोग्यं फलन्तच्चायोग्यं स्यान्मर्त्यजातये।
योऽवमत्य महादेवं गृहीत्वाऽऽम्रफलं ततः ॥ २७

भुनक्ति कृमियुक्तं स्यादग्निपाकेन पच्यते।
ब्रह्मविष्णुमहेशानामुपभोग्यं द्विजोत्तमाः ॥ २८

तत्फलापहृतो मर्त्यो मर्कटो निरयीभवेत् ।
वैशाखमासे चार्द्रायां श्रवणे रोहिणीदिने ॥ २९

सहितं पञ्चगव्येन पञ्चामृतसमन्वितम् ।
द्राक्षाफलसमायुक्तं कपित्थरससंयुतम् ॥ ३०

लिङ्गमाच्छाद्य विधिवदर्घयामादनन्तरम् ।
गोक्षीरेणाभिषिच्याथ लिङ्गं श्रीतेजिनीपतेः ॥ ३१

सुगन्धिसलिलेनापि महानैवेद्यमर्पयन् ।
समस्तरोगैर्मुच्येत भक्षयेत्तत्समर्पितम् ॥ ३२

एवं कृत्वा भरद्वाजो गौतमश्च महातपाः ।
पुरुषार्थानलभतामस्तौषीच्च बृहस्पतिः ॥ ३३

*இறைவனுக்கு மட்டுமே நிவேதனப் பொருளான அப்பழம் மனிதருக்கு ஒவ்வாதது. இறைவனைப் பொருட்படுத்தாமல் அதனை உண்பவனுக்கு அது புழுநெளிகிற பழமாகும். நெருப்பில் சுட்டாலன்றி பழுக்காது. மும்மூர்த்திகளுக்கேற்ற நிவேதனப் பொருளது. அதனைப்பறிப்பவன் குரங்காகி நரகம் சேர்வான். வைகாசிமாதத்தில் திருவாதிரை திருவோணம் ரோஹிணி*

நட்சத்திரமுள்ள நாட்களில் பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் திராக்ஷைச்சாறு இவற்றால் லிங்கத்தின் மீது சுற்றிப் பாலாலும் நறுமணமுள்ள நீராலும் நீராட்டி, மஹாநைவேத்யம் ஸமர்ப்பணம் செய்து இறைவனது பிரஸாதத்தை ஏற்க நோய்கள் நீங்கும். இவ்வாறு செய்து பரத்வாஜரும் கௌதமரும் அறம் பொருள் இன்பம் முக்தி என அனைத்தையும் பெற்றனர். பிருஹஸ்பதி இவ்வாறு துதிக்கிறார். (27-33)

## तेजिनीवनेशस्तुतिः

हंसाकारवराहरूपवपुषोर्वाणीरमानाथयोः
किन्नन्दीश शिरः पदं च भवतोऽप्युच्चैरधो गच्छतोः ।
मौलिर्धातृकरोटिकोटिकलितं शौर्यक्षिचिह्नं पदं
नालं तेन तदीयलाघवकृतौ श्रीतेजिनीश प्रभो ॥ ३४

श्रेयसी नगरी चैव शिवाख्या नगरी तथा ।
पश्चिमे श्रीसमृद्धस्य श्रीवाञ्छयस्यापि चोत्तरे ॥ ३५

प्राच्यां दुर्गेश्वरस्यापि विरिंचस्यापि दक्षिणे ।
तेजिनीनगरी पुण्या सेव्या योगिजनैस्सदा ॥ ३६

## इति अष्टचत्वारिंशोऽध्यायः

''நந்தீசரே! ஹம்ஸபக்ஷியாகவும் வராஹமாகவும் ஆன விஷ்ணுவும், பிரும்மாவும் திருவடியும் முடியும் எவ்வாறு உள்ளது எனக் கீழும் மேலும் சென்று ஆராயும் போது முடியை பிரும்மாவின் மண்டை ஓட்டின் நுனி தட்டியது. திருவடி திருமாலின் கண்ணை அடையாளமாகக் கொண்டது. தேஜினீசரே பிரபுவே! அவ்விருவரையும் மட்டம் தட்ட இவ்விரண்டு போதாதோ ?சிரேயோ நகரமும் ( ?) சிவநகரும் மேற்கில், சீர் மிக்க ஸ்ரீ வாஞ்சியத்தின் வடக்கே, துர்கேசுவரத்தின் கிழக்கே விரிஞ்சிபுரத்தின் தெற்கே தேஜினீ நகரம் உள்ளது.

—★—

## एकोनपञ्चाशोऽध्यायः

ऋषयः—

सूत सूत महाप्राज्ञ सर्वज्ञ करुणानिधे ।
न भक्ष्यं शिवनिर्माल्यं इति केचिद्वदन्ति हि ॥ १

व्यासशिष्येण भवता भक्षयेत्तत्समर्पितम् ।
इति प्रोक्तं तदस्माकं संशयो वर्तते महान् ॥ २

तमेनं संशयं छिन्धि महत्संमतिदर्शनात् ।
एवमुक्तो द्विजैस्सूतस्तान् प्रति प्रत्यभाषत ॥ ३

सूतः—

गुरूपदिष्टमार्गेण यथाशक्ति वदाम्यहम् ।
शृणुध्वमृषयस्सर्वे रहस्यं पातकापहम् ॥ ४

निर्माल्यं चन्द्रचूडस्य स्वीकुर्वन् ब्राह्मणोत्तमः ।
राजसूयादियज्ञानां फलं प्राप्नोत्यसंशयम् ॥ ५

मामनुज्ञाय देवेशं चण्डेशं ब्राह्मणश्शुचिः ।
गृहीतं मत्प्रसादन्तु भक्ष्येति शिवभाषितम् ॥ ६

रुद्रेण भुक्तं भुञ्जीत रुद्रपीतं पिबेन्नरः ।
रुद्राघ्रातन्तु जिघ्रयादित्येषा शाश्वती श्रुतिः ॥ ७

शुद्धं शिवस्य निर्माल्यं भुञ्जीयात् भक्तितो द्विजः ।
देवस्यान्यस्य नैवेद्यं भुक्त्वा चान्द्रायणं चरेत् ॥ ८

*''அத்தியாயம்'' - 49*

*சிவநிர்மால்யத்தை உண்ணக் கூடாதென்கின்றனர். வியாஸரின் சிஷ்யரான நீரோ அதனை உண்ணவேண்டுமென்றீர்.*

இந்த ஐயத்தை விளக்குவீர் என ருஷிகள் கேட்க ஸூதர் கூறுகிறார் - சிவனது நிர்மால்யத்தை ஏற்கிற அந்தணன் ராஜஸூயம் முதலிய வேள்விகளைச் செய்தவனாகிறான். சிவனே ''என் அனுமதியுடன் சண்டேசனது அனுமதியுடன் என் பிரஸாதத்தை உண்ணலாம்'' என்று சொல்லியுள்ளார். ருத்ரன் உண்ட மீதியை உண்பீர்; ருத்ரன் பருகிய மீதியைப் பருகுவீர்; ருத்ரன் முகர்ந்ததை முகர்வீர் என வேதம் கூறும். மற்ற தேவர்களுக்குப் படைத்த மீதியை உண்டவன் சாந்திராயண விரதமிருந்து தன்னைத் தூயவனாக்கிக் கொள்ள வேண்டும். சிவனது நிர்மால்யம் தூயது. அதனை சாப்பிட வேண்டும். (1-8)

बाणे च चन्द्रकान्ते च रक्ते रासे स्वयंभुवि ।
सौवर्णे राजते लिङ्गे ताम्रलोहविनिर्मिते॥ ९

सिद्धप्रतिष्ठिते चापि चण्डेशाधिकृतिर्नहि ।
तद्भुक्तन्तु ततो भोज्यं तान्त्रिकं तन्न चेद् द्विजः ॥ १०

शिरसा शिवनिर्माल्यं यो धत्ते भक्तिसंयुतः ।
मनोवाक्कायजैः पापैः स नो लिप्येत कुत्रचित् ॥ ११

स्नानोदकञ्च निर्माल्यं भक्त्या धार्यं प्रयत्नतः ।
मनोवाक्कायजैः पापैः स नो लिप्येत कुत्रचित् ॥ १२

तदश्याम तवेत्येतां श्रुतिमत्र सनातनीम् ।
प्रमाणमाहुर्वेदार्थतत्वज्ञा मुनिपुङ्गवाः ॥ १३

निर्माल्यं निर्मलैर्भोज्यं शिवस्यानिर्मलोदराः ।
भुञ्जीरन् यदि ते यामीं यातनामतिदुस्सहाम् ॥ १४

பாணம், சந்திரகாந்தக் கல்லாலானது, ரத்தினத்தாலானது, பாதரஸத்தாலானது, ஸ்வயம்பூ, தங்கம் - வெள்ளியாலானது, தாமிரத்தாலானது சித்தர்களால் ஸ்தாபிக்கப் பெற்றது. இவற்றில் சண்டேசருக்குப் பங்கில்லை. இதனை ஏற்கலாம். தாந்திரிகமாக

ஸ்தாபிக்கப்பட்டதன் மீதம் ஏற்கத்தக்கதல்ல. ஷண்முகரின் கருத்துப்படி தலையால் சிவநிர்மாலயத்தை ஏற்கத் தூய்மை, இம்மையிலும் மறுமையிலும் இன்பமுண்டு. சிவனது நீராட்டலிற்குப் பயன்பட்ட நீர் சிரஸால் ஏற்கத்தக்கது. மனம் - வாக்கு - உடலால் செய்த பாபம் நீங்கும். ததச்யாம தவருத்ர என்ற மந்திரம் இதற்கு பிரமாணம். நிர்மால்யம் - மலமற்றது. மலமற்றவராலேயே அது ஏற்கத்தக்கது. தூய்மையில்லாதவர் ஏற்க நரகபாதை நேரும். (9-14)

प्रागुक्तबाणलिङ्गादिव्यतिरिक्तस्थलेषु च ।
चण्डेश्वराधिकारोऽस्ति न भोज्यन्तत्तु वैदिकैः ॥ १५

प्रसादान्नं प्रसादाम्बु पादाम्बूनि पिनाकिनः ।
संसारविषवृक्षस्य कुठारं वायुरब्रवीत् ॥ १६

स्वेष्टलिङ्गाय यद्दत्तमन्नं पानीयमेव च ।
स्वयन्तत् प्राशयेत् प्राज्ञो नान्यस्मै तत्प्रदापयेत् ॥ १७

निर्मलत्वाच्च निर्माल्यं शम्भोर्नैर्मल्यकारणम् ।
स्वीकार्यं तत् सदा विप्रैः इति प्रोवाच भास्करः ॥ १८

तिलस्य षोडशांशं च तृणाग्राम्बुकणोपमम् ।
प्रसादं पादसलिलं गृह्णन् मुच्येत संसृतेः ॥ १९

முன் கூறிய பாணலிங்கம் முதலானவற்றைத் தவிர மற்ற இடங்களில் சிவநிர்மால்யம் சண்டேசரைச் சார்ந்தது. வேதவழியில் வழிபடுவோர் அதனை ஏற்பதில்லை. பிநாகியின் (சிவனின்) பிரஸாதமான அன்னம், நீர், திருவடி நீர் இவை பிறவிக்கட்டை வெட்டி அகற்றுகிற கோடாரி என வாயு கூறியுள்ளார். தன் இஷ்டதைவமான லிங்கத்திற்கு அளிக்கப் பெறுகிற அன்னம் நீர் முதலியவற்றைப் பிறருக்கு விநியோகிக்காமல் தான் ஏற்கலாம். நிர்மலமான சிவ நிர்மால்யம் நம்மையும் நிர்மலனாக - அழுக்கற்றவனாக ஆக்கும்.

*அதனை அந்தணர் ஏற்கவேண்டும் என்பார் ஸூரியன். எள்ளில் வீசம்பங்குள்ள அன்னமும் புல்நுனியில் தங்கும் நீரளவு திருவடி நீரும் ஏற்றால் போதும். ஸம்ஸாரக் கட்டு விலகும். (15-19)*

ब्रह्मचारी गृहस्थो वा वानप्रस्थो यतिस्तु वा ।
सर्वेषां शिवनिर्माल्यं सर्वपापव्यपोहनम् ॥ २०

महातीर्थानि कावेरी गङ्गा च यमुना नदी ।
गोदावरी भीमरथी नर्मदा च सरस्वती ॥ २१

सदा सन्निहितास्त्वेताश्शम्भोर्यत् पादयोर्द्विजाः ।
अतस्समुद्रा गिरयस्तव रूपञ्च सिन्धवः ॥ २२

स्यन्दन्ते ब्रह्मण इति महोपनिषदास्तिकाः ।
शिवाभिषेकसलिलं नित्यं प्रातः पिबेन्नरः ॥ १३

कुष्ठज्वरापस्माराद्यैः मुच्यते नात्र संशयः ।
शिवस्य पादौ प्रक्षाल्य शङ्खमापूर्य वारिभिः ॥ १४

अभ्यर्च्य गन्धपुष्पाद्यैः कद्रुद्रायेति मन्त्रतः ।
अपि चेमा रुद्रायेति मन्त्रेण कृतमार्जनः ॥ २५

ऋतं सत्यमिति प्राश्नन्दशपूर्वान्दशापरान् ।
आत्मानन्तारयेच्चेति प्राह बोधायनो मुनिः ॥ २६

रुद्रोपभुक्तं भुञ्जीयादित्यारभ्य ततः परम् ।
तस्माद्विप्रः प्रशान्तात्मा निर्माल्यं भक्षयेत्सदा ॥ २७

निर्माल्यमेव सेवेतेत्यत्यर्थं जाबालिकी श्रुतिः ।
असमर्प्यान्नमीशस्य भुङ्क्ते पिबति खादति ॥ २८

स मांसविष्ठामूत्रं च भुङ्क्ते पिबति खादति ।
अन्तरिच्छति यो रुद्रं सोऽन्नं गृह्णाति जिह्वया ॥ २९

अन्तर्नेच्छति यो रुद्रं स विष्ठामिति भास्करः ।
न लिङ्गाराधनात्पुण्यं त्रिषु लोकेषु चापरम् ॥ ३०

பிரும்மசாரி இல்லறத்தான் வானப்பிரஸ்தன் துறவி என அனைவரும் சிவநிர்மால்யம் பாபம் நீங்க ஏற்கலாம். காவேரீ கங்கை, யமுனை, கோதாவரீ, பீமா, நர்மதா, ஸரஸ்வதி முதலிய நதிகள் சிவனின் திருவடி நீரில் எப்போதும் உள்ளனர். ஸமுத்ரமும் மலையும் ஆறும் சிவனின் வடிவமென மஹோபநிஷத் 'ஸ்யந்தந்தே ப்ரம்ஹணː' என்ற மந்திரத்தில் கூறும். குஷ்டம் முதலிய நோய் நீங்க சிவபாத நீர் நல்லது. சிவனது திருவடிகளை அலம்பி, சங்கத்தை நீரால் நிரப்பி, சந்தனம் பூ சார்த்தி 'கத்ருத்ராய, இமா ருத்ராய,' ருதம் ஸத்யம் என்ற மந்திரங்களால் நீரைத் தலையில் தெளித்துக் கொள்ள 21 தலைமுறை நன்னிலை பெறும். ஜாபால உபநிஷத்தும் ருத்ரனால் ஏற்கப்பட்டு மீதியுள்ளதை ஏற்கக் கூறுகிறது. ஈசனுக்கு அளிக்காததொன்றை உண்பதோ, பருகுவதோ, மலமூத்திரமேற்பதற்கு ஈடாகும். ருத்ரனை உள்ளத்தில் காண விரும்புபவன் ருத்ரனுக்கு அளித்ததை நாக்கால் உட்செலுத்துகிறான். லிங்கத்தை வழிபடுவதைப் போன்ற புனிதச் செயல் வேறில்லை. (20-30)

सर्वतीर्थाभिषेकस्स्याल्लिङ्गस्नानाम्बुसेचनात् ।
ततः स्वयन्तु भुञ्जीत शुद्धमन्नं यथासुखम् ॥ ३१

निवेदितञ्च देवाय तच्छेषञ्चात्मशुद्धये ।
श्रद्धधानो न लोभेन न चण्डाय समर्पितम् ॥ ३२

गन्धपुष्पादि यच्चान्यत् तत्राप्येष समो विधिः ।
भावयेद्दासभूतं स्वं तदेति पवमानवाक् ॥ ३३

पत्रं पुष्पं फलन्तोयमन्नपानाद्यमौषधम् ।
शिवार्पितं विना भुङ्क्ते सद्यो भवति किल्बिषी ॥ ३४

प्राणाग्निहोत्रं यः कुर्यात् शिवस्यैव प्रसादतः ।
अश्वमेधायुतं पुण्यं सिद्ध्येत्सिद्धिं लभेन्नरः ॥ ३५

नैवेद्यमन्नं पानीयं दर्शनात् स्वीकृतं मया ।
रसान् भक्तस्य जिह्वाग्रादश्नामीति शिवोऽवदत् ॥ ३६

पाणिनिर्जैमिनिश्चैव कणादो गौतमादयः ।
निर्माल्यस्वीकृतेः शास्त्रप्रणेतारोऽभवन् द्विजाः ॥ ३७

त्रिणेत्रानर्पितान्नन्तु मलेन कृमिसम्मितम् ।
तथा प्राहेति भुक्त्वान्नमश्नीयादिति हि श्रुतिः ॥ ३८

*லிங்கத்தை நீராட்டிய நீரைத் தெளித்துக் கொள்வது எல்லா தீர்த்தங்களிலும் நீராடியதாகும். அவ்வாறு நீராடிய பின்னரே உணவேற்க வேண்டும். சண்டேசருக்கென அளித்ததை உண்ணக் கூடாது. சந்தனம் பூ போன்ற நிர்மால்யத்திலும் இதே நியமம் தான். இலையோ பூவோ பழமோ நீரோ உணவோ பானமோ சிவனுக்கிட்டதையே ஏற்கவேண்டும். எல்லா மவனுடையதே என்ற ஆழ்ந்த பாவனையால் செய்கிற பிராணாக்நிஹோத்ரம் அசுவமேத பலனைத் தரும். பக்தர் தருகிற உணவின் ஸாரத்தை நாக்கின் நுனியால் ஏற்பதாகச் சிவன் கூறுகிறார். பாணினி ஜைமினி, காணாதர், கௌதமர் முதலான சாஸ்திராசாரியர்களான முனிவர்கள் நிர்மாலியத்தை ஏற்கவற்புறுத்துகின்றனர். முக்கண்ணனன சிவனுக்கு அர்ப்பணமாகாத அன்னத்தை உண்பவன் மலத்தை உண்கிற புழு என வேதம் கூறும். (31-38)*

शिवोपभोग्यमखिलं निर्माल्यमिति कथ्यते ।
भोज्यन्धार्यमिति द्वेधा षड्विधश्च तदिष्यते ॥ ३९

देवस्वं देवताद्रव्यं निवेद्यञ्च निवेदितम् ।
चण्डद्रव्यं बहिः क्षिप्तं निर्माल्यं षड्विधं स्मृतम् ॥ ४०

देवस्वं ग्राम्यगव्यादिदासीदासादयस्तथा ।
देवद्रव्यं हेमरूप्यरत्नभूषादिकं तथा ॥ ४१

निवेद्यन्तु शिवायेति यत्सङ्कल्पितमादरात् ।
पत्रपुष्पान्नपानीयस्रक्चन्दनरसादिकम् ॥ ४२

निर्माल्यं त्रिविधञ्चैतत् अनर्हं कथ्यते नृणाम् ।
प्रमादादाहरन्नश्नन्नरो नरकमिच्छति ॥ ४३

निवेदितन्तु शर्वेण भुक्तञ्चन्द्रार्धमौलिना ।
गन्धमाल्यान्नपानीयमखिलाघहरं स्मृतम् ॥ ४४

चण्डद्रव्यन्तु विधिना सुरा सुरनरैर्भुवि ।
स्थापितानान्तु लिङ्गानां पुरतो यन्निवेदितम् ॥ ४५

बाणलिङ्गे च लोहे च रत्नलिङ्गे स्वयंभुवि ।
प्रतिमासु च सर्वासु चण्डेशाधिकृतिर्नहि ॥ ४६

बहिः क्षिप्तं त्वनर्हं स्यात् पिशाचास्तत्र भागिनः ।
निर्माल्ये षड्विधे भोज्यमेकमेव निवेदितम् ॥ ४७

*சிவனுக்கு அர்ப்பணமானதனைத்தும் நிர்மால்யம். உணவுப்பண்டம், உடுத்துவது என இருவகை. மேலும் அது ஆறு வகைப்படும் (1) 'தேவஸ்வம்' - இறையிலியாகக் கொடுக்கப் பெற்ற கிராமம், பசு, பணியாளர், பணிப்பெண் முதலானவர் (2)'தேவதிரவியம்' - தங்கம், வெள்ளி, ரத்னநகை முதலியன. (3)'நிவேத்யம்' - சிவனுக்கு அர்ப்பணமென எடுத்துத் தனியே வைக்கப்பட்ட இலை, பூ, உணவு, பானம், சந்தனம், பழச்சாறு முதலியவை. இம்மூன்றும் தனக்குப் பயன்படுத்தத்தகாத*

*நிர்மால்யம், மறந்தோ, தவறியோ இவற்றைத் தனக்குப் பயன்படுத்திக் கொள்ள நரகமுண்டு. (4)சிவனுக்குப் படைக்கப்பட்டதும், சிவனால் ஏற்கப்பட்டதும் 'நிவேதிதம்', பூ, மாலை, சந்தனம், இவற்றை ஏற்கலாம். பாபம் நீங்கும். (5) 'சண்டதிரவ்யம்' - ஸ்தாபிக்கப் பெற்றலிங்கத்தின் முன் நிவேதனப் பொருளை அர்பித்ததும் இது சண்டேசருடைய பங்கு எனத் தனித்து வைத்த பொருள். இது சண்டேசருக்கே உரியது. இதில் மற்றவருக்கு உரிமை இல்லை. பாணலிங்த்திற்கோ, உலோஹத்தாலானதற்கோ, ரத்தினத்தாலானதற்கோ, ஸ்வயம்பூ லிங்கத்திற்கோ விக்ரஹவடிவிலுள்ளதற்கோ, நிவேதனம் செய்யப்பட்டதில் சண்டேசருக்கு உரிமை இல்லை (6) 'பஹிः க்ஷிப்தம்' வழிபாட்டிற்கேற்றதல்ல எனஒதுக்கி வெளியே கொட்டப்பட்டது. இதன் உரிமை பிசாசுகளுக்கே உண்டு. ஆக நாலாவதான நிவேதனம் ஒன்றே பக்தரால் ஏற்கத்தக்கது. (39-47)*

विधायकान्यतस्तत्र वचनानि बहूनि च ।
निवेदितैकविषयान्यविधेयानि सूरिभिः ।। ४८

निषेधवचनं पञ्चविधनिर्माल्यगोचरम् ।
इति व्यवस्था कर्तव्या विद्वद्भिस्तीर्थबुद्धिभिः ।। ४९

निर्माल्यन्निर्मलं शुद्धं निर्मलत्वादनिन्दितम् ।
तस्मादभोज्यं निर्माल्यं शुद्धैरपि शिवात्मभिः ।। ५०

इत्याद्यैर्भोजनविधिनिषेधवचनानि तु ।
भक्ताभक्तस्पर्शितया व्यवस्थाप्यानि वा बुधैः ।। ५१

## इति एकोनपञ्चाशोऽध्यायः

*நிவேதிதம் என்ற வகைப்பட்ட தொன்றில் ஏற்கத்தக்கது என்ற குறிப்புகள் உள்ளன. மற்ற ஐந்தில் ஏற்கத்தகாதது என்ற தடை உண்டு. பக்தரால் ஏற்கத்தக்கது. பக்தரல்லாதவரின் உணவுப்பொருளில் இது ஒன்று என்ற கருத்துடன் ஏற்பது தவறு எனப் பக்தியுள்ளவர். பக்தியல்லாதவர் எனப்பகுத்து*

*ஏற்கலாம்- ஏற்கத்தக்கதல்ல என இருவிதமாகக் கூறப்பட்டுள்ளனதெனலாம். (48-51)*

—★—

पञ्चाशोऽध्यायः

सूतः—

एवं स्वयम्भुलिङ्गस्य तेजिनीवनवासिनः ।
भक्ष्यभोज्यान्नपानादि निवेद्यं बहुधा नृपाः ॥ १

सन्तर्प्य ब्राह्मणांस्तेन निर्माल्येन दिने दिने ।
मुक्तिं गता इति प्रोक्तं बहुधा मम देशिकैः ॥ २

देवेषु शम्भोराधिक्यं तद्भक्तानां नरेषु च ।
तैरेव प्रोक्तमाधिक्यं तद्युष्माकं वदाम्यहम् ॥ ३

ब्राह्मणानां विशिष्यायमुपास्यः शिव एव हि ।
ब्रह्मण्यत्वात् सुराधिक्यादतः सत्वगुणत्वतः ॥ ४

कर्ताऽहं सर्वलोकानां मम कर्ता महेश्वरः ।
न कर्ता कोऽपि तस्यादिदेवस्येति वचो हरेः ॥ ५

"அத்தியாயம்" - 50

*தேஜினீவனத்துநாதன் ஸ்வயம்புவாகத் தோன்றினன். அவனுக்கு இட்ட உணவு முதலியவற்றைக் கொண்டு அந்தணருக்குத் தினமும் உணவிட்டு அரசர்கள் முக்திபெற்றனர் எனப்பலவாறு என் குரு (வியாஸர்) விளக்கியுள்ளார். தேவர்களில் சிவன் சிறந்தவன். "அந்தணருக்கு இவரே உபாசிக்கத்தக்க தைவம். பிராமணர்க்கு உகந்தவன், தேவர்களில் மிக்கவன். ஸத்வகுணமே உருவானவன் சிவன். உலகை நான் படைத்தவனெனில் என்னைப்படைத்தவர் சிவனே.*

*அவரைப்படைத்தவர் எவருமில்லை என விஷ்ணு கூறுவார். (1-5)*

जातोऽहमस्य वामाङ्गे ब्रह्मा चैवास्य दक्षिणे ।
मुखेभ्यश्चतुरो वेदास्साङ्गा इति च तद्वचः ॥ ६

मार्गणं ब्रह्मविष्णुभ्यां शिवाङ्घ्र्योरप्यदर्शनम् ।
ब्रह्मणः पञ्चमशिरोहरणं कालनिग्रहः ॥ ७

भक्षणं कालकूटस्य कामान्धकनिषूदनम् ।
भृशावलिप्तगङ्गाया जटारोमाग्रधारणम् ॥ ८

ब्रह्मविष्ण्वादिनिर्वाह्यदक्षाध्वरविभञ्जनम् ।
जलन्धरासुहरणं त्रिपुराणाञ्च भञ्जनम् ॥ ९

इत्यादि पार्वतीजानेरपदानं महाद्भुतम् ।
नालं किं शङ्कराधिक्यं निरूपयितुमद्भुतम् ॥ १०

*''நான் சிவனது இடது புறத்திலிருந்தும் பிரும்மா வலது புறத்திலிருந்தும் வேதங்கள் முகத்திலிருந்தும் தோன்றியவர் என்பார். பிரும்மாவும் விஷ்ணுவும் சிவனது திருவடியைத் தேடிக் காணாதது, பிரும்மாவின் ஐந்தாவது தலையைக் கொய்தது, யமனை அடக்கியது, காள கூட விஷத்தை அருந்தியது, காமனையும் அந்தகனையும் அழித்தது, மிகவும் கர்வம் கொண்ட கங்கையை ஜடையின் ஒரு ரோமத்தில் தாங்கியது, பிரும்மாவும் விஷ்ணுவும் ஏனையவரும் நடத்திய தக்ஷனின் வேள்வியைக் குலைத்தது, ஜலந்தரனை அழித்தது, திரிபுரங்களை எரித்தது என பார்வதியின் மணாளரின் புகழ் அவர் சிறந்தவர் எனக் காட்டப் போதாதோ? (6-10)*

अत्रैव तेजिनीशानमाराध्य पुरुषोत्तमः ।
लब्धचक्रो जिगायारीनित्येतत् संवृणोति कः ॥ ११

सर्वे देवा देवशब्दवाच्याः केवलमीश्वरः ।
महत्पूर्वेणैव देवशब्देन प्रणिगद्यते ॥ १२

ब्राह्मणो भगवान्रुद्रः क्षत्रियो विष्णुरेव च ।
ब्रह्मा वैश्यस्तथा प्रोक्ता वसवः शूद्र उच्यते ॥ १३

विप्रः शिवः शिवो विप्रो न भेदश्शिवविप्रयोः ।
तस्मान्माहेश्वरं विप्रं भोजयेत्तु निरन्तरम् ॥ १४

सर्वस्मादधिको रुद्रो न रुद्रादधिकः पुनः ।
अस्मिन्नर्थे प्रमाणन्तु भाति विश्वाधिकश्रुतिः ॥ १५

देवताभ्यः समस्ताभ्यः स्रष्टा ब्रह्मा परः स्मृतः ।
ब्रह्मणश्च महाविष्णुर्वरिष्ठः सर्वपालकः ॥ १६

विष्णोरपि हरस्साक्षाद्रुद्रः संहारकारणम् ।
सर्वेषामेव देवानां विशिष्टः परमेश्वरः ॥ १७

वरिष्ठयोर्हि सम्बन्धो युज्यते तु परस्परम् ।
ततो विप्रस्य सम्बन्धः शिवेनैव हि युज्यते ॥ १८

*இங்கேயே வீழிநாதனை வழிபட்டு விஷ்ணு சக்கிரத்தைப் பெற்றது மறைக்க முடியுமா? மற்ற அனைவரையும் தேவர் என்ற பொதுச் சொல்லால் அழைக்க இவரை மட்டும் 'மஹாதேவர்' என அழைக்கிறோம். சிவன் அந்தணர். விஷ்ணு க்ஷத்திரியர், பிரும்மா வைச்யர், இந்திரன் சூத்திரர், சிவன் அந்தணர், அந்தணன் சிவன் இருவரிடையே வேறுபாடில்லை. அதனால் சிவன் என்ற பாவனையில் அந்தணருக்கு போஜனமிடுகிறோம். எல்லாவற்றையும் விட சிவன் மிக்கவர் என்பதை விச்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: என்று வேதம் கூறுகிறது. தேவர்களை விட பிரும்மா, பிரும்மாவை விட விஷ்ணு, விஷ்ணுவை விட எல்லாவற்றையும் ஒடுக்குகிற ருத்ரர் பெரியவர். பெரியவரிருவரிடையே நெருக்கம் ஏற்படும் என்பதால் சிவனுடன் அந்தணனுக்குத் தொடர்பு உள்ளது. (11-18)*

ब्रह्मभूतस्य रुद्रस्य ब्राह्मण्यं नैव हेतुजम् ।
ब्राह्मणो ब्राह्मणं तूपधावतीति परा श्रुतिः ॥ १९

ब्रह्मविष्णुमहेन्द्रादिदेवताभ्यो महेश्वरम् ।
विशिष्टन्तु विजानंस्तन्नाक्रमस्वेति वै यमः ॥ २०

नान्यस्संसारमग्नानामुपास्यो मोचकः प्रभुः ।
ऋते साक्षान्महादेवादित्यादित्यस्य भाषितम् ॥ २१

हरिं हरन्तं प्रसभं भीमरूपं हिरण्मयम् ।
शरभं शूलपाणिं तं नौमीत्याथर्वणी श्रुतिः ॥ २२

यथाहं तमनुप्राप्य जगद्रक्षणदक्षिणः ।
श्रीपतित्वमनुप्राप्त इति वाणी तु वैष्णवी ॥ २३

परमेश्वरमाराध्य कृष्णो द्वादश वत्सरान् ।
भक्त्या साम्बं सुतं लेभे तस्मादप्यधिकस्तु कः ॥ २४

*ருத்ரன் பரபிரும்மம். பிராமணன் அதனைச் சார்ந்தவன். அதனால் ருத்ரனை அந்தணன் அணுகுகிறான் என வேதம் கூறும். மற்ற தேவதைகளை விடச் சிவன் சிறந்தவர். அவரைச் சார்ந்தவரை அணுகாதீர் எனத் தன் தூதரிடம் யமன் ஆணையிட்டுள்ளான். ஸம்ஸாரக் கடலில் மூழ்கியவரைக் கரை ஏற்றுபவர் மஹாதேவர் ஒருவரே என சூரியனின் வாக்கு. ''அவர் பாபத்தைப் போக்குபவர், விரைவில் அழிப்பவர், பயங்கரவடிவினர், தங்கம் போன்று ஒளிர்பவர், அம்பால் துலங்குகிற சரபர், சூலம் ஏந்தியவர். அவரைத்துதிப்பேன் என அதர்வவேதம் கூறுகிறது. அவரை வழிபட்டே உலகைக் காக்கும் திறமையும் லக்ஷ்மியின் கணவனுவதையும் பெற்றேன் என விஷ்ணுவின் வாக்கு. கிருஷ்ணன் சிவனைப் பன்னிரண்டாண்டுகள் வழிபட்டு ஸாம்பனைப் பெற்றார். அவரை விடச் சிறந்தவர் யார்? (19-24)*

ब्रह्महत्याविमुक्त्यर्थं रामो दाशरथिर्हरिः ।
लिङ्गं प्रातिष्ठिपद्यस्य तस्य कस्समतां व्रजेत् ॥ २५

ईश्वरत्वं स्वतस्सिद्धं शिवस्यैवाम्बिकापतेः ।
अन्येषामीश्वरत्वन्तु शिवायत्तं न हि स्वतः ॥ २६

तस्मात्सर्वेश्वरत्वन्तु मुख्यमेव सदाशिवे ।
गौणमन्येषु देवेषु श्रुतिः सोपाधिकी श्रुता ॥ २७

परात्परतरो ब्रह्मा तत्परात्परतो हरिः ।
तत्परात् परतो रुद्र इति शाश्वतिकी श्रुतिः ॥ २८

प्रणवोऽस्य परं ब्रह्म प्रणवं परमं पदम् ।
तस्य प्रकृतिलीनस्य यः परस्स महेश्वरः ॥ २९

महेश्वरः शिवः शम्भुः प्रणवस्याप्यगोचरः ।
उमापतिर्नमस्कार्यो ब्रह्मविष्ण्वादिभिस्सुरैः ॥ ३०

योऽवस्थात्रयनिर्मुक्तमवस्थात्रयसाक्षिणम् ।
जानाति शिवमुत्कृष्टं सोऽतिवर्णाश्रमी भवेत् ॥ ३१

*ராவணன் என்ற அந்தணர் வழிவந்தவனைக் கொன்ற பாபம் நீங்க ராமன் லிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டார். சிவனது பேராளுமை (ஈசுவரத்தன்மை) இயல்பாக அமைந்தது. மற்ற தேவர் சிவனை அண்டி அதனைப் பெற்றனர். மேலானவருக்கும் மேலானவர் பிரும்மா. அவரைவிட மேலானவர் ஹரி. அவரை விட ருத்ரர் என வேதம் கூறும். பிரணவமே பரப்பிரும்மம். பிரணவமே மேலான நிலை. அது இயல்பாக சிவனிடம் மறைந்துள்ளது. அந்த மேலானவர் பரமேசுவரன். பெரிய பேராளுனரான மஹேச்வரன், மங்கள வடிவானவன், மங்களத்தின் தோற்றுவாய், பிரணவத்திற்கும் புலப்படாதவர், உமையின் கணவர், பிரும்மா விஷ்ணு முதலான தேவர்களால்*

வழிபடப் பெறத் தக்கவர். விழிப்பு கனவு தூக்கம் என்ற நிலைகளுக்கு அப்பாற்பட்டவர் அந்த மூன்று நிலைகளில் பெறுகிற உணர்வுகளுக்கு ஸாக்ஷி, உயர்ந்தவர் எனச் சிவனை உணர்பவர். வர்ணாசிரமக் கட்டுப்பாட்டிற்கு உட்படாத அவதூதர். (25-31)

शौक्ल्यं सञ्जायते सत्वात् ज्ञानं सौख्यं मुनीश्वराः ।
दुःखं रोगश्च दुर्ज्ञानं रजसैव हि जायते ॥ ३२

निद्रा मोहः प्रमादश्च जायते हि तमोगुणात् ।
त्रैवर्णिकत्वं सत्वात् स्यात् शूद्रत्वं रजसा भवेत् ॥ ३३

साङ्कर्यं तमसा तु स्यादिति शास्त्रविनिश्चयः ।
सत्वेन ब्राह्मणत्वं स्याद्राजत्वं रजसा भवेत् ॥ ३४

तमसा वैश्यता तस्माद्ध्येयः साम्बो द्विजातिभिः ।
ब्रह्मा कृतयुगे देवस्त्रेतायां भगवान्रविः ॥ ३५

द्वापरे दैवतं विष्णुः कलौ रुद्रो महेश्वरः ।
तस्मात्सर्वप्रयत्नेन प्राप्य माहेश्वरं युगम् ॥ ३६

विशेषाद् ब्राह्मणो रुद्रमीशानं शरणं व्रजेत् ।

एवं विधे कलियुगे दोषाणामेकशोधनम् ॥ ३७
महादेवनमस्कारो ध्यानं दानमिति श्रुतिः ।

ஸத்வ குணத்திலிருந்து வெண்மையும் நுண்ணறிவும் இன்பமும் உண்டாகும். ரஜோகுணத்திலிருந்து துன்பமும் நோயும் தவறான அறிவும் உண்டாகும். தமோகுணத்திலிருந்து தூக்கமும் உணர்வின்மையும் கலக்கமும் உண்டாகும். ஸத்வகுணத்திலிருந்து மூவர்ணத்தினரும் ரஜோகுணத்திலிருந்து சூத்திரரும் தமோகுணத்தால் கலப்பினமும் தோன்றும். அந்தணத்தன்மை ஸத்வத்தாலும் க்ஷத்திரியத் தன்மை ரஜோ குணத்தாலும் வைசியத் தன்மை தமோகுணத்தாலும் அமையும்.

*அதனால் அந்தணர் சிவனை வழிபடுவர். கிருதயுகத்தில் பிரும்மாவையும் திரேதாவில் ஸூரியனையும், துவாபரத்தில் விஷ்ணுவையும் கலியில் ருத்ரரையும் வழிபடுவர். அதனால் கலி மாஹேசுவரயுகம். கலியில் ருத்ரனை வழிபடுவது நல்லது. மகாதேவனது வந்தனம், தியானம், தானம் நல்லது என வேதம் கூறும். (32-37)*

भस्मोद्धूलितसर्वाङ्गो धृतपाशुपतव्रतः ॥ ३८

आरिराध हरिः शम्भुं पुरा द्वादशवत्सरान् ।
शिवलिङ्गार्चनासक्तचेतसे शिवजन्मने ॥
ओन्नमो वासुदेवायेत्यस्तौषीन्मम देशिकः ॥ ३९

अस्मद्गुरोर्भुजस्तम्भो यस्य स्तोत्रेण वै पुरा ।
अपाकृतस्तस्य शम्भोः को देवस्सदृशो भवेत् ॥ ४०

ब्रह्मणो हि कपालानि विनष्टस्य युगे युगे ।
मालारूपेण यस्याङ्गे भासते को नु तत्समः ॥ ४१

कर्परश्चाथ दंष्ट्रामप्यादिकूर्मादिपोत्रिणोः ।
अङ्गभूषणमासाद्य तुल्या नास्यास्ति देवता ॥ ४२

दुर्विज्ञेयो महादेवो विष्णोस्साक्षादजस्य च ।
इत्यैतरेयोपनिषद्वाक्यं मूढैर्न किं श्रुतम् ॥ ४३

*உடல் முழுவதும் விபூதி பூசி, பாசுபதவிரதம் ஏற்று ஹரி பன்னிரண்டாண்டுகள் சிவனை வழிபட்டார். 'சிவலிங்கார்ச்ச நாஸக்தசேதஸே சிவஜன்மநே ஓம் நமோ வாஸு தேவாய' - (சிவலிங்கவழிபாட்டில் ஈடுபட்டவர், சிவனிடமிருந்து தோன்றியவர், உலகெங்கும் பரவி நிற்கிற தேவர். அந்த ஹரிக்கு நமஸ்காரம் என), என் குரு வணங்குவார், என் குருவிற்கு கை நீட்டி மடக்க முடியமல் ஸ்தம்பித்த போது சிவனைத் துதிக்க அது நீங்கியது. (வியாஸ சாந்தாலீசுவரம் காஞ்சி) ஒவ்வொருயுக*

இறுதியிலும் மறைகிற பிரும்மாவின் கபாலங்களை மாலையாகக் கோர்த்துக் கழுத்திலிட்டவர், ஆதிகூர்மரின் மேலோட்டையும் ஆதிவராஹரின் தெற்றிப் பல்லையும் ஆபரணமாகப் பூண்டவர். விஷ்ணுவும் பிரும்மாவுமே தம்மால் அறியமுடியாதவர் எனப் புகழப் பெற்றவர். ஐதரேய உபநிஷத் இதனை விளக்கும். *(39-43)*

पाशमुक्तिर्भवेदेव परमेश्वरसेवया ।
इति श्वेताश्वोपनिषन्न किं कर्णपथं गता ॥ ४४

सर्वमन्यत् परित्यज्य भक्तो भव भवे मुने ।
इति कैवल्योपनिषत् प्राकृतैः किं न नु श्रुता ॥ ४५

तस्मात् त्वं तपसा शक्र समाराधय शङ्करम् ।
इति मन्त्रोपनिषदि  जाग्रत्याश्च कथं भ्रमः ॥ ४६

सृज्यन्ते बहवो रुद्रा अनन्ताश्च चतुर्मुखाः ।
नारायरणा असङ्ख्याताः देवदेवेन शम्भुना ॥ ४७

संहर्त्ता च पुनस्तेषां कालरूपी महेश्वरः ।
इति श्वेताश्वतरोपनिषत् किं न गण्यते ॥ ४८

ब्रह्मा विष्णोर्दिने चैको विष्णू रुद्रदिने तथा ।
ईश्वरस्य दिने रुद्रः सदाशिवदिने तु सः ॥ ४९

प्रवर्त्तते परे तस्मिन्न काल इति वायुवाक् ।
यदा तदा न दिवा न रात्रं न सदप्यसत् ॥ ५०

केवलः शिव एको वै यस्मात् प्रज्ञेति च श्रुतिः ।
न यस्य कार्यं करणं न समानो न चाधिकः ॥ ५१

स्वाभाविकपरा शक्तिर्नित्यं ज्ञानमिति श्रुतिः ।
यस्मिन्न भासते विद्युन्न सूर्यो न च चन्द्रमाः ॥ ५२

यस्य भासा विभातीदमित्येषा शाश्वती श्रुतिः ।
ब्रह्मविष्णसुरेन्द्राद्याः पशवः परिकीर्तिताः ॥ ५३

तेषां पतित्वाद्देवेशः शिवः पशुपतिः स्मृतः ।
पतिं पतीनां परमं दैवतानाञ्च दैवतम् । ५४

ईश्वरणामीश्वरं च परं विद्म इति श्रुतिः ।
इत्येवं बहुधा श्रुतिस्मृतिपुराणादिव्यवस्थापिते
पूज्यत्वे सकलैर्गिरीन्द्रतनयानाथस्य विश्वेशितुः ॥
तीर्थे क्षेत्रविमानमेरुशिखरादुत्कर्षतस्तेजिनी-
नाथः पूज्यतरोऽत्र सुन्दरकुचानाथः कृपाम्भोनिधिः ॥ ५५

इति पञ्चाशोऽध्यायः

*பரமேசுவரனை வழிபட பாசத்திலிருந்து விடுதலை என ச்வேதாச்வதர உபநிஷத் கூறும். மற்றவற்றைக் கைவிட்டுப் பரமேசனை பக்தியுடன் அணுகுவாய் என கைவல்யோபநிஷத் கூறும். இந்திரனை சிவனை வழிபடக் கூறுகிறது மந்திரோபநிஷத். தேவதேவனான சிவன் பல ருத்ரர்களையும் பல பிரும்மாக்களையும் பல நாராயணர்களையும் படைத்துக் கால ரூபியான அவர்களைத் தன்னுள் ஒடுக்கிக் கொள்கிறார் என ச்வேதாச்வதரோபநிஷத் கூறும். விஷ்ணுவின் பகலில் பிரும்மாவின் வாழ்காலமும் ருத்ரனின் பகலில் விஷ்ணுவின் வாழ்காலமும் ஈசுவரனின் பகலில் ருத்ரனின் வாழ்காலமும் ஸதாசிவரின் பகலில் ஈசவரனின் வாழ்காலமும் பரமசிவனது பகலில் ஸதாசிவனின் வாழ்காலமும் முற்றுப் பெறுகின்றன. பரம சிவனிடம் காலத்திற்கு வேலை இல்லை என வாயு கூறுவார். பகலோ இரவோ ஸத்தோ ஸத்தல்லாததோ இடம்பெறாத கேவல சிவன் அவர். அவரிடமிருந்தே பிரஜ்ஞானம் என்ற பிரும்மநிலை. அவர் செயலோ செயலுக்கு உதவுகிற ஸாதனமோ அல்ல. ஈடானவரோ மிக்கவரோ அவருக்கு இல்லை. இயல்பான பேராற்றல் அது. நித்யமானது. ஞானமேயானது. மின்னல் ஒளி*

அதிருக்குமிடத்தில் மங்கும். ஸூரியனோ சந்திரனோ ஒளி காட்ட மாட்டார். அவரால் எல்லாம் ஒளிர்கிறது என வேதம் அவரை விளக்குகிறது. பிரும்மா விஷ்ணு முதலியதனைத்தும் பசு. அவரே பசுபதி. பதிகளுக்கெல்லாம் பதி. தேவர்களுக்குகெல்லாம் தேவர். ஈசுவரர்களுக்கு ஈசுவரன் அவரே. எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவரென வேதம் கூறும். மலைமகள் நாதனும் உலக நாயகனுமான சிவனின் பெருமைபற்றி வேதம் ஸ்மிருதி புராணம் என அனைத்தும் நிரூபித்துள்ளன. அவரே வழிபடத்தக்கவர். க்ஷேத்திரம் விமானம் தீர்த்தம் என மேருவின் சிகரத்தை விடப் பெருமை மிக்க தேஜினீவனத்தின் நாதன், ஸுந்தர குசாம்பிசா நாதன், கருணைக்கடல், அவரே இங்கு சிறப்பாக வழிபடப் பெறுகிறார். *(45-55)*



## एकपञ्चाशोऽध्यायः

सूतः—

माहात्म्यं शिवभक्तानामितः परमिहोच्यते ।
शूद्राणान्तु सहस्रेभ्यो वैश्य एको विशिष्यते ॥ १

वैश्यानान्तु सहस्रेभ्यः क्षत्रियस्तु विशिष्यते ।
क्षत्रियाणां सहस्रेभ्यो ब्राह्मणस्तु विशिष्यते ॥ २

ब्राह्मणानां सहस्रेभ्यो वेदाध्यायी विशिष्यते ।
वेदाध्यायिसहस्रेभ्यस्त्वग्निहोत्री विशिष्यते ॥ ३

अग्निहोत्रिसहस्रेभ्यस्सत्रयाजी विशिष्यते ।
सत्रयाजिसहस्रेभ्यः ब्रह्मज्ञानी विशिष्यते ॥ ४

ब्रह्मज्ञानिसहस्रेभ्यः शिवभक्तो विशिष्यते ।
अद्य प्रभृति शृण्वन्तु भवन्तो मम घोषणम् ॥ ५

सुवृत्तो दुर्विनीतो वा शिवभक्तः प्रभुर्मम ।
तथ्यमुक्तं न चातथ्यमित्येवं वैष्णवं वचः ॥ ६

सूर्यवह्नीन्द्रभक्तानामुत्तमो वैष्णवः परः ।
वैष्णवानां सहस्रेभ्यः शिवभक्तो विशिष्यते ॥ ७

श्वपचोऽपि मुनिश्रेष्ठाः शिवभक्तो द्विजोत्तमः ।
शिवभक्तिविहीनस्तु श्वपक्त्तेत्यब्रवीद्रविः ॥ ८

अपि वा यस्तु चण्डालः शिव इत्युच्चरेत्पदम् ।
तेन साकं संवसेच्च तेन साकञ्च संवदेत् ॥ ९

तेन साकञ्च भुञ्जीतेत्येषा शाश्वतिकी श्रुतिः ।
तस्मादनीश्वरानन्यांस्त्यक्त्वा देवान्विशेषतः ॥ १०

मामेव संश्रयेदीशं स याति परमं पदम् ।
मामेव सम्प्रपश्यध्वं पूजयध्वन्तथैव च ॥ ११

येऽनाथा मां प्रपश्यन्ति मत्वैवं दैवतान्तरम् ।
ते यान्ति नरकान् घोरान् दुस्तरान् कल्पकोटिषु ॥ १२

मूर्खं वा पण्डितं वाऽपि श्वपाकं वा मदाश्रयम् ।
मोचयामि न लक्ष्मीश निन्दाकरमितीश्वरः ॥ १३

महादेवस्य ये भक्ता महादेवविचिन्तकाः ।
ते भवन्ति गणा लोके शिवस्येति रवेर्वचः ॥ १४

शिवभक्तमतिक्रम्य यच्चान्यस्मै प्रदीयते ।
निष्फलं तद्भवेद्दानं नरकञ्च प्रपद्यते ॥ १५

एकं वा भोजयेद्विप्रं शिवभक्तिपरायणम् ।
तेन पूता भवन्त्येव ये केचित् पङ्क्तिदूषकाः ॥ १६

शिवभक्तो यत्र देशे वसति क्षमयान्वितः ।
स देशोऽपि भवेत्पूतः किं पुनस्तेन संगतः ॥ १७

सर्वस्मादधिको रुद्रो महेश इति येऽस्तुवन् ।
दृढव्रता महात्मानः शिवभक्ता हि ते जनाः ॥ १८

स्तूयमाने शिवे यस्य रोमहर्षः प्रजायते ।
वैक्लब्यं दृश्यते वाचि नेत्रे वाऽश्रूदबिन्दवः ॥ १९

शान्तिदान्तिसमायुक्ताः शिवभक्ता हि ते स्मृताः ।
निष्कल्मषा दुष्टसङ्गवर्जिताः शुद्धबुद्धयः ॥ २०

विष्णुनिन्दाविहीना ये शिवभक्ता हि ते स्मृताः ।
परोपकारनिरताः सर्वत्र समबुद्धयः ॥ २१

''அத்தியாயம்'' - 51

சிவபக்தர்களின் பெருமை கூறப்படுகிறது. நான்கு வர்ணத்தினரிடையே வேதியனும் அவர்களுக்குள் வேதமோதியவனும் அவர்களுக்குள் அக்னி ஹோத்ரியும், அவர்களுக்குள் ஸத்ரயாகம் செய்தவனும் அவர்களைவிட பிரும்மத்தை அறிந்தவனும் அவர்களில் சிவபக்தனும் சிறந்தவன். நன்னடைமுறை கொண்டவனோ, கெட்ட நடைமுறை கொண்டவனோ அவன் சிவபக்தனாயின் மேலானவனே. இது தான் உண்மை. இவ்வாறு விஷ்ணு கூறுவார். ஸூரியனிடமும் அக்னியிடமும் இந்திரனிடமும் பக்தி கொண்டவரை விட விஷ்ணு பக்தரும், அவரை விடச் சிவபக்தரும் உயர்ந்தவர். சிவ என்று கூறுபவன் நாயாடியாயினும் உயர்ந்தவனே. அவனுடன் கூடி வாழலாம். சிவநிந்தை செய்பவன் சிவபக்தனைப் புறக்கணிப்பவன்

இவர்களுடன் கூடிவாழக் கூடாது. சிவபக்தர் வாழுமிடம் மிகப்புனிதமானது. சிவனைத் துதிக்கும் போதும் பிறர் துதிப்பதைக் கேட்கும் போதும் புல்லரிப்பும் பேச்சில் தளர்வும் கண்ணீர் கொள்பவனும், புலனடக்கமும் மனவடக்கமும் கொண்டவனுமான சிவபக்தன் மிகத்தூயவன். துஷ்டரின் இணக்கமின்றி விஷ்ணு நிந்தை செய்யாத சிவபக்தன் மிகச் சிறந்தவன். பிறருக்கு உதவுபவராக எங்கும் ஸமநோக்குள்ளவராக இவர் இருப்பர். *(1-21)*

ईर्ष्यासूयाविनिर्मुक्ताः शिवभक्ता हि ते स्मृताः ।
शिवात्मना जगत्सर्वं पश्यन्तः प्रियवादिनः ॥ २२

धर्मप्रवणचित्ता ये शिवभक्ता हि ते जनाः ।
यतीनां शिवभक्तानां ये शुश्रूषापरायणाः ॥ २३

क्रोधमोहविमुक्ता ये शिवभक्ता हि ते स्मृताः ।
शिवस्य परिपूर्णस्य किं नाम क्रियते नरैः ॥ २४

शिवभक्तार्चनैव स्याच्छिवार्चेति शिलादजः ।
दूरेऽपि वर्तते यत्र शान्तो माहेश्वरो जनः ॥ २५

अवश्यन्तत्र गन्तव्यन्तत्र यद्वर्तते शिवः ।
मत्तोऽन्यत्रानवेक्षाणां मद्भक्तानां महात्मनाम् ॥ २६

ब्रह्मादीनामपि पदं तूलायत इतीश्वरः ।
दर्शनाच्छिवभक्तानां सकृत्सम्भाषणादपि ॥ २७

अतिरात्रफलन्तस्येत्याह नारदमच्युतः ।
भस्माक्षधारी भुञ्जीत यत्र शिष्टोऽथवा खलः ॥ २८

तत्र भुङ्क्ते गिरिजया शिवो वृषभकेतनः ।
सकृल्लिङ्गार्चके दत्वा भूमिं गोपदमात्रकम् ॥ २९

भूलोकाधिपतिर्भूत्वा शिवेन सह मोदते ।
सकृल्लिङ्गार्च्चके साध्वीं घटोध्नीं धेनुमर्पयन् ॥ ३०

यावद्रोमाणि तावन्ति वर्षाण्यास्ते शिवान्तिके ।
न विधाता न विष्णुश्च न यमो न च तद्भटाः ॥ ३१

न चान्ये शिवभक्तानां भवन्ति प्रभविष्णवः ।

*பேராசை கோபம் பொறாமை முதலிய துர்க்குணங்களின்றி உலகை சிவமயமாகக் காண்பவர், முரட்டுகுணமின்றி இனிது பேசிப்பழகுபவர். அறவழியில் செல்பவர், சிவனடியார்களான துறவிகளின் பணிவிடையில் ஈடுபடுபவர். சிவனடியார்களை வழிபடுவதே சிவனின் வழிபாடென நம்பிச் செயல்படுபவர், இத்தகைய சாந்தர்கள் வசிக்குமிடமே வசிக்க மிகவும் ஏற்றது. சிவனைத் தவிரமற்றதைப் பொருட்படுத்தாதவருக்கு எதிரே பிரும்மா முதலியவரின் பதவிக்கு மதிப்பு இருக்காது. பஸ்ம ருத்ராக்ஷதாரணம் செய்பவனிருக்குமிடத்தில் சிவன் உமையுடன் இருப்பார். லிங்கத்தை வழிபடுபவனுக்கு பசுவின் காலடியளவு நிலம் அல்லது குடம் குடமாகக் கறக்கிற பசுவைத் தானம் செய். சிவனருகில் வாசம் கிட்டும். (22-31)*

आरुरुक्षुः परं स्थानं भोगान् सन्त्यक्तुमक्षमः ॥ ३२

पूजयेत् कर्मणा शम्भुं भोगान्ते शिवमाप्नुयात् ।
कीर्तनं श्रवणं शम्भोः स्मरणं पादसेवनम् ॥ ३३

वन्दनं दास्यमर्चा च सख्यमात्मनिवेदनम् ।
भक्तिरेवं नवविधा प्रोक्ता देवेन शम्भुना ॥ ३४

अतो भक्तिमता पूज्यो ध्यातव्यश्च मुमुक्षुभिः ।
सर्वलोकाधिनाथोऽयं साम्बः संसारमोचकः ॥ ३५

कर्मणामशुभानाञ्च शुभानां राशिमञ्जसा ।
करोति भस्मसाद्भक्तिः शिवस्य परमेष्ठिनः ॥ ३६

दिनमेकं तदर्धं वा मुहूर्तं वाथ वा क्षणम् ।
यः कुर्याद्भक्तिमीशाने स पदं परमश्नुते ॥ ३७

तस्य चिन्तामणिर्गेहे तस्य कल्पतरुः करे ।
कुबेरः किङ्करस्तस्य भक्तिर्यस्यास्ति शङ्करे ॥ ३८

भोगार्थिनां मुमुक्षूणामपि ब्रह्मपदार्थिनाम् ।
भक्तिरेव गतिः शंम्भोर्नान्यः पन्था हि विद्यते ॥ ३९

संसारसर्पदष्टानां भीरूणां देहिनां द्विजाः ।
भक्तिरेव विरूपाक्षे नान्यः पन्था हि विद्यते ॥ ४०

शिवस्य नामस्वेकं वा पठतस्तु मुखाम्बुजे ।
नृत्यत्यम्बिकया शम्भुरिति वेदान्तवादिनः ॥ ४१

*முக்திநிலை பெற விரும்புபவன் இம்மைச் சுகத்தை விடமுடியாதிருப்பின் தினமும் சிவபூஜை செய்துவர இம்மையை நன்கு அனுபவித்துப் பின் மேனிலை பெறுவான். சிவனைப் பற்றிப் பேசுதல் (கீர்த்தனம்) சிவகதையைக் கேட்டல் (சிரவணம்) சிவனை நினைத்தல் (ஸ்மரணம்) திருவடிஸேவை (பாதஸேவனம்) வந்தனம், தாஸ்யம் (தாஸனாகிப் பணிவிடைபுரிதல்) அர்ச்சனம், நட்புரிமை கொண்டு பழகுதல் (ஸக்கியம்) ஆத்மநிவேதனம் (தன்னை இறைவனுடையனாக்குதல்) இந்த ஒன்பதும் பக்தி வழிகள். இவற்றில் ஏதெனுமொன்றையாவது பற்றி வழிபடுவதும் தியானிப்பதும் சிறிது நேரமாவது சிவனது உடைமைப் பொருளாகி விட்டதாக உணர்வதும் பெருநிலை பெற உதவும். (32-41)*

भाषणं शिवभक्तानां सहवासश्च दर्शनम् ।
स्मरणञ्चाघहारीति वासिष्ठं वचनं द्विजाः ॥ ४२

अनेकजन्मशुद्धानां श्रौतस्मार्तानुवर्तिनाम् ।
शिशिरांशुकलामौलौ शिवे भक्तिः प्रजायते ॥ ४३

शिवलिङ्गार्चनं भक्त्या शिवक्षेत्रेषु वर्तनम् ।
शिवभक्तार्चनाद् भक्तिः काधिकेति रवेर्वचः ॥ ४४

वेपिताङ्गं स्खलच्चित्तं मां रक्षेति शिवार्थिनम् ।
नरमालोक्य कालोऽपि द्रवतीति मृकण्डुजः ॥ ४५

अनर्चितशिवौ हस्तावनीक्षितशिवे दृशौ ।
अनासेशालयौ पादौ जिह्वा चास्तुतशङ्करा ॥ ४६

शिरश्चाप्रणतेशानं व्यर्थानीति गुरुर्मम ।
अच्छिनत्कुलिशेनाद्रीन् शिवभक्तः शचीपतिः ॥ ४७

अपिबच्च पयोराशीन् लोपामुद्रापतिर्मुनिः ।
प्रतिस्वर्गं समसृजद्विश्वामित्रो मुनीश्वरः ॥ ४८

इत्यादयोऽन्येपि शिवस्य भक्ताः कर्माणि चक्रुः परदुष्कराणि ।
तत्तादृशानां शिवभक्तिभाजां को वक्तुमीष्टे महिमानमुर्व्याम् ॥ ४९

சிவனது பக்தர்களுடன் பேச்சு, அவர்களுடன் வசிப்பது சிவதரிசனம் சிவஸ்மரணம் இவை பெரும் பாபத்தைப் போக்குபவை. பல பிறவிகளில் செய்த புண்யப் பயனுகத்தான் இவை கிட்டும். பக்தியுடன் சிவபூஜையும் சிவக்ஷேத்திர வாஸமும் சிவபக்தரின் வழிபாடும் சமமே. சிவபெருமானே! உடல் நடுங்கி மனம் தடுமாறி நிற்கும் என்னைக் காப்பாய் என வேண்டுபவனைக் கண்டு யமன் பயந்தோடுவான் என மார்க்கண்டேயர் கூறுவார். சிவவழிபாட்டில் பயன்பெறுத கை, சிவனைப் பாராத கண், சிவாலயத்திற்குச் செல்லாத கால், சிவனைத்துதிக்காத நாக்கு, வணங்காத தலை இவை வீண். சிவபக்தனுன இந்திரன் வஜ்ராயுதத்தால் மலைகளை உடைத்தான். அகஸ்தியர் கடலைக் குடித்தார். விசுவாமித்ரர் மறுஸ்வர்கத்தைப் படைத்தார். இவ்வாறே செய்ய முடியாத செயலைச் பக்தியால் செய்தவர்பலர். இவர்களது பெருமை சொல்லிமாளாதது. (42-49)

—★—

द्विपञ्चाशोऽध्यायः

पुनरप्यस्य माहात्म्यं क्षेत्रस्य प्रवदाम्यहम् ।
शृणुध्वमृषयः सर्वे सावधानेन चेतसा ॥ १

दक्षयज्ञे पराभूतौ पुष्पवन्तौ पुरा द्विजाः ।
वह्निना सह सर्वाणि क्षेत्राण्यभिसमेत्य च ॥ २

चक्राते सुचिरं कालं तप उग्रं महत्तरम् ।
तेजिनीशप्रसादेन भेजाते चाभिकांक्षितम् ॥ ३

तेजश्चानल्पसुलभं लेभाते परमाद्भुतम् ।
तेजिनीवनतीर्थेषु भारद्वाजः पुरा सकृत् ॥ ४

माघस्नानं विधायात्र साम्बात्साङ्गः श्रुतीरगात् ।
तत्र षष्टिसहस्राणि वालखिल्यास्तपोबलात् ॥ ५

अङ्गुष्ठाकृतयो ब्रह्म लेभिरेऽर्करथे स्थिताः ।
माघस्नानं विधायादौ देवर्षिपितृतर्पणम् ॥ ६

कुर्वन्ति ये द्विजास्तेषां तृप्यन्ति पितरस्तथा ।
क्षेत्रेऽस्मिन् भास्करीये तु कृत्वा वपनमज्जने ॥ ७

तीर्थश्राद्धानि ये कुर्युस्तेषां सन्ततिरेधते ।
तेजिनीनगरे ये तु महादानानि तन्वते ॥ ८

स्वल्पानि वा द्विजश्रेष्ठास्ते स्युः स्वर्गैकगेहिनः ।
हरिनद्यादिषु स्नानं तेजिनीपुरसंस्थितिः ॥ ९

श्रीनेत्रपादपूजा च नाल्पस्य तपसः फलम् ।
पञ्चबिल्वैः सकृद्भक्त्या ये श्रीनेत्रपदार्चकाः ॥ १०

पञ्चपापैः प्रमुच्यन्ते महद्भिश्च मुनीश्वराः ।
वारणं सरलश्चैव निर्गन्धश्च कपित्थकम् ॥ ११

बिल्वश्चेति विधानज्ञाः पञ्च बिल्वं प्रचक्षते ।

''அத்தியாயம்'' - 52

தக்ஷனின் வேள்வியில் தோல்வியுற்ற ஸுர்யனும் சந்திரனும் அக்னியும் எல்லா க்ஷேத்திரங்களுக்கும் சென்று பல்லாண்டுகள் தவமிருந்தனர். தேஜினீவனத்தில் செய்த தவத்தின் பயனாக பேரொளி பெற்று இழந்த நிலையை மீண்டும் பெற்றனர். முன்பு பாரத்வாஜர் மாசி மாதத்தில் இங்கு தீர்த்த ஸ்நானம் செய்து வேதத்தை ஸாங்கமாக ஓதினார். ஸுரியனின் ரதத்திலிருந்தே வாலகில்யர்கள் என்ற அறுபதினாயிரம் முனிவர்கள் கட்டைவிரல் உயரம் கொண்டகுள்ளர்கள். அவர்கள் தவமிருந்து பிரும்மநிலை பெற்றனர். இங்கு பித்ருக்களை முன்னிட்டுச் செய்த தர்பணம் முதலியவை, வபனம் செய்து கொண்டு நீராடிச் செய்த சிராத்தங்கள் பித்ருதிருப்தி தருபவை. அவர்களது வம்சம் வளரும். இங்கு செய்கிற தானங்கள் ஸ்ரீ நேத்ரார்பணேசரின் திருவடி பூஜை. வில்வம், கிளுவை, மாவிலங்கை, விளா, நொச்சி (நாயுருவி) என்ற ஐந்து வில்வங்களைக் கொண்டு பூஜை செய்வது நல்லது. (1-11)

पुरा तु दक्षिणाम्भोधितीरस्थः कुम्भसम्भवः ॥ १२

मलये पनसं किञ्चिन्महावृक्षमलोकत ।
तस्य वृक्षस्य मूले तु सुगन्धाढ्यं मनोहरम् ॥ १३

मेरुशृङ्गोपमं किञ्चित् महत्फलमलोकत ।
तद्दृष्ट्वा विस्मयाविष्टः स मुनिः कुम्भसम्भवः ॥ १४

श्रीनेत्रार्चितपादस्य तेजिनीवनवासिनः ।
महादेवस्यैतदर्हमिति मत्वाऽस्य भूरुहः ॥ १५

निवेद्य स्वामिने मर्त्यैर्बलवद्भिरुपानयत् ।
आनीय तद्विनिर्भिद्य तत्कोशैः शिवमर्चयत् ॥ १६

भर्जयित्वा घृतैस्तस्य बीजान्यस्य न्यवेदयत् ।
तस्यारामे बीजमेकं भूमौ न्यस्य व्यवर्धयत् ॥ १७

तस्मिन् फलति तादृक्षि फलानि च तपोनिधिः ।
अगस्त्यः पूजयामास तेजिनीशं दिने दिने ॥ १८

तत्कोशैश्च फलैरामैः पक्वैश्च कदलीफलैः ।
तेन प्रसन्नो भगवान् तेजिनीवननायकः ॥ १९

स्वशक्तिमतुलां तस्मै ददौ सर्वार्थसिद्धिदाम् ।
नान्यत्र विनियोज्यं स्यात्तद्द्विजाः पनसं फलम् ॥ २०

आहृतश्चेद्बलादेतदपक्वं भवति ध्रुवम् ।
भुञ्जानश्च बलादेतद्दुर्निवारां रुजं व्रजेत् ॥ २१

निवेदितं स्वीकुर्वन्ति ये नरास्ते महाबलाः ।
सर्वरोगविनिर्मुक्ता जायन्ते नात्र संशयः ॥ २२

बलाद्गृह्णाति यः पक्वं पनसं परमेष्ठिनः ।
यावन्ति तस्य बीजानि तावद्युगसहस्रकम् ॥ २३

पच्यते नरके घोरे मर्कटो जायते पुनः ।
क्रमेण पनसारण्यमभूत्तत् क्षेत्रमुत्तमम् ॥ २४

पनसारण्यनाथोऽयमिति शम्भुः प्रथामगात् ।
अगस्त्यचरितं ह्येतत्पठञ्शृण्वन्नरोत्तमः ॥ २५

समस्तभाग्यसम्पूर्णः शैवमन्ते पदं व्रजेत् ।

முன்னர் அகஸ்தியர் தென்கடலின் கரையில் ஒரு பெரிய பலா மரத்தின் வேர்ப்பகுதியில் மேருவின் குன்றுபோன்ற நறுமணமிக்க பலாப்பழத்தைக் கண்டார். வீழிநாதனுக்கே இது ஏற்றது எனக் கருதி அதன் உரிமையாளரிடம் தெரிவித்து விட்டு வலிவு மிக்கவர்களைக் கொண்டு கொணர்ந்து அதனைப் பிளந்து விதை நீக்கிய சுளைகளை இறைவனுக்கு நிவேதனம் செய்தார். அதன் விதைகளை நெய்யில்வறுத்து இறைவனுக்கு நிவேதனம் செய்தார். ஒரு விதையைப் பூமியில் பதித்து மரமாக்கி வளர்த்தார். அதில் விளைந்த பழங்களையும் இறைவனுக்கு அளித்தார். பலாப்பழத்தையும் மாம்பழத்தையும் வாழைப்பழத்தையும் (முக்கனியாக) நிவேதனம் செய்தார். இறைவன் மகிழ்ந்து அவருக்கு வரையற்ற சக்தி அளித்தார். அந்த பலாப்பழங்களை வேறு வகையில் பயன்படுத்தக் கூடாது. வேறுபயனுக்காக அப்பழத்தைப் பறித்தால் அது பழுக்காது. அதனை இறைவனுக்கு அளிக்காமல் உண்பவன் நோய் வாய்ப்படுவான். பாபம் நேர்ந்து குரங்காகப் பிறப்பான். நரகமடைவான். அந்த க்ஷேத்திரம் பலாக்காடு ('பனஸாரண்யம்') எனப்பெயர் பெற்றது. இறைவனுக்கு 'பன ஸாரண்யேசுவரர்' என்ற பெயர் ஏற்பட்டது. இந்த வரலாறு மிகப்புனிதமானது. (12-25)

किञ्चासुराणां देवानामभूद्युद्धं महत्तरम् ॥ २६

देवसेनां तदालोक्य भग्नां गरुडवाहनः ।
अभ्यद्रवच्च दैतेयांश्चक्रपाणिर्जिघांसया ॥ २७

असुराः सुचिरं युद्ध्वा सार्धं नारायणेन ते ।
भृगुपत्नीं भयाविष्टा विद्रुताः शरणं गताः ॥ २८

तानरक्षद्भृगोः पत्नी स्वोदरे स्थाप्य सोप्यसौ ।
ततो गरुडमारुह्य चक्रपाणिः समाययौ ॥ २९

हरिराह भृगोः पत्नीं दर्शयाद्यासुरानिति ।
विष्णोर्वचस्तु तच्छ्रुत्वा भृगोः पत्नी वचोऽभ्यधात् ॥ ३०

मां दैत्यान् शरणं यातान्न तुभ्यं दर्शयाम्यहम् ।
नीतिज्ञा कथमेव त्वं ब्रूषे गच्छ यथाऽऽगतम् ॥ ३१

इति तस्या वचः श्रुत्वा ज्वलन् क्रोधेन माधवः ।
चक्रेण तस्याश्चिच्छेद शिरो नालादिवाम्बुजम् ॥ ३२

तद्दृष्ट्वाऽथ भृगुश्शापायुधः समशपत् क्रुधा ।
मत्स्यकूर्मवराहादिहीनां योनिं भजेरिति ॥ ३३

ततश्चक्री बहोः कालात्तेजिनीवनमेत्य सः ।
तत्रत्यतीर्थेषु स्नात्वा भृगुपत्नीवधार्जितात् ॥ ३४

पापान्मुक्तोऽभवद्विष्णुर्मेघादिव दिवाकरः ।
मुक्तपापो महाविष्णुः श्रीभूमिभ्यां समन्वितः ।
आस्ते हरिनदीतीरे पापनाश इति श्रुतः ॥ ३५

इति द्विपञ्चाशोऽध्यायः

*தேவர்களுக்கும் அஸுரர்களுக்குமிடையே போர் நிகழ்ந்தது. தேவர் தோற்றதைக் கண்ட ஹரி சக்கிரமேந்திப் போரிட அஸுரர்கள் பயந்து ஓடி பிருகு முனிவரின் மனைவியைச் சரணடைந்தனர். அவள் அஸுரர்களை வயிற்றுனுள் வைத்துக் காப்பாற்றினாள். கருடன் மீதேறி அஸுரர்களைத் தேடி வந்த ஹரி பிருகுவின் மனைவியிடம் அஸுரர்களைக் காட்டச் சொன்னார். 'அஸுரர்கள் என்னைச்சரணடைந்துள்ளனர். அதனால் என்னால் காட்ட இயலாது'' என அவள் மறுத்தாள். ஹரி கோபம் கொண்டு சக்கிரத்தால் அவள் தலையை வெட்டி எறிந்தார். பிருகு அவரை மீன், ஆமை, பன்றி என்ற ஈன இனத்தில் பிறக்கும்படி சபித்தார். வெகுநாட்கள் உழன்ற பின் ஹரி இங்கு வந்து தீர்த்தங்களில் நீராடிப் பாபத்தைப் போக்கிக் கொண்டார். பாபநாசர் என்ற பெயருடன் ஹரி நதிக்கரையில் ஸ்ரீதேவி பூமிதேவியருடன் கோயில் கொண்டுள்ளார். (26-35)*

—★—

## त्रिपञ्चाशोऽध्यायः

सूतः—

अस्य भूयः प्रवक्ष्यामि क्षेत्रस्यातिशयं हि वः ।
यस्य श्रवणमात्रेण सर्वपापैः प्रमुच्यते ॥ १

पुरा स्रष्टाऽसृजद्धन्यां कन्यां त्रैलोक्यसुन्दरीम् ।
तामेव चकमे रम्यां पञ्चबाणेन मोहितः ॥ २

पश्चात्तप्तस्ततो ब्रह्मा मनस्येवमचिन्तयत् ।
अहो मय्यपि दुश्चेष्टाऽनुष्ठिता विषमेषुणा ॥ ३

धिगस्य पञ्चबाणस्य दौरात्म्यमिति दोषतः ।
रुद्रनेत्रेण निर्दग्धो भवेदित्यशपद्विधिः ॥ ४

पुनः स दयया ब्रह्मा प्रोवाच मदनं प्रति ।
यद्दुर्विलसितं काम त्वया मय्यप्यनुष्ठितम् ॥ ५

तद्दुष्परिहरस्तेऽद्य दाहो रुद्रदृगर्चिषा ।
पुनस्त्वज्जीवनोपायं वदाम्याकर्णयाधुना ॥ ६

आकाशनगरक्षेत्रे पनसारण्यनामके ।
श्रीसुन्दरकुचादेवी तेजिनीशस्य नायिका ॥ ७

कारुण्याम्बुधिवेलेव साक्षान्मूर्तिमती शिवा ।
तामुद्दिश्य तपः कृत्वा पुनर्जीवनमाप्नुहि ॥ ८

इति शापान्तमस्योक्त्वा ब्रह्मा लोकपितामहः ।
तेजिनीनगरं प्राप्य हयमेधान्दशाकरोत् ॥ ९

तेन स्वकन्यारागोत्थदोषात्परममुच्यत ।

''அத்தியாயம்'' - 53

முன்னர் பிரும்மா ஒரு அழகிய பெண்ணைப் படைத்தார். அவளிடம் மயங்கினார். எனக்கே காமனால் இந்தக் கதி என்றால் பாமரன் என்ன செய்வான் எனச் சிந்தித்து மன்மதனை ருத்திரனின் கண்பார் வையால் அழியும்படி சபித்தார். பின் அவனிடம் பரிவு கொண்டு, என்னிடம் தவறாக நடந்த கொண்டதற்கு இந்த சாபம் தந்தேன். ஆகாசநகரில் பலாக்காட்டில் தேஜினீ நாதனின் தேவி ஸுந்தரகுசாம்பிகாவைக் குறித்துத் தவமியற்றி மறுவாழ்வு பெறுவாய் எனச் சாப முடிவும் தந்தார். தானும் அபசாரம் நீங்க, வீழிக்காடு வந்து அசுவமேதயாகம் செய்து கன்னியிடம் தான் இழைத்த பாபச்செயலுக்குப் பரிகாரம் செய்து கொண்டார். (1-9)

रुद्रदग्धः स कामोऽपि पश्चाद्धातुः प्रसादतः ॥ १०

तेजिनीवनमासाद्य तपश्चक्रे सुदुश्चरम् ।
वायुरूपं समास्थाय श्रीसुन्दरकुचां प्रति ॥ ११

ततो दयालुर्गिरिजा श्रीसुन्दरकुचाम्बिका ।
तपस्यन्तं चिरं कामं लोकं चातिविरागिणम् ॥ १२

प्रजाजननहीनत्वं विनिवेद्य पिनाकिने ।
प्रियाय तदनुज्ञाता शिवार्चातो विनिर्गता ॥ १३

सख्योरतीव प्रिययोर्जयाविजययोः करौ ।
आलम्ब्य हंसवाहाधिरूढा परिजनैः सह ॥ १४

निर्जगाम तपस्तीव्रं तनुते यत्र मन्मथः ।
चामरे श्रीसरस्वत्यौ छत्रं मुक्तामयं शची ॥ १५

हेमदण्डं कुबेरस्य प्रेयसी तालवृन्तकम् ।
अन्येषान्दिक्पतीनाञ्च स्त्रियो ध्वजपताकिकाः ॥ १६

पुरस्तादप्सरस्सङ्घाः ननृतुः सुमनोहरम् ।
अवादयन्त वाद्यानि पुरो गन्धर्वकिन्नराः ॥ १७

नन्दिकेशमहाकालभृङ्गिप्रभृतयो गणाः ।
पुरस्तलातलरवं चक्रिरे वेत्रपाणयः ॥ १८

ருத்திரனால் எரிக்கப் பெற்ற காமனும் பிரும்மாவின் அருளால் வீழிக்காடு வந்து காற்று வடிவில் ஸௌந்தரகுசாம்பிகையைக் குறித்துத் தவமிருந்தான். தேவி பரிவு கொண்டு உலகம் காமப்பற்றில்லாததால் மக்கட்பேறின்றி இருப்பதை ஈசனிடம் தெரிவித்து அவர் அனுமதி பெற்றுத் தன் தோழிகளான ஜயா விஜயா என்ற இருவரின் துணைகொண்டு ஹம்ஸம் மீதேறி மன்மதன் தவம் செய்யுமிடத்திற்கு வந்தாள். லக்ஷ்மியும் வாணியும் சாமரம் வீச இந்திராணி முத்துக்குடை பிடிக்க குபேரனின் மனைவி விசிறி கொண்டு விசிற, மற்ற திக்பதிகளின் மனைவியர் கொடிகள் பிடிக்க, அப்ஸரஸ்கள் ஆட, கின்னர கந்தர்வர்கள் பாட, நந்திகேசர் முதலானோர் தாளம் போட பிரம்புகளைக் கொண்டு சிவகணங்களைக் கொண்டு வழியமைத்துத்தரத் தேவி வந்தாள். (10-18)

एवमाद्यैः परिजनोपचारैर्बहुमानिता ।
मञ्जीरनिस्वनाकृष्टमरालचरणाम्बुजा ॥ १९

पञ्चाशुगव्रतापाङ्गलाक्षारुणनखप्रभा ।
स्फुरन्मञ्जीररक्तांशुश्लिष्टजङ्घानिचोलिका ॥ २०

सौन्दर्यकुञ्जरोदारशुण्डाकाण्डोरुविभ्रमा ।
वाचालमेखलादाममनोज्ञजघनस्थला ॥ २१

हेमाम्बरोपरिलसत्काञ्चीतज्जघनस्थली ।
स्तनचक्रमुखोन्मुक्तबिसहारलतायुता ॥ २२

माणिक्यकङ्कणच्छायामनोज्ञकरपल्लवा ।
कान्तिकल्लोलिनीवीचिकमनीयभुजद्वयी ॥ २३

मुखेन्दुचन्द्रिकाकल्पमुग्धस्मितमनोहरा ।
रागसागरपर्याप्तप्रवाललतिताधरा ॥ २४

मुखलावण्यनिष्यन्दनासाभरणमौक्तिका ।
विषमास्त्रस्थिरादर्शविलसद्गण्डमण्डला ॥ २५

दृग्विभ्रमार्णवावर्तरत्नताटङ्कमण्डिता ।
निस्सङ्ख्यस्मरजैत्रास्त्रनिदाननयनाञ्चला ॥ २६

पराभूताष्टमीचन्द्रावलेपालिकपट्टिका ।
सीमाविन्यस्तसिन्दूररेखिकाललितालिका ॥ २७

कल्हारगर्भधंमिल्लविधूततटिदम्बुदा ।
शतकोटिशशाङ्क श्रीशङ्काकारमुखच्छविः ॥ २८

पुष्पायुधमहानाट्यपूर्वरङ्गपरिष्क्रिया ।
धंमिल्लकेतकीपत्रसगन्धेन्दुकलायुता ॥ २९

सुमेरुशिखरोत्तुङ्गसुन्दरस्तननायिका ।
अङ्गप्रभाभिरखिलानन्तिकस्थान्महीरुहान् ॥ ३०

हिरण्मयान्वितन्वाना मन्दं मन्दमुपागमत् ।
उपगम्य प्रसूनास्त्रमुल्लोलकरुणाधिना ॥ ३१

आलोकन्ती कटाक्षेण कामं कामेश्वरी शिवा ।
तत्कटाक्षकृपास्रोतःस्नपितः पञ्चसायकः ॥ ३२

पुनरुज्जीवनं प्राप्य तुष्टाव परमेश्वरीम् ।

ஹம்ஸநடை நடக்கிற சரணங்களில் கொலுசுகள் மெல்லிய ஒலி எழுப்ப, மன்மதனின் பிரதாபமாக அரக்கால் சிவந்த நகங்கள் கொண்டு, காலில் சதங்கைகள் ரத்ன ஒளிபட்டுச் சிவந்த இடுப்பாடை நுனி கணுக்கால் வரைதொங்க, அழகுமிக்க துதிக்கை போன்ற துடையுடன் சலசல என ஒலிக்கின்ற இடுப்பணிச் சதங்கைகளுடன் தங்க ஆடை, மேல் ஒட்டியாணத்தால் அழகுற்ற இடுப்புடன் மார்பின் மீது தாமரை நூலாலான மாலை துலங்க, மாணிக்க ரத்னம் பதித்த வளைகளால் அழகுபெற்ற கையுடன் அழகின் பேரலை போன்ற நீண்ட இருகைகளுடன் கழுத்தின் மூன்று ரேகைகள் மறையும்படி திருமங்கல்யச் சரடு பூண்டு, சந்திரனைப் போன்ற முகத்தின் மீது பரவிய புன்னகையழகுடன் ஆசைக்கடலுக்கு போதுமான பவழச் சிகப்பு கொண்ட உதட்டுடன், முகத்தின் அழகைச் சொட்ட விடுவது போன்று முத்தணி பூண்ட மூக்குடன், மன்மதனின் கைக்கண்ணாடி போன்ற கன்னங்களுடன், கண்ணைச் சுழலச் செய்கிற ரத்தினத் தாடங்கத்துடன், எண்ணற்ற வெற்றி கொண்ட மன்மதனின் பாணம் போன்ற நீண்ட கண்களுடன், அஷ்டமி சந்திரனைத் தோற்கடிக்கிற விரிந்த நெற்றிப் பட்டையுடன், வகிட்டில் வைத்த சிந்தூரப் பொட்டின் அழகுடன், அல்லிப் பூ செருகிய கூந்தலுடன், நூறுகோடி சந்திரனின் அழகைக் குவித்து வைத்துள்ள முக ஒளியுடன் மன்மதனின் நாட்டியத்திற்கு ஏற்ப அரங்கு, அழகு செய்து கூந்தல் முடிப்பில் தாழம்பூ, மணமிக்க சந்திரகலை சூழ மேரு, சிகரம் போன்ற அழகிய மேடிட்ட மார்பகம் கொண்ட ('மேருதுங்கஸ்தந்திரகுசாம்பிகையாக'') உடலொளியால் அருகிலுள்ள மரங்களை தங்க நிறமாக்கி கொண்டு மெல்ல மெல்ல நடந்து வந்தாள். மன்மதனின் அருகில் வந்து அவனைக் கருணைததும்புகிற கடாக்ஷத்தால் கண்டாள். அந்தக்கருணைப் பெருக்கில் நனைந்த மன்மதன் மறுவாழ்வு பெற்றான். பரமேசியைத் துதித்தான். (19-32)

## श्रीसुन्दरकुचाम्बास्तुतिः

आदिशक्त्यै नमस्तुभ्यमभीष्टफलदायिनि ।
कार्पण्यविनमल्लोककल्पवल्ल्यै नमो नमः ॥ ३३

तल्लिङ्गे दृश्यते देव्या वृषाङ्को वृषवाहनः ।
तद्दर्शनं यस्य लब्धं स शिवो हि न संशयः ॥ ३८

रहस्यदर्शनं तद्धि प्रशंसन्ति मुनीश्वराः ।
एतद्रहस्यं तत्तीर्थप्रशंसावसरे मया ॥ ३९

गोप्यमित्येव भवतां नोक्तं प्रागधुना पुनः ।
युष्मान्विना रहस्योक्तेः पात्रन्नान्यदिति स्मरन् ॥ ४०

तत्प्रकाशितवानद्य युष्माकं स्नेहगौरवात् ।
इतः परन्तु प्रकृतं हरिनद्यास्तु वैभवम् ॥ ४१

यथापूर्वं प्रवक्ष्यामि शृणुध्वं मुनिपुङ्गवाः ।

इति एकोनसप्ततितमोऽध्यायः

*''அதோ தேவா'' என்ற மந்திரம் ஜபித்து நீராடி தீர்த்தக்கரையில் தயிர்க்குடம் தானம் செய்து ஆகாச லிங்கத்தைக் காண்பர். சிவபுண்யங்களில் சிறந்தது. மாசி மகத்தன்று விஷ்ணு தீர்த்த நீரில் நீராடி பஞ்சாமிருதம், பஞ்சகவ்யம், பழரஸம் இவற்றால் வீழி நாதருக்கு அபிஷேகம் செய்து தூபம் முதலிய உபசாரங்கள் செய்து விருஷபாரூடராகச் சிவபெருமானைக் காணச் சிவனாவான். இது மிகரகசியமானது. தக்கவர் என்பதால் இதனை விண்டுரைத்தேன் என்றார் ஸூதர். (32-41)*

—★—

## सप्ततितमोऽध्यायः

सूतः-

स्नानं हरिनदीतोये पुण्यकाले विशेषतः ।
महापापौघशमनं रक्षस्त्वादिविमोचनम् ॥ १

इत्येतन्माद्भुतं तस्याः पयःप्रोक्षणपानतः ।
अपि रक्षस्त्वमुक्तिः स्यादितिहास इहोच्यते ॥ २

पुरा सौराष्ट्रदेशे तु विप्रः सुप्रभनामकः ।
समस्तशास्त्रपारीणो वेदवेदाङ्गपारगः ॥ ३

विद्यामुखेनाहरहर्बहु धान्यं धनञ्च सः ।
द्विजो जित्वा सञ्चिनोति लुब्धोऽतीव गृहे स्वके ॥ ४

चरित्वा च नृपद्वारेष्वनिशं च परान्नभुक् ।
प्रतिगृह्णाति च धनं धान्यं तण्डुलमेव वा ॥ ५

पुनः कदाचिद्विप्रः स भूयो धनजिघृक्षया ।
संचारनाटकसभास्थानं जातुचिदाश्रयत् ॥ ६

तत्र कश्चिन्महाराजस्तीर्थयात्रासमागतः ।
तुलादानं कर्तुमनाः समाहूय विपश्चितः ॥ ७

परीक्षां कारयामास तच्छ्रुत्वा सोऽपि सुप्रभः ।
अन्तः प्रविश्य शास्त्रेषु श्रौतेषु निगमेषु च ॥ ८

परीक्षां दत्तवान् राजा तेन सन्तुष्टमानसः ।
आचार्यं वरयामास सुप्रभं लुब्धशेखरम् ॥ ९

*''அத்தியாயம்'' - 70*

*ஹரி நதியில் புண்யகாலத்தில் நீராட பிரும்மராக்ஷஸ நிலையும் அகலும். ஸௌராஷ்டிர நாட்டில் ஸுப்ரபன் என்ற அந்தணன் வேதம் வேதாங்கம் மற்றும் சாஸ்திரங்களில் நிபுணன். கல்வி புகட்டியே பெருந்தனம் சேமித்தான். உலோபி. பிறர் வீட்டில் உண்பான். அரசிடம் பணமாக தானியமாகத் தானம் வாங்குவான். பெரும் தனிகனுன பிறகும் பேராசையால் அங்குமிங்கும் அலைந்தான். ஒரு அரசன் தீர்த்த யாத்திரையாக*

*வந்தவன், தனது எடைக்கு எடை தானம் செய்ய விரும்பி, அந்தணர்களை அழைத்து அவரவர் தகுதியைச் சோதித்தான். ஸுப்பிரபன் எல்லாத் தேர்வுகளிலும் தேர்ந்து முன்நின்றதால், அரசன் இவனைத்தன் ஆசாரியனாக நியமித்தான். (1-9)*

तुलादाने तदाचार्यो धृत्वा दानं धनं बहु ।
गृहमागत्य निक्षिप्य प्रायश्चित्तपराङ्मुखः ॥ १०

धनोन्मादग्रस्तचित्तः सदा स्वोदरपोषकः ।
धर्मगन्धानभिज्ञः सन्न्यवर्तत गृहे सुखम् ॥ ११

मातुस्सपत्नीमातुश्च सततं कलहे सति ।
अतीव रूपसम्पन्नां सपत्नीमातरं प्रति ॥ १२

प्रियमाभाष्य जरतीं धिक्करोति स्वमातरम् ।
एवं हि वर्तमानस्य सुप्रभस्य सदा रतिः ॥ १३

प्रावर्तत कनीयस्यां सपत्नीमातरि स्फुटम् ।
क्रोशन्त्यां मातरि स्वस्य तदृदृष्ट्वा जनसन्निधौ ॥ १४

विषप्रयोगतस्तां तु प्राणैर्विरहितां व्यधात् ।
अकरोच्च तदा मातुः श्रद्धया नौर्ध्वदैहिकम् ॥ १५

तामेव बुभुजे तूष्णीं सपत्नीमातरं द्विजाः ।
तादृग्दुदृश्चरितस्यास्य सुप्रभस्य दुरात्मनः ॥ १६

अन्त्यकालो हि सम्प्राप्तस्तस्यासीन्नोत्तरक्रिया ।
काकैर्गृध्रैः श्वभिश्चापि भक्षितस्तस्य विग्रहः ॥ १७

एवंभूतः स विप्रस्तु तुलाचार्यप्रतिग्रहात् ।
ब्रह्मरक्षस्त्वमगमत् क्षुत्तृष्णाभयपीडितः ॥ १८

துலாதானத்தில் (எடைக்குஎடை பொருளைத் துலாக்கோவில் எடைபோட்டுத் தானம் செய்வதில்) தானே பணத்தைத்தானமாகப் பெற்று வீட்டில் குவித்தான். தானம் வாங்கியதற்கான பிராயச்சித்தம் எதனையும் அவன் செய்யவில்லை. பணப்பிசாசு பிடித்துத் தாயை அவமதித்து இளவயதிலிருந்த மாற்ருத்தாயுடன் சேர, அதனைத் தடுத்த தாயை விஷம் வைத்துக் கொன்ருன். அவளுக்கு ஈமச்சடங்கும் செய்யாதிருந்தான். அவனது ஆயுள் முடியும் போது அவனது உடலுக்கு ஈமக்கடன் செய்ய எவருமில்லை. துலாதானம் வாங்கியதும் தாயைக் கொன்றதும் பின்விளைவாக அவனைப் பிரும்மராக்ஷஸனுக, பசி - தாகத்தில் துன்புறுத்தப்பட்டவனுக அலைய வைத்தது. (10-18)

तत्र तत्र चरन्दाहव्याकुलो ब्रह्मराक्षसः ।
देवदारुवनप्रान्ते गणग्रामे तु कुत्रचित् ॥ १९

दिगन्तव्यापिविटपे महत्यश्वत्थपादपे ।
तटाकतटभूमिस्थे स्थिरवासं चकार ह ॥ २०

तत्र स्थिरं वसन् वृक्षे तत्र ग्रामे च कस्यचित् ।
पौराणिकप्रवीणस्य सदाचारस्य धीमतः ॥ २१

द्विजस्य भार्यां जग्राह रूपयौवनशालिनीम् ।
रक्षोग्रस्ताऽथ सा तस्य भार्या परवशा सती ॥ २२

देहे नानाविधां पीडामन्वभूदनिवारिताम् ।
पौराणिकस्ततः कैरप्यौषधैर्मन्त्रवादिभिः ॥ २३

निश्चित्य दुष्परीहारं निशीथे तस्य रक्षसः ।
समीपमेत्य सान्त्वोक्तिपूर्वमेवानुनीतवान् ॥ २४

तस्यानुनयतः प्रीतः किञ्चित्स ब्रह्मराक्षसः ।
नयोपबृंहितं वाक्यमूचे पौराणिकं प्रति ॥ २५

पौराणिक महाप्राज्ञ त्वद्भार्याया ममापि च ।
रक्षस्त्वमोचनोपायं वदाम्यवहितश्शृणु ॥ २६

तीर्थानामुत्तमं तीर्थं गङ्गाजलमिति श्रुतम् ।
त्वं च वेत्सि तथा चाद्य गङ्गावीवधवाहिकम् ॥ २७

येन केनाप्युपायेन नीत्वा तन्मम सन्निधिम् ।
गङ्गाम्बुना प्रोक्षणमप्यन्तः पानं च मे यदि ॥ २८

घटयस्वामुनैवाद्य मम रक्षस्त्वमोचनम् ।
भवेत्तेनैव ते पत्न्या रक्षोबाधा गता भवेत् ॥ २९

*ஆங்காங்கு அலைந்து திரிந்த பிரும்மராக்ஷஸன் தேவதாருவனத்தருகே (வழூவூர்) ஒரு கணக்கிராமத்தில் பெரும் அரசமரத்தில் குடி கொண்டான். அவ்வூரில் புராணம் படிக்கிற நல்ல அந்தணரின் அழகிய மனைவியைப் பிடித்து பல வகையில் துன்புறுத்தினான். மந்திரமும் மருந்தும் பயன்படாத நிலையில் அந்த பிரும்மராக்ஷஸனின் அருகே சென்று புராணிகன் கரிசனத்துடன் பழகி அவனது தேவையைத் தெரிவிக்கச் சொன்னான். பிரும்ம ராக்ஷஸன் தான் அந்தப் பெண்ணை விட்டு விலக வழிசொன்னான். தீர்த்தங்களில் சிறந்தது கங்கை நீர். அதனைக்குடம் குடமாகச் சுமந்து வருபவர்கள் உண்டு. எப்படியாவது அவர்களிடமிருந்து கங்கை நீரைப் பெற்று என் மீது அதனைத் தெளித்து பருகச் செய்வாய். என் இந்நிலை நீங்கும் . உன் மனைவியைவிட்டு பிரும்ம ராக்ஷஸ பீடையும் விலகும் என்றான். (19-29)*

इति रक्षोवचः श्रुत्वा द्विजः पौराणिकोत्तमः ।
विश्वस्य च वचस्सोऽहं गङ्गावीवधवाहक ॥ ३०

आनेष्यामि यदि त्वं नो बाधसे नहि तत्तव ।
रक्षः -
यतमानं स्वसौख्यार्थं को वा बाधेत मूढधीः ॥ ३१

विश्वस्य मम वाक्यन्तु यतस्व द्विजसत्तम ।
तेन मे तव पत्न्याश्च सौख्यं भावि न संशयः ॥ ३२

इत्युक्तो रक्षसा तथ्यं स हि पौराणिकोत्तमः ।
तमामन्त्र्य प्रहृष्टस्सन् स्वकीयं प्राप मन्दिरम् ॥ ३३

प्राप्तुं स्वभार्यासौन्दर्यं तदा काश्यास्समागतम् ।
बहुप्रकारानुनयैः कथञ्चिद् द्विजजन्मनः ॥ ३४

ग्राहयित्वा च गङ्गाम्भोवीवधन्निर्गतो निशि ।
तस्याश्वत्थस्य सविधे रक्षोऽन्तिकमुपासदत् ॥ ३५

गङ्गाम्भोवीवधं दृष्ट्वा प्रीतः स ब्रह्मराक्षसः ।
अधस्तादवरुह्याथ गङ्गाजलमयाचत ॥ ३६

सोऽपि पौराणिको गङ्गाजलमुद्धृत्य रक्षसः ।
अनेकवारं शिरसि प्रोक्ष्य हस्ते च तज्जलम् ॥ ३७

ददौ सोऽप्यपिबद्भक्त्या बहुवारं तथापि सः ।
राक्षसो नैव मुक्तोऽभूद्रक्षस्त्वात् घोरपापजात् ॥ ३८

ततःस राक्षसः पौराणिकं वाचमवोचत ।
मातृगामी महादानप्रतिग्राही च मातृहा ॥ ३९

नित्यं परान्नभोक्ताऽहं एकैकं पातकं महत् ।
तत्तादृशस्य मे मुक्तिः कथं गङ्गाम्भसा भवेत् ॥ ४०

*ராக்ஷஸனது சொல்லைக் கேட்ட அந்தணன் கங்கையைக் குடம் குடமாக தோளில் சுமந்து கொணர்கிற பொதிசுமப்பாளர்களிடமிருந்து கங்கை நீரைப் பெற்றுத் தருகிறேன். நீ இவளைத் துன்புறுத்தாமல் விலகவேண்டும் என்று வேண்டினன். ராக்ஷஸனும் ஸம்மதித்தான். காசியிலிருந்து வந்த*

*கங்கை நீர்ப்பொதிசுமப்பாளனைத் தேடிப்பிடித்து அரசமரத்தடிக்கு அழைத்து வந்தான். மரத்திலிருந்து இறங்கிய பிரும்ம ராக்ஷஸன் சுமப்பாளனிடம் வேண்ட அந்தணன் கங்கை நீரைப் பெற்று அவன் மீது தெளித்துப் பருகவும் தந்தான். ராக்ஷஸன் பலதடவை தெளிக்கப்பட்டும், நீரைப் பருகிய பின்னரும் தன் நிலைமாறுதிருக்கக் கண்டு ,மாற்றுந்தாயுடன் தொடர்பு, பெருந்தானத்தைக் கூச்சமின்றி ஏற்றது, தாயைக் கொன்றது, பிறர் வீட்டிலே உணவு கொண்டது. இந்தப் பாபச் செயல்களுக்குக் கங்கை நீரும் பரிஹாரம் செய்ய இயலவில்லை என்று புலம்பினான். (30-40)*

दुःखेन प्रलपत्येवं एतस्मिन् ब्रह्मराक्षसे ।
पौराणिकस्य भार्यायाः पातिव्रत्यप्रभावतः ॥ ४१

अन्तरिक्षे समुदभूद्वाणी काऽप्यशरीरिणी ।
भो भो पौराणिकश्रेष्ठ भार्यान्नैष विमुञ्चति ॥ ४२

तत्साध्व्यास्तव भार्याया रक्षसोऽस्य च सौख्यदम् ।
ब्रवीम्युपायं शृणुत तव स्नेहाद् वदाम्यहम् ॥ ४३

न गण्यन्ते च पापानि घोराण्यस्य हि रक्षसः ।
तस्मात्केवलगङ्गाम्भो नैनं मोचयितुं क्षमम् ॥ ४४

अनेनानुगतो ब्रह्मरक्षसा त्वं द्विजोत्तम ।
तेजिनीविपिनक्षेत्रं पुण्यात्पुण्यतमं व्रज ॥ ४५

तत्रास्ते भगवान् विष्णुनेत्रार्पितपदाम्बुजः ।
तस्य दक्षिणभागे तु किञ्चित्तत्र च नैरृते ॥ ४६

असङ्ख्याता मुनिवरास्तेनिरे शाम्भवं मखम् ।
दशाश्वमेधानाजह्रे ब्रह्मा च चतुराननः ॥ ४७

पुण्यस्य यज्ञवाटस्य तस्य पार्श्वे च दक्षिणे ।

साक्षाद्धरिसमाहूता ख्याता हरिनदीति च ॥ ४८

तस्यां गङ्गादयो नद्यस्तीर्थानि सकलान्यधि ।
प्रवहत्यन्तराविश्य लक्ष्मीजानेरनुज्ञया ॥ ४९

तत्र गत्वा तत्सलिलैः प्रोक्ष्यैनं ब्रह्मराक्षसम् ।
पाययान्तर्जलं किञ्चित्तेनैव स तु राक्षसः ॥ ५०

मुक्तो रक्षस्त्वतो दिव्यं विमानमधिरुह्य च ।
स्वर्गं गच्छति ते भार्याप्यनेनाशु विमोचिता ॥ ५१

सुखं जीवति पश्चात्त्वं तया साकं रमिष्यसे ।
आकाशवाणीं तां श्रुत्वा सद्यः पौराणिकोत्तमः ॥ ५२

रक्षसाऽनुगतः शीघ्रं तन्नदीतीरमासदत् ।
आसाद्य पात्रेणादाय तज्जलं स द्विजोत्तमः ॥ ५३

रक्षोमूर्द्धनि सम्प्रोक्ष्य पाययामास किञ्चन ।
तदम्भः पानमात्रेण विमानन्दिव्यमास्थितः ॥ ५४

दिव्यरूपधरो व्योम्नि स्थित्वाऽऽमन्त्र्य द्विजोत्तमम् ।
रक्षस्त्वात्परिमुक्तोऽसौ प्रोक्ष्याथ स्वस्थया तया ॥
रममाणश्चिरं भेजे भोगानितरदुर्लभान् ॥ ५५

इति सप्ततितमोऽध्यायः

*புராணிகனின் மனைவியின் கற்பின் பெருமையால் வானில் அசரீரிஒலித்தது. புராணிகரே! உன்மனைவியின் பீடை நீங்கவும் இவனது பிரும்மராக்ஷஸத் தன்மை நீங்கவும் ஒரே உபாயம் - மிகப்புனிதமான வீழிக்காட்டிற்கு இவர்களுடன் செல்வாய். நேத்ரார்பணேசர் அருள் பாலிக்கிற இடம். தென்புறத்தில் தென்மேற்கில் முனிவர்களும் பிரும்மாவும் வேள்விகள் புரிந்த இடம் உள்ளது. அங்கு ஹரியால் அழைத்து வரப்பட்ட ஹரி நதி*

உள்ளது. அதில் கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களும் இணைந்துள்ளன. அதன் நீரை பிரும்மராக்ஷஸனின் மீது தெளித்துப் பருகச் செய்வாய். பிரும்மராக்ஷஸநிலை நீங்கிய இவன் ஸ்வர்க்கம் செல்வான். நீயும் அவனுடன் இனிது வாழ்வாய் என்றது. உடன் புராணிகன் ராக்ஷஸன் உட்பிரவேசித்த மனைவியுடன் ஹரிநதிக்குச் சென்று நீரைத் தெளித்துப் பருகச் செய்தான் . பிரும்மராக்ஷஸ பீடை நீங்கிய மனைவியுடன் இனிது வாழ்ந்தான். (42-55)

—★—

## एकसप्ततितमोऽध्यायः

सूतः—

सनत्कुमार नन्दीश नारदास्मद्गुरूदितम् ।
पुनश्च तीर्थमाहात्म्यं वदामि शृणु तत्वतः ॥ १

वसिष्ठेन कृते तीर्थे सर्वपापापहारिणि ।
मेषे चैत्रे मासि पुण्ये दर्शे वा पूर्णिमातिथौ ॥ २

प्रातर्नित्यक्रियां कृत्वा दूर्वागोमयपूर्वकम् ।
सचित्रमिति मन्त्रेण नाभिदघ्नजले स्थितः ॥ ३

जप्त्वा त्रिवारं पूतात्मा यः स्नाति मनुजो भुवि ।
स भजेद् ब्रह्मनिष्ठाञ्च महत्वमधिगच्छति ॥ ४

सदाचारविहिनो वा नित्यस्नानविवर्जितः ।
औपासनपरित्यागी बलिकर्मविवर्जितः ॥ ५

भिक्षादानविहीनोऽपि यतेश्च ब्रह्मचारिणः ।
शुद्धो भवति विप्रेन्द्र स्नानमात्रेण तत्र हि ॥ ६

कर्तव्यं व्रीहिदानं च तत्र पात्रे कुटुम्बिनि ।

भारप्रमाणमात्रं वा तदर्धं वा तदर्धकम् ॥ ७

आत्मवित्तानुसारेण वित्तशाठ्यन्न कारयेत् ।
याचित्वाप्यन्यतो धान्यं दरिद्रोऽपि द्विजोत्तमः ॥ ८

दारिद्र्यदोषशान्त्यै च सम्पदाञ्च विवृद्धये ।
तेन दत्तञ्च यद्धान्यं तत्कोटिगुणितं भवेत् ॥ ९

प्रस्थव्रीहिप्रदानेन धान्याशिप्रदानजम् ।
फलमाप्नोति तत्तीरे सत्यं सत्यं मयोदितम् ॥ १०

पुत्रपौत्रैः परिवृतो महाभाग्यसमन्वितः ।
इह लोके सुखं भुक्त्वा देहान्ते मुक्तिमाप्नुयात् ॥ ११

रहस्यकृतपापानां प्रायश्चित्तं च तद्भवेत् ।

*''அத்தியாயம்'' - 71*

*ஸனத்குமாரர், நந்தீசர், நாரதர், வியாஸர் முதலானோர் தீர்த்தங்களின் பெருமை பற்றிக் கூறியுள்ளனர். வஸிஷ்டரால் அமைக்கப் பெற்றது ''வஸிஷ்டதீர்த்தம்'' இதில் காலையில் நித்யகடமைகளை முடித்துக் கொண்டு. இடுப்பளவு நீரில் நின்று ''ஸசித்ரசித்ரம்'' என்ற மந்திரத்தை மூன்று தடவை ஜபித்து வேண்டி நீராட பிரும்ம ஜ்ஞானம் பெறுகிறான். ஆசார மின்மை, தினமும் நீராடாமை ஔபாஸனம் வைச்வதேவம் செய்யா திருப்பது, துறவிக்கும் பிரும்மசாரிக்கும். உணவிடாதிருத்தல் முதலிய குறைகள் நீராடலால் நீங்கும். நீராடித் தான்யதானம் செய்தல் நல்லது. (1-11)*

इन्द्रेण च कृते तीर्थे सर्वालङ्कारशोभिते ॥ १२

पद्मेन्दीवरकल्हारकुमुदैरधिवासिते ।
वैशाखे मासि तत्तीर्थे दर्शे वा पूर्णिमातिथौ ॥ १३

मध्याह्ने त्विति मन्त्रेण ऊरुदघ्नजले स्थितः ।
पश्यन् सूर्यं महादेवं हृदये च शिवं स्मरन् ॥ १४

यः स्नाति मानवो लोके स स्वर्गमधियास्यति ।
अग्निष्टोमातिरात्राणां फलमाप्नोति तत्क्षणात् ॥ १५

कृतमेव द्विवारं च द्वादशाहफलं भवेत् ।
पञ्चकृत्वो यदि स्नाति राजसूयफलं भवेत् ॥ १६

*இந்திரர் அமைத்தது ''இந்திரதீர்த்தம்'' தாமரையும் அல்லியும் ஆம்பலும் நிறைந்த நீர்நிலை. வைகாசி அமாவாசை அல்லது பௌர்ணமியில் நடுப்பகலில் துடையுளவு நீரில் நின்று ''மத்யாந்ஹேது'' என்ற மந்திரம் ஜபித்து ஸூரியனைப் பார்த்துக் கொண்டே சிவனைத் தியானித்தவாறு இருதடவைகள் நீராடுவர். 5 நாட்கள் தொடர்ந்து நீராட வேள்விபுரிந்த பயன் பெறுவர். (12-16)*

ज्येष्ठमासे महापुण्ये यमतीर्थे महत्तरे ।
कृष्णाष्टम्यां प्रातरेव कृत्वा पौर्वाह्णिकीं क्रियाम् ॥ १७

इन्द्रं व इति मन्त्रेण त्रिरुच्चार्य जले स्थितः ।
स्नात्वा सन्तर्प्य देवांश्च पितृंश्चैव यथाविधि ॥ १८

शिरसो वपनं कृत्वा विप्रानुज्ञापुरस्सरम् ।
चकृथ क्षेत्रपिण्डञ्च ब्राह्मणांश्चापि तर्प्य च ॥ १९

मुक्तो भवति विप्रेन्द्राः पातकैरुपपातकैः ।
गुरुतल्पाधिगमनात् संसर्गादपि मुच्यते ॥ २०

अपुत्रो लभते पुत्रं षण्मासस्नानमात्रतः ।
मुक्तिं प्रयान्ति पितरः निरयस्थाश्च निश्चितम् ॥ २१

यमलोके गतिर्नास्य यमपीडा न जायते ।
कार्तिके मासि सम्प्राप्ते वृश्चिकस्थे दिवाकरे ॥ २२

भानोरुदयतः पूर्वं उदुत्यमिति मन्त्रतः ।
स्नात्वा तु यमतीर्थेऽस्मिन् दत्वा च तिलपात्रकम् ॥ २३

सर्वव्याधिविमुक्तः स्यात् सूर्यलोकञ्च गच्छति ।
राजा विजयमाप्नोति युद्धे तु समुपस्थिते ॥ २४

चतुरङ्गबलन्तस्य वर्धते नृपतेर्भृशम् ।

*ஆனிமாதத்தில் ''யமதீர்த்தத்தில்'' கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமியில் காலையில் காலைக்கடனை முடித்தபின் நீரில் நின்று ''இந்த்ரம்வோ'' என்ற மந்திரத்தை மூன்று தடவை ஜபித்து தர்பணம் செய்து, வெளியேறி அந்தணரின் அனுமதியுடன் தலைக்கு வபனம் செய்து க்ஷேத்திரபிண்டமளித்து அந்தணருக்கு உணவிட பாபம் நீங்கும். ஆறு மாதங்கள் நீராட பித்ருக்கள் நற்கதி அடைவர். நல்ல புதல்வர் தோன்றுவர். யமபீடை இருக்காது. கார்த்திகையில் ஸௌரியோதயத்திற்கு முன் ''உதுத்யம்'' என்ற மந்திரஜபம் செய்து நீராடி எள்தானம் செய்ய நோய் நீங்கும். அரசன் போரில் வெற்றி பெறுவான்(17-24)*

गौतमे च महातीर्थे गौतमेन विनिर्मिते ॥ २५

आषाढे पूर्णिमायाञ्च स्नात्वा ब्रह्मत्वमाप्नुयात् ।
अगम्यागमनात् पापात् अभक्ष्यस्य च भक्षणात् ॥ २६

त्रियम्बकं त्रिरुच्चार्य महामन्त्रं यथाविधि ।
प्रणम्य गौतमेशञ्च दुष्टसङ्गाद् विमुच्यते ॥ २७

दुश्चरित्राच्च दोषाच्च परदाराभिमर्शनात् ।
त्रियम्बकेन मन्त्रेण नत्वेशं पितृदेवताः ॥ २८

तिलतर्पणपूर्वं च पिण्डोदकपुरस्सरम् ।
सन्तर्प्य भूयो नत्वेशं क्रूरपापैः प्रमुच्यते ॥ २९

गौतमेन कृते तीर्थे प्रत्यहं स्नाति यो नरः ।
स कोटिकुलमुद्धृत्य शिवलोके महीयते ॥ ३०

श्रावणे मासि सम्प्राप्ते सिंहस्थे च दिवाकरे ।
मन्दवारेषु मध्याह्ने शन्नोदेवीति मन्त्रतः ॥ ३१

सङ्कल्प्य विधिवत्स्नायात् शनिपीडा न जायते ।
परदाराभिमर्शाच्च तत्क्षणेन विमुच्यते ॥ ३२

आयाहीन्द्र ऋचं जप्त्वा गौतमेशस्य सन्निधौ ।
रूप्यं दद्यात्तद्रहितं दद्याद्वस्त्रं सुनिर्मलम् ॥ ३३

तन्तुसङ्ख्यैकवर्षाणि स वसेद्रजताचले ।
शिवोऽपि तस्य वरदः स्यादेव हि न संशयः ॥ ३४

इति एकसप्ततितमोऽध्यायः

''கௌதம தீர்த்தத்தில்'' ஆடிப்பௌர்ணமியில் ''த்ரயம்பகம்'' என்ற மந்திரம் ஜபித்து நீராடி கௌதமேசரை வழிபட தகாதவற்றைச் செய்த பாபம் கெட்ட நடைமுறை பிறஸ்திரீஸங்கம் முதலிய பாபம் நீங்கும். ஈசனை வணங்கி திலதர்பணம், பிண்டதானம் செய்ய பித்ருக்கள் நற்கதி பெறுவர். ஆவணியில் சனிக்கிழமைகளில் நடுப்பகலில் ''சந்நோ தேவீ'' என்ற மந்திரம் ஜபித்து நீராட சனிபீடை பிறர்மனைவியைத் தீண்டிய பாபம் நீங்கும். ''ஆயாஹீந்த்ர'' என்ற மந்திரம் ஜபித்து கௌதமேசரின் எதிரில் வெள்ளிதானம் வஸ்திரதானம் செய்யச் சிவன் அருள் பெறுவர். (25-34)

—★—

द्विसप्ततितमोऽध्यायः

सूतः—

ततो वारुणतीर्थं च सर्वपापनिबर्हणम् ।
व्रजेद्भाद्रपदे मासे दर्शे स्नानं समाचरेत् ॥ १

कृष्णपक्षे विशेषेण तीर्थे च वरुणाह्वये ।
स्नानं यमाय सोमेन कृत्वा तर्पणमेव च ॥ २

तिलैश्च सहितं कृत्वा पितॄणां मुक्तिदो भवेत् ।
प्रत्यहं पितृतृप्त्यर्थं श्राद्धं कुर्यान्महालयम् ॥ ३

गयाश्राद्धशतं पुण्यं लभते स हि मानवः ।
पितृभूतानभ्यनक्ति तैलैर्यो ब्राह्मणोत्तमान् ॥ ४

कैलासलोकमासाद्य वर्तते हि शिवेन सः ।
तिलपात्रं ब्राह्मणाय दत्वा दक्षिणया सह ॥ ५

तिलसङ्ख्यैकवर्षाणि शिवलोके महीयते ।

*''அத்தியாயம்'' - 72*

*''வருண தீர்த்தம்'' பாபமகற்றுவதில் சிறப்பு பெற்றது.- புரட்டாசி அமாவாஸ்யையில் பொதுவாக கிருஷ்ணபக்ஷத்தில் யமனை வேண்டி ஸ்நானமும் ஸோமனைக் குறித்து தர்ப்பணமும் எள்ளுடன் செய்ய பித்ருக்கள் திருப்தி அடைவர். தினமும் மஹாளய காலத்தில் சிராத்தம் செய்ய கயா சிராத்த பலன் கிட்டும். அந்தணர்களைப் பித்ருக்களாக வரித்து நல்லெண்ணய் தேய்த்து அப்பியங்கம் செய்விக்க சிவநிலை பெறுவான். பாத்திரத்தில் எள்ளும் தக்ஷிணையும் வைத்துத் தானம் செய்ய மேனிலை பெறுவர். (1-5)*

आश्वयुङ्मासि सम्प्राप्ते तुलायुक्ते तु भास्करे ॥ ६

मार्कण्डेयं महातीर्थं गत्वा नत्वा च शङ्करम् ।
मासावसानपर्यन्तं स्नानमात्रं प्रशस्यते ॥ ७

यानि तीर्थानि भूलोके नद्यश्च सकला अपि ।
स्नातुमायान्ति शुद्ध्यर्थं मार्कण्डेयसरोवरे ॥ ८

प्रागुत्तरे तु मायूरे तीर्थानि स्नान्ति शुद्धये ।
मध्याह्ने स्नातुमायान्ति मार्कण्डेयसरोवरे ॥ ९

तदा तत्तीर्थमध्ये च ये स्नान्ति मनुजोत्तमाः ।
सर्वतीर्थस्नानफलं तेषां स्यान्न हि संशयः ॥ १०

पयःकुम्भं तत्र दत्वा शिवलोके महीयते ।
द्रोणमात्रं तदर्धं वा पयः कुम्भं प्रचक्षते ॥ ११

जलन्तु द्विगुणं देयं पयश्चैव तदर्धकम् ।
तदर्धं च घृतं प्रोक्तं तिलतैलं च तत्समम् ॥ १२

द्रोणमात्रन्तु मुख्यं स्यात् शक्त्यभावे तदर्धकम् ।
तन्न्यूनं च न कर्तव्यं दानस्य फलमिच्छता ॥ १३

मार्कण्डेयाख्यतीर्थस्य सदृशन्न हि भूतले ।
घृतकुम्भप्रदानेन वाजिमेधफलं लभेत् ॥ १४

धान्यभारप्रदानेन धान्यराशिफलं लभेत् ।
यावन्तो धान्यकणिकास्तावद्युगसहस्रकम् ॥ १५

तिष्ठन्ति रजताद्रौ च शिवेनैवोपलालिताः ।

*ஐப்பசி மாதத்தில் ''மார்க்கண்டேய தீர்த்தத்தில்'' சிவனைத் தியானித்து, மாஸம் முழுவதும் நீராடுவர். அம்மாதத்தில் எல்லா நதிகளும் தனது தூய்மையைத் திரும்பப்பெற இங்கு வருகின்றன.*

மாயூரத்தின் கிழக்கிலும் வடக்கிலுமுள்ள தீர்த்தங்களும் இங்கு கூடுகின்றன. எல்லா தீர்த்தங்களிலும் நீராடியதன் பயனை துலாமாதத்தில் இங்கு நீராடுவதால் பெறலாம். பால் குடம் தானம் செய்வது சிறந்தது. பால் ஒரு துரோணம் (சுமார் 25 லிட்டர் அளவு) ஜலம் 2 துரோணம் நெய் அரைதுரோணம், நல்லெண்ணெய் அரைதுரோணம் இந்த அளவு அல்லது இதில் பாதியளவு தானம் செய்வர். தானியம் 1 பாரம் (100லிட்டர்) தானம் செய்வர். நீண்ட நாட்கள் சிவலோகவாஸம் கிட்டும். (6-15)

मार्गशीर्षे मासि पुण्ये कोदण्डस्थे च भास्वति ॥ १६

कौबेरतीर्थमाश्रित्य प्रत्यहश्चारुणोदये ।
त्वमग्ने रुद्रमन्त्रेण स्नानं तत्र प्रशस्यते ॥ १७

कौबेरमीशं सम्पूज्य मुद्गान्नञ्च निवेद्य च ।
मुक्तो भवति विप्रेन्द्रस्तीर्थे कौबेर उत्तमे ॥ १८

ताम्बूलदानं कृत्वा च कौबेरं लोकमश्नुते ।
कुबेरसदृशो भूत्वा शिवेन सह मोदते ॥ १९

तस्मिन् मासे तु रुद्रर्क्षे योऽभिषेकं करिष्यति ।
अलङ्कारनटेशस्य कुबेरसरसीजलैः ॥ २०

अभिषिच्य ततः पश्चाच्छुद्धवस्त्रेण वेष्ट्य च ।
पादादिमकुटान्तञ्च गन्धसेवां करिष्यति ॥ २१

तस्य देवः प्रसन्नस्सन् कैलासञ्च प्रदास्यति ।
शिवज्ञानप्रबोधश्च जायते तस्य हि ध्रुवम् ॥ २२

மார்கழி மாதத்தில் ''குபேரதீர்த்தத்தில்'' தினமும் அருணோதய வேளையில் ***''த்வமக்நே ருத்ரோ''*** என்ற மந்திரம் ஜபித்து நீராடுவர். குபேரேசுவரனை வழிபட்டு பொங்கல் நிவேதனம் செய்து தாம்பூல தானம் செய்வர். செல்வம் பெருகும்.

*திருவாதிரையன்று அலங்கார நடேசனை குபேர தீர்த்த நீரால் நீராட்டி தூய ஆடை உடுத்தி கால் முதல் தலை வரை சந்தனம் பூச அவரது அருள்பெற்று சிவநிலை பெறலாம். (16-22)*

कार्तिके मासि सम्प्राप्ते वृश्चिकस्थे च भास्वति ।
विश्वामित्रकृतं तीर्थं गत्वा नत्वा च शङ्करम् ॥ २३

तदनुज्ञामवाप्याथ तन्मासे पूर्णिमादिने ।
आसत्येनेति मन्त्रेण उदरघ्नजले स्थितः ॥ २४

मध्याह्ने स्नाति यस्सोयं ब्रह्महत्यां व्यपोहति ।
मित्रद्रोही कृतघ्नश्च द्वावेतावतिपापिनौ ॥ २५

निष्कृतिश्च द्वयोर्नास्ति गङ्गास्नानशतैरपि ।
सद्यो न नश्येत् तत्पापं शीघ्रन्नैव प्रणश्यति ॥ २६

तस्मात्तन्नश्यतीत्युक्तं तीर्थेऽस्मिन् लोकविश्रुते ।
मासान्तावधि यः स्नाति विश्वामित्रसरोवरे ॥ २७

ब्रह्मत्वं सम्प्रयात्येव हीनवर्णोऽपि मानवः ।
आब्रह्मन्निति मन्त्रेण तत्र यः स्नाति मानवः ॥ २८

ब्रह्मत्वमश्नुते हीनवर्णोऽपि क्षेत्रगौरवात् ।
स्वर्णदानञ्च कर्तव्यं किञ्चिब्रह्मत्वमिच्छता ॥ २९

वैश्वामित्रस्य लिङ्गस्य पूजा कार्या विशेषतः ।
शर्कराज्येन पयसा मधुना च समन्वितम् ॥ ३०

अभिषिच्य महालिङ्गं स वै रुद्रगणो भवेत् ।
तन्मासे भौमवारेषु यः स्नात्यनुदिते रवौ ॥ ३१

विश्वामित्रकृते तीर्थे गुल्मरोगाद्विमुच्यते ।
कुष्ठी च मुच्यते पापाज्जन्मान्तरकृतादपि ॥ ३२

तत्तीर्थतीरे स्थित्वा च गायत्रीं प्रजपेद्यदि ।
एकेन जपमात्रेण कोटिकोटिफलं भवेत् ॥ ३३

तत्र कन्याप्रदानञ्च गोदानं च विशिष्यते ।
एकेन कन्यादानेन कोटिकन्याप्रदो भवेत् ॥ ३४

पणमात्रप्रदानेन मेरुस्वर्णप्रदो भवेत् ।
देवोऽपि तेजिनीनाथस्तस्य तुष्यति सर्वदा ॥ ३५

एतानि तीर्थानि महाफलानि स्नानेन दानेन च पुण्यदानि ।
स्नातव्यमेतेषु विशेषकाले श्रीतेजिनीकाननसीम्नि पुण्ये ॥ ३६

इति द्विसप्ततितमोऽध्यायः

*கார்த்திகையில் ''விசுவாமித்ர தீர்த்தத்தில்'' நீராடி பௌர்ணமியன்று ''ஆஸத்யேந'' என்ற மந்திரத்தால் வயிறு அளவு நீரில் நின்று ஜபித்து நடுப்பகலில் நீராடுபவன் நண்பருக்குத் துரோகம், செய்நன்றி மறத்தல் என்ற இரு கொடும்பாபம் நீங்கப் பெறுவான் ''ஆப்ரம்ஹன்'' என்ற மந்திரம் கூறி நீராடுபவன் சிறந்த அந்தணத் தன்மை பெறுவான். தங்கம் தானம் செய்வர். விசுவாமித்ரேச லிங்கத்தை வழிபடுவர். சர்க்கரை, நெய், பால், தேன் இவற்றால் ஈசனை நீராட்டி வழிபடுவர். அம்மாதத்தில் செவ்வாய்க் கிழமைகளில் ஸூரியன் உதிக்கு முன்னரே நீராடுபவன். குல்மநோய் குஷ்டநோய் நீங்கப் பெறுவான். தீர்த்தக் கரையில் அமர்ந்து காயத்ரீ ஜபம் செய்வது மிகவும் பயன்தரும். கன்யா தானம் கோதானம் தனதானம் சிறந்தது. வீழிநாதனின் அருள்பெறுவர். தேஜினீவன எல்லைக் குட்பட்ட இந்த தீர்த்தங்களில் நீராடுவதால் புண்யம் கூடும்.* ***(23-36)***

—★—

## त्रिसप्ततितमोऽध्यायः

सूतः—

फाल्गुने मासि सम्प्राप्ते मीनसंस्थे तु भास्करे ।
मध्याह्ने दर्शकाले च पद्मतीर्थोदके शुभे ॥ १

भगो अर्यमेति मन्त्रेण नाभिदघ्नजले स्थितः ।
त्रिवारमुक्त्वा मन्त्रं च यः स्नाति मनुजो भुवि ॥ २

ब्रह्महत्यादिपापैश्च मुक्तः स्यात्तेजिनीवने ।
शिवतुल्याकृतिर्भूत्वा शिवेन सह मोदते ॥ ३

कांस्यपात्रं प्रदातव्यं पायसेन प्रपूरितम् ।
तेन पुण्येन महता ब्रह्मलोकं च गच्छति ॥ ४

तस्मिन् दिने विशेषेण गन्धसेवाञ्च कारयेत् ।
तेजिनीवननाथस्य शतत्रयपलेन च ॥ ५

गोरोचनाकुङ्कुमाढ्यघनसारयुतेन च ।
तत्पुण्यगणनां कर्तुं शिवो वेत्ति न चापरः ॥ ६

ब्रह्मण्येश्वरलिङ्गस्याप्येवं पूजान्तु कारयेत् ।
ब्राह्मणान्भोजयेत्तत्र षड्रसेन यथारुचि ॥ ७

एकस्मिन् भोजिते कोटिविप्रभोजनकं फलम् ।

*''அத்தியாயம்'' - 73*

*பங்குனி மாதத்தில் நடுப்பகலில் அமாவாஸையில் ''பத்மதீர்த்தத்தில் பகோ அர்யமா'' என்ற மந்திரத்தைத்*

தொப்புளளவு நீரில் நின்று மூன்று தடவை ஜபித்து நீராட பிரும்மஹத்தி முதலிய பாபம் நீங்கும். சிவனருள் பெற்று சிவலோகம் செல்வர். பாயஸம் நிரப்பிய வெங்கலபாத்திரம் தானம் செய்வர். வீழிநாதருக்கு கோரோசனை குங்குமப்பூ பச்சைகர்பூரம் கலந்த சந்தனக் காப்பிடுதல் சிறந்தது. ''ப்ரம்ஹண்யேச்வர லிங்கத்தை'' வழிபட்டு அந்தணருக்கு அறுசுவை உணவிடுதல் நல்லது. *(1-7)*

एषु द्वादशतीर्थेषु चित्रायां पूर्णिमादिने ॥ ८

स्नात्वा च तत्तन्मन्त्रेण दत्वा दानानि सादरम् ।
देवं च तेजिनीनाथं नत्वा कृत्वा प्रदक्षिणम् ॥ ९

कृत्वाऽभिषेकं नैवेद्यं धूपदीपपुरस्सरम् ।
सर्वक्रतुफलं प्राप्य सर्वदानफलं तथा ॥ १०

सर्वपुण्यफलं प्राप्य सर्वभोगसमन्वितः ।
लभते शिवसायुज्यं सत्यं सत्यं शिवाज्ञया ॥ ११

स्नानं प्रदक्षिणं कृत्वा तस्मिन्नेव दिने शुभे ।
एकप्रदक्षिणेनैव भूप्रदक्षिणजं फलम् ॥ १२

भविष्यति न सन्देहः सत्यं सत्यं मयोदितम् ।
अविमुक्तेश्वरस्याग्रे ब्रह्मतीर्थमुखानि च ॥ १३

यानि तीर्थानि वर्तन्ते त्रयोदश महान्ति च ।
ब्रह्मादिदेवताश्रेष्ठनिर्मितत्वेन हेतुना ॥ १४

तेषां माहात्म्यमीशेनाप्यभिधातुं न शक्यते ।
अतस्तद्विषये मूकोऽस्म्यहमल्पमतिर्द्विजाः ॥ १५

*இவ்வாறு பன்னிரண்டு தீர்த்தங்களிலும் சித்திரா பௌர்ணமியன்று அந்தந்த மந்திரம ஜபித்து நீராடி வீழிநாதரை வலம் வந்து தானம் செய்வர். மிகமிகப்புண்யச் செயல் இது. சிவனருளை எளிதில் பெற்றுத் தரும். வீழிநாதரை வலம் வருவர். அவிமுக்தேசுவரருக்கு எதிரில் உள்ள பிரும்ம தீர்த்தம் முதலான 13 தீர்த்தங்களில் நீராடுவதும் மிகமிகச் சிறந்தது. (8-15)*

सूतः-

भूयोपि वः प्रवक्ष्यामि तेजिनीवनवैभवम् ।
मनोरभूदिलो राजा सोऽनपत्योऽतिदुःखितः ॥ १६

पुत्रार्थं पितृतृप्त्यर्थं तेजिनीवनमभ्यगात् ।
शाकमूलफलाहारश्चचारात्र महत्तपः । १७

स्नात्वा सर्वेषु तीर्थेषु माघमासे विशेषतः ।
ततो वर्षसहस्रान्ते प्रसन्नोऽस्य श्रियः पतिः ॥ १८

त्वया नाराधिता राजन् पितरः केन हेतुना ।
अनपत्योसि पुत्रार्थं पितॄनाराधयाधुना ॥ १९

तत्प्रसादेन पुत्रस्ते भवेद्वंशविवर्द्धनः ।
इति दत्वा वरं विष्णुरन्तर्द्धानमगाहत ॥ २०

ततस्स चिन्तयामास मनसा मनुनन्दनः ।
तुष्यन्ति पितरो मह्यं कर्मणा केन हेतुना ॥ २१

इति चिन्तयतस्तस्य पुरस्सरमुनीश्वरः ।
सनत्कुमारो भगवानाविरासीद्यदृच्छया ॥ २२

आविर्भूय स राजानमिलं वचनमब्रवीत् ।

अप्रसन्नमुखस्त्वन्तु दृश्यसे केन हेतुना ॥ २३

किं दुःखकारणमिति पृष्टो राजा मुनिं प्रति ।
आह स्वदुःखहेतुन्तच्छ्रुत्वा मुनिरभाषत ॥ २४

मा दुःखवशगो भूया इत्युक्त्वा मनुनन्दनम् ।
आलोक्य पितृतृप्त्यर्थं श्राद्धकल्पं मुदाऽब्रवीत् ॥ २५

*மனுவின் புதல்வன் இளன் என்ற அரசன், மகப்பேறின்றி பித்ருக்களைத் திருப்தி செய்து புத்திரப்பேறு பெற வீழிக்காட்டிற்கு வந்தான். காய், பழம், கிழங்கு என்ன உணவுகட்டுப்பாட்டுடன். மாசிமாதத்தில் எல்லா தீர்த்தங்களிலும் நீராடினுன். ஆயிரம் வருஷங்கள் அங்கு வசித்தான். பித்ரு திருப்திக்காக உள்ள சடங்குகளைச் செய்யும் படி விஷ்ணு ஆணையிட அதற்கான முறையறிய விரும்பிய இளனிடம் ஸநத்குமாரர் வந்தார். அரசனின் துயர்பற்றி அவர் அறிந்து சிராத்தமுறை பற்றி விளக்கிஞர். (16-25)*

निशि सुप्तोत्थितः पूर्वं सिसृक्षुरखिलञ्जगत् ।
काञ्चित् सुतां विधिस्सायं सन्ध्यायां मनसाऽसृजत् ॥ २६

पितृप्रसूरिति प्रोक्ता तेन सा सर्ववन्दिता ।
तेषान्तु सर्वलोकानामुपरिष्टात्पितामहः ॥ २७

स्थानन्तु कल्पयामास स प्रदक्षिणमध्यगम् ।
गणस्सप्तविधस्तेषां कथितो द्विजसत्तमाः ॥ २८

अग्निष्वात्ता बर्हिषदस्साग्नयोऽनग्नयस्तथा ।
आज्यपास्सोमपाश्चैव मधुपाश्चेति ते स्मृताः ॥ २९

तपोवीर्यबलोपेतास्सत्वोद्रिक्ता महौजसः ।
प्रसन्नास्ते भुवि नृणामायुरारोग्यसम्पदः ॥ ३०

दास्यन्ति पुत्रान्वित्तानि परत्र च शुभां गतिम् ।
कामयन्त्यान्तु धर्मस्य विश्वायां तनया दश ॥ ३१

समुत्पन्नाः स्मृतास्ते हि विश्वेदेवा महाबलाः ।
तेऽतप्यन्त महाघोरं सुचिरं तेजिनीवने ॥ ३२

मेरुपृष्ठात् समासाद्य निराहारा यतव्रताः ।
दाक्षायणीभवास्तेऽमी वसुरुद्रार्कसम्मताः ॥ ३३

ततस्तेषां समासाद्य समीपं ब्रह्मणः सुताः ।
पूजितास्तैर्यथान्यायमिदं वचनमब्रुवन् ॥ ३४

कुशलन्नु सर्वत्र सर्वेषां वस्तपस्यताम् ।
भवतान्दर्शनार्थाय समायाताः स्म पुत्रकाः ॥ ३५

इति तेषां वचः श्रुत्वा विश्वेदेवास्तपस्विनः ।
पुत्रका इति चाहूताः क्रोधमाहारयन् भृशम् ॥ ३६

कथं यूयं तु पितरः कथं पुत्रा अमी वयम् ।
इत्येवं कलहोद्रिक्ता धाम स्वायम्भुवं ययुः ॥ ३७

तत्र कृत्वा नमस्कृत्य वेधसे सर्वमब्रुवन् ॥ ३८

*கல்பம் முடிவிற்கான இரவில் தூங்கிக் காலையில் எழுந்த பிரும்மா உலகைப் படைக்க விரும்பி மாலைச் சந்தி (ஸாயம்ஸந்தியா) யை மனத்தால் படைத்தார். பித்ரு தேவர்களனைவரின் தாய் அவள். (பித்ருப்ரஸூ) (எல்லாப்படைப்பிலும் முதலில் படைக்கப் பெறுபவர் பித்ருக்களே) உலகின் மேல் எல்லையில் அவர்களுக்கு இருப்பிடத்தை அமைத்தார். அவர்கள் அக்னிஷ்வாத்தர், பர்ஹிஷத், ஸாக்னி, அனக்னி, ஆஜ்யபர், ஸோமபர், மதுபர் என ஏழுபிரிவினர், ஸத்வகுணம் மிக்கவர், தவவலிமை கொண்டவர்.*

அவர்களே பின்னர் தோன்ற விருக்கிற மக்களுக்கு ஆயுள், ஆரோக்யம், செல்வம், புத்திரச் செல்வம் என அனைத்தையும் அருள்பவர். பிரஜாபதிகளின் ஸந்ததிகளில் ஒருவர் தர்மர். அவரது மனைவி விச்வா. அவர்களின் புதல்வர்கள் விச்வே தேவர்கள். மேருவின் தாழ்வரையிலிருந்து வீழிக்காடு வந்து தவமிருந்தனர். தக்ஷனின் பெண்ணான அதிதியிடம் பிறந்தவர் வஸு (8)ருத்திரர் (11)ஆதித்யர் (12)எனமூன்று கணங்கள். விசுவேதேவர்கள் தவமிருக்குமிடத்திற்கு அவர்கள் வந்தனர். விசுவேதேவர் அவர்களை உபசரித்து புத்திரர்களே என அழைத்தனர். வஸு முதலானவர் கோபம் கொண்டு நாங்கள் எவ்வாறு உமக்கு புதல்வராவோம். நீங்கள் தந்தையாவது எப்படி? எனக்கூறி விளக்கம் பெற பிரும்மாவிடம் சென்று விளக்கம் கேட்டனர். *(26-38)*

विवादमखिलन्तेषामाकर्ण्य कमलासनः ।
सर्वसन्देहनिर्णेता तानुवाचेति सादरम् ॥ ३९

ये पूर्वं मनसो जातास्सर्वानुग्रहतत्पराः ।
ज्यायांसस्सर्वभूतानामिमे वै नात्र संशयः ॥ ४०

किन्तु यूयन्तु तपसा ज्यायांसः समुपागताः ।
तस्मात्तैः सह वर्तध्वं विश्वेदेवा ममाज्ञया ॥ ४१

पुत्रका इति यद्यूयं तैराहूता महात्मभिः ।
तस्मात्ते सर्वभूतानां भवन्तु पितरोऽर्चिताः ॥ ४२

पितृसंज्ञां प्रयास्यन्ति लोकपूजां च शाश्वतीम् ।
यत्र यत्र च तत्पूजा भवेल्लोकेषु शाश्वती ॥ ४३

अग्रांशभोगिनो यूयं तेभ्यो नूनं भविष्यथ ।
पितॄनुद्दिश्य ये कव्यं दास्यन्ति च यथाक्रमम् ॥ ४४

युष्मान्विना सुरश्रेष्ठास्तेषान्तन्निष्फलं भवेत् ।
वसुरुद्रादित्यरूपा द्वन्द्वशः पितरस्तथा ॥ ४५

यूयमग्रेसरास्तेषां विष्णुः पश्चातु रक्षकः ।
विष्णुं विना यदि कृतं तच्छ्राद्धं निष्फलं भवेत् ॥ ४६

इत्यादिष्टा विरिञ्चिेन सुप्रीतास्ते परस्परम् ।
विश्वेदेवाश्च पितरो जग्मुरेव यथागतम् ॥ ४७

पिता पितामहश्चैव तथैव प्रपितामहः ।
पिण्डसम्बन्धिनो ह्येते विज्ञेयाः पुरुषाः स्त्रियः ॥ ४८

लेपसम्बन्धिश्चान्ये पितामहपितामहात् ।
प्रभृत्युक्तास्ततस्तेषां यजमानश्च सप्तमः ॥ ४९

सपिण्डास्सप्त पुरुषास्ततस्सप्त च सोदकाः ।

இதனைக் கேட்ட பிரும்மா ஸமாதானம் கூறினார். என் மனத்தில் தோன்றிய பித்ருக்கள் இனிப்பிறக்க விருக்கிற மக்களின் முன்னோர்கள். நீங்களோ தவத்தால் உயர்நிலை பெற்றவர்கள். விச்வே தேவர்களும் உங்களை புதல்வர்களே என அழைத்ததால் அவர்களும் பித்ருக்கள் என்ற நிலைபெறட்டும். மக்களும் அவர்களைப் பித்ருக்களுடன் உபசரிக்கட்டும். பித்ருபூஜை நடக்குமிடத்தில் விசுவேதேவர்களை முதலில் மக்கள் உபசரிப்பர். பித்ருபூஜையில் உங்களை உபசரிப்பது மிகஅவசியம். பித்ருக்கள் வஸு - ருத்ரர் - ஆதித்யர் என்ற மூன்று வர்க்கத்தில் அடங்குவர். விசுவேதேவரை முதலிலும் உங்களை முக்கியமாகவும் சிராத்தத்தைக் காப்பாற்றுகிற விஷ்ணுவுடன் வழிபடுவர். அந்த விஷ்ணு வழிபாடின்றி சிராத்தம் வீண். தந்தை, தந்தையின் தந்தை அவரது தந்தை (பிதா, பிதாமஹர், பிர

*பிதாமஹர்) என மூவரும் வஸு ருத்ர ஆதித்ய வடிவினர். அவ்வழியிலுள்ள ஆண்களும் பெண்களும் பிண்டத் தொடர்புள்ளவர்கள். பிதாமஹரின் பிதாமஹரிடமிருந்து மேலுள்ள மூவருக்கு லேபஸம்பந்தமுண்டு. யஜமானரை ஏழாமவராகக் கொண்டு முன்னுள்ள அறுவர் ஸபிண்டர், ஸோதகர் எனப்படுவர். (39-49)*

श्राद्धभेदं प्रवक्ष्यामि शृणुध्वं मुनिसत्तमाः ॥ ५०

नित्यं नैमित्तिकं काम्यं वृद्धिश्राद्धं सपिण्डकम् ।
पार्वणश्चेति विज्ञेयं गोष्ठीशुद्ध्यर्थमष्टकम् ॥ ५१

कर्माङ्गं नवमं प्रोक्तं दैविकं दशमं स्मृतम् ।
यात्रास्वेकादशं प्रोक्तं पुष्ट्यर्थं द्वादशं स्मृतम् ॥ ५२

अहन्यहनि यच्छ्राद्धं तन्नित्यमिति कीर्तितम् ।
एकोद्दिष्टन्तु यच्छ्राद्धं तन्नैमित्तिकमुच्यते ॥ ५३

तन्नित्यश्राद्धवत्कुर्यात् द्वादश्यादिषु यत्नतः ।
श्राद्धे पञ्चविधे प्रोक्ते विश्वेदेवा दशामराः ॥ ५४

द्वौ द्वौ तेषु क्रमाद्योज्यौ पितृभिस्सह भक्तितः ।
क्रतुर्दक्षो वसुस्सत्यः काम्यः कालो धुरी रुचिः ॥ ५५

पुरूरवार्द्रवाश्चैते विज्ञेया दश सूनवः ।
श्राद्धे नैमित्तिके राजन्क्रतुदक्षौ नियोजयेत् ॥ ५६

अष्टकायां काम्यकालौ श्राद्धे नान्दीमुखे तथा ।
वसुसत्यौ काम्यके च समुद्दिष्टौ रुचिर्धुरिः ॥ ५७

पुरूरवार्द्रवश्चैतौ पार्वणेषु नियोजयेत् ।

पितुः पुत्रेण कर्तव्या पिण्डदानोदकक्रिया ॥ ५८

पुत्राभावे तु पत्नी स्यात्पत्न्यभावे तु सोदरः ।
दौहित्रोऽथ प्रपौत्रो वा दद्याच्च भ्रातृसन्ततिः ॥ ५९

स्त्रीहारी धनहारी च कुर्यात् पिण्डोदकक्रियाम् ।
बन्धुः शिष्योऽथवा कुर्यात्कुर्युः सब्रह्मचारिणः ॥ ६०

सर्वाभावे तु नृपतिः कारयेत्स्वकुटुम्बवत् ।
यस्तु संस्कारकर्ता स्यात् स दशाहं समापयेत् ॥ ६१

ऊर्ध्वं च ज्ञातयः कुर्युः स्वसूतकनिवृत्तये ॥
तथैव नृपतेः कुर्युः भृत्या ऋत्विक्पुरोहितः ॥ ६२

तेषान्तु पञ्चमांशःस्यादर्थमात्रस्य न क्षितेः ।
क्षात्रं विधानमेतद्धि द्विजातीनाञ्च विद्यते ॥ ६३

சிராத்தம் பலவகைப்படும். நித்யம், நைமித்திகம், காம்யம், விருத்தி சிராத்தம், ஸபிண்ட சிராத்தம், பார்வணம் கோஷ்டி சுத்தி சிராத்தம், கர்மாங்கம், தைவிகம், யாத்ரா சிராத்தம் புஷ்டிசிராத்தம் என. அன்றாடம் செய்வது ''நித்யம்'' திரிபுருஷரின்றி தனிப்பட்டு மரித்தவருக்கு மட்டும் செய்வது ஏகோத்திஷ்டம் என்ற நைமித்திகம், நித்ய சிராத்தம் போன்றதே இது. பன்னிரண்டாம் திதியில் செய்யப்படும். விசுவேதேவர் பத்து தேவர்களாவரர், இருவரிருவராக ஐந்து சிராத்தங்களில் அழைக்கப்படுகின்றனர். கிரது - தக்ஷர் என இருவர் நைமித்திக சிராத்தத்தில் உபசரிக்கப் பெறுவர். அஷ்டகாவில் காமியரும் காலரும். நாந்தீ முக சிராத்தத்தில் வஸுவும் ஸத்யரும். காமியத்தில் ருசி - துரி. பார்வணத்தில் புரூரவர் ஆர்த்ரவர். தந்தைக்கு மகனே பிண்டதானமும் உதகதானமும் செய்வர். மகனில்லையேல், மனைவி, மனைவி இல்லாவிடில்

உடன்பிறந்தவன், பெண்ணின் மகன், புத்திரனின் பேரன், ஸகோதரரின் ஸந்ததியினர் என்று ஈமக்கடனிலும் மற்ற பித்ருகர்மங்களிலும் உரிமை பெறுகின்றனர். பெண்ணை மணந்தவனும், சொத்தை எடுத்துக் கொண்டவனும் உறவினரும் சிஷ்யரும் கூடப்படித்தவரும் வரிசையில் வருவர். வேறெவரும் இல்லாதவனுக்கு அரசனே கருமம் செய்வான். ஈமக்கடனைத் தொடங்கியவன் தொடர்ந்து பத்து நாட்களில் கருமங்களைச் செய்வான். ஜ்ஞாதிகள் தம் தீட்டுகழிகிறவரை கூட உதவுவர். அரசனும் ஸந்ததியற்றவனுயின் பணியாளர்கள், வேள்விகளில் உதவுகிற ருத்விக்குகள் புரோஹிதர்கள் கருமம் செய்வர். அவர்களுக்கு ராஜ்யத்தைத் தவிர மற்ற சொத்தில் ஐந்தில் ஒருபங்கு உண்டு. இது க்ஷத்திரியர்களுக்கு மட்டுமே. அந்தணர்களுக்கல்ல. *(50-63)*

अमावास्याष्टका वृद्धिः कृष्णपक्षोऽयनद्वयम् ।
द्रव्यब्राह्मणसम्पत्तिर्विषुवौ सूर्यसङ्क्रमः ॥ ६४

व्यतीपातो गजच्छाया ग्रहणं चन्द्रसूर्ययोः ।
श्राद्धं प्रति रुचिश्चैव श्राद्धकालाः प्रकीर्तिताः ॥ ६५

स्वक्षेत्रे स्वगृहे विष्णुमन्दिरे वा विशाम्पतेः ।
नदीसमुद्रतीरे वा सालग्रामशिलान्तिके ॥ ६६

पुष्करे वा कुरुक्षेत्रे प्रयागे नैमिशेऽपि वा ।
सालग्रामे च गोकर्णे गङ्गातीरे विशेषतः ॥ ६७

तेजिनीवनतीर्थेषु श्राद्धं कुर्याच्च भक्तितः ।
श्राद्धं कर्तुमवित्तश्चेदपि दद्यात्तिलोदकम् ॥ ६८

न भवेद्यस्य सामग्रीर्दारा वा गृहमेव वा ।
आमश्राद्धं प्रकुर्वीत तस्य भार्या रजस्वला ॥ ६९

तृणानि वा गवे दद्यात्पिण्डानथ विनिक्षिपेत् ।
तिलोदकैः पितॄन्वापि तर्पयेत्स्नानपूर्वकम् ॥ ७०

अग्निना वा दहेत् कक्षं महाशाकमयं तथा ।
अस्मिंश्चोपवसेद्वापि पठेद्वा श्राद्धसंहिताम् ॥ ७१

शाकमूलफलाद्यैर्वा श्राद्धं पैतृकमाचरेत् ।
सर्वाभावे वनं गत्वा कक्षमूलप्रदर्शकः ॥ ७२

सूर्यादिलोकपालानामिदमुच्चैः पठेद्वचः ।
न मेऽस्ति वित्तं न धनञ्च चान्य-च्छ्राद्धोपभोग्यं स्वपितॄन्नतोस्मि ।
तृप्यन्तु भक्त्या पितरो ममैतौ बाहू कृतौ वर्त्मनि मारुतस्य ॥ ७३

பித்ருபூஜைக்குரிய நாட்களாவன - அமாவாஸ்யை அஷ்டகா (3)கிருஷ்ணபக்ஷம், இரு அயன ஆரம்ப நாட்கள், சிராத்தத்திற்குரிய பொருள் நிறைவு, அந்தணர் அருகாமை, இரு விஷுவங்கள், ஸூரியனின் ராசிப்ரவேசம் (மாதப்பிறப்பு) வியதீபாதம், கஜச்சாயை, ஸூரிய - சந்திர கிரஹணம் சிராத்தம் செய்ய ஆர்வமுள்ள நாள் என இவை ஏற்றவை. தன் ஊரில் தன் வீட்டில், விஷ்ணு கோயிலில் அரசர்மானிய நிலத்தில் ஆற்றங்கரையில் கடற்கரையில் ஸாலக்ராம சிலை மூர்த்தியின் அருகே, புஷ்கரம், குரு க்ஷேத்திரம், பிரயாகை, நைமிசம், ஸாளக்கிராமம், கோகர்ணம், கங்கைக்கரை, தேஜினீவனத் தீர்த்தக்கரை என்ற பெருமை மிக்க ஸ்தலங்களில் சிராத்தம் செய்யலாம். சிராத்தம் செய்ய இயலாதவர் திலதர்பணம் செய்யலாம். சிராத்தத்திற்கு குரிய பொருளோ, மனைவியோ வீடோ இல்லாத இடத்திலும் ஆமசிராத்தமாகச் செய்யலாம். பசுவிற்குப்புல் பிண்டதானம், திலதர்பணம், உபவாஸம், சிராத்தப்பிரயோக முறையைக் கூறுவது, எதுவுமியலாத போது ஸூரியன் முதலிய திக்பாலர்களிடம் உரக்க வேண்டுவது, "என்னிடம் தனமோ சிராத்தத்திற்குரிய பொருளோ இல்லை. பித்ருக்களை வணங்குகிறேன். என் பக்தியைக் கொண்டு

*பித்ருக்கள் திருப்தியடையட்டும். காற்றின் பாதையில் கைகளைத் தூக்கிவேண்டுகிறேன் என. (64-73)*

जन्म पितॄणामुक्तं तुभ्यं विश्वेदेवर्षिप्रभवश्चोक्तः ।
आराध्यास्ते श्राद्धविशेषे नेत्रस्थाने तीर्थोपान्ते ॥ ७४

सनत्कुमारस्तं भूपमेवमुक्त्वा तिरोदधे ।
सपुरोधास्ततो राजा पितॄनाराधयन्मुदा ॥ ७५

श्राद्धैरनेकैस्तु पितॄंस्तर्पयानस्य भूपतेः ।
वर्षत्रये व्यतीते तु सन्तुष्टाः पितरोऽभवन् ॥ ७६

तेजिनीनगरे तस्मिन् विहिते श्राद्धकर्मभिः ।
ततोऽस्य जज्ञिरे पुत्राः धार्मिका नृपतेर्द्विजाः ॥ ७७

पुत्रजन्मभुवा राजा शशास पृथिवीं मुदा ।
तस्माच्छ्राद्धन्तु कर्तव्यं भवद्भिः पितृतृप्तये ॥ ७८

तेजिनीनगरे यस्तु सकृद्वा श्राद्धमाचरेत् ।
वंश्यास्तस्य हि मुक्ताः स्युः सप्त सप्त च सप्त च ॥ ७९

श्रद्धामपि च मेधाञ्च लिखित्वा स्थण्डिले शुभे ।
तण्डुले वा यथान्यायं श्रद्धायै नम इत्यपि ॥ ८०

मेधान्ते देवस्सविता मन्त्रेऽभ्यर्च्य स भक्तितः ।
सर्वान् कामानवाप्नोति श्रावयेदिदमादरात् ।
सर्वपापविनिर्मुक्तो ब्रह्मलोके महीयते ॥ ८१

त्रिसप्ततितमोऽध्यायः

*பித்ருக்களின் உற்பத்தி, விசுவேதேவர், வஸு - ருத்ர - ஆதித்யர் நிலை என்பதை விளக்கினேன். தீர்த்தக் கரையில்*

வழிபடுகிற முறைபற்றி விளக்கினேன் எனக்கூறி ஸனத்குமாரர் மறைந்தார். இளன் தன்புரோஹிதர்களைக் கொண்டு பித்ருக்கள் திருப்திபெற வீழிக்காட்டில் தீர்த்தக் கரையில் சிராத்தம் செய்தான். அவனுக்குப் புதல்வர்கள் பிறந்தனர். இளன் மிகவும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தான். தேஜினீ நகரத்தில் சிராத்தம் செய்பவரின் முன்பின் ஏழு ஏழுதலைமுறையினர் நல்வாழ்வு பெறுவர். அரிசிமீது சிரத்தாமேதா என்ற இருதேவிகளை ஆவாஹனம் செய்து "சிரத்தாயை நம:", "மேதாம்தே தேவஸ்ஸவிதா" என்ற மந்திரம் கூறி வழிபட விரும்பியதைப் பெறுவர். இதனைக் கூறுவதும் கேட்பதும் புண்யம் தரும். (74-82)

—★—

## चतुःसप्ततितमोऽध्यायः

सूतः—

दक्षेण निन्दिता पूर्वं सती स्वाधारवह्निना ।
परिप्लुष्टा यदा शम्भुस्तदा दक्षस्य तं क्रतुम् ॥ १

ध्वंसयित्वात्मवैधुर्यशङ्कया परमेश्वरः ।
दक्षिणामूर्तिरूपोऽसौ एकांशेन विधानतः ॥ २

सन्यासमग्रहीच्छम्भुः सर्वदेवर्षिसंसदि ।
पञ्चमुद्रोल्लसद्दण्डकाषायवसनोज्ज्वलः॥ ३

शान्तश्शशाङ्कवह्न्यर्कसदृशद्युतिरादरात् ।
तीर्थयात्रापरः सार्द्धं देवर्षिनिवहैर्भ्रमन् ॥ ४

तेजिनीविपिनं प्राप्य त्रिमूर्तिपरिवेष्टितम् ।
हरिश्रुतानदीतीरे यज्ञवाटे स्वयम्भुवः ॥ ५

यत्राविरभवल्लिङ्गं पूर्वं पश्चिमदिङ्मुखः ।
तत्राश्रमं कल्पयित्वा चातुर्मास्यव्रतं व्यधात् ॥ ६

''அத்தியாயம்'' - 74

*தக்ஷன் ஸதீதேவியை அவமதித்தான். தன் மூலாதாரத்திலிருந்து யோகத்தீயில் ஸதீதேவி சாம்பலானாள். சிவன் தக்ஷனின் வேள்வியை அழித்ததும் தனக்கு மனைவியில்லா நிலையைப் பற்றி வருந்தி தனிமையில் தக்ஷிணாமூர்த்தி வடிவில் தேவருக்கும் ருஷிகளுக்கும் முன்னே துறவேற்றார். துறவின் ஐந்து அடையாளங்களுடன் தண்டம், காவியுடை தரித்து அமைதியுற்று, சந்திர அக்னி ஸூர்ய ஒளி கொண்டவராக தீர்த்தயாத்திரை செய்தார். மும்மூர்த்திகளும் தங்கிதவம் செய்யுமிடமாகிய தேஜினீ வனம் வந்தார். ஹரி நதியின் கரையில் பிரும்மாவின் வேள்விச் சாலையில் மேற்கு முகமாக லிங்கம் தோன்றிய இடத்தில் ஆசிரமமமைத்து துறவிக்கான சாதுர்மாஸ்ய விரதமிருந்தார். (1-6)*

शुद्धसत्वाश्च यतयो जैगीषव्यादयस्तथा ।
अन्ववर्तन्त धर्मात्माचारशुश्रूषया मतिम् ॥ ७

शम्भोः परमहंसस्य मन्त्रं ब्रह्माऽथ योगिनाम् ।
उपादिशद्यथान्यायं सऋषिच्छन्ददैवतम् ॥ ८

पश्चिमाभिमुखश्चाविमुक्तेशस्य हि सन्निधौ ।
यद्वेदा इति संमन्त्रं जैगीषव्यादियोगिनाम् ॥ ९

मनोश्च दक्षिणामूर्तेर्यतेर्वश्यात्मनः प्रभोः ।
अन्तर्यामी ऋषिश्चैव च्छन्दोऽनुष्टुप् सदाशिवः ॥ १०

एकश्च देवता साक्षात् परिपूर्ण उदाहृतः ।
मोक्षार्थे प्रणवे बीजं विनियोग उदाहृतः ॥ ११

यद्वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः ।
तस्य प्रकृतिलीनस्य यः परः स महेश्वरः ॥ १२

कुर्यादनेन मन्त्रेण षडङ्गन्यासमादितः ।
दण्डं दधानं धृतपञ्चमुद्रं अंसार्पितां पुष्पमयीं च मालाम् ।
सच्चिन्मयं दक्षिणपाणिमुद्रां श्रीदक्षिणामूर्तियतिं स्मरामि ॥ १३

इति ध्यात्वा जपेन्मन्त्रं इममानुष्टभं द्विजाः ।
पुरुषार्थानवाप्नोति यतिसिद्धिं चतुर्विधाम् ॥ १४

*ஜைகீஷவ்யர் முதலிய சுத்தஸத்வகுணம் கொண்ட துறவிகள் இவருக்குப் பணிவிடை புரிந்து பின் தொடர்ந்தனர். சிவனது பரமஹம்ஸ மந்திரத்தை பிரும்மா உபதேசித்தார்.* யத்(யோ)வேதாதௌ ஸ்வர:ப்ரோக்தோ வேதாந்தே சப்ரதிஷ்டித: தஸ்யப்ரக்ருதி லீனஸ்ய ய: பர: ஸ மஹேசுவர: *இந்த பரமஹம்ஸ மந்திரத்திற்கு அந்தர்யாமிருஷி. அனுஷ்டுப் சந்தஸ், ஸதாசிவர் தேவதா ''மோக்ஷார்த்தே'' என விநியோகம். இந்த மந்திரத்தைக் கொண்ட ஆறுகர - அங்க நியாஸங்கள். ''தியானம்'' - 5 முத்திரைகள் கொண்டவர், தண்டமேந்தியவர். தோளில் பூமாலை, ஸத் - சித்வடிவினர், வலதுகையில் ஞானமுத்திரை காட்டுபவர். ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி என்ற இந்த யதியை நினைக்கிறேன் என. இவ்வாறு தியானித்து ஜபிப்பவர். நான்குவிதத் துறவையும் பெற்று அறம் பொருளின்பம் முக்தி என்ற நான்கையும் பெறுகின்றனர். (1-14)*

जैगीषव्यादियतिनां मुनीनाञ्च चतुर्मुखः ।
उपदिश्य इदं मन्त्रं वाक्यमेतदुवाच ह ॥ १५

भो भो यतीश्वरा योगिश्रेष्ठाश्च मुनिपुङ्गवाः ।
बहूनां खलु योगोऽयं युष्माकं दुर्लभः क्वचित् ॥ १६

पुण्यो मे यज्ञवाटो मे प्राप्तः स्थलमनुत्तमम् ।
पश्चिमाभिमुखस्यायं अविमुक्तेश्वरस्य हि ॥ १७

सन्निधिश्चापि सम्प्राप्तः सर्वेषां सिद्धिदायकः ।
अयं भाग्यवशादेष दक्षिणामूर्तिरव्ययः ॥ १८

संन्यासरूपमाश्रित्य सन्निधत्ते कृपानिधिः ।
हिमाद्रेः कन्यकां यावदयं न परिणेष्यति ॥ १९

तावद्भक्त्या समाराध्य सर्वज्ञं तं यतीश्वरम् ।
वर्णाश्रमाचारधर्मान् स्वर्गदान्मोक्षदायिनः ॥ २०

ज्ञानसिद्धेरुपायांश्च शृणुध्वं स्वच्छतेजसः ।
कर्तव्या च गुरौ भक्तिः तन्माहात्म्यं वदामि वः ॥ २१

*பிரும்மா ஜைகீஷ்வ்யர் முதலிய முனிவருக்கு இந்த மந்திரத்தை உபதேசித்தார். "ருஷிகளே! எனது வேள்விச்சாலை புனிதமாயிற்று. நீங்கள் பெறற்கரியபேற்றைப் பெற்றுள்ளீர். மேற்கு நோக்கியுள்ள அவிமுக்தேசனின் ஸந்நிதியே ஸித்திகளனைத்தையும் தரவல்லது. நம்பாக்கியத்தால் தக்ஷிணாமூர்த்தி இங்கு துறவியாகக் காட்சி தருகிறார். இமவானின் மகளை மணம் புரியும் வரை இவ்வாறிருப்பார். எல்லாமறிந்த இந்த துறவரசரிடம் வர்ண - ஆசிரம - ஆசாரதர்மங்களைக் கேட்டறிவீர். குருவிடம் பக்தி மிகவும் அவசியம். அதன் பெருமையை விளக்குகிறேன். (15-21)*

हिताहितोपदेष्टा च संसारोद्धारको गुरुः ।
भक्त्या संपूजितो विप्राः भुक्तिमुक्तिं प्रयच्छति ॥ २२

ललाटलोचनश्चन्द्रकलामपि चतुर्भुजम् ।
अन्तर्धाय चरत्यत्र गुरुरूपो महेश्वरः ॥ २३

अत्रिनेत्रः शिवः साक्षादचतुर्बाहुरच्युतः ।
अचतुर्वदनो ब्रह्मा गुरुरुक्तो मुनीश्वराः ॥ २४

देशिकाकृतिमास्थाय पशोः पाशानशेषतः ।
छित्वा परं पदं देवो नयत्येनमिति श्रुतिः ॥ २५

यथा घटश्च कलशः कुम्भश्चैकार्थवाचकः ।
तथा देवश्च मन्त्रश्च गुरुश्चैकार्थ उच्यते ॥ २६

शिवरूपं समादाय पूजां गृह्णाति वै द्विजाः ।
गुरुरूपं समादाय पशुपाशं निकृन्तति ॥ २७

गुरवो बहवस्सन्ति स्वात्मनोऽन्यप्रदा भुवि ।
दुर्लभो हि मुनिश्रेष्ठा लोके स्वात्मप्रदो गुरुः ॥ २८

*குரு இதத்தைச் சுட்டிக் காட்டுபவர். ஸம்ஸாரக் கடலைக் கடக்கச் செய்பவர், பக்தியுடன் இவரை வழிபட இம்மையில் இன்பத்தையும் முக்தியையும் வழங்குபவர். நெற்றிக் கண்ணையும் சந்திரகலையையும் நான்கு கைகளையும் மறைத்து, குருவாகக் காட்சி தருகிறார். இவர் முக்கண்ணரல்லாத சிவன், நான்கு கைகள் கொள்ளாத விஷ்ணு. நான்கு முகங்கள் ஏற்காத பிரும்மா. வழிகாட்டியாகக் தோன்றி, பசு - பாச நிலைகளை அகற்றி பெருநிலைக்கு அழைத்துச் செல்பவர் என வேதம் கூறும். கடம், கலசம், கும்பம் என்பது குடத்தைக் குறிப்பிடுகிற மூன்று சொற்கள். அவற்றின் பொருள் ஒன்றே. தேவர் மந்திரம் குரு என்றும் அதுபோல் ஒன்றே. (மந்திரத்தின் தேவதையும் மந்திரமும் அதனை உபதேசிக்கிற குருவும் ஒன்றே) சிவன் என்ற வடிவில் பூஜையை ஏற்பவரும் குருவாகிப் பசுநிலை அகற்றிப் பாசத்தை நீக்குபவரும் ஒருவரே. இம்மைக்கான உலகிலுள்ள பொருளை வழங்குகிற பலகுருக்கள் உண்டு. முக்திக்கான ஆத்மாவை உணரச் செய்கிற குரு அரிதானவர். (22-28)*

यथा वह्निसमीपस्थं नवनीतं विलीयते ।
तथा पापं विलीयते सदाचार्यसमीपतः ॥ २९

दीपदर्शनमात्रेण प्रणश्यति यथा तमः ।
सद्गुरोर्दर्शनादेव तथाऽज्ञानं विनश्यति ॥ ३०

गुप्तप्रकटसम्भूतं ज्ञानाज्ञानकृतं द्विजाः ।
एवमादिषु पापेषु प्रायश्चित्तं गुरोः स्मृतिः ॥ ३१

अथवा सर्वपापानां गुरुनामजपः स्मृतः ।
मन्त्रिदोषश्च राजानं जायादोषः पतिं यथा ॥ ३२

तथा प्राप्नोत्यसन्देहः शिष्यपापं गुरुं द्विजाः ।
गुरुस्त्रिवारमाचारं कथयेत मुनीश्वराः ॥ ३३

न प्रगृह्णाति शिष्यश्चेत्तथा पापं गुरोर्नहि ।
गुरूपचारहीनस्य तपोविद्यावृतं कुलम् ॥ ३४

मृतस्येव मुनिश्रेष्ठाः भूषणं समुदाहृतम् ।
गुरुशुश्रूषया यद्वत् प्राप्यन्ते सर्वसिद्धयः ॥ ३५

यज्ञदानतपस्तीर्थव्रताद्यैर्न तथा द्विजाः ।

*நெருப்பு அருகிலுள்ள வெண்ணெய்யை உருகச் செய்வது போல், ஆசாரியரின் அருகே பாபம் தானே கரைந்து அகலும். தீபஒளி கண்டதும் இருட்டு அழிவது போல் குருவைக் கண்டதும் அறியாமை மறைகிறது. தனிமையிலும் பிறரறியவும் செய்த பாபத்திற்குள்ள ஒரு கழுவாய் குருவின் நினைவே. குருநாம ஜபம் பாபங்களை நீக்க வல்லது. மந்திரியின் பாபம் அரசனைச் சாரும். மனைவியின் பாபம் கணவனையும் சிஷ்யனின் பாபம் குருவையும் சாரும். குரு மூன்று தடவை நடைமுறையை விளக்கிய பின்னரும் சிஷ்யன் அதனைப்பின்பற்றாதிருந்தால் சிஷ்யனின் பாபம் சிஷ்யனையே சாரும். குருவைச் சாராது குருவை உபசரியாதவனது தவமும் கல்வியும் விரதமும் குலமும் பிணத்தின் அலங்காரம் போன்றது. வேள்வியும் தானமும் தவமும் தீர்த்த யாத்திரையும் விரதம் முதலியவையும் தரஇயலாத மேன்மையை குருவை உபசரிப்பதால் பெறலாம். (29-35)*

गुरौ मनुष्यबुद्धिं च मन्त्रे वाक्षरबुद्धिताम् ॥ ३६

प्रतिमासु शिलाबुद्धिं वितन्वन् नरकं व्रजेत् ।
शिवे रुष्टे गुरुस्त्राता गुरौ रुष्टे न कोऽपि च ॥ ३७

शुश्रूषाथ गुरोः कार्या कायेन मनसा गिरा ।
वित्तं शरीरं प्राणांश्च श्रीगुरोर्वञ्चयन्ति ये ॥ ३८

क्रिमिकीटपतङ्गत्वान्याप्नुवन्ति न संशयः ।
गुरुकोपान्न शापोऽन्यः गुरुद्रोहान्न पातकम् ॥ ३९

न मृतिर्गुरुनिन्दाया गुर्वनिष्टान्न चापदः ।
तस्मात् कायेन मनसा गुरुं शुश्रूषयेद् द्विजाः ॥ ४०

मानुषस्यापि च गुरोरेव कार्या समर्चना ।
किमु वक्तव्यमेतस्मिन् गुरौ साक्षान्महेश्वरे ॥ ४१

तस्मात् सर्वं रहस्यञ्च शृणुतास्मान्महेश्वरात् ।
इत्युक्त्वाऽन्तरधाद्ब्रह्मा जैगीषव्यादयस्तथा ॥ ४२

குருவை மனிதராக மந்திரத்தை எழுத்தாக விக்ரஹத்தைச் சிலையாகக் கருதுபவன் நரகம் செல்வான். சிவன் கோபம் கொண்டால் குரு காப்பாற்றுவார். குரு கோபித்தால் காப்பவர் எவருமில்லை. அதனால் உடலாலும் உள்ளத்தாலும் சொல்லாலும் குருவிற்குப் பணிவிடை செய்வர். ஸ்ரீ குருவின் உடலுக்கும் உயிருக்கும் உடமைக்கும் ஊறுவிளைவிப்பவன் புழுவாக பூச்சியாகப் பிறப்பான். குருவின் சாபத்தை விஞ்சிய சாபமில்லை. குரு துரோகத்தை விடப்பெரும் பாபமில்லை. குருவை நிந்திப்பதை விட அழிவு வேறில்லை. குருவிற்கு விருப்ப மற்றதைச் செய்வதை விடக்கேடு வேறில்லை. குரு மனிதனாக இருக்கையிலே இது அத்தனையும் பொருந்தும். இங்கே மகேசனே குருவாகி நிற்கிறார். அதனால் கற்றறிவதற்குள்ளதனைத்தையும் இவரிடம் கேட்டறிவீர் எனக் கூறி பிரும்மா மறைந்தார். (36-42)

प्रणम्य दक्षिणामूर्तिमयाचन्त यतीश्वरम् ।
वर्णाश्रमाचारधर्मानुपदिश्य ततः परम् ॥ ४३

मोक्षोपायिकविज्ञानसिद्ध्यै तत्वं परात्परम् ।
अधुनोपदिशास्माकमित्यूचुर्भक्तिभाविताः ॥ ४४

तदाकर्ण्य दयामूर्तिर्दक्षिणामूर्तिरव्ययः ।
मुख्यः परमहंसानां वक्तुं समुपचक्रमे ॥ ४५

*தக்ஷிணாமூர்த்தியை - துறவி வேஷத்திலுள்ளவரை வணங்கி, ஜைகீஷவ்யர் முதலானோர், வர்ணம் ஆசிரமம் அதற்கேற்ற நடைமுறை தர்மம் முக்திக்கு உபாயமான பரதத்துவம் என அனைத்தையும் உபதேசிக்க வேண்டினர். பரமஹம்ஸர்களில் சிறந்த தக்ஷிணாமூர்த்தி உபதேசித்தார். (43-45)*

यतीश्वरः—

क्षत्रियस्तु स्थितो राज्ये स्वधर्मं परिपालयेत् ।
सम्यक् प्रजाः पालयिता स्वधर्मनिरतः सदा ॥ ४६

यज्ञदानरतो धीरः स्वदारनिरतः शुचिः ।
शास्त्रास्त्रसर्वधर्मज्ञः प्रजाकार्यपरायणः ॥ ४७

विप्रेभ्यः कामदो नित्यं भृत्यानां भरणे रतः ।
सततं सत्यसन्धश्च डम्भलोभविवर्जितः ॥ ४८

एवं भूतः क्षत्रियोऽपि यात्येव गतिमुत्तमाम् ।
त्रिदिवे सोऽप्सरोभिश्च यक्षगन्धर्वकिन्नरैः ॥ ४९

सेव्यमानो महातेजाः क्रीडते शक्रपूजितः ।
चतुर्युगानि वै त्रिंशत् क्रीडित्वा तत्र देववत् ॥ ५०

मानुष्यके पुनर्लोके चतुर्वेदी द्विजो भवेत् ।

''தக்ஷிணாமூர்த்தியின் உபதேசம்'' க்ஷத்திரியன் அரசைக் காக்கிற உரிமை பெற்று தன் தர்மத்தைக் கடைபிடித்து மக்களை நன்கு காக்க வேண்டும். தன் தர்மம், வேள்வி, தானம் இவற்றில் நன்கு ஈடுபட்டு அறிவாற்றல் மிக்கவனாக தன் மனைவியிடத்தில் அன்புள்ளவனாக தூயநடைமுறை கொண்டவனாக சஸ்திர - அஸ்திரவித்யைகளில் தேர்ந்தவனாக மக்களின் பணிகளில் முனைந்தவனாக அந்தணர் விரும்பியதை நிறைவுறச் செய்பவனாக பணியாளரை காப்பவனாக உண்மையில் நிலைத்து நிற்பவனாக ஜம்பமும் பேராசையுமின்றி, அரசாள்பவன் தானே மேனிலை அடைவான். வானவரால் ஆனந்தமாக அழைத்துச் செல்லப்பட்டு ஸ்வர்கத்தில் இந்திரனால் பெரிதும் மதிக்கப் பெறுவான். மறுபிறவியில் சிறந்த அந்தணனாகப்பிறப்பான். (46-50)

कृषिगोपालनिरतः स्वधर्मोन्मेषणे रतः ॥ ५१

दानधर्मेष्वभिरतः विप्रशुश्रूषणोत्सुकः ।
सत्यसन्धः शुचिर्नित्यं लोभडम्भविवर्जितः ॥ ५२

वणिक्स्वर्गमवाप्नोति पूज्यमानोऽप्सरोगणैः ।
चतुर्युगानि वै त्रिंशत् क्रीडित्वा दश पञ्च च ॥ ५३

इह मानुष्यके लोके राजा भवति धार्मिकः ।

வைசியன் தன் நடைமுயைக் கட்டுப்படுத்தி கிருஷியும் கால்நடைப் பாதுகாப்பும் தொழிலாகக் கொண்டு தானம், அறப்பணி, அந்தணருக்கு உதவி, ஸத்யத்தைக் கடைபிடித்தல், தூய்மை, பேராசையும் ஜம்பமுமின்மை, என நடைமுறை கொண்டு மேனிலை பெற்று வானவருடன் மகிழ்ந்து மறுபடிமனிதனாகப் பிறந்து அரசனாவான். (51-54)

त्रयाणामपि वर्णानां शुश्रूषानिरतः सदा ॥ ५४

विशेषेण तु विप्राणां दासवद्यश्च वर्तते ।
अयाचितप्रदाता च सत्यशौचसमन्वितः ॥ ५५

गुरुदेवार्चनरतः परदारपराङ्मुखः ।
परपीडासु विमुखो भृत्यवर्गं बिभर्ति यः ॥ ५६

शूद्रोऽपि स्वर्गमाप्नोति प्राणिनामभयप्रदः ।
स स्वर्गलोके क्रीडित्वा वर्षकोटी महातपाः ॥ ५७

इह लाके धर्मपरो वैश्यो धनपतिर्भवेत् ।

*மூவர்ணத்தினருக்கும் உதவுவது அந்தணருக்குப் பணிவிடை வேண்டாமலே வழங்குவது, உண்மை, தூய்மை, குருஸேவை, தெய்வப்பணி, பிறர்மனை நோக்காமை, பிறருக்குக் கேடு விளைவிக்காமை என நற்பண்புகளையே வாழும் முறையாகக் கொண்டு வாழ்ந்தவன் மேனிலை பெற்று வானவரால் பெரிதும் மதிக்கப்பெற்று மறுபிறவியில் மிகப்பெருந்தனிகனுகப் பிறப்பான். (55-57)*

एवं धर्मात् परन्नास्ति महत्संसारमोक्षणम् ॥ ५८

न च धर्मात् परं किञ्चित् पापकर्मव्यपोहनम् ।
तस्माद्धर्मस्सदा कार्यो मानुष्यं प्राप्य दुर्लभम् ॥ ५९

विगुणोऽपि स्वधर्मस्तु पापकर्म व्यपोहति ।
सर्वैश्च ब्राह्मणाः पूज्याः शिवो यैस्तु प्रपूज्यते ॥ ६०

*தர்மத்தை விடச் சிறந்தது ஏதுமில்லை. மனிதனுகப் பிறந்தவன் தன் தன் தர்மத்தைக் கடைபிடிக்க வேண்டும். ஸமுதாயத்தில் பெருமை பெறாதிருந்தாலும் அவரவரது கடமை அவரவருக்குப் பெருஞ்சிறப்பைத் தரும். சிவபூஜை செய்கிற அந்தணர் அனைவரது நன்மதிப்பிற்கும் உரியவர். (58-60)*

नित्यं स्वाध्यायशीलाश्च पूजयन्त्यतिथींश्च ये ।
डम्भानृतविमुक्ताश्च स्वदारनिरताः सदा ॥ ६१

पञ्चयज्ञरताश्चैव येऽग्निहोत्रमुपासते ।
नष्टदुष्कृतकर्माणो ब्रह्मलोकं व्रजन्ति ते ॥ ६२

ब्रह्मचारी गृहस्थश्च वानप्रस्थो यतिस्तथा ।
इत्याश्रमैश्चतुर्भिस्ते बहुमान्या द्विजोत्तमाः ॥ ६३

रुद्राक्षमालाभरणस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः ।
कट्यां मौञ्जीं करे दण्डं पालाशं वक्षसि स्फुटम् ॥ ६४

कृष्णाजिनं वहन्नित्यं स्वधर्मनिरतः शुचिः ।
समिदाहुतिभिः सायं प्रातरग्निं समर्चयन् ॥ ६५

स्वाध्यायनिरतो नित्यं भिक्षान्नैः पूरितोदरः ।
गुरुशुश्रूषणरतः तन्नियोगप्रवर्तकः ॥ ६६

एवं भूतो ब्रह्मचारी प्राप्नोति गतिमुत्तमाम् ।

*தினமும் வேதம் ஓதுபவர், அதிதியை வழிபடுபவர் ஐம்பமும், பொய்யும் விலக்கியவர். தன் மனைவியிடம் மட்டும் விருப்பமுள்ளவர், பஞ்சயஜ்ஞம் (தேவ - ருஷி - பித்ரு - மனுஷ்ய - பூதயஜ்ஞங்கள்) அக்னி ஹோத்ரம், பாபம் குறைய உழைப்பவர், இவ்வாறு வாழ்கிற அந்தணர் பிரும்மலோகம் செல்வர். பிரும்மசாரி கிருஹஸ்தர், வான பிரஸ்தார் துறவி என நான்கு ஆசிரமநிலைகளில் ஒன்றில் நிலை தேவை. இவர்களில் பிரும்மசாரியானவர் ருத்திராக்ஷ மணிந்தவர், விபூதி பூசியவர், இடுப்பில் முஞ்சைப்புல்லான கயிறு, கையில் புரசந்தண்டம், மார்பில் மான் தோலாடை, தினம் காலை, மாலை அக்கினி வழிபாடு, வேதம் ஓதி அதன் பொருள் காணுதல், பிக்ஷை எடுத்த உணவைக் கொள்ளுதல், குருவிற்குப் பணிவிடை, குருவின் ஆணைக்கு அடங்கி நடத்தல் என்ற நடைமுறையைக் கொண்டு மேனிலை பெறுவான். (61-66)*

ऋषयः—

स्वामिन् यतिप्रवेकानामपि च ब्रह्मचारिणाम् ॥ ६७

गृहस्थाश्रम एवायमुपजीव्यो महत्तरः ।
अयमाचारसम्पन्नोऽनाचारोऽयमिति स्फुटम् ॥ ६८

वेत्तुं तदाश्रमे धर्म उपदेष्टव्य एव नः ।
किं वा दैनन्दिनं कृत्यं ब्राह्मणस्य वदाद्य नः ॥ ६९

इत्युक्तो दक्षिणामूर्तिर्यतिरूपी मुनीन् प्रति ।
ब्राह्मणस्याह्निकं वक्तुं सङ्ग्रहेणोपचक्रमे ॥ ७०

इति चतुस्सप्ततितमोऽध्यायः

*ருஷிகள் துறவரசனிடம் கேட்டனர். இல்லறத்தான் ஒருவனை பிரும்மசாரியும் துறவியும் அண்டி வாழ்கின்றனர். இவன் நன்னடைமுறை கொண்டவனா? நடைமுறை கெட்டவனா? என அறியவகை என்ன? அந்த இல்லறத்தானின் ஆசிரமநெறி முறையை விளக்குவீர் எனக்கேட்டனர். தக்ஷிணாமூர்த்தியாகிய துறவி விளக்குகிறார். (67-70)*

—★—

पञ्चसप्ततितमोऽध्यायः

यतीश्वरः—

ब्राह्मे मुहूर्ते उत्थाय धर्मार्थञ्च विचिन्तयन् ।
षोढा विभज्य रजनीं चरमांशे प्रबोधितः ॥ १

ध्यायेत देवं मनसा सर्वसम्पत्समृद्धये ।
शिरः प्रावृत्य कुर्वीत शकृन्मूत्रविसर्जनम् ॥ २

अयज्ञियैरनार्द्रैश्च तृणैस्संच्छाद्य मेदिनीम् ।
दिवा सन्ध्यासु कर्णस्थब्रह्मसूत्र उदङ्मुखः ॥ ३

कुर्यान्मूत्रपुरीषे तु रात्रौ चेद्दक्षिणामुखः ।
जलपात्रं करे धृत्वा मूत्रयेद्यदि मानवः ॥ ४

सुरासमं तज्जलं स्यादाचम्य नरकी भवेत् ।
गन्धलेपक्षयकरं शौचं कुर्यादतन्द्रितः ॥ ५

पञ्चापाने दशैकस्मिन् उभयोः सप्तमृत्तिकाः ।
उभयोः पादयोः सप्त लिङ्गे द्वे परिकीर्तिते ॥ ६

मूत्रे पुरीषे भुक्त्यन्ते तथैवान्यस्य भक्षणे ।
चतुरष्ट द्विषड्द्व्यष्ट गण्डूषैस्तु विशुध्यति ॥ ७

आसीन एव गण्डूषान्वामभागे विसर्जयेत् ।
एतच्छौचं गृहस्थानां द्विगुणं ब्रह्मचारिणाम् ॥ ८

त्रिगुणन्तु वनस्थानां यतीनान्तु चतुर्गुणम् ।
प्रक्षाल्य शौचदेशं च मुखं प्रक्षालयेत्ततः ॥ ९

त्रिः पिबेद्दक्षिणेनाम्बु द्विरोष्ठौ परिमार्जयेत् ।
अङ्गुष्ठमूलेन ततो मुखं वै समुपस्पृशेत् ॥ १०

*''அத்தியாயம்'' - 75*

*''கிருஹஸ்த தர்மம்'' - பிராம்ம முஹூர்த்தத்தில் விழித்தெழ வேண்டும். (ஸூரியன் உதிக்குமுன் உள்ள ஒருமணி நேரம் ''அருணோதயம்'' அதற்கு முன் ஒரு மணி பிராம்ம முகூர்த்தம். ஸூரியன் உதிக்கிற நேரம் காலை 5-45 மணிக்கும் 6-45 மணிக்கும் இடையில் அமையும்). (அன்றாட நேரத்தைப் பஞ்சாங்கம் மூலம் அறியலாம்) அன்றைய கடமையையும் பொருள் வசதியையும் நினைத்துக் கொள்ள வேண்டும். இரவின்*

நேரத்தை ஆறாகப்பங்கிட்டு ஆறாவது நேரத்திற்குள் எழுந்து மனத்தால் தைவத்தை வணங்கி தலையைத் துணியால் மூடி மலமூத்திர நீக்கம் செய்து வேள்விக்குப் பயன்படாதவையும் காய்ந்ததுமான புற்களால் அவ்விடத்தை மூடிவிட வேண்டும். பகலிலும் ஸந்திவேளைகளிலும் காதில் பூணூல் சுற்றி வடக்கு நோக்கி மலமூத்திர நீக்கம் செய்வர். இரவில் தெற்கு நோக்கி அமர்வர். சுத்திக்கான நீர்பாத்திரத்தைக் கையில் கொண்டு மலநீக்கம் செய்திருந்தால் அதனால் ஆசமனம் செய்யக் கூடாது. துர்மணமும் பிசுபிசுப்பும் நீங்குமாறு மலவாயில்களை அலம்பவேண்டும். நீரால் ஐந்து பத்து தடவை அலம்பிய பிறகு மண்ணால் மல - மூத்திர வாயிலையும் இருகால்களையும் 7 தடவை அலம்பவும். மலமூத்திர நீக்கத்தின் பின்னும் உண்டபின்னும் 4-8, 2-6, 2-8 தடவை அமர்ந்திருந்து நீரால் வாய் கொப்புளித்து இடதுபுறத்தில் துப்பவேண்டும். இந்த சுத்திமுறை கிருஹஸ்தருக்கு உரியது. பிரும்மசாரிக்கு இருமடங்கு. வானப்பிரஸ்தருக்கு மூன்று மடங்கு. துறவிக்கு நான்குமடங்கு செய்தல் வேண்டும். வாய்கொப்பளித்த இடத்தைச் சுத்தப்படுத்தி முகத்தை அலம்பி ஆசமனமாக, மூன்று தடவை வலதுகையால் நீர்பருகி இரண்டுதடவை உதடுகளைக் கட்டை விரலடியால் துடைத்து முகத்தைத் துடைத்துக் கொள்ள வேண்டும். *(1-10)*

अङ्गुष्ठानामिकाभ्यान्तु स्पृशेन्नेत्रद्वयं नरः ।
तर्जन्यङ्गुष्ठयोगेन स्पृशेन्नासापुटद्वयम् ॥ ११

कनिष्ठाङ्गुष्ठयोगेन श्रवणे समुपस्पृशेत् ।
सर्वासामेव योगेन हृदयन्तु तलेन वा ॥ १२

संस्पृशेद्वै शिरस्तद्वदङ्गुष्ठेनाथवा द्वयम् ।
अष्टम्याञ्च चतुर्दश्यां द्वादश्यां पातपर्वसु ॥ १३

दन्तानां काष्ठसंयोगे दहत्यासप्तमं कुलम् ।
तृणपर्णैस्सदा कुर्यादिमामेकादशीं विना ॥ १४

तयोरपि च कुर्वीत जम्बूप्लक्षाम्रपर्णकैः ।
दन्तानां धावनान्ते च त्रिराचामेद्यथा विधि ॥ १५

गोकर्णाकृतिहस्तेन माषमग्नजलं पिबेत् ।
तन्न्यूनमधिकं पीत्वा सुरापानसमं भवेत् ॥ १६

संहताङ्गुलिना तोयं गृहीत्वा दक्षिणे करे ।
मुञ्चेत्कनिष्ठाकाङ्गुष्ठे इत्येवाचमनं स्मृतम् ॥ १७

*கட்டைவிரலுடன் பவித்ரவிரல் சேர்த்து இருகண்களையும் கட்டைவிரலுடன் ஆட்காட்டிவிரல் சேர்த்து இருமூக்குபுறங்களையும், கட்டைவிரலுடன் சுண்டுவிரல் சேர்த்து இரு காதுகளையும், எல்லாவிரல்களையும் கூட்டி இதயத்தையும் உள்ளங்கையாலோ, கட்டை விரலாலோ தலையையும் தொடவேண்டும். அஷ்டமி, சதுர்தசி, துவாதசி, வியதீபாதம், பௌர்ணமி, அமாவாஸை இந்நாட்களில் குச்சியால் பல்துலக்கக் கூடாது. பித்ருக்களுக்கு கெடுதல். (எங்கேனும் குத்தி ரத்தக்கசிவு ஏற்பட்டால் பித்ருக்கள் அதனை வெறுப்பார்கள். இவை பித்ருக்களுக்கு உகந்த நாட்கள்) புல் அல்லது இளந்துளிரால் இந்நாட்களில் பல்துலக்கலாம். அமாவாஸ்யையிலும் ஏகாதசியிலும் இதுவும் தவிர்க்கத்தக்கது. நாவல் இத்தி மா இவற்றின் இலை கொண்டு பற்களைத் தேய்க்கலாம். பற்களைத் துலக்கியதும் மூன்று தடவை முறைப்படி ஆசமனம் செய்யவும். உள்ளங்கையை மாட்டின் காதுபோல் குவித்து அதில் ஓர் உளுந்து முழுகுமளவு நீர் எடுத்து ஆசமனம் செய்யவும். அதிகமும் குறைந்த அளவும் ஏற்கத்தக்கதல்ல. ஆசமனத்தில் அதிகம் பருகுவது குடியை ஒத்தது. வலது உள்ளங்கையைக் குவித்து நீர் எடுத்து சுண்டுவிரலையும், கட்டைவிரலையும் விலக்கி நீரை ஏற்பதே ஆசமனம். (11-17)*

अस्नातस्तु पुमान्नार्हः जपहोमादिकर्मसु ।
प्रातर्मध्याह्नयोः स्नानं वानप्रस्थगृहस्थयोः ॥ १८

यतेस्त्रिषवणं स्नानं सकृच्च ब्रह्मचारिणाम् ।
सर्वे वापि सकृत्कुर्युः अशक्तौ चोदकं विना ॥ १९

सङ्कल्पं सूक्तपठनं मार्जनन्त्वघमर्षणम् ।
देवतातर्पणश्चैव स्नानं पञ्चाङ्गलक्षणम् ॥ २०

स्नात्वाऽथाब्लिङ्गकैर्मन्त्रैर्मार्जयित्वा स्वमूर्द्धनि ।
अन्तश्चरसि भूतेषु गुहायां विश्वतोमुखः ॥ २१

त्वं यज्ञस्त्वं वषट्कार आपो ज्योती रसोऽमृतम् ।
इत्युच्चार्य जलं प्राश्य द्विराचम्याभिमन्त्रयेत् ॥ २२

आपो वा इदं सर्वमितिमन्त्रेण वाग्यतः ।
चतुरश्रं लिखित्वा च गङ्गे चेति मनुं पठेत् ॥ २३

तीर्थमावाह्य तन्मग्नस्त्रिः पठेदघमर्षणम् ।
देवर्षितर्पणं कृत्वा यक्ष्माणं तर्पयेत्तटे ॥ २४

यन्मया दूषितं तोयं शारीरमलसंयुतम् ।
तस्य पापापहाराय यक्ष्माणं तर्पयाम्यहम् ॥ २५

स्रोतसोऽभिमुखः स्नायान्मार्जने चाघमर्षणे ।
अन्यत्रार्कमुखो रात्रौ प्राङ्मुखोऽग्निमुखोऽपि वा ॥ २६

*நீராடாமல் ஜபமோ ஹோமமோ மற்ற புனிதப்பணியோ செய்யத்தகுதி இல்லை. வானப்பிரஸ்தனும் கிருஹஸ்தனும் விடியற்காலையிலும் நடுப்பகலிலும் நீராடவேண்டும். துறவிக்கு மூன்றுவேளை நீராடலும் பிரும்மசாரிக்கு காலையில் நீராடலும் உண்டு. நீராடச் சக்தியற்றவன் ஒரு தடவையாவது நீராடவேண்டும். நீராட ஸங்கல்பம் ஸுக்தம் சொல்வது. புரோக்ஷணம் (நீரைத் தெளித்துக் கொள்வது), அகமர்ஷணம் (பாபத்தைப் பொறுத்தருளவேண்டுவது) தேவதாதர்ப்பணம் என*

*நீராடல் ஐந்து செய்முறைகள் கொண்டது. நீரிலுள்ள தேவதாசக்தியை வேண்டுகிற அப்லிங்கமந்திரங்கள் கூறி நீராடித் தலையில் நீர்தெளித்து "அந்தச்சரஸி" "ரஸோऽம்ருதம்" என்ற மந்திரம் கூறி நீர்பருகி இருதடவை ஆசமனம் செய்து "ஆபோவாஇதம் ஸர்வம்" என மந்தரம் கூறி ஜலத்தில் சதுரமாக வரைந்து அதில் "கங்கேச" என்ற மந்திரம் கூறி புண்ய தீர்த்த ஆவாஹனம் செய்து மூன்று தடவை நீரில் மூழ்கி "அகமர்ஷணஸூக்தம்" படித்து தேவ - ருஷி - பித்ருதர்ப்பணம் செய்து கரையில் யக்ஷ்ம தேவதைக்கு உடலழுக்கால் தூய நீரை அழுக்கு நீராக்கிய பாபம் நீங்க "யன்மயா... தர்பயாம்யஹம்" எனத் தர்ப்பணம் செய்யவும். பிரவாகத்தை எதிர்நோக்கி நின்றுநீராடுதல், மார்ஜநம், அகமர்ஷணம். செய்து கொள்ளவும் மற்றவற்றை ஸூர்யனை நோக்கி நின்று செய்யவும். இரவில் கிழக்கு நோக்கியோ அக்னிதிக்கை நோக்கியோ செய்யலாம். (18-26)*

सुराबिन्दुसमाः प्रोक्ताः पृष्ठतः केशबिन्दवः ।
ते चैव पुरतः प्रोक्ताः सर्वतीर्थोपमा बुधैः ॥ २७

विण्मूत्रं विसृजेदार्द्रवाससा यदि मानवः ।
स्नात्वा च पुनराचम्य प्राणानायम्य शुद्ध्यति ॥ २८

परिधानेन वस्त्रेण मार्जनञ्चेत् करिष्यति ।
शुनोच्छिष्टं भवेद्गात्रं पुनः स्नानेन शुध्यति ॥ २९

अधोभागं जले क्षिप्त्वा ऊर्ध्वभागेन वाससः ।
कुर्याच्चेत् मार्जनं विप्रः तत्र दोषो न विद्यते ॥ ३०

चतुस्संवेष्ट्य वासोन्नं स्नातो निष्पीडयेत् स्थले ।
ये केचास्मत्कुले जाता अपुत्रा गोत्रजा मृताः ॥ ३१

ते गृह्णन्तु मया दत्तं वस्त्रनिष्पीडनोदकम् ।
इति मन्त्रो भवेत्तस्य वस्त्रनिष्पीडनस्य हि ॥ ३२

பின் தலை கேசக்கற்றையிலிருந்து சொட்டுகிற நீர் கள் போன்றது. அதுவே முன்புறத்தில் விழுந்தால் புனித தீர்த்தம். ஈர ஆடையுடன் மலஜலம் கழிக்க நேர்ந்தால் மறுபடி நீராடி ஆசமனமும் பிராணாயாமம் செய்து தூய்மை பெறுவான். இடுப்பாடையைக் கொண்டு உடலின் மேல் பகுதியைத் தேய்த்துக் குளித்துத்துடைக்க நாய் தீண்டியது போலாகும். மறுபடி நீராடித் தூய்மை பெறலாம். இடுப்பாடையின் கீழ்ப்பகுதியை நீரில் மிதக்கச் செய்து மேல்பகுதியால் துடைத்துக் கொள்ளலாம். தன் ஆடையை நான்காக மடித்துத் தரையில் பிழிந்தவாறு "யே கேசாஸ்மத் குலே'' என்ற மந்திரம் கூற அந்நீரை அவர் குலத்தில் பிறந்து ஸந்ததியின்மையால் தர்ப்பணம் பெறுதவர் திருப்தியுறுவர். (27-32)

स्नानं कृत्वाऽर्द्रवस्त्रन्तु ऊर्ध्वमुद्धृत्य विक्षिपेत् ।
धारयेद्धौतवस्त्रन्तु सदृशं नैव धारितम् ॥ ३३

वस्त्रञ्चतुर्गुणीकृत्य निष्पीड्य च जलाद्बहिः ।
वामप्रकोष्ठे निक्षिप्य द्विराचम्य विशुद्ध्यति ॥ ३४

आग्नेयं वारुणं ब्राह्मं वायव्यं दिव्यमेव च ।
मानसं पार्थिवञ्चैव कापिलञ्चाष्टमं स्मृतम् ॥ ३५

सारस्वतं तथा प्रोक्तं नवमं स्नानमुत्तमम् ।
प्राङ्मुखश्चरणौ हस्तौ प्रक्षाल्याचम्य पूर्ववत् ॥ ३६

प्राणानायम्य सङ्कल्प्य भस्मना स्नानमाचरेत् ।
आदाय भसितं श्वेतमग्निहोत्रसमुद्भवम् ॥ ३७

अग्निरित्यादिषण्मन्त्रैः प्रणवेनाभिमन्त्र्य च ।
ईशानेन शिरोदेशे मुखे तत्पुरुषेण तु ॥ ३८

अघोराख्येन हृदये गुह्ये वामाह्वयेन च ।
सद्योजाताभिधानेन भस्म पाणिद्वये क्षिपेत् ॥ ३९

सर्वाङ्गं प्रणवेनोद्धूल्याग्नेयं स्नानमाचरेत् ।
त्रियायुषाख्यमन्त्रेण लिप्तमापादमस्तकम् ॥ ४०

कुर्वीत भस्मना तच्च भस्मस्नानमितीर्यते ।
जलावगाहनस्नानं वारुणं सार्ववर्णिकम् ॥ ४१

आपोहिष्ठादिभिर्ब्राह्मं मन्त्रस्नानं हि तत्स्मृतम् ।
कुशाग्रैर्मार्जनं कुर्याद्दैवतीर्थेन वा द्विजाः ॥ ४२

पक्षपादशिरोहृत्सु शिरोहृत्पत्सु चार्थतः ।
यत्तु सातपवर्षेण दिव्यं तत् स्नानमुच्यते ॥ ४३

*நீராடிய பின் துணியைப் பிழிந்து இடது முன்கையில் மடித்துப் போட்டு காய்ந்த புத்தாடை உடுத்தி இருதடவை ஆசமனம் செய்ய வேண்டும். ''ஆக்நேயம்'', ''வாருணம்'' ப்ராம்ஹம், வாயவ்யம், ''திவ்யம்'' மானஸம், பார்த்திவம், காபிலம் ஸாரஸ்வதம் என ஸ்நானம் ஒன்பது வகைப்படும். நீராடித்தூய ஆடை உடுத்தி கிழக்கு நோக்கி நின்று கைகால்கள் அலம்பி ஆசமனம் செய்து பிராணாயாமத்துடன் ஸங்கல்பித்து பஸ்மஸ்நானம் செய்யவேண்டும். அக்னிஹோத்ரம் செய்த குண்டத்திலிருந்து எடுத்த வெண்ணிற பஸ்மத்தை ''அக்நிரிதிபஸ்ம'' என்ற மந்திரம் கூறி ஓங்காரத்தால் மந்திரித்து ''ஈசாந: ஸர்வ'' என்ற மந்திரத்தால் தலையிலும் ''தத்புருஷ'' மந்திரத்தால் முகத்திலும் ''அகோர'' மந்திரத்தால் மார்பிலும் ''வாமதேவ'' மந்திரத்தால் மறைவிடத்திலும் ''ஸத்யோஜாத'' மந்திரத்தால் இருகைகளிலும் பூசி ஓங்காரத்தால் உடல் முழுவதும் பஸ்மத்தைத் தூவ ''ஆக்நேயஸ்நாநமாகும்''. ''த்ர்யாயுஷம் ஜமதக்நே:'' என்ற மந்திரத்தால் தலை முதல் கால் வரை பூச ''பஸ்மஸ்நானமாகும்'' நீரில் மூழ்கி நீராடுவது ''வாருணஸ்நானமாகும்'' ''ஆபோஹிஷ்டா'' முதலிய மந்திரங்கள் கூறி நீராடுவது ''ப்ராம்ஹ'' ஸ்நானமாகும். தர்ப்பை நுனியால் புண்ய தீர்த்தத்தை இரு விலாப்புறம் கால், தலை, இதயம் இவற்றில் அல்லது தலை, இதயம், கால் இவற்றில்*

*தெளித்துக் கொள்வது வெயிலடிக்கையில் மழைபெய்து நீர்த்துளி மேல் விழச் செய்வதும் ''திவ்யஸ்நாணம்'' ஆகும். (33-43)*

द्वादशान्ते गिरिजया स्थितस्य परमेशितुः ।
शीर्षे च गङ्गास्रुतिभिर्निर्गताभिस्तदङ्कितः ॥ ४४

शिर आरभ्य पादान्तं ध्यायेदाप्लाविता हृदा ।
इलया गङ्गया भास्वत्पुन्या पिङ्गलया तथा ॥ ४५

सुषुम्नया सरस्वत्या ध्यायेदन्तरविप्लुतम् ।
मानसं स्नानमेतत्तु कोटिकोटिगुणं भवेत् ॥ ४६

शुचिदेशान्मृदं गृह्य कुर्याद्गात्रानुलेपनम् ।
मन्त्रैः पार्थिवसंयुक्तैः पार्थिवस्नानमुच्यते ॥ ४७

*உச்சந்தலையிலுள்ள துவாதசாந்தஸ்தானத்தில் பார்வதியுடன் அமர்ந்துள்ள சிவனது தலையிலிருந்த கங்கையின் நீர் விழுந்து அவரது திருவடிபட்டுக் கசிய அந்நீர் தலை முதல் கால்வரை இடப்புறத்திலுள்ள இடாநாடி வழியே கங்கையும் பிங்கலை நாடி வழியே யமுனையும் ஸுஷும்நா நாடி வழியே ஸரஸ்வதியும் பெருகித் தூய்மைப் படுத்துவதாகத் தியானிப்பது ''மானஸ ஸ்நானம்'' ஆகும். இது பன்மடங்கு சிறந்தது. தூய்மை மிக்க இடத்திலிருந்து மண்ணை எடுத்து மிருத்திகாஸூக்தம் ஜபித்துப் பூசிக் கொள்வது ''பார்த்திவ'' ஸ்நானமாகும். (44-47)*

आर्द्रेण वाससा त्वङ्गमार्जनं कापिलं स्मृतम् ।
विद्वत्सरस्वतीप्राप्तं स्नानं सारस्वतं हि तत् ॥ ४८

सर्वतीर्थाभिषेकाद्धि पवित्रं विदुषां हि वाक् ।
अग्निरित्यादिभिमन्त्रैर्भस्मनोद्धूल्य वै तनुम् ॥ ४९

त्रिपुण्ड्रधारणं कृत्वा सन्ध्यावन्दनमाचरेत् ।
मध्यमानामिकाङ्गुष्ठैर्ललाटे भस्मना कृतः ॥ ५०

स त्रिपुण्ड्रो भवेच्छस्तो महापातकनाशनः ।
मध्याङ्गुलित्रयेणैव स्वदक्षिणकरस्य वा ॥ ५१

षडङ्गुलायतं मानमथवाऽलीकमानकम् ।
नेत्रयुग्मप्रमाणं वा फाले दीप्तं त्रिपुण्ड्रकम् ॥ ५२

अकारोऽनामिका प्रोक्ता ह्युकारो मध्यमाङ्गुलिः ।
मकारस्तर्जनी तस्मात् त्रिभिः कुर्यात् त्रिपुण्ड्रकम् ॥ ५३

प्रातः काले जलैर्युक्ता मध्याह्ने चन्दनैर्युता ।
सायमम्भोविरहिता भूतिरंहोविनाशिनी ॥ ५४

*ஈரத்துணியால் உடலைத் துடைத்துக் கொள்வது "காபில" ஸ்நானமாகும். பேரறிஞரின் வாய் வழியே தெளித்த நீர்த்துளிமேல்படுவது ''ஸாரஸ்வத'' ஸ்ஞனமாகும் ''அக்நிரிதிபஸ்ம'' முதலிய மந்திரம் கூறி உடல் முழுவதும் பஸ்மம் பூசி நெற்றியில் அதனல் மூன்று கோடுகளை வலது கையின் நடு மூன்று விரல்களால் ஆறங்குல் நீளம் அல்லது நெற்றின் பகுதி மறைய இருகண்களின் எல்லைவரை இடுவர். பவித்ர விரல் (மோதிரவிரல், அநாமிகா) ஓங்காரத்தின் பகுதியான அகாரமாகும். நடுவிரல் உகாரமாகும். ஆள்காட்டிவிரல் (தர்ஜநீ) மகாரமாகும். இம்மூன்ருல் விபூதி இடவேண்டும். காலையில் நீரில் குழைத்தும், நடுப்பகலில் சந்தனத்துடனும் மாலையில் நீரின்றியும் பூசலாம். பாபம் நீக்கவல்லது விபூதியைத் தரிப்பது. (48-54)*

सन्ध्यां प्रातः सनक्षत्रामुपासीत यथाविधि ।
सादित्यां पश्चिमां सन्ध्यामर्धास्तमितभास्कराम् ॥ ५५

उपवीती बद्धशिखः स्वाहान्ते द्विरनाकुलः ।
प्राङ्मुखः प्राणमायम्य सन्ध्योपासनमाचरेत् ॥ ५६

सव्याहृतिं सप्रणवां गायत्रीं शिरसा सह ।
त्रिः पठेदायतप्राणः प्राणायामः स उच्यते ॥ ५७

आदावन्ते च गायत्र्याः प्राणायामास्त्रयः स्मृताः ।
सन्ध्यायामर्घ्यदाने च स्मृत एकोऽसुसंयमः ॥ ५८

आपोहिष्ठास्सुप्रसिद्धा नवपादा भवन्ति ते ।
पादे पादे क्षिपेद्वारि सर्वपापं व्यपोहति ॥ ५९

अग्निश्चेत्यनुवाकेन सायंकाले त्वपः पिबेत् ।
सूर्यश्चापः पुनन्त्वाभ्यां प्रातर्मध्याह्नसन्ध्ययोः ॥ ६०

आत्मानं प्रोक्षयेत्पश्चाद्दधिक्राविण्ण इत्यृचा ।
आपोहिष्ठादि तिसृभि ऋग्भिश्च सकुशैर्जलैः ॥ ६१

व्याहृत्या तत आत्मानं परिषिञ्चेत् समस्तया ।
जलपूर्णं तथा हस्तं नासिकाग्रे समर्पयेत् ॥ ६२

ऋतञ्च द्विपदाञ्चोक्त्वा वामभागे क्षिपेज्जलम् ।
कराभ्यां तोयमादाय गायत्र्या चाभिमन्त्रितम् ॥ ६३

आदित्याभिमुखस्तिष्ठन् त्रिरूर्ध्वमथ चोत्क्षिपेत् ।
चतुर्थमर्घ्यं गायत्र्या दद्याद्व्याहृतिसंपुटम् ॥ ६४

कालात्ययविशुद्ध्यर्थं त्रिसन्ध्यासु समाचरेत् ।
आद्यद्वितीययोरर्घ्ये विच्छेदः पादयोर्नहि ॥ ६५

जपे पादत्रयस्यापि विच्छेदः सर्वसम्मतः ।
प्रणवव्याहृतीभिश्च कृत्वाऽऽत्मानं प्रदक्षिणम् ॥ ६६

आचम्यैव ततस्तिष्ठन्ध्यायेत् सन्ध्यां समाहितः ।
आदित्यादीन् ग्रहांस्तत्र तर्पयेत्सुसमाहितः ॥ ६७

காலையில் நக்ஷத்ர ஒளி துலங்கும் போதும் மாலையில் ஸூர்யன் மறையு முன்னும் ஸந்தியா தேவியை வந்தனம் செய்ய வேண்டும். உபவீதியாக கேசத்தை இறுக்கிக் கட்டி கிழக்கு நோக்கி அமர்ந்து காலையில் ஸந்தியா வந்தனம் தொடங்க வேண்டும். பிரணவம் ஏழுவியாஹ்ருதிகள், காயத்ரீ, காயத்திரீ சிரஸ் இவற்றை மூச்சை உள்ளிழுத்து நிறுத்தி மூன்று தடவை கூறுவது ''பிராணாயாமம்'' ஆகும். காயத்திரீ ஜபத்தின் முன்னரும் பின்னரும் இவ்வாறு மூன்று பிராணாயாமங்கள். அர்க்கியதானத்தில் ஒரு பிராணாயாமம் ''ஆபோஹிஷ்டா'' என்ற ஒன்பது பாதங்கள் கொண்ட மந்திரத்தைக் கூறி ஒன்பது தடவை நீரைத் தெளித்துக் கொள்ளப்பாபம் நீங்கும். பின்னர் மாலையில் ''அக்நிச்சமாமன்யுச்ச'' என்றும் காலையில் ''ஸூர்யச்சமாமன்யுச்ச'' என்றும் நடுப்பகலில் ''ஆப:புநந்து என்ற மந்திரமும் கூறி மந்திரித்த நீரைப்பருக வேண்டும். பின்னர் ''ததிக்ராவ்ண: ஆபோஹிஷ்டா'' என்ற மந்திரம் கூறி தர்ப்பை நீரால் தெளித்துக் கொள்ள வேண்டும். பின் பிரணவத்துடன் வியாஹ்ருதி கூறித்தன்னைச் சுற்றி நீர் தெளித்து நீர் நிரம்பிய கைத்தலத்தை மூக்கருகே கொணர்ந்து முகரவேண்டும். ''ருதஞ்ச ஸத்யஞ்ச'' எனக்கூறி இடதுபக்கத்தில் ஜலத்தை விடவேண்டும். இருகைகளாலும் நீரேந்தி ஸூரியனை நோக்கி காயத்ரியால் மூன்று தடவை அர்க்கியம் விடவேண்டும். நான்காவது அர்க்கியத்தை வியாஹ்ருதியை முன்னும் பின்னும் சேர்த்த காயத்ரீயைக் கூறி விடவேண்டும். இது காலம் தவறிச் செய்ததற்கான பிராயச்சித்தமாகும். அர்க்கியத்திற்கான காயத்ரீயை முதலிரு பாதங்களைப் பிரிக்காமல் கூறுவர். ஜபத்தில் மூன்று பாதங்களையும் பிரித்தே கூறுவர். அர்க்கியம் தந்ததும் பிரணவ - வியாஹ்ருதிகளால் ஜலத்தால் தன்னைச் சுற்றிப் பிரதக்ஷிணம் செய்து ஸந்தியாதேவியை தியானிப்பர். பின் ஆதித்யன் முதலிய கிரஹங்களுக்குத் தர்ப்பணம் செய்வர். (55-67)

एवं सन्ध्याममभिध्यायेन्नीलग्रीवां सुशोभनाम् ।
वरदाभयहस्ताञ्च त्रिनेत्रां चन्द्रशेखराम् ॥ ६८

सन्ध्ये देवि महाभागे सर्वदैव नमोस्तु ते ।
त्वदुपासनमात्रेण सर्वपापैः प्रमुच्यते ॥ ६९

अहो माये ब्रह्मरूपे दिव्ये सन्ध्ये सरस्वति ।
अजरे अमरे चैव ब्रह्मयोने नमोऽस्तु ते ॥ ७०

प्रणवं परमात्मानं जपित्वा भक्तिसंयुतः ।
स्वात्मानं तामभिध्यायेत् प्रकुर्याद्वन्दनं बुधाः ॥ ७१

इति पञ्चसप्ततितमोऽध्यायः

"ஸந்தியா தேவியின் தியானம்" *மிக அழகியவள், கருத்த கழுத்துடையவள், வர - அபய முத்திரை கொண்ட கைகள் உள்ளவள், மூன்று கண்களுள்ளவள் சந்திரனைச் சிரஸில் சூடியவள், இவ்வாறு தியானித்து* "ஸந்தியே தேவி மஹாபாகே ஸர்வதைவ நமோऽஸ்துதே. த்வதுபாஸனமாத்ரேண ஸர்வபாபை: ப்ரமுச்யதே: அஹோமாயே ப்ரம் ஹரூபே திவ்யே ஸந்த்யே ஸரஸ்வதி. அஜரே அமரே சைவ ப்ரம்ஹயோநே நமோऽஸ்துதே" *என நமஸ்கரித்து தன் ஆத்மாவாக அவளைத் தியானித்து வந்தனம் செய்ய வேண்டும். (68-71)*

—★—

षट्सप्ततिमोऽध्यायः

यतीश्वरः—

तत आकाशनगराद्यादिपुण्यस्थलेषु वा ।
अग्न्यगारे जलान्ते वा गुरूणां वाथ सन्निधौ ॥ १

द्विजो गायत्रीपजार्थं शुचौ देशे तु संविशेत् ।
जपहोमदिकं कुर्यात्सपवित्रकरो द्विजः ॥ २

द्वे दर्भे देवकार्येषु आभिचारे चतुष्टयम् ।
पौष्टिके पञ्चदर्भास्स्युरेकं स्यात् प्रेतकर्मणि ॥ ३

पितृकार्ये त्रयो दर्भा द्वौ दर्भौ नित्यकर्मणि ।
भवेदेकाङ्गुलं ग्रन्थिरग्रन्तु चतुरङ्गुलम् ॥ ४

वलयं द्व्यङ्गुलमिति पवित्रस्य तु लक्षणम् ।
द्विजान् देवान्नमस्कृत्य भूतोच्चाटनमाचरेत् ॥ ५

सङ्कल्प्य तु जपेन्मन्त्रं मन्त्रार्थगतमानसः ।

*''அத்தியாயம்'' - 76*

*ஸந்தியா வந்தனத்தை யதீசுவரர் தொடர்ந்து விளக்குகிறார். ஆகாசநகரம் எனும் திருவீழிமிழலை அவரவரது அக்னிஹோத்திர சாலை தீர்த்தக் கரை குருவின் ஸந்நிதி முதலிய தூய்மை மிக்க இடங்களில் அமர்ந்து காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். கையில் தர்ப்பத்தாலான பவித்ரம் (தூய்மை தருவது) தரித்தே ஜபம் ஹோமம் முதலியவற்றைச் செய்ய வேண்டும். தேவகாரியங்களில் இருதர்ப்பங்கள், அபிசாரத்தில் நான்கு, புஷ்டிப்பணிகளில் ஐந்து, பிரேத (இறந்து 12 நாட்களுக்குள்ளான) சடங்குகளில் ஒன்று, (சிராத்தம், அமாவாஸ்யை தர்ப்பணம் முதலிய) பித்ருகர்மங்களில் மூன்று, நித்யகர்மங்களில் இரண்டு என எண்கொண்ட தர்ப்பங்களைக் கொண்டு பவித்ரவிரல் நுழையும்படி ஈரங்குல வளையமும் ஓரங்குல முடிப்பும் நான்கு அங்குல நீளமும் கொண்ட பவித்ரம் அமைத்துக் கொள்ள வேண்டும். அந்தணர்களையும் தேவர்களையும் வணங்கி பூதங்களை விரட்டி ஸங்கல்பம் செய்து மந்திரத்தின் உட்பொருளில் மனத்தைச் செலுத்தி மந்திர ஜபம் செய்ய வேண்டும். (1-5)*

केवलं भुव्यवस्थानाद्दुःखं दूर्वासनात्तथा ॥ ६

तृणासने यशोहानिः पल्लवे चित्तविभ्रमः ।
आभिचारादिके नीलं रक्तं वश्यादिकर्मणि ॥ ७

वंशासने दरिद्रः स्यात् पाषाणे व्याधिपीडनम् ।
वस्त्रासने व्याधिनाशो भवेत्सौख्यं तु कम्बले ॥ ८

कृष्णाजिने ज्ञानवृद्धिः मोक्षश्रीः व्याघ्रचर्मणि ।
दर्भासने तपोवृद्धी राज्यं धी रत्नकम्बले ॥ ९

यथोक्तविधिना भूतशुद्धिं कृत्वा ततः परम् ।
अष्टैश्वर्यदलं ज्ञाननालं वैराग्यकर्णिकम् ॥ १०

हृदयाब्जं विकसितं ध्यात्वा प्रणवमन्त्रतः ।
जीवं चैतन्यरूपन्तु कर्णिकास्थं सुषुम्नया ॥ ११

नाड्या मार्गेण निस्सार्य द्वादशान्तस्थितेऽम्बुजे ।
सहस्रपत्रे वसता सहैव परमात्मना ॥ १२

हंसमन्त्रेणैकीकृत्य कल्मषं कायसंस्थितम् ।
मत्वा च पुरुषाकारं विदध्याच्छोषणादिकम् ॥ १३

मातृकादि ततो न्यस्य अजपान्यासमाचरेत् ।
सप्तव्याहृतियुक्तां तां गायत्रीं शिरसा सह ॥ १४

दशकृत्वो जपित्वाथ आयात्विति मनुञ्जपेत् ।
गायत्रीं सम्यगावाह्य तन्न्यासञ्च विधाय च ॥ १५

गायत्रीं प्रजपेद्विद्वान् भक्त्याऽवहितमानसः ।
गायत्र्यास्तु त्रयः पादाश्चतुष्पादापि संस्मृताः ॥ १६

जपे तु त्रिपदैवोक्ता ह्यर्चने तु चतुष्पदा ।

ஆஸனமின்றித் தரைமீது அமர்வதால் துன்பம். அருகம் புல்லாலான ஆஸனத்தில் புல்லாலான ஆஸனத்தில் அமரப் பெயர் கெடும், துளிர் மீதமரமனம் குழம்பும். அபிசாரம் செய்ய

நீலத்துணி, வசியம் முதலியவற்றில் செந்நிறத்துணி நல்லது. மூங்கில் பட்டையாலானது ஏழ்மை தரும். கல்லாலானது நோய் விளைவிக்கும். துணியாலானது நோய் நீக்கும். கம்பளியாலானது இன்பம் தரும். கருமான் தோல் அறிவை வளர்க்கும். புலித்தோல் முக்தி தரும். தர்ப்பையாலானது தவத்தை வளர்க்கும். ரத்ன கம்பளி அரசாளச் செய்யும். இவ்வாறு சிறந்த ஆஸனத்தை அமைத்துக் கொள்வது அவசியம். பூத சுத்தி செய்து கொண்டு மனத்தை உருவகப்படுத்திக் கொள்ள வேண்டும். இதயம் எனும் மலர்ந்த தாமரை, அதற்கு எட்டு ஐசுவரியங்களும் இதழ்கள், ஜ்ஞானம் எனும் தண்டு, வைராக்கியம் எனும் மொட்டு, அந்த மொட்டின் மீது சுத்த சைதன்ய வடிவினனான ஜீவன் அமர்ந்து ஸுஷும்ணா வழியே சிரஸிலுள்ளதுவாதசாந்தத்தில் உள்ள ஆயிர இதழ்த் தாமரை சென்று அங்குள்ள பரமாத்மாவுடன் ''ஹம்ஸ: ஸோஹம்'' என்ற பாவனையால் இணைந்து உடலிலுள்ள கஸ்மஷமனைத்தையும் பிரித்துப் பாப புருஷ வடிவில் தியானித்து அவன்வற்றி எரிந்து சாம்பலாவதாக எண்ணவேண்டும். மாத்ருகா நியாஸமும் அஜபா நியாஸமும் செய்து ஏழு வியாஹிருதிகள், காயத்ரீ, காயத்ரீ சிரஸ் என்ற வரிசையில் 10 தடவை ஜபித்து ''ஆயாது'' என்ற மந்திரத்தால் காயத்ரியை ஆவாஹனம் செய்து ருஷி முதலான நியாஸம் செய்த பின் காயத்ரீயைப் பக்தியுடன் நிலையுற்ற மனத்துடன் மூன்று பாதங்களாகப் பிரித்து ஜபிக்க வேண்டும். அர்ச்சனையின் பிரணவ வியாஹ்ருதியுடன் நான்கு பாதங்களாக உச்சரிப்பார். (6-16)

पूर्वां सन्ध्यां जपेत्तिष्ठन्नासीनः पश्चिमां तथा ॥ १७

तथा मध्यमसन्ध्यायामासीनः प्राङ्मुखो जपेत् ।
पूर्वां सन्ध्यां जपेत्तिष्ठन् सावित्रीमार्कदर्शनात् ॥ १८

पश्चिमान्तु समासीनः सम्यगार्क्षविभावनात् ।
गृहस्थो ब्रह्मचारी च शतमष्टोत्तरं जपेत् ॥ १९

वानप्रस्थाश्रमी चैव जपेदष्टसहस्रकम् ।
दश वा तु जपेद्देवीमष्टाविंशतिमेव वा ॥ २०

प्रणवं व्याहृतीस्तिस्रः गायत्रीश्च जपेत्क्रमात् ।
सम्पुटैषा षडोङ्कारा गायत्री त्रिविधा मता ॥ २१

तत्रैकप्रणवा ग्राह्या गृहस्थैर्जपकर्मणि ।
गृहस्थवत्तु जप्तव्या सदैव ब्रह्मचारिभिः ॥ २२

सम्पुटा च षडोङ्कारा भवेतामूर्ध्वरेतसाम् ।
अच्छिन्नपादा गायत्री ब्रह्महत्यां प्रयच्छति ॥ २३

छिन्नपादा तु गायत्री ब्रह्महत्यां व्यपोहति ।
तस्मात् पादत्रयं छित्वा जपयज्ञं समाचरेत् ॥ २४

*காலையில் கிழக்குநோக்கி நின்று கொண்டும் மாலையில் மேற்கு நோக்கி நடுப்பகலில் கிழக்கு நோக்கி அமர்ந்தும் ஜபிப்பர். ஸூர்யனின் உதயத்திற்கு முன் ஜபம் தொடங்கி ஸூரியனைக் காண்கிற வரை காலையிலும் ஸூரியனிருக்கும் போதே தொடங்கி நட்சத்திரம் தெரியும் வரை மாலையிலும் ஜபிப்பர். கிருஹஸ்தனும் பிரும்மசாரியும் 108 தடவை, வானப்பிரஸ்தன் 1008 தடவை ஜபிப்பர். இயலாத போது 10 அல்லது 28 தடவை ஜபிக்கலாம். பிரணவம், வியாஹ்ருதி மூன்று, காயத்திரீயின் மூன்று பாதங்கள் என்று மந்திர ஸம்புடம் மூன்று வியாஹ்ருதிகளையும் மூன்று காயத்திரீயின் பாதங்களையும் ஒவ்வொரு ஓங்காரத்துடன் (மொத்தத்தில் ஆறு ஓங்காரம்) ஜபிப்பது கிருஹஸ்தருக்கும் பிரும்மசாரிக்கும் ஏற்றது. காயத்ரீயின் மூன்று பாதங்களையும் பிரிக்காமல் கூறுவது பாபத்தை விளைவிக்கும். மூன்று பாதமாகக் கூறுவது பாபத்தைப்போக்கும். அதனுல் ஜபத்தில் மூன்று பாதங்களாகப் பிரித்தே உச்சரிக்க வேண்டும் (17-24)*

कृत्वोत्तानौ करौ प्रातः सायञ्चाधोमुखौ तथा ।
मध्ये स्तब्धकराभ्यान्तु समावृतकरो जपेत् ॥ २५

प्रातः समौ नासिकया मध्याह्ने वक्षसा समौ ।
करौ सायं नाभिसमौ द्विजः कुर्यादतन्द्रितः ॥ २६

मनस्सन्तोषणं शौचं मौनं मन्त्रार्थचिन्तनम् ।
अव्यग्रत्वमनिर्वेदो जपसाद्गुण्यहेतवः ॥ २७

गायत्रीमुदके स्थित्वा न कदाचिज्जपेद्बुधः ।
उक्ता गायत्र्यग्निमुखा तस्मादुत्तीर्य ताञ्जपेत् ॥ २८

पर्वभिस्तु जपः कार्यो नाङ्गुलीनाञ्च कुञ्चनैः ।
प्रारभ्यानामिकायास्तु मध्यमे पर्वणि क्रमात् ॥ २९

तर्जनीमूलपर्यन्तं जपेद्दशसु पर्वसु ।
उपवीतेन सङ्ख्याने जपहोमादि निष्फलम् ॥ ३०

कुशैरानन्त्यमाप्नोति रुद्राक्षमणिभिस्तथा ।
एको जपे लक्षगुणः सङ्ख्याते वर्णमालया ॥ ३१

अवर्णाद्यं ळवर्णान्तं बिन्दुयुक्तं विभाव्य च ।
वर्णमाला समाख्याता त्वनुलोमविलोमतः ॥ ३२

सबिन्दुवर्णमुच्चार्य पश्चान्मन्त्रं जपेत् बुधः ।
क्षमेरुं कल्पयित्वा तु क्षकारं केवलं जपेत् ॥ ३३

मातृकाजपमात्रेण मन्त्राणां कोटिकोटयः ।
जपिताः स्युर्न सन्देहः सर्वं ह्येतत्समुद्भवम् ॥ ३४

अनुलोमविलोमस्थैर्मातृकार्णैः सबिन्दुकैः ।
समेरुकैः साष्टवर्गैर्माला स्याद्योगिनां शुभा ॥ ३५

वर्णविन्यस्तया नेत्र क्रियते मालया जपः ।
एकवारं जपेनैव तत्पुरश्चरणं भवेत् ॥ ३६

காலையில் மூக்கிற்கு நேராகக் கைகளை உயர்த்தியும் மாலையில் தொப்புளுக்குச் சமமாகத் தாழ்த்தியும், நடுப்பகலில் மார்பிற்கு நேராகவும் கொண்டு ஜபிக்க வேண்டும். கைகளை மேலாடையால் மறைத்துக் கொள்ள வேண்டும். மனத்தில் ஸந்தோஷம் தூய்மை மௌனம், மந்திரத்தின் உட்பொருளைச் சிந்தித்தில் மனப்போக்கைச் சிதற விடாமல் கட்டுப்படுத்துதல், நன்மை விளையும் என்ற எதிர்பார்ப்பு என இவை ஜபம் பயனுள்ளதாக அமையத் தேவை. காயத்ரீ நெருப்பு. அதனால் நீரில் நின்று ஜபிக்கக் கூடாது. விரல்களை மடக்கி எண்ணக் கூடாது. விரல் கணுக்களைக் கொண்டு எண்ணுவதே முறை. அநாமிகாவிரலின் நடுக்கணுவிலிருந்து ஆள்காட்டியின் அடிக்கணுவரை எண்ணுவது முறை. உபவீதத்தை எண்ணப்பயன்படுத்துவது ஜபத்தைப் பயனற்றதாக்கும். தர்ப்பை ருத்ராக்ஷம் ஜபத்திற்கு ஏற்றது. அக்ஷராதி வர்ணமாலை (அம் ஆம்.. ஹம் ளம் - ளம் ஹம்... ஆம் அம் என) அனுலோமவிலோம முறைகொண்டு க்ஷவை மேருவாகக் கொண்டு ஜபிப்பர். இவற்றில் வர்ணமாலை ஜபம் மிகச்சிறந்தது. அம் முதல் ளம் வரை க்ஷம், அம், கம், சம், டம், தம், பம், யம் என்ற அஷ்டவர்க்கம் க்ஷம், ளம், ஹம்....ஆம் அம் (108) என வர்ணமாலையால் யோகியர் ஜபிப்பர். இவ்வாறு ஜபிப்பவர் புரச்சரணம் செய்தவராவர். (25-36)

शुद्धा सर्गा बैन्दवीति सा माला त्रिविधा भवेत् ।
केवला बिन्दुबैन्दव्यां विसर्गेण विसर्गकः ॥ ३७

सर्गयान्तक्रमोन्तः स्यादिति केचन मन्वते ।
अकचटतपायाशादिरप्यष्टवर्गकात् ॥ ३८

अन्तेऽष्टवारमेतत् सम्पुटेनैव मनुं जपेत् ।
एतद्रहस्यमुक्तं वो न कस्यापि प्रकाशयेत् । ३९

அ ஆ என வர்ணம் மட்டும் ஜபிப்பது சுத்த வர்ணமாலா. அம் ஆம் என பிந்து சேர்த்து ஜபிப்பது பிந்து (பைந்தவீ) வர்ணமாலா. அ: ஆ: என விஸர்க்கமோ அ நம: ஆ நம: என நம:

*சேர்த்தோ ஜபிப்பது ஸர்க்க வர்ணமாலா. அ க சட த ப ய ஶ(ச) என அஷ்டவர்கம் (வர்ணமாலை) அ ஆ - ஹ ள, (அஷ்டவர்கம்) அ க ச ட த ப ய ஶ(ச) (விலோமவர்ணமாலை ள ஹ..... அ ஆ க என பிந்து சேர்த்து ஜபிக்க 108 தடவை ஜபித்ததாகும். க்ஷ என்பது ஜபமாலையின் நடுவே உள்ள தொங்குமணி - மேரு. இது கணக்கிடப் பயன்படாதது) இதுபொது வழக்கில் வராத ரகசியமுறை. (37-39)*

धर्मादिगोचरा यो नो धियो भर्गः प्रचोदयात् ।
देवस्य सवितुश्चापि वरेण्यं तमुपास्महे ॥ ४०

गायत्र्यर्थमिदं ध्यायन् भर्गं साम्बं हिरण्मयम् ।
आदित्यमण्डलान्तस्थं भूतानामधिपं प्रभुम् ॥ ४१

जपेदेकेन वारेण कोटिकोटिफलं भवेत् ।
एवं जप्त्वा यथाशक्ति ह्युदिते तु दिवाकरे ॥ ४२

उत्तमेत्यनुवाकेनोद्वासयेच्च यथागतम् ।
सन्ध्याकर्मावसाने तु स्वयं होमो विधीयते ॥ ४३

*''பர்க்கர் என்ற பேரொளி உலகைத் தோற்றுவிக்கிற ஸவிதா என்ற தேவருடையது. மிகச் சிறந்தது. விரும்பியதைத் தரவல்லது. அது நம் அறிவை அறம் பொருள் இன்பம் முக்தி என்ற மனிதன் நாடத்தக்க பெரும்பொருளை நோக்கித் தூண்டட்டும் '' என்று மந்திரத்தின் பொருள். ஸூரிய மண்டலத்தின் உள் அமர்ந்தவரும் உயிரினத்தின் தலைவரும் பேராளுமை கொண்டவரும் தங்க வண்ணத்தினரும் உமாதேவியுடன் கூடிய வருமான சிவபெருமானைத் தியானித்தவாறு ஜபம் செய்ய வேண்டும். இவ்வாறு ஜபிக்கக் கோடி மடங்கு பலனுண்டு. காலையில் ஸூரியன் உதிக்கும் வரை ஜபித்து ஸூரியன் உதித்ததும் ''உத்தமே சிகரே'' என்ற மந்திரத்தால் காயத்ரீ தேவிக்கு விடையளிப்பர். ஸந்தியா வந்தனம் முடிந்ததும் ஔபாஸன ஹோமம் செய்ய வேண்டும். (40-43)*

हूयमानं तदन्येन फलमर्धं प्रपद्यते ।
ऋत्विक्पुत्रो गुरुर्भ्राता भागिनेयोऽथ विट्पतिः ॥ ४४

एतैरपि हुतं यत्स्यात् तद्धुतं स्वयमेव तु ।
पर्युक्षणं विना पत्नी जुहुयान्मन्त्रवर्जितम् ॥ ४५

प्रातर्होमे सङ्क्रान्तः कालस्तु दिनहोमिनः ।
सायमस्तमिते होमकारस्तु नवनाडिका ॥ ४६

आसायकर्मणः प्रातराप्रातः सायकर्मणः ।
आहुतिर्नातिपद्येत पार्वणं पार्वणान्तरात् ॥ ४७

अतीतहोमं हुत्वैव उत्तरन्तु समापयेत् ।
होमकार्यं ततः कृत्वा कुर्यान्मङ्गलवीक्षणम् ॥ ४८

द्विजाग्निनाम्बुगोहोमरत्नाद्यं मङ्गलं स्मृतम् ।
प्रातर्मध्यन्दिने वापि ब्रह्मयज्ञो विधीयते ॥ ४९

प्रातर्यदि तदा प्रातराहुत्याः परतो भवेत् ।
मध्याह्ने चेत्तर्पणं स्यात्प्राङ्मनुष्यस्य यत्नतः ॥ ५०

दर्भासीनो दर्भपाणिः ब्रह्मयज्ञविधानतः ।
उदीच्यां प्रागुदीच्यां वा छर्दिर्दर्शनवर्जिते ॥ ५१

प्राङ्मुखो ब्रह्मयज्ञन्तु कुर्यात् श्रद्धासमन्वितः ।
कालातपत्तावेतत्तु कुर्यादस्तमयात् पुरा ॥ ५२

रात्रौ त्रियामपर्यन्तं दिवाकृत्यानि कारयेत् ।
सौरञ्च ब्रह्मयज्ञं च वर्जयित्वा द्वयं बुधाः ॥ ५३

गायत्र्यैवाऽऽचरेत् कर्म वेदाध्ययनमार्जितः ।
सायं प्रातश्चाग्निकार्यं यथाशक्ति जितेन्द्रियः ॥ ५४

कुर्यात् प्रतिदिनं वर्णी ब्रह्मयज्ञं च तर्पणम् ।

தன்னால் இயலாத போது ஹோமத்தை தன்மகன், குரு உடன் பிறந்தவர். உடன் பிறந்தவளின் மகன், தக்ஷிணை பெற்றுச் செய்பவர் எனஎவரையாவது கொண்டு ஹோமம் செய்வது அவசியம். பரிசேஷணம் தவிர மற்றதை மனைவியும் மந்திரமின்றி செய்யலாம். காலையில் ஸங்கவகாலம் வரை (காலை 5-10 நாழிகை) இதற்கான நேரம். மாலையில் அஸ்தமனம் முதல் 9 நாழிகை வரை. காலையிலோ, மாலையிலோ ஹோமம் செய்ய நேராவிடில் விடுபட்ட ஹோமம் செய்த பிறகே உரிய காலத்து ஹோமம் செய்யலாம். ஹோமம் முடிந்ததும் மங்களப் பொருளைக் காணவேண்டும். வேதியன், அக்னி, ஸூர்யன், ஜலம், பசு, ஹோமம், ரத்தினம் முதலியவை மங்களப் பொருட்கள். காலையில் ஔபாஸனம் முடிந்ததும் நடுப்பகலில் மனுஷ்யயஜ்ஞத்திற்கு முன்னும் பிரும்மயஜ்ஞம் செய்யத்தக்கது. தர்ப்பாஸனத்தில் அமர்ந்து தர்ப்பம்தரித்து வடக்கிலோ வடகிழக்கிலோ. மூடலற்ற இடத்தில் கிழக்கு முகமாக அமர்ந்து செய்வர். காலம் தவறினால் அஸ்தமிக்கு முன் செய்வர். பகலில் செய்ய வேண்டியதை (ஸூரியநமஸ்காரத்தையும் பிரும்மயஜ்ஞத்தையும் தவிர) இரவிலும் செய்வதுண்டு. வேதம் ஓதாதவன் காயத்திரியைக் கொண்டே பிரும்மயஜ்ஞம் செய்வான். முடிந்தவரை ஔபாஸனம் செய்வது நல்லது. (44-54)

अह्नोऽष्टधा विभक्तस्य प्रथमांशक्रियोदिता ॥ ५५

अह्नो द्वितीयभागे तु वेदाभ्यासो विधीयते ।
समित्पुष्पकुशादीनामाहृतेस्समयो हि सः ॥ ५६

जपेदध्यापयेच्छिष्यान्धारयेच्च विचारयेत् ।
अवेक्षेत च शास्त्राणि मन्वादीनि द्विजोत्तमाः ॥ ५७

कीटकेशापविद्धानि शीर्णपर्युषितानि च ।
स्वयं पतितपुष्पाणि त्यजेदुपहतानि च ॥ ५८

अन्नं पर्युषितं तोयमपि वर्ज्यं मनीषिभिः ।
अवर्ज्यं तुलसीपुष्पं बिल्वं गङ्गा कदाचन ॥ ५९

प्रत्यहं कर्मनिर्वृत्त्यै प्रशस्ता स्यात्कुशाहृतिः ।
माघे नभस्यमावास्याकाले दर्भोच्चयो मतः ॥ ६०

अयातयामास्ते दर्भा नियोज्याः स्युः पुनः पुनः ।
अह्नस्तृतीयांशे पोष्यवर्गस्य हृदि चिन्तनम् ॥ ६१

अपोषणे तु नरकप्राप्तिस्तस्माद्बिभर्तु तान् ।
चतुर्थे तु यथाभागे स्नानार्थं मृदमाहरेत् ॥ ६२

तिलपुष्पकुशादीनि स्नानं चाकृत्रिमे जले ।
यथोक्तविधिना स्नानमघमर्षणमाचरेत् ॥ ६३

பகல் நேரத்தை எட்டால் வகுத்து அதில் 2வது நேரத்தில் வேதம் கற்கவேண்டும். ஸமித்து, பூ, தர்ப்பை முதலியவை கொணரவும் ஏற்ற நேரம் இது. விசேஷமந்திர ஜபம் வேதமோதுவித்தல் ஓதிய வேதத்தை மறக்காதிருக்கத் தினமும் பழக்குதல், மனுஸ்மிருதி தர்மசாஸ்திரங்களை ஆராய்தல், இவற்றிற்கான நேரமிது. பூக்கள் தானே உதிராதவை, வாடாதவை, புழுபூச்சி அரிக்காதவை நல்லவை. நசுங்கியவை ஏற்றவையல்ல. நாட்பட்ட அன்னமும் நீரும் ஏற்கத்தகாதவை. துளஸி, கங்கை, பில்வம், இவற்றிற்கு நாட்பட்டதென்ற குறைஇல்லை. அன்றாடம் தர்ப்பை சேகரிப்பது சிறந்தது. மாசி, ஆவணி மாதங்கள் அமாவாசை இவற்றில் சேகரித்த தர்ப்பத்திற்கு நாட்பட்டதென்ற குறைஇல்லை. பகலின் மூன்றாவது பகுதியில் தன்னால் போஷிக்கப்பட வேண்டியவர்களைப் பற்றிச் சிந்தித்து ஆவனசெய்வது அவசியம். பாதுகாப்பளிக்காதிருப்பது பெரும் பாபம். நான்காவது பகுதியில் நீராடுவதற்கென மண்கொணர்ந்து எள், பூ, தர்ப்பை முதலியவற்றுடன் செயற்கையாயிராத நீர் நிலையில் அகமர்ஷணம் ஜபித்து நீராட வேண்டும். (55-63)

कृत्वा माध्याह्निकं कर्म देवपूजां समाचरेत् ।
ततः पञ्चमहायज्ञान् कुर्यात् भूतबलिं पुनः ॥ ६४

काकश्वानबलिश्चैव दत्वाऽमुं मन्त्रमुच्चरेत् ।
तृप्यन्तु देवाः पशवो मनुष्याः वयांसि यक्षोरगदैत्यसंघाः ।
प्रेताः पिशाचास्तरवः समस्ता ये चान्नमिच्छन्ति मया प्रदत्तम् ॥

इत्युक्त्वा सर्वभूतेभ्यो बलिन्दत्वा पुनः पृथक् ।
तत आचम्य विधिवत् श्रद्धया प्रीतमानसः ॥ ६६

द्वारि स्थित्वा तु गोदोहमात्रं पश्येन्मुदाऽतिथिम् ।
दिष्ट्याऽतिथिश्चेत्प्राप्येत देववत्पूजयेत्तु तम् ॥ ६७

भिक्षां दद्याद्विधानेन यतेश्च ब्रह्मचारिणः ।
माता पिता गुरुर्बन्धुर्गर्भिणी वृद्धबालकाः ॥ ६८

आतिथ्यार्हाऽऽगताश्चैषु भुक्तवत्सु ततो गृही ।
उपलिप्ते शुचौ देशे पादौ प्रक्षाल्य वाग्यतः ॥ ६९

पश्चाद्वो भोजनं कुर्यात् प्राङ्मुखो मौनमास्थितः ।
नैकवासास्तथाश्नीयात् भिन्नपात्रेषु मानवः ॥ ७०

*மாத்யாந்ஹிகம், தேவபூஜை தேவ - ருஷி -பித்ரு- பூத - மனுஷ்யயஜ்ஞம், பூதபலி (வைசுவதேவம்) காக்கை - நாய் முதலியவற்றிற்கு பலி தந்து வேண்ட வேண்டும். ''தேவர்கள், பசுக்கள், மனிதர்கள், பறவைகள், யக்ஷர், நாகர், அஸுரர், பிரேதர், பிசாசர், மரங்கள் என அனைவருக்கும் உணவளிக்கிறேன்'' என வேண்டி உணவுருண்டையை வெளியே வைக்க வேண்டும். பின் ஆசமனம் செய்து சிறிது நேரம் அதிதிகளை எதிர்ப்பார்த்து வாயிலில் நிற்கவேண்டும். எதேச்சையாக வந்த அதிதியை வரவேற்று உணவிடவேண்டும்.*

*துறவி பிரும்மசாரி முதலியவருக்குப் பிக்ஷை இடவேண்டும். தாய், தந்தை, குரு, உறவினர், கர்ப்பிணீ, முதியவர், சிறுவர், உணவேற்க வந்த மற்றவர் என அனைவரும் உணவேற்ற பின், கை, கால்களை அலம்பி மௌனமாக தூய இடத்தில் கிழக்கு நோக்கி அமர்ந்து உணவேற்க வேண்டும். ஒரே ஆடையுடன், பல உணவுக் கலன்களை, உணவு வகைகளைப் பரப்பிக் கொண்டு உண்ணக் கூடாது. (64-70)*

कांस्यपात्रे तु विमले भुङ्क्ते यद्येवमस्य वै ।
प्रज्ञा यशो बलश्चायुः पुष्टानि स्युर्दिने दिने ॥ ७१

दर्व्या देयं घृताक्तं च समस्तव्यञ्जनानि च ।
भोजनात् किञ्चिदग्रान्नं धर्मराजाय वै बलिम् ॥ ७२

दत्वा च चित्रगुप्ताय भूतेभ्य इदमुच्चरेत् ।
यत्र क्वचन संस्थानां क्षुत्तृष्णोपहतात्मनाम् ।
भूतानां तृप्तयेऽक्षय्यं इदमस्तु यथा सुखम् ॥ ७३

स्वाहान्ताः प्रणवाद्याश्च नाम्ना मन्त्रास्तु वायवः ।
जिह्वया च ग्रसेदन्नं दशनैर्न च संस्पृशेत् ॥ ७४

*வெண்கலப் பாத்திரத்திலிட்ட உணவை ஏற்க அறிவும் புகழும் வலிவும் ஆயுளும் வளரும். கரண்டி கொண்டே நெய் முதலியவற்றை வழங்கவேண்டும். உணவின் முதல் பிடியைத் தர்மராஜனுக்கும் சித்திர குப்தனுக்கும் உயிரினமனைத்திற்கும் சிறிது ஒதுக்கிவிட்டு பசியாலும் தாகத்தாலும் வாடுகிறவர். எங்கிருந்தாலும் இது உணவாகட்டும் என வேண்ட வேண்டும். பற்களில் படாமல் நாக்கால் விழுங்குமாறு பிராணன் முதலிய வாயுக்களுக்கு பிரணவத்துடன் ஸ்வாஹா என முடிக்கிற மந்திரங்களால் அன்னமளித்த பின் உணவேற்க வேண்டும். (71-74)*

अष्टौ ग्रासा मुनेर्भक्ष्याः षोडशारण्यवासिनः ।
द्वात्रिंशच्च गृहस्थस्य अमितं ब्रह्मचारिणः ॥ ७५

शोधयेन्मुखहस्तञ्च मृद्भिस्सङ्घर्षणैरपि ।
आचम्य च ततः कुर्याद्दन्तान्तरविशोधनम् ॥ ७६

आचम्य पात्रमुत्सार्य किञ्चिदार्द्रेण पाणिना ।
मुखं प्राणान्समालम्भ्य नाभिं पाणितलेन च ॥ ७७

शुद्धप्रशान्तचित्तस्तु कृतासनपरिग्रहः ।
स्मृत्वेष्टदेवतां भूयोऽप्याचामेत् ब्रह्म चिन्तयेत् ॥ ७८

*துறவி எட்டு கவளங்களும் காட்டுவாசியான முனிவர் (வானப்பிரஸ்தர்) 16 கவளங்களும் கிருஹஸ்தன் 32 கவளங்களும் பிரும்மசாரி அளவு நியமமின்றியும் உணவேற்கலாம். முகத்தையும் கையையும் மண்ணிட்டுத் தேய்த்தலம்பிய பின் வாய்கொப்பளித்துத் தனியே அமர்ந்து பற்களின் இடுக்கில் சிக்கியதை அகற்றி மறுபடி வாய்க்கொப்புளிக்க வேண்டும். முகத்தையும், தொப்புளையும், மார்பையும் தடவி ஆறுதல் பெற்று மனஅமைதியுடன் அமர்ந்து தன் இஷ்டதைவத்தை நினைக்க வேண்டும். (75-78)*

इतिहासपुराणाभ्यां षष्ठसप्तमिकां नयेत् ।
अष्टमे लोकयात्राभिर्बहिस्सन्ध्यां ततः पुनः ॥ ७९

सादित्यां पश्चिमां सन्ध्यां अर्द्धास्तमितभास्कराम् ।
प्राणानायम्य सम्प्रोक्ष्य मन्त्रैरब्लिङ्गकेन तु ॥ ८०

सायमग्निश्च मन्त्रेण प्रातस्सूर्येत्यपः पिबेत् ।
अर्घ्यं दत्वा तर्पयित्वा सावित्रीजपतः परम् ॥ ८१

उपस्थाय ततस्सायं उपासीताग्निमास्थया ।
सायं प्रातर्वैश्वदेवः कर्तव्यो बलिकर्मसु ॥ ८२

अनश्नतापि सततं अन्यथा किल्बिषी भवेत् ।
कृतपादादिशौचश्च भुक्त्वा सायं ततो गृही ॥ ८३

स्वग्रहे प्राक्शिराः शेते श्वाशुरे दक्षिणाशिराः ।
प्रवासे पश्चिमशिरा न कदाचिदुदक्शिराः ॥ ८४

रात्रिसूक्तं जपेत् स्मृत्वा देवांश्च सुखशायिनः ।
अगस्त्यो माधवश्चैव मुचुकुन्दो महाबलः ॥ ८५

कपिलो मुनिरस्तीकः पञ्चैते सुखशायिनः ।
मङ्गल्यं पूर्णकुम्भश्च शिरःस्थाने नियोजयेत् ॥ ८६

वेदगैर्ब्राह्मणैर्मन्त्रैः रक्षां कृत्वा स्वपेत्ततः ।
प्रदोषपश्चिमौ यामौ वेदाभ्यासेन तौ नयेत् ।
यामद्वयं शयानस्तु ब्रह्मभूयाय कल्पते ॥ ८७

इति सप्तसप्ततितमोऽध्यायः

*பகலின் 6-7 வது பகுதியை இதிஹாஸ - புராண ச்ரவணத்துடன் கழித்து எட்டாவது பகுதியில் உலாவர ஸூர்யனுடனுள்ள மாலையில் மாலைக்கான ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டும். பிராணாயாமம், ''ஆபோஹிஷ்டா'' என புரோக்ஷணம், ''அக்நிச்சமா'' என்ற மந்திரம் ஜபித்து நீரைப்பருகுதல், அர்க்கியம், தர்பணம், ஸாவித்ரீஜபம், உபஸ்தானம், ஔபாஸனம், வைசுவதேவம் இவற்றைத் தவறாமல் செய்ய வேண்டும். இரவு உணவிற்குப் பின் தன் வீட்டில் கிழக்கிலும் மாமனார் வீட்டில் தெற்கிலும், யாத்திரையில் மேற்கிலும் தலை வைத்துப் படுக்கவேண்டும். எங்கும் வடக்கே தலை வைத்துப் படுக்கக் கூடாது. ராத்ரிஸூக்தம் ஜபித்து அகஸ்தியர், மாதவர், முசுகுந்தர், கபிலர், அஸ்தீகர், என்று இனிது தூங்குகிற ஐவரை நினைத்து வணங்க வேண்டும். தலையின் அருகே மங்களகரமான நீர் நிரம்பிய கலசத்தை வைத்துக் கொள்ளவும். வேதமந்திரங்களைச் சொல்லி ரக்ஷை செய்து தூங்கவும். மாலையின் இறுதியில் வருகிற இருயாமங்களை வேதம் கூறிக்கழிக்கவும். பின் இருயாமங்களில் தூங்குபவன். பிரும்மநிலையடைகிறான். (79-87)*

—★—

## षट्सप्ततितमोऽध्यायः

अथातस्सम्प्रवक्ष्यामि वानप्रस्थाश्रमं द्विजाः ।
सन्यासाश्रमधर्मांश्च शृण्वन्तु श्रद्धयाऽन्विताः ॥ १

पुत्रे भार्यां विनिक्षिप्य गृहीत्वा वा समाहितः ।
शुक्लपक्षे शुभे वारे सुमुहूर्ते वनं व्रजेत् ॥ २

यमादिसहितः शुद्धः तपः कुर्यादतन्द्रितः ।
शाकमूलफलाशी स्यात्तेनैवेशं समर्चयेत् ॥ ३

ग्रामादानीय वाऽश्नीयात् ग्रासान् षोडश नाधिकम् ।
जटाश्च बिभृयान्नित्यं नखरोमाणि नोत्सृजेत् ॥ ४

वेदाभ्यासरतः शान्तः पञ्चयज्ञपरायणः ।
स्नानं त्रिषवणं कुर्यादग्निहोत्रपरो द्विजः ॥ ५

वल्कलं धारयन्नित्यं सर्वभूतदयापरः ।
जितेन्द्रियो जितक्रोधः प्रतिग्रहविवर्जितः ॥ ६

एकवारं समश्नीयात् मधुमांसविवर्जितः ।
भूमौ शयीत सततं गायत्रीं च जपेत्सदा ॥ ७

कृच्छ्रचान्द्रायणं कुर्यात् मासि मासि वने स्थितः ।
ग्रीष्मे पञ्चतपाश्च स्यात् शिशिरे जलमध्यगः ॥ ८

एकपादेन सन्तिष्ठेत् वायुभक्षोऽनसूयकः ।
योगाभ्यासरतो भूत्वा ध्यायेत्पशुपतेः पदम् ॥ ९

कृष्णाजिनीयोत्तरीयशुक्लयज्ञोपवीतकः ।
अथवाग्निं समारोप्य स्वात्मनि ध्यानतत्परः ॥ १०

सदोपनिषदभ्यासे यत्नवान् सुसमाहितः ।
त्रिपुण्ड्रोद्धूलनं कुर्याद्रुद्राक्षं बिभृयात्तथा ।। ११

''அத்தியாயம்'' - 77

வானப்பிரஸ்தமும் ஸன்யாஸமும் மற்றுமிரு ஆசிரமங்கள். பிள்ளையிடம் மனைவியின் பாதுகாப்பை ஒப்படைத்து விட்டோ அல்லது தன்னுடன் அவளை அழைத்துக் கொண்டோ, சுக்லபக்ஷத்தின் நன்னாளில் நல்ல வேளையில் காட்டிற்கு வானப்பிரஸ்தன் செல்ல வேண்டும். யமம் நியமம் முதலிய கட்டுப்பாட்டுடன் சோம்பலின்றி தவம் புரியவேண்டும். காயும் கிழங்கும் பழமுமே உணவாகக் கொள்வான். ஈசனையும் அவற்றாலேயே வழிபடுவான். அல்லது அருகிலுள்ள கிராமத்திலிருந்து 16 கவளங்களுக்கு மேற்படாமல் பிக்ஷை எடுப்பான். சடை வளர்ப்பான். நகரோமங்களை வெட்டிக்களைய மாட்டான். வேதமோதுவான். அமைதியுடன் தேவ- ருஷி - பித்ரு- மனுஷ்ய பூதயஜ்ஞங்கள் புரிவான். மூன்று வேளைகளிலும் நீராடி மரவுரி தரித்து அக்னி ஹோத்ரம் செய்வான். உயிரினத்திடம் பரிவு, புலனடக்கம், கோபமின்மை, பிறரையாசித்து உதவி பெறுமை, ஒருவேளை உணவு, மதுமாம்ஸம் விலக்குதல், தரையில் படுக்கை, எப்போதும் காயத்ரீ ஜபம், சாந்திராயண விரதம். கோடையில் பஞ்சாக்னிகளின் நடுவில் நின்று தவம், குளிர்நாட்களில் நீரின் நடுவே ஒரு காலில் நின்று தவம் என்று வாழ்வான். வாயுவே அவனுக்கு உணவு. யோகநிலையில் சிவத்தியானம், கருமான் தோலாலான மேலாடை, அக்னியைக் தன்னுள்ளே ஆரோபித்து ஆத்மத்தியானத்துடன் உபநிஷத்துக் கருத்துகளை உள்வாங்கி அவற்றில் சிந்தனையை நிலைக்கச் செய்வது விபூதி தரித்து வாழ்வான். இதுவே வானப்ரஸ்த நிலை. (1-11)

यदा वैराग्यमुत्पन्नं तदैव प्रव्रजेद्धनी ।
चतुर्विधास्ते विज्ञेया यतयो वृत्तिभेदतः ।। १२

कुटीचको मुनिश्रेष्ठा स्तथैव च बहूदकः ।
हंसः परमहंसश्च तेषां वृत्तिं वदामि वः ।। १३

कुटीचकस्तु संन्यस्य स्वे स्वे वेश्मनि भूसुराः ।
भिक्षामादाय भुञ्जीत स्वबन्धूनां गृहे यथा ॥ १४

शिखी यज्ञोपवीती च त्रिदण्डी सकमण्डलुः ।
सपवित्रश्च काषायी गायत्रीजपतत्परः ॥ १५

उद्धूलनं त्रिपुण्ड्रं च कुर्यान्नित्यं त्रिसन्धिषु ।
शिवलिङ्गार्चनं कुर्याद्भक्तिश्रद्धासमन्वितः ॥ १६

बहूदकश्च संन्यस्य बन्धुपुत्रादिवर्जितः ।
सप्तागारश्चरेत् भैक्षं एकान्नं परिवर्जयेत् ॥ १७

गोवालरज्जुसम्बद्धत्रिदण्डं शिक्यमेव च ।
पात्रञ्चापि पवित्रञ्च कौपीनं चापि धारयेत् ॥ १८

कन्थां च पादुकच्छत्रे वंक्षणी योगपट्टकम् ।
अजिनं चाक्षसूत्रं च खनित्रं च कृपाणकम् ॥ १९

शिखायज्ञोपवीतं च धारयेत्सततं शुचिः ।
स्वाध्याये सर्वदा वाचं उत्सृज्य ध्यानतत्परः ॥ २०

सन्ध्याकाले च गायत्रीं जपन् कर्म समाचरेत् ।
अंसे कमण्डलुं शिक्यं भिक्षापात्रं तथैव च ॥ २१

कलां कौपीनमाच्छाद्य धारयेच्च बहिःपटम् ।
एकं च वैणवं दण्डं धारयेन्नित्यमास्तिकः ॥ २२

अष्टग्रासान् समश्नीयात् सशिखं वपनं चरेत् ।
सन्ध्याकाले तु सावित्रीं जपन् स्यादात्मचिन्तकः ॥ २३

तीर्थसेवां तथा कृच्छ्रं तथा चान्द्रायणादिकम् ।
कुर्याद्ग्रामैकरात्रं च न्यायेनैव सदाचरेत् ॥ २४

மனம் பற்றற்று நிற்கத் தொடங்கியதுமே துறவு பூண வேண்டுமென்ற நியதிப்படி வானப்ரஸ்தன் துறவேற்பான். துறவிகள் நடைமுறையால் நான்கு வகைப்படுவர். குடீசகர், பஹூதகர், ஹம்ஸர், பரமஹம்ஸர் என. குடீசக நிலையாவது - துறவேற்றுத்தன் வீட்டிலேயே இருந்து கொண்டு தன் வீட்டிலோ தன் உறவினர் வீட்டிலோ பிக்ஷை எடுத்து உண்பது, சிகை, யஜ்ஞோபவீதம், மூன்று தண்டங்கள் கமண்டலு, கையில் பவித்ரம், துவராடை, எப்போதும் காயத்ரீ ஜபம் மூன்று வேளைகளிலும் விபூதி பூசி சிவலிங்கத்தின் வழிபாடு என வாழ்வது. ''பஹூதகனின் நிலை'' - உற்றார் உறவினரின்றி ஏழு வீடுகளில் பிக்ஷை எடுத்து (ஒரே வீட்டு உணவை ஏற்காமல்) உண்பது, பசுவால்மயிரால் மூன்று தண்டங்களைப் பிணைத்துத்தரிப்பது, தோளில் பை,, பிக்ஷபாத்திரம், பவித்ரம் தரிப்பது, கௌபீன ஆடை, கந்தலாடை, ஜபத்திற்கான ஸூத்ரக்கயிறு, பாதுகை, குடை, இடுப்பில் யோகபட்டம், மான்தோலாடை, மண்வெட்டி, கத்தி, சிகை, உபவீதம் இவற்றை எப்போதும் தாங்கியிருப்பான். வேதபாராயணம், தியானம், ஸந்தியா வந்தனம் காயத்ரீ ஜபம் தோளில் கமண்டலு, பை, பிக்ஷக்கான பாத்திரம், உள்ளே கௌபீனம், மேல் ஆடை, ஒரே மூங்கில் தண்டம், 8 பிடியுணவு, சிகையுடன்வபனம், மூன்று வேளைகளிலும் ஸந்தியா வந்தனம், ஆத்ம சிந்தனை, தீர்த்த யாத்திரை, சாந்திராயண விரதம் ஒவ்வொரு கிராமத்திலும் ஓரிரவு தங்குதல் என நடைமுறை அமையும். (12-24)

हंसस्तु परमो विप्रः त्रिदण्डं च कमण्डलुम् ।
उष्णीषं शिक्यमजिनं रज्जुं गोवालनिर्मितम् ॥ २५

शिखायज्ञोपवीतं च नित्यकर्म च वर्जयेत् ।
कौपीनमाच्छादनं च कन्धां शीतनिवारकाम् ॥ २६

योगपट्टाक्षसूत्रे च तथा छत्रं च पादुके ।
एकं च वैणवं दण्डं गृह्णीयादव्रणं द्विजः । २७

अग्निरित्यादिभिः मन्त्रैः कुर्यादुद्धूलनं मुदा ।
ओमित्येव त्रिरुच्चार्य सहस्रं च त्रिपुण्ड्रकम् ॥ २८

मृत्पात्रं दारुपात्रं वा तथा पात्रं च वैणवम् ।
पाणिपात्रं च गृह्णीयादाचम्यैव तथोदकम् ॥ २९

माधूकरं तथा नित्यं परहंसः सदा चरेत् ।
नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ॥ ३०

तस्माद्योगानुगुण्येन भुञ्जीत परहंसकः ।
अभिशस्तं समुत्सृज्य सार्ववर्णिकमाचरेत् ॥ ३१

*''ஹம்ஸர்'' என்ற நிலை - திரிதண்டம், கமண்டலு, முண்டாசு, தோள்பை, மான்தோல் மேலாடை பசுவின் வால் மயிராலான கயிறு இவை அடையாளம், சிகையும் உபவீதமும், ஸந்தியாவந்தனம் முதலிய நித்யகர்மங்களும் இவருக்கில்லை. பரமஹம்ஸநிலையில் கௌபீனம் குளிர் நீங்கப் போர்வை யோகபட்டம், ஜபஸூத்ரம், குடை, பாதுகை, ஒருமூங்கில் தண்டம், ''அக்னிரிதிபஸ்ம'' என்ற மந்திரம் கூறி விபூதியைப் பூசுதல், பிரணவம் கூறி விபூதியாலான திரிபுண்டிரம், மண்ணாலோ மரத்தாலோ மூங்கிலாலோ ஆனபாத்திரம், கையையே பாத்திரமாகக் கொள்ளுதல், ஆசமனம் செய்து நீர் பருகுதல், மாதுகரமாக உணவைப் பெறுதல், (வண்டு திரிந்து பல பூக்களிலிருந்து தேனுக்கான பூந்தாது சேமிப்பது போல் பலரிடமிருந்து பிக்ஷை பெறுதல்) உணவேற்காவிடினும் மனம் நிலைபெற்று யோகம் கூடுவது. உணவேற்பதில் முனைந்தாலும் யோகம் நிலை பெறாது. அதனால் யோக நிலைக்கு உதவுகிற வகையில் உணவேற்க வேண்டும். தன் தனி வர்ணநிலைக்கு விதித்த நடைமுறையை விட்டு எல்லாவர்ணத்திற்கும் பொதுவான நடைமுறையைக் கொள்ள வேண்டும். (25-31)*

उत्तरोत्तरलाभे तु पूर्वं पूर्वं परित्यजेत् ।
गुरुशुश्रूषको नित्यं आत्मज्ञानं समभ्यसेत् ॥ ३२

ज्ञानं शौचमभिध्यानं सत्यानृतविवर्जनम् ।
लोभं मोहं च दर्पं च कामं क्रोधं च वर्जयेत् ॥ ३३

चातुर्मास्यं च सर्वेषां वदन्ति ब्रह्मवादिनः ।
कुटीचकश्च हंसश्च तथैव च बहूदकः ॥ ३४

गायत्रीमात्रसम्पन्ना भवेयुर्मोक्षकारणात् ।
वेदास्त्रयस्त्रयो लोकाः प्रणवे पर्यवस्थिताः ॥ ३५

तस्मात्प्रणवमेवैकं परहंसः सदा जपेत् ।
सन्ध्याकाले तु शुद्धात्मा प्रणवेन समाहितः ॥ ३६

षट्प्राणायामकं कृत्वा जपेदष्टोत्तरं शतम् ।
विविक्तदेशमाश्रित्य सुखासीनः समाहितः ॥ ३७

यथाशक्ति समाधिस्थो भवेत् सन्यासिनां वरः ।
क्रमाद्वा क्रमतो विद्वान् उत्तमां वृत्तिमाश्रयेत् ॥ ३८

उत्तमां वृत्तिमापन्नः नीचां वृत्तिं समाश्रितः ।
आरूढपतितो ज्ञेयः सर्वकर्मबहिष्कृतः ॥ ३९

மேனிலை பெறப்பெற கீழ்நிலைக்கானதை விடவேண்டும். குருசுச்ரூஷை ஆத்மஜ்ஞானப் பயிற்சி, தூய்மை, பொய்யும் மெய்யு மற்ற நிலை பற்றிய தியானம், பேராசை மதிமயக்கம், திமிர், காமம், கோபம் இவற்றைத் தவிர்த்தல் அவசியம். எல்லோருக்கும் சாதுர்மாஸ்ய விரதம் உண்டு. பரமஹம்ஸர் தவிர மற்ற மூவரும் காயத்திரீ ஜபம் செய்வது அவசியம். ஓங்காரத்தில் மூன்று வேதங்களும் உலகங்களும் அடக்கம். அதனுல் பரமஹம்ஸர் பிரணவஜபம் மட்டும் செய்தால் போதும். ஆறுதடவை பிராணாயாமம் செய்து பிரணவத்தை 108 தடவை ஜபிப்பது. தனிமையில் வசிப்பது, ஸமாதி நிலையில் அமர்வது, சிறிது சிறிதாக உத்தமநிலை பெறுவது இவை பரமஹம்ஸதர்மம். மேனிலையிலிருந்து கீழ்நிலைக்கு வீழ்பவன் பதிதனே. (32-39)

प्रव्रजन्तं द्विजं दृष्ट्वा स्वस्थाच्चलति भास्करः ।
एष मे मण्डलं भित्वा ब्रह्मलोकं गमिष्यति ॥ ४०

बेरन्तु द्विविधं ज्ञेयं चरं चाचरमेव च ।
चरं सन्यासिनां रूपं अचरं प्रतिमादिकम् ॥ ४१

न तस्य दुर्लभं किञ्चित् विद्यते भुवनत्रये ।
दुर्वृत्तो वा सुवृत्तो वा मूर्खो वा पण्डितोऽपि वा ॥ ४२

वेषमात्रेण सन्यासी पूज्यस्सर्वेश्वरो यथा ।
वृद्धानामातुराणां च भीरुत्वात् सङ्घवर्तिनाम् ॥ ४३

ग्रामे वाधिपुरे वापि वासो नैकत्र दूष्यते ।
यतीनामातुराणाञ्च वृद्धानाञ्च तथैव च ॥ ४४

एकान्नं नैव निन्द्यं स्यात् एकैकस्मिन्दिने द्विजाः ।
मृतौ न दहनं कुर्यात् परहंसस्य सर्वदा ॥ ४५

कर्तव्यं खननं तस्य नाशौचं नोदकक्रिया ।
अश्वत्थस्थापनं कुर्यात् तद्देशे मुनिसत्तमाः ॥ ४६

अश्वत्थः स्थापितो येन स्थापितो हि महेश्वरः ।
दर्शनात् स्पर्शनात्तस्य सर्वन्नश्यति पातकम् ॥ ४७

एवं वः कथितो विप्राः धर्मस्सन्यासिनामिह ।
कर्मनिष्ठे दत्तमेकं तपोनिष्ठे शतं फलम् ॥ ४८

सहस्रं ज्ञाननिष्ठे तु ज्ञानिनं तं प्रपूजयेत् ॥

इति सप्तसप्ततितमोऽध्यायः

*அந்தணன் துறவேற்று வெளியே கிளம்பும் போது, ஸூரியன் ''இவன் என் மண்டலத்தைப் பிளந்து கொண்டு*

பிரும்மலோகம் செல்வானோ'' என நடுங்குவான். ஈசனுக்கு இருவிக்ரகங்கள் - சரமானவிக்ரகம் துறவி. அசரமானது பிரதிமை. பரமஹம்ஸனுக்கு மூவுலகிலும் கிட்டாதது ஏதுமில்லை. மக்களளவில் நல்லவனோ கெட்டவனோ துறவி மதிக்கத்தக்கவர். வயது முதிர்ந்தவர், நோயுற்றவர், சூழ்நிலையிடம் பயந்து கூட்டத்தில் கலந்து நிற்பவர், இவர்கள் கிராமத்திலோ நகரத்திலோ ஒரே இடத்தில் தங்குவது குறையாகாது. நோயுற்றவரும் முதியவரும் ஒரே வீட்டில் உணவேற்பதும் தவறல்ல. பரமஹம்ஸர் காலகதி அடைந்தால் குழியில் புதைப்பர். எரியூட்டுதல் இவர்களுக்கு இல்லை. ஆசௌசமும் உதகதானமும் கிடையாது. அவ்விடத்தில் அரசமரத்தை நட்டு வளர்ப்பர். அரசமரத்தை நடுவதே சிவனைக் கோயில் கொள்ளச் செய்ததாகும். அதனைத் தொட்டாலும் கண்டாலும் பாபம் நீங்கும். இது தான் ஸன்யாஸிகளின் நிலை. கர்மநிஷ்டனுக்குத் தந்ததால் ஏற்படுகிற நற்பயனைவிட தவமிருப்பவனுக்கு அளிக்க நூறுமடங்கு பலன். ஜ்ஞானிக்குத்தர ஆயிரம் மடங்கு பலன் தரும். அதனால் ஜ்ஞானியை எப்போதும் பூஜித்தல் நலம். (40-48)

—★—

## अष्टसप्ततितमोऽध्यायः

ऋषयः—

धर्मः सन्यासिनामद्य सप्रपञ्चं निरूपितः ।
तेषां भवेद्यथा मुक्तिः संसारो हि निवर्तते ॥ १

उपायं तादृशं ब्रूहि सर्वज्ञ करुणानिधे ।
एवं पृष्टो मुनीन्द्रैस्तैः कृपयाह यतीश्वरः ॥ २

यतीश्वरः -
अज्ञानिभिर्ज्ञानिभिश्च भक्तिः कार्या महेश्वरे ।
ज्ञानस्योत्पत्तये चाद्य कृतघ्नत्वापनुत्तये ॥ ३

''அத்தியாயம்'' - 78

யதீச்வரரான தக்ஷிணா மூர்த்தியிடம் ருஷிகள் துறவிகள் ஸம்ஸாரபந்தம் நீங்கி முக்தி பெறுவது பற்றி விளக்கம் கேட்டனர். யதீச்வரர் விளக்குகிறார் - ஜ்ஞானம் உண்டாக மஹேசனிடம் பக்தி தேவை. ஜ்ஞானிக்கும் அஜ்ஞானிக்கும் பக்தி உதவும். ஞானம் மஹேசனிடமிருந்து பெற்றதானதால் செய்நன்றி மறவாதிருக்க சிவனிடம் பக்தி வேண்டும். மேனிலை பெற்றவராலும் சிவனது வழிபாடு உலக நன்மைக்காகச் செய்யத்தக்கது. (1-3)

लोकानुग्रहतश्चापि परैः कार्यं शिवार्चनम् ।
आत्मा यदा दर्शयिता दृशोरेवं महेश्वरः ॥ ४

तस्य दर्शयिता तस्मात् शिव आत्मोपकारकः ।
भवाम्बुधेस्समुद्धृत्य परमानन्ददायिनीम् ॥ ५

अकुर्वतां परां भक्तिं प्रत्यवायो भवेद्ध्रुवम् ।
दुष्कर्मापि यथा युक्तं सत्कर्मैवोपजायते ॥ ६

सत्कर्मापि यथा हीनं दुष्कर्मैव भवेद्ध्रुवम् ।
यत्र चण्डेश्वरो देवो दक्षश्चापि निदर्शनम् ॥ ७

கண்களுக்குப் பார்க்கிற திறமையை ஆத்மா அளிக்கிறது. ஆத்மாவிற்கு அத்திறமையை மகேசன் அளிப்பதால் சிவன் ஆத்மாவிற்கு உதவுபவர். பிறவிக்கடலிலிருந்து மீட்டுப்பரமானந்தமளிக்கிற சிவபக்தியைச் செய்யாதவன் கேடுறுகிறான் கெட்ட செயலும் பக்தி உடனிருக்க நற்செயலாகும். நற்செயலும் பக்தியின்றி கெட்ட கர்மமாகும். இதற்குச்சண்டேசுவரனும் தக்ஷனும் உதாரணமாவர். (4-7)

तां कुर्वीत शिवे भक्तिं मुमुक्षुर्बुद्धिमान् जनः ।
सर्वमन्यत् परित्यज्य शिव एव शिवङ्करः ॥ ८

ध्येय इत्याह परमा श्रुतिराथर्वणी तथा ।
अतः सर्वं परित्यज्य शिवादन्यत्तु दैवतम् ॥ ९

तमेव शरणं गच्छेन्मुमुक्षुरपि निर्णयम् ।

*மற்ற தனைத்தையும் தவிர்த்துச் சிவன் ஒருவரே நன்மை தருபவரெனக் கண்டு முக்தியை நாடுகிற அறிவாளி சிவனிடம் பக்தி கொள்வான். சிவனைத்தவிர வேறு தைவமில்லை. சிவன் ஒருவரே தியானிக்கத் தக்கவர் என அதர்வ வேதம் கூறும். முக்தியை நாடுபவன் சிவனையே அடையவேண்டும். (8-9)*

यजनं द्विविधं प्रोक्तं बाह्यमाभ्यन्तरं तथा ॥ १०

यतीनां योगिनां चैतत् आभ्यन्तरमुदीरितम् ।
परेषां बाह्यपूजा स्यात्तत्तत्कल्पोक्तमार्गतः ॥ ११

आभ्यन्तरं ज्ञानपूजा तत्कर्म तु वदामि वः ।
भूतशुद्धिं द्रव्यशुद्धिं आदौ कुर्वीत तत्ववित् ॥ १२

पञ्चभूतात्मदेहाभिमानराहित्यमत्र हि ।
भूतशुद्धिर्द्रव्यशुद्धिर्विषयेषु अवज्ञता ॥ १३

हित्वा न मम पंच्छीव शीतवत् ज्ञानवाचिना ।
शिव एति पदादीशदर्शनं मन्त्रशोधनम् ॥ १४

शिवतत्वज्ञानतः स्वस्वरूपमवलोक्य च ।
तन्मयत्वेन स्थितिस्स्यादात्मशुद्धिरुदीरिता ॥ १५

*வழிபாடு இருவகை - வெளிவழிபாடு உள்ளத்து வழிபாடு என. துறவிகளும் யோகிகளும் உள்ளத்தால் வழிபடுவர். மற்றவர் வெளிவழிபாட்டைச் செய்வர். உள்ளத்து வழிபாடு உள்ளத்து உணர்வால் செய்யத்தக்கது. பூஜாதத்துவம் உணர்ந்தவன் முதலில் பூத சுத்தியையும் திரவிய சுத்தியையும் செய்வான். ஐந்து*

பூதங்களாலான உடலில் தான் என்ற எண்ணத்தை விடுவது "பூத சுத்தி". வெளிப்பொருளுணர்வை விடுவது "திரவ்ய சுத்தி". தனதென்ற எண்ணத்தை விட்டு எல்லாவற்றிலும் சிவநிலை உணர்வுடன் உள்ளத்தால் ஈசனைக் காண்பது மந்திர சுத்தி. சிவதத்துவ உணர்வுடன் சிவவடிவில் தன் வடிவைக் கண்டு சிவனாகவே ஆவது "ஆத்மசுத்தி". *(10-15)*

अखण्डसच्चिदानन्दाभयरूपः सदाशिवः ।
इति तद्भावनं नित्यं द्रव्यशुद्धिरुदीरिता ॥ १६

अथ ह्यासनमूर्त्यादिक्रमोऽत्र प्रतिपाद्यते ।
आत्मासनं महेशस्य मूर्तिज्ञानमनावृतम् ॥ १७

मूलन्तु परमानन्दशिवाभिव्यक्तिरेव हि ।
आवाहनं निश्चलत्वं स्थापनं परिकीर्तितम् ॥ १८

आभिमुख्यं सन्निधानं लयविक्षेपयोश्च्युतिः ।
तत्सन्निरोधनन्तु स्यादथ पाद्यादिरुच्यते ॥ १९

मायाद्वयच्युतिः पाद्यमर्घ्यमज्ञानमोचनम् ।
कर्मत्रयविनाशस्त्वाचमनं परिकीर्तितम् ॥ २०

नैर्मल्यमभिषेकस्य वस्त्रं स्याच्छुद्धिरावृतिः ।
निर्लेपनन्तु श्रीगन्धः द्वन्द्वत्यागः प्रसूनकम् ॥ २१

துண்டாடப்பெறாத முழுப் பொருளும் பேரிருக்கையும் பேருணர்வும் பேரானந்தமும் பயமின்மையும் வடிவாகக் கொண்டவர் சிவபெருமான் என உணர்ந்து அந்நிலையடைவது "திரவ்யசுத்தி". உள்ளத்து வழிபாட்டில் ஆஸனம் முதலிய உபசாரங்களின் உட்பொருள் விளக்கப் பெறுகிறது ஈசனுக்கு ஆத்மா "ஆஸனம்". மறைப்புறாத தூய ஜ்ஞானம் வடிவம். பேரானந்த சிவதத்துவ வெளிப்பாடே அதன் வேர்ப்பகுதி (ஆதாரம்). இவ்வுணர்வே "ஆவாஹனம்". அந்நிலையில் அசையா

திருப்பது ''ஸ்தாபனம்''. அவர் அருகில் எதிரிலிருப்பதான உணர்வு ஸந்நிதானம். ''அபிமுகம்'' மற்றொன்றில் மறைவதோ மாறுபட்ட தோற்றமோ இல்லாதிருப்பதே ''ஸந்நிரோதனம்'' (ஆராதிக்கவிருக்கிற தேவதையை வரவேற்று அமரச் செய்து தனக்கு அருகாமையைத் தரவேண்டி அவ்வாறு மறையாமல் வேறுவிதமாகத் தோன்றிக் குழப்பமுறச் செய்யாமலிருக்கச் செய்கிற உபசாரங்களை ''ஆவாஹிதோபவ'', ''ஸ்த்தாபிதோ பவ'' ''அபிமுகோ பவ'', ''ஸந்நிஹிதோ பவ'', ''ஸந்நிருத்தோ பவ'' என வேண்டி அவரது அருகாமையை உணர்வர்.) ''ஆவரணம் (மறைப்பு) ''விக்ஷேபம்'' (ஏமாற்றுகிற தோற்றம்) என்ற இருமாயைகள் விலகியதாக உணர்வே ''பாத்யம்''. அறியாமை அகன்ற உணர்வே ''அர்க்க்யம்''. ஸஞ்சிதம், பிராரப்தம், ஆகாமி என்ற மூன்று கர்மங்களின் மறைவே ''ஆசமனம்''. தூய்மையே ''அபிஷேகம்''. தூய்மையின்மையிலிருந்து தடுக்க உதவுவதே ''வஸ்திரம்''. ஒட்டுதலின்மை ''கந்தம்'' (நறுமணப்பூச்சு). ஸுகதுக்க இரட்டை மறைவே ''புஷ்பம்''. (16-21)

अज्ञानवासनानाशो धूपः दीपः स्वयं प्रभा ।
स्वानुभूतिस्तु नैवेद्यं पानीयञ्च सुवासितम् ॥ २२

हस्तोद्धर्तनमीशस्य रसस्वादपरिक्षयः ।
मुखवासनताम्बूलं कषायगलनं मतम् ॥ २३

आहताख्यस्य नादस्य लयः स्तोत्रमुदीर्यते ।
शम्भुना सह सर्वत्र व्याप्तिस्स्यात्तु प्रदक्षिणम् ॥ २४

नदीसमुद्रयोस्तोयं यथैकं योगतो भवेत् ।
योगस्तथाऽऽत्मशिवयोर्नमस्कार उदीरितः ॥ २५

ज्ञेयं ज्ञाता यथा ज्ञानं मग्नं भवति तत्तथा ।
पराङ्मुखाग्रमेतत्स्यादात्मनश्च निवेदनम् ॥ २६

*அஜ்ஞானம் உள்ளத்தில் பதிந்து வாஸனையாக அவ்வப்போது தூண்டுகோலாகும் நிலையை விரட்டுவது "தூபம்". தன்னொளியால் துலங்குவதே "தீபம்". தன்னிலை உணர்வே "நைவேத்யமும்" மணமிக்க "பானீயமும்" ருசியுணர்வு மறப்பதே "உத்வர்தனம்" (கைகால் தேய்த்துப்பிடித்து விடுதல்.) உள்ளத்திலுள்ள கெட்ட வாஸனை (கஷாயம்) அகற்றுவதே "தாம்பூலம்". உரைதலால் ஏற்படுகிற ஒலி (ஆஹதநாதம்) உரைதலின்றி எழுகிற (அநாஹத) நாதத்தில் லயமே "ஸ்துதி". சிவபெருமானுடன் எங்கும் நீக்கமற நிறைந் திருப்பதே "பிரதக்ஷிணம்" ஆறு. கடலுடன் கலந்து கடலாவது போல் ஆத்மா சிவனுடன் கலந்து சிவனுவதே "நமஸ்காரம்". அறியத்தக்கது அறிபவர், அறிவு என்ற திரிபுடீ மறைந்து உள்நோக்கிய (பொருளறிவாகமாருத) தூயஜ்ஞானமாக உணர்வதே "ஆத்மநிவேதனம்" இவ்வாறு உபசாரங்கள் அமையும். (22-26)*

ऋषयः—

यदात्मेति विमुह्यन्ति सूरयोऽपि यतीश्वर ।
तस्य देवस्य रूपं किं तत्रात्मा वर्तते कथम् ॥ २७

यतीश्वरः -

पञ्चभूतात्मको देहस्तत्रात्मा पञ्चपञ्चकः ।
स्वस्वकर्मार्जितान् भोगान् भुङ्क्ते शिवनियोगतः ॥ २८

तत्र देहसिराचर्मरोममांसास्थिपञ्चकम् ।
पृथिव्यंशो जलं रक्तं शुक्लं शोणितमेव च ॥ २९

जलांशो दाहनिद्राक्षुत्क्षान्त्यादि पावकांशकम् ।
हिक्कागतागतादीनि वायोरंशाः प्रकीर्तिताः ॥ ३०

आकाशस्य तु रन्ध्रादिरंशः स्यान्मुनिपुङ्गवाः ।
पञ्चानामपि कोशानां स्वरूपं कथयामि वः ॥ ३१

अन्नं प्राणमनोविज्ञानमानन्दमयनामतः ।
कोशाः पञ्चैव तत्रान्नमयकोश उदीर्यते ॥ ३२

पित्रोः शुक्लं शोणितञ्च मिलितौ गर्भगोलके ।
पिण्डीभूय प्रतिदिनं वर्द्धते च शनैः शनैः ॥ ३३

जायते तत्र मांसास्थिसिराकर्मादिकं ततः ।
एतदन्नमयं कोशं आहुस्तत्त्वार्थवेदिनः ॥ ३४

तत्र तोयानुषङ्गेण स्पन्दः प्राणमयः स्मृतः ।
तत्राग्नेरनुषङ्गेण स्तुतिप्रोक्तो मनोरथः ॥ ३५

तत्र वायोः प्रसङ्गेन धीर्विज्ञानमयः स्मृतः ।
खानुषङ्गात्तत्र सुखं आनन्दमय उच्यते ॥ ३६

एवंभूते शरीरेऽस्मिन् पशुपत्या नियोजितः ।
योजितस्तत्वजालेन भोगान् भुङ्क्ते स्वकर्मजान् ॥ ३७

इति अष्टसप्ततितमोऽध्यायः

—★—

*உடலே ஆத்மா என மயங்கச்செய்கிற உடலின் உண்மை நிலைபற்றி விளக்கக் கோரிய ருஷிகளுக்கு யதீச்வரர் விளக்குகிறார். உடல் என்பது ஐந்து பூதங்களாலானது. அதனுள் ஆத்மா 5★5 வடிவங்கள் ஏற்கிறது. சிவனின் ஆணைப்படி வினையின் பயனை அனுபவிக்கிறது. உடலிலுள்ள ரத்தக்குழாய் தோல், உரோமம், தசை, எலும்பு என ஐந்தும் பூமிதத்வத்தாலானவை. நீர், ரத்தம், சுக்கிலம் (ஆண்மைத் திரவம்) சோணிதம் (பெண்மைத் திரவம்) இவை ஜலதத்துவத்தின் அம்சம். எரிச்சல், தூக்கம், பசி, பொறுமை முதலியவை அக்னிதத்துவத்தின் அம்சம். விக்கல் (இருமல்) நடைமுதலியவை வாயுவின் அம்சம். உடலிலுள்ள குழாய்களில் உள்ள இடைவெளி முதலியவை ஆகாசத்தின்*

அம்சம். அன்னமயம், பிராணமயம், மநோமயம், விஜ்ஞானமயம், ஆனந்த மயம் என ஐந்து கோசங்கள். (உறைகள்) தாயும், தந்தையும் உறவுகொண்டதால் சுக்கிலமும் சோணிதமும் இணைந்து கருஉருப்பெற்று தினமும் மெள்ள மெள்ள வளர்கிறது. தசை, எலும்பு, ரத்தக்குழாய் எனச்செயலுக்கேற்ற உருப்பெற்று உடலாகிறது. இது "அன்னமயகோசம்". அதில் கசிவு மிகுந்து அசையச் செய்வது "பிராணமயகோசம்" அதில் இயக்கத்தைத் தூண்டுகிற மனமாகிறரதமே "மனோமயகோசம்" அதில் வாயு இயங்கத் தொடங்க அறிவு, அதனைக் கொண்ட "விஜ்ஞானமய கோசம்" அதில் ஆகாசமெனும் பரவெளி உட்புக "ஆனந்தமய கோசம்". இவ்வைந்தினுள் சிவனது ஆணைப்படி உட்புகுந்த ஆத்மா தத்துவங்களின் உதவியால் இயங்கி தன் வினைக்கேற்ற உணர்வுகளை அனுவிக்கிறான்.ன்(27-37)

—★—

## एकोनाशीतितमोऽध्यायः

यतीश्वरः—

अस्मिन् शरीरे तु पुनः सन्ति स्थानानि षट् द्विजाः ।
मूलाधारः स्वाधिष्ठानं मणिपूरोऽप्यनाहतम् ॥ १

विशुद्धिराज्ञाचक्रश्च मूलाधारः स उच्यते ।
अपानलिङ्गयोर्मध्ये चतुरङ्गुलमानकम् ॥ २

चतुरश्रं पीठमस्ति तन्मध्ये तु चतुर्दलम् ।
कमलं तस्य मध्ये तु प्रणवं पीठमीक्ष्यते ॥ ३

हंसहंसेत्यक्षराणां चतुष्टययुतेऽत्र ह ।
मूलाग्निर्मूलवायुश्च दृश्येते सततोदिते ॥ ४

मूलवायुस्तु मूलाग्निर्द्वादशाङ्गुलमुत्थितः ।
प्रज्वाल्य तत्र तु वृथा गते तु चतुरङ्गुले ॥ ५

दन्तरक्षाङ्गुलं शाम्येदित्येव प्राणवायुना ।
एकैकघटिकायास्तु षष्ट्युत्तरशतत्रयम् ॥ ६

श्वासा निर्यान्ति तत्रैकदिवसे षट्शताधिकम् ।
एकविंशतिसाहस्रं श्वासा निर्यान्ति तत्र च ॥ ७

षष्ट्युत्तरशतद्वन्द्वाधिकसप्तसहस्रकम् ।
श्वासा वृथा विनिर्यान्ति पुनस्तदवशेषितः ॥ ८

श्वासाश्चतुःशताधिक्यं चतुर्दशसहस्रकम् ।
आत्मनैवोपशाम्येत्तद्वृथा श्वासाश्च गच्छतः ॥ ९

मन्त्रसामर्थ्यतः स्वात्मन्युपरुन्धे सुधीर्यदि ।
न जरामरणादिः स्यादित्याहुर्योगवित्तमाः ॥ १०

*''அத்தியாயம்'' - 79*

*யதீசுவரர் விளக்குகிறார், மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞா என ஆறு இடங்கள் உடலில் உள்ளன. அபானமெனும் ஆஸனவாய்க்கும் ஆண்(பெண்) குறிக்குமிடையே நான்கு அங்குலப்பரப்புள்ள சதுரமான பீடம் உள்ளது. அதன் நடுவில் நான்கிதழ்த் தாமரை. அதன் நடுவே ஓங்காபீடம். ஹம்ஸ - ஹம்ஸ என்ற நான்கு அக்ஷரங்கள் கொண்டது. அங்கு உடலின் மூலகாரணமான மூலஅக்னியும் மூலவாயுவும் எப்போதும் எழுச்சியுடனுள்ளன. இரண்டும் பன்னிரண்டங்குல அளவு ஜ்வாலையுடன் துலங்குகின்றன. இந்த நான்கங்குலப் பரப்பில் ஒரு கடிகை நேரத்தில் (24 நிமிஷங்களில்) 360 தடவை மூச்சுவிடுவதற்கான தூண்டுதல் ஏற்படுகிறது. ஒருநாளில் 21600 சுவாஸங்கள் வெளியேறுகின்றன பயனின்றி. 7260 சுவாஸங்கள் வெளியேறுகின்றன. 14400 சுவாஸங்கள் வீணாகாமலிருக்க அறிவாளி அதனைக்கட்டுப் படுத்துகிறான். இவ்வாறு பிராணவாயுவைக் கட்டுப்படுத்துவதால் மூப்பும் மரணமும்*

அனுகாதென அறிஞர் கூறுவர். (1-10)

अत एव महान्तो हि प्राणान्रुन्धन्ति सर्वदा ।
प्राणादिपञ्चवायूनां हृदादि स्थानमुच्यते ॥ ११

नागादिपञ्चवायूनां चेष्टाक्रम उदीर्यते ।
आसारप्रसरौ नागो नेत्रोन्मीलनमीलने ॥ १२

कूर्मः कृकरवायुस्तु नासायां जनयेत् क्षुतम् ।
देवदत्तश्शीघ्रवारो दुःखकारी धनञ्जयः ॥ १३

प्राणिनस्तेऽपि देवेषु व्याप्य स्थित्वाऽग्निदाहतः ।
कपालमोक्षसमये निर्यात्येतादृशे पुनः॥ १४

அதனால் பெரியோர்கள் மூச்சை எப்போதும் கட்டுப்படுத்துகின்றனர். பிராணன் முதலிய வாயுக்களுக்கு இதயம் முதலிய இடங்கள் உண்டு. நாகம் கூர்மம் க்ருகரம், தேவதத்தம் தனஞ்ஜயம் என ஐந்து வாயுக்கள் உண்டு. நீட்டிமடக்க விரிக்க ''நாகம்'' கண்மூடித்திறக்க ''கூர்மம்'' மூக்கில் தும்மல் முதலியவற்றைத் தூண்ட ''க்ருகரம்'' துரிதப்படுத்த ''தேவதத்தம்'' துன்புறுத்த ''தநஞ்ஜயம்'' இவை அனைத்தும் உடல் முழுவதும் பரவிநிற்கின்றன. நெருப்பால் எரிந்தாலோ மண்டை வெடித்திறந்தாலோ இவை உடலை விட்டு வெளியேறும். (11-14)

मूलाधारे किंशुकाभे स्थाने ह्यास्ते गणेश्वरः ।
स्वाधिष्ठानन्तु लिङ्गस्य मूलेषु दलपङ्कजम् ॥ १५

षडक्षरयुतं शुद्धं तत्र ब्रह्मा सदा वसेत् ।
मणिपूरं नाभिमूले पद्मं दशदलान्वितम् ॥ १६

दशाक्षरसमायुक्तं नीलन्तत्र वसेद्धरिः ।
अनाहतन्तु हृदयकमलं स्फाटिकप्रभम् ॥ १७

अष्टाङ्गुलप्रमाणश्च तन्नालं हृदये स्थिरम् ।
अधोनम्रतया तस्य मुकुलं नाभिमूलकम् ॥ १८

"மூலாதாரம்" கிம்சுக (செம்புரசு) நிறம் கொண்டது. கணபதி தேவதை. லிங்கத்தின் மேல் ஆறு தளமுள்ள தாமரை கொண்டது ஆறெழுத்துள்ள "ஸ்வாதிஷ்டானம்" அதற்கு பிரும்மா தேவதை. தொப்புளடியில் 10 தளமுள்ள தாமரை நீல நிறமுள்ளது "மணிபூரகம்" அதில் உள்ளவர் விஷ்ணு. இதயகமலமே "அநாஹதம்" ஸ்படிக நிறம் கொண்டது, 8 அங்குல அளவுள்ள அத்தாமரையின் தண்டு இதயத்தைத் திடமாகப் பற்றியுள்ளது. கீழ்நோக்கிய தாமரை தொப்புளில் வேர்கொண்டது. (15-18)

मूलाग्नौ ज्वालिते मूलवायुनाऽतिविकस्वरम् ।
भवेदूर्ध्वमुखं रक्तवर्णं द्वादशपत्रकम् ॥ १९

द्वादशाक्षरसंयुक्तं तत्र चान्तर्दलाष्टकम् ।
अष्टाक्षरसमायुक्तं शुद्धावस्था तु तत्र हि ॥ २०

सदाशिवश्चेश्वरश्च बिन्दुर्नादो मनोन्मणिः ।
पुरुषस्तत्वमाभाति प्रकृतिश्चादिकं बहिः ॥ २१

तन्मध्ये तु निवृत्त्याद्याः प्रकाशन्तेऽष्टसिद्धयः ।
तन्मध्ये निष्कलं पूर्णचन्द्रमण्डलसप्रभम् ॥ २२

तत्वानामात्मनश्चापि विवेकोत्पत्तिभूरिदम् ।
एतद्रुद्रस्य हि स्थानं इत्याहुस्तत्ववित्तमाः ॥ २३

மூலாதாரத்திலுள்ள அக்னி மூலவாயுவால் பற்றி எரியும் போது அநாஹதத்தின் நன்கு மலர்ந்த தாமரை மேனுக்கி நிற்கும். செந்நிறமும் பன்னிரண்டு தளங்களும் கொண்டது. அதனுள் எட்டக்ஷரம் கொண்ட எட்டு தளமுள்ள அனுஹதத் தாமரை "சுத்தா" என. ஸதாசிவர் ஈசுவரன், பிந்து, நாதம், மனோன்மணி

*புருஷன் பிரகிருதி என்ற தத்துவங்கள் துலங்குமிடம். நிவ்ருத்திமுதலிய எட்டு ஸித்தி தேவதைகள் இங்குள்ளனர். இதன் நடுவில் பூர்ண சந்திரனுக்கொப்பான ருத்ரரது இடம். ஆத்ம தத்துவ ஆராய்ச்சி, ஆத்ம ஜ்ஞானம். தோன்றுமிடம். (19-23)*

विशुद्धिः षोडशदलं षोडशस्वरसंयुतम् ।
कर्णे माहेश्वरं स्थानं रसास्वादसुखावहम् ॥ २४

भ्रूमध्ये बैन्दवं स्थानं ज्ञानचक्रमितीर्यते ।
दलद्वययुतं पद्ममक्षरद्वयसंयुतम् ॥ २५

शुद्धस्फटिकसंकाशं देवस्तत्र सदाशिवः ।
स तु षट्त्रिंशता तत्वैः देहं संयोज्य तत्स्थले ॥ २६

तत्तत्कर्मार्जितान् भोगान् आस्ते देहेन भोजयन् ।

*''விசுத்தி 16 தளமுள்ளது 16 உயிர் எழுத்துகளின் இடம். காதில் மஹேசுவரர், சுவை உணர்வின் இன்பம் தருமிடம் நெற்றிப் புருவத்தின் இடையே பிந்துவின் ஸ்தானமான ''ஆஜ்ஞாசக்கிரம்'' இரு தளங்களுள்ள தாமரை, இரு அக்ஷரங்கள் கொண்டது, தூய ஸ்படிக நிறமுள்ளது. ஸதாசிவர் தேவதை. ஸதாசிவர் 36தத்துவங்களுடன் உடலை இணைத்து அவரவர் செய்த வினைப்படி உடலை இன்பதுன்பங்களுடன் இணைக்கிறார். (24-26)*

श्रोत्रत्वङ्नेत्ररसना घ्राणैरेव तु पञ्चभिः ॥ २७

शब्दः स्पर्शो रूपासगन्धाश्चेति च पञ्चभिः ।
वाक्पाणिपादपायूपस्थैश्च पञ्चभिरिन्द्रियैः ॥ २८

वचनादानगमनविसर्गानन्दपञ्चकैः ।
प्राणापानव्यानोदानसमानैरपि पञ्चभिः ॥ २९

तैर्नागकूर्मकृकरदेवदत्तधनञ्जयैः ।
तैर्मनोबुद्ध्यहङ्कारचित्तक्षेत्रज्ञपञ्चकैः ॥ ३०

तत्त्वैः पञ्चत्रिंशतैवं युज्येत पुरुषो यथा ।
आज्ञाचक्रे यदा जाग्रदवस्थेति निगद्यते ॥ ३१

शब्दादिर्वचनादिश्च प्राणादिर्मनआदिकम् ।
कण्ठदेशे यदा तैस्तु युज्यते नेतरैस्तथा ॥ ३२

स्वप्नावस्थेति विद्वद्भिरीर्यते मुनिपुङ्गवाः ।
क्षेत्रज्ञचित्तप्राणैस्तु युज्यते नैतरैर्यदा ॥ ३३

नाभौ तुर्यं तदा तुर्यातीतं त्वखिलवर्जितम् ।
पुरुषः स यथा लिङ्गादधस्ताद्याति वै यदा ॥ ३४

अवरोहक्रमस्त्वेवं आरोहति यदा तदा ।
तत्त्वैस्तैश्च पुनर्योगे तुर्याद्या जाग्रदन्तकाः ॥ ३५

*காது, தோல், கண், நாக்கு, மூக்கு என ஐந்து பொறிகள், சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என ஐந்து உணர்வுகள். வாக்கு, கை, கால், ஆஸனவாய், குறி என ஐந்து கர்மேந்திரியங்கள். பேசுதல், நடை, எடுத்தல், கழித்தல், உடலுறவு என கர்மேந்திரியச் செயல்கள், பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என ஐந்தும் நாகம் கூர்மம், க்ருகரம், தேவதத்தம், தனஞ்ஜயம் என ஐந்துமாகப் பத்து வாயுக்கள், மனம், புத்தி, அஹங்காரம், சித்தம், ஜீவன் என்ற ஐந்து ஆக இவை 35 தத்துவங்கள் இவற்றுடன் புருஷன் செயலாற்றுகிற நேரம் விழிப்பு எனும் ''ஜாக்ரத் நிலை'' சப்தம் முதலியவை பேச்சு முதலியவை பிராணன் முதலியவை மனம் முதலியவை என இருபது மட்டும் கழுத்தில் இணையும் போது ''ஸ்வப்ன நிலை'' ஜீவன் சித்தம் ப்ராணன் இவைமட்டும் இயங்குகிற நிலை - துரீயம். இது தொப்புளில் உணரக் கூடியது. இவை இயங்காத நிலை ''துரீயாதீதம்'' புருஷன் லிங்கசரீரத்தின் கீழ் இறங்கும் நிலை இது. வரிசையாக லிங்க சரீரம் வரை அந்த 35 தத்வங்களுடன் இணையும் போது துரீயம் ஸுஷுப்தி, ஸ்வப்நம், ஜாக்ரத் என்று நிலைகள் விரியும். (27-35)*

ऊहे तत्क्रमशोऽवस्थास्तत्तच्चेष्टानुगुण्यतः ।
यथा राजा बहिः स्थित्वा क्रमात्त्यक्त्वाऽखिलान् व्रजेत् ॥ ३६

अन्तःपुरं पुनस्तैस्तु निर्याति क्रमशो बहिः ।
एवमेतत्क्रमं ज्ञात्वा आज्ञाचक्रादिषु प्रभुम् ॥ ३७

सदाशिवं पूजयित्वा शिवज्ञानी भवेन्नरः ।

*இதனை இவ்வாறு ஊகிக்கலாம். அரசன் நாட்டைவிட்டு வெளியிலிருந்தவன். படிப்படியாக அந்தபுரம் வரை சென்று, அங்கிருந்து படிப்படியாகி வெளியேறுவான். அந்த கிரமத்தில் மூலாதாரம் முதல் ஆஜ்ஞைவரை போக்கு வரத்துள்ளவன் புருஷன். ஆஜ்ஞாசக்ரம் முதலியவற்றில் ஸதாசிவனை உணர்வு வடிவில் வழிபடுபவன் சிவஜ்ஞானியாகிறான். (36-37)*

तेजिनीवनमुख्यानि पुण्यक्षेत्राणि वै द्विजाः ॥ ३८

लभ्यन्ते चित्तशुद्ध्या स्यादचिराद् ज्ञानमैश्वरम् ।
न दिवा पूजयेदीशं रात्रौ नैव च नैव च ॥ ३९

सततं पूजयन्मध्यावस्थायां तु महेश्वरम् ।
नाड्यां तथा मध्यमायां हृत्पद्मान्तर्विमुक्तये ॥ ४०

मुमुक्षुभिर्योगिभिरात्मनिष्ठैः वेदान्तविज्ञानसुनिश्चितार्थैः ।
हृत्पुण्डरीके पुरमध्यसंस्थे महेश्वरो नित्यमुपासितव्यः ॥ ४१

इति एकोनाशीतितमोऽध्यायः



*தேஜினீவனம் முதலிய புண்ய க்ஷேத்திரங்களில் வாஸம் செய்வதால் சித்த சுத்தி மூலமாக சிவஜ்ஞானம் பெறலாம். பகலிலோ இரவிலோ என்றிராமல் எப்போதும் சிவனை வழிபட்டு ஸுஷும்னை எனும் நடுநாடியில் இதயத்தில் நிறுத்திக் கண்டு*

முக்தி பெறலாம். முக்தியை நாடுபவர். ஆத்மாவில் நிலைபெற்ற யோகிகள், வேதாந்த ஆராய்வால் ஆத்மதத்வம் இது தான் என நிச்சய அறிவுள்ளவர்கள். ஆத்மா வசிக்கிற நகரத்தின் நடுஇடமான இதயத் தாமரையில் மஹேசுவரன் எப்போதும் வழிபடத்தக்கவர். (38-41)

—★—

## अशीतितमोऽध्यायः

यतीश्वरः—

अतः परं मुहुर्ध्यायेत् शिवरूपं विमुक्तये ।
शृणुध्वं च शनैर्भक्त्या सर्वे च मुनिपुङ्गवाः ॥ १

अचिन्त्यः सर्वगः स्थाणुरव्यक्तः परमेश्वरः ।
इन्द्रियागोचरः शान्तचित्तैर्ध्येयो मुनीश्वरैः ॥ २

स्वप्रकाशः परं ज्योतिः परमाकाशवद्विभुः ।
यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ॥ ३

आनन्दं ब्रह्मणो विद्वान्न बिभेति कदाचन ।
यस्मात्सर्वमिदं ब्रह्मविष्णुरुद्रेन्द्रपूर्वकम् ॥ ४

सहभूतेन्द्रियग्रामैः प्रथमं संप्रसूयते ।
कारणानां च यो धाता भर्ता परमकारणम् ॥ ५

''அத்தியாயம்'' - 80

முக்திபெற விரும்புபவன். சிவவடிவை எப்போதும் தியானிக்க வேண்டும். அவர் மனத்திற்கு எட்டாதவர், எங்குமுள்ளவர், நிலைமாறுதவர். வெளிப்படாதவர். புலக்காட்சிக்கு உட்படாதவர். அமைதியுற்ற முனிவரால் உருவகப்படுத்த முடிந்தவர். தனது ஒளியால் தானே துலங்குபவர். பேரொளி, பேராகாசப் பெருவெளிபோன்று

எங்குமுள்ளவர், மனமும் வாக்கும் அவரை எட்ட இயலாது திரும்புகின்றன. அந்த பரப்பொருளின் ஆனந்த நிலையை உணர்ந்தவன் எங்கும் எதிலிருந்தும் பயப்படமாட்டான். அவரிடமிருந்தே மும்மூர்த்திகள் இந்திரன் முதலான தேவர்கள் உண்டாயினர். பஞ்சமஹாபூதங்களும் ஐந்து இந்திரிய ஸூக்ஷ்ம தத்துவப்பொருட்களுடன் உண்டாயின. காரணப் பொருட்களை ஒழுங்குடன் அமைப்பவர். அவை செயல்படும்படி தாங்கிநிற்பவர். அவரே எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டமூல காரணப்பொருள். *(1-5)*

ततः प्रसूयते तस्मात् कुतश्च न कदाचन ।
सर्वैश्वर्येण संपन्नो नाम्ना सर्वेश्वरः स्वयम् ॥ ६

सर्वैर्मुमुक्षुभिर्ध्येयः शम्भुराकाशमध्यगः ।
विदधाति च यस्त्वग्रे ब्रह्माणं मुनिपुङ्गवाः ॥ ७

प्रहिणोति च यस्तस्मै वेदान् सर्वान् घृणानिधिः ।
विश्वाधिको महर्षिश्च देवानां प्रथमं पुरः ॥ ८

हिरण्यगर्भं जायमानं बिभर्त्यपि च पश्यति ।
ईशो वृक्ष इव स्तब्धो य एको दिवि तिष्ठति ॥ ९

तेनैव पुरुषेणेदं अखिलं पूर्णमास्तिकाः ।
विक्षोभ्य प्रकृतिं यस्तु सृष्टिकाले मुनीश्वराः ॥ १०

एकःसन् बहुधा बीजं करोति स महेश्वरः ।
य एको जलवानीश ईशानादिस्वशक्तिभिः ॥ ११

जीवैरेभिरिमान् लोकान् सर्वानीशो य ईयते ।
य एको भगवान् रुद्रो न द्वितीयोऽस्ति कश्चन ॥ १२

सर्वेषां प्राणिनामन्तर्हृदि स ह्यभितोऽपि सन् ।
अलक्ष्यो लक्षयेद्विश्वमधितिष्ठति सर्वदा ॥ १३

அவரே ஸர்வேசுவரர். பரவெளியின் நடுவே உள்ள சிவன் முக்தியை நாடுபவரால் தியானிக்க தக்கவர். பிரும்மாவை முதலில் வெளிப்படுத்தி கருணையால் வழிகாட்டி வேதங்களை முன் அவர்முன் கொணர்ந்தார். உலகிற்கு மேம்பட்ட மஹ ரிஷி, தேவர்களுக்கு முன்னவர். உலகின் ஸூக்ஷ்மதத்வ நிலையான ஹிரண்யகர்ப்பர், தோன்றிக் கொண்டிருப்பதைக் கண்காணிப்பவர். வைரம் பாய்ந்தமாம் போல் ஆடாமல் அசையாமல் நிற்பவர். அவர் ஒருவராலேயே உலகம் நிறைவு பெறுகிறது. படைப்பின் போது புருஷனுடன் பிரகிருதியைக் குலுக்கிக்கூட வைத்து ஒன்றுயிருந்த தானே பலவாக அந்த சிவன் வெளிப்படுகிறுர். தோன்றிய ஜீவரனைவருக்கும் தானே ஈசனுகி ஆட்டுவிக்கிறுர். அவர் ஒருவரே! அவர் இருவராகவோ இரண்டாமவராகவோ ஆகவில்லை. எல்லா உயிரினத்தினுள்ளும் வெளியும் எங்கும் இருக்கின்ற அவர் ஒருவருக்கும் புலப்படாதவர். ஆனுல் அனைத்திற்கும் எப்போதும் மேலாளராக உள்ளார். (6-13)

यस्तु कालात्मयुक्तानि कारणान्यखिलानि च ।
अनन्तशक्तिरेको वै भगवानधितिष्ठति ॥ १४

प्रज्ञा च निःसृता यस्मात् पुराणा मुनिसत्तमाः ।
सहजा च परा शक्तिः सृष्टिस्थित्यन्तकारिणी ॥ १५

न यस्य कार्यं करणं न समानो न चाधिकः ।
उभे ज्ञानक्रिये चैव इच्छाशक्तिस्तथैव च ॥ १६

यस्मिन्नित्यं स्थितास्तिस्रः लोकानुग्रहकारणात् ।
यच्चेदमक्षरं व्यक्तं यदप्यमृतमक्षरम् ॥ १७

तावुभौ धीक्षमात्मानौ एको देवः स्वयं हरः ।
ईशते तदभिध्यानात् योजनात्तत्वभावतः ॥ १८

भूयो ह्यस्मान् पशोरन्ते विश्वमायानिवृत्तये ।
यस्मान्न भासते विद्युन्न सूर्यो न च चन्द्रमाः ॥ १९

यस्य भासा विभातीदमित्येषा शाश्वती श्रुतिः ।

*காலத்தால் தனித்தனிப் பொருளான எல்லா காரணப் பொருட்களுக்கும் பல சக்திகளைக்கொண்டு ஆள்பவராக உள்ளார். அவரது இயல்பான பேராற்றலே பேரறிவாக நின்று படைப்பையும் காப்பையும் லயத்தையும் செய்கிறது. அவருக்கெனத்தனித்துக் காரியமும் அதற்கான ஸாதனமுமில்லை. அவருக்கு ஈடானவரும் மிக்காருமில்லை. ஜ்ஞான சக்தியும் கிரியா சக்தியும் இச்சாசக்தியும் அவரிடம் எப்போதும் உலகிற்கு அருள்புரிவதற்காக உள்ளன. வெளிப்படையாக - தேய்வுறாத -அழிவுறாத பொருளும் அவரே. அறிவும் பொறுமையுமாகி அவரது உள்ளுணர்வால் சக்திகள் இயங்குகின்றன. பசு நிலைமையின் இறுதியில் மாயை நீங்க உதவுகின்றன. அவரெதிரில் மின்னலோ ஸூர்யனோ சந்திரனோ ஒளி குன்றிவிடுகின்றன. அவரது ஒளியால் தான் உலகமே துலங்குகிறது என வேதம் கூறும். (14-20)*

भीषाऽस्मात्पवते वातो भीषा सूर्य उदेति च ॥ २०

अस्मात् भीषाग्निरिन्द्रश्च मृत्युर्धावति पञ्चमः ।
अयमादिरनाद्यन्तः स्वभावादेव निर्मलः॥ २१

स्वतन्त्रः परिपूर्णश्च स्वेच्छाधीनः परापरः ।
अप्राकृतवपुः श्रीमान् लक्ष्यलक्षणवर्जितः ॥ २२

अमुक्तमोचकश्चायं अकालः कालचोदकः ।
सर्वोपरि गतावासः सर्वावासश्च सर्ववित् ॥ २३

षड्विधाध्वमयस्यास्य सर्वस्य जगतः प्रभुः ।
उत्तरोत्तरभूतानामुत्तरश्च निरुत्तरः ॥ २४

அவரிடம் பயந்து காற்று வீசுகிறது; ஸூரியன் உதிக்கிறான். அக்னியும் இந்திரனும் தம் தம் பணிபுரிகின்றனர். யமன் ஓடிமறைகிறான். இவரே ஆதிப்பொருள் ஆதியும் அந்தமுமற்றவர். இயல்பாகவே அப்பழுக்கற்றவர். தன் விருப்பப்படி இயங்குபவர், பூர்ணர், மேலும் கீழும் உள்ளவர். இயற்கைக்கு நியதிக்கு உட்படாத சரீரமுள்ளவர். குறிக்கோளும் அதற்கான செயல்பாடுமில்லாதவர். கட்டிலிருந்து விடுபடாதிருப்பவரை விடுவிப்பவர். காலத்தால் கட்டுப்படாதவர். ஆனால் காலத்தைக் கட்டுப்படுத்தி இயக்குபவர், எல்லாவற்றிற்கும் அப்பாலிருப்பவர், எல்லாவற்றிலுமிருப்பவர், எல்லாமறிந்தவர், வர்ணம் (எழுத்து) பதம் (சொல்) மந்திரம், கலா, தத்துவம், புவனம் என்ற ஆறுவழிகளில் அடங்கியுள்ள உலகமனைத்தின் மேலாளர். மேலானவருக்கும் மேலானவர், தனக்கு மேலானதெதுவுமற்றவர். (21-24)

अनन्तमहिमा भूमिरपरिच्छिन्नवैभवः ।
अशेषविषयामोघशुद्धबुद्धिविजृम्भणः ॥ २५

आत्मशक्तिमृदास्वादप्रमोदरसिको युवा ।
अनन्तानन्दसन्दोहमकरन्दमधुव्रतः ॥ २६

अखण्डजगदण्डानां पिण्डीकरणपण्डितः ।
औदार्यवीर्यगाम्भीर्यमाधुर्यमकरालयः ॥ २७

एष देवो महादेवो विज्ञेयः स महेश्वरः ।
न तस्य परमं किञ्चित् पदं समधिगम्यते ॥ २८

नैवास्य सदृशः कश्चिन्नाधिकश्चापि कश्चन ।
अमलः सर्वभूतानां राजराजः स तिष्ठति ॥ २९

तमज्ञात्वा न वै मुक्तिः विद्यते कल्पकोटिभिः ।
यदा चर्मवदाकाशो वेष्टयिष्यति मानवान् ॥ ३०

तदा शिवमविज्ञाय दुःखस्यान्तो भविष्यति ।
तमक्रतुं पश्यति वीतशोको धातुः प्रसादान्महिमानमीशम् ।
उमासहायं परमेश्वरं प्रभुं त्रिलोचनं नीलकण्ठं प्रशान्तम्
ध्यात्वा मुनिर्गच्छति भूतयोनिं समस्तसाक्षिं तमसः परस्तात् ॥

எல்லையற்ற பெருமை கொண்டவர். எல்லாவற்றின் இருப்பிடம், கட்டுக் கடங்காத பேராண்மை கொண்டவர். எல்லா விஷயங்களிலும் தடையுறுத தூய அறிவாற்றலுள்ளவர், தன் சக்தியின் ருசியை ரஸித்து உணர்பவர் எல்லா பிரும்மாண்டங்களையும் உருட்டி நிலைபெறச் செய்வதில் தேர்ந்தவர். வள்ளல் தன்மை, வீர்யம் ஆழ்ந்ததிறமை இனிய நடைமுறை இவற்றின் கடல். இந்த பேராளுனரான சிவபெருமானை இவ்வாறு உணரவேண்டும். இவருக்கு மேலான நிலை ஒன்றில்லை. இவருக்கு ஈடானவரும் மிக்காரும் இல்லை. தூயவர், உயிரினமனைத்தின் பேரரசர். அவரை உணராமல் கோடி கல்பங்களிலும் முக்தி பெறஇயலாது. வானமண்டலத்தை உடல் தோலைப் போல மூடி மறைப்பது எவ்வாறு இயலாததோ, அவ்வாறு சிவனையறியாமல் பிறவித்துயரிலிருந்து மீளமுடியாது. ஈசனின் அருளாலேயே காமம் முதலியதன் வசப்படாதவன் துன்பமனைத்தையும் விலக்கி அந்த ஆத்மாவின் பெருமையை உணர்வான். உமையின்துணைவரும் அமைதிமிக்கவருமான அந்த பரமாத்மாவைத் தியானம் செய்பவன் அஜ்ஞான இருளுக்கு வெளியே உள்ளவரும் அனைத்திற்கும் உற்பத்திகாரணமும் ஸாக்ஷியுமான சிவனை அடைவர். (25-32)

अयं हि विश्वतश्चक्षुः विश्वयोनिस्तथैव च ।
उमाया विश्वतोहस्तः विश्वतस्पादिति श्रुतिः ॥ ३३

ब्रह्मणा विष्णुना चायं अपरिच्छिन्नवैभवः ।
पशुः कथन्तु जानाति तमप्रमेयमजं विभुम् ॥ ३४

सर्वाधिष्ठानमेवैष सर्वावासो जगत्प्रभुः ।
तस्मिन्नेव जगत्सर्वं दृश्यते रज्जुसर्पवत् ॥ ३५

तत्सत्तामन्तरेणार्हमसत्तां जगतः क्वचित् ।
मूढास्सत्यन्तु मन्यन्ते सर्वमप्यैन्द्रजालिकम् ॥ ३६

ये वै शमादिसम्पन्नाः श्रौतस्मार्तानुवर्तिनः ।
बहुजन्मसु विप्रेन्द्राः तेषां भक्तिः शिवे भवेत् ॥ ३७

परदारे परद्रव्ये ये तु लोके पराङ्मुखाः ।
स्वदारद्रव्यसन्तुष्टास्तेषां भक्तिः शिवे भवेत् ॥ ३८

निगूढधर्मा ये नित्यं डम्भाचारविवर्जिताः ।
वेदेषु च गुरौ भक्ताः तेषां भक्तिः शिवे भवेत् ॥ ३९

बीजशुद्धा योनिशुद्धा ये वेदान्तविचारकाः ।
पञ्चाक्षररता ये च तेषां भक्तिः शिवे भवेत् ॥ ४०

उद्धूलनं त्रिपुण्ड्रञ्च समन्त्रं धार्य भस्मभिः ।
धारयन्ति च रुद्राक्षान् तेषां भक्तिः शिवे भवेत् ॥ ४१

सर्वभूतदयायुक्ता मदमात्सर्यवर्जिताः ।
क्रोधलोभविनिर्मुक्ताः तेषां भक्तिः शिवे भवेत् ॥ ४२

*இவருக்கு எங்கும் கண்கள்; எல்லாவற்றையும் தன்னுள் தாங்குபவர், இவருக்கு எங்கும் கைகளும் கால்களும் என வேதம் கூறும். பிரும்மாவும் விஷ்ணுவும் கண்டறியாத பெருமை கொண்டவரை பசுநிலையிலுள்ளவன் எவ்வாறு அறிவான்? எல்லாவற்றின் ஆதாரப்பொருள்; எல்லாவற்றின் இருப்பிடம்; கயிற்றில் பாம்பு தெரிவது போல் இவரிடம் உலகம் மாயத்தோற்றமாகத் தெரிகிறது. அவரது பேரிருப்பில் உலகின்*

இருப்பு அடங்கியுள்ளது. இந்திரஜாலத்தைப் போல மாயக்காட்சி தருகிற உலகை அறிவற்றவர் ஸத்யமென நம்புகின்றனர். வேத - ஸ்மிருதி வழியில் நடந்து மனவடக்கம் முதலிய நற்பண்புள்ளவரே பலபிறவிகளுக்குப்பின் சிவபக்தி பெறுகின்றனர். வெளிப்படையான படாடோபமின்றி பிறரது பொருளில் நாட்டமின்றி தமக்கு உரித்தானவற்றிலும் பற்றின்றி குருபக்தியும் வேதநம்பிக்கையும் கொண்டவருக்கே சிவனிடம் பக்தி கூடும். நற்குலப்பிறப்பு. வேதாந்த ஆராய்ச்சி, சிவபஞ்சாக்ஷர ஜபம், விபூதி பூசுதல், ருத்ராக்ஷமாலை தரித்தல், எல்லா உயிரினத்திடமும் பரிவு, இமிரும் பொறுமையும் கோபமும் பேராசையுமில்லாத நடைமுறை, இவற்றை இயல்பாகக் கொண்டவருக்கே சிவபக்தி கூடும். (33-42)

प्रसीदति परं भक्त्या परमेशो न चान्यथा ।
परमेष्ठिनि वै तस्मिन् प्रसन्ने सति भूसुराः ॥ ४३

कीटो वापि पतङ्गो वा नीचो वापि च मुच्यते ।
ईश्वरार्पणबुद्ध्यैव तत्कर्माण्यखिलान्यपि ॥ ४४

अनुष्ठेयानि सन्त्यज्य फलेच्छां मुनिपुङ्गवाः ।
ये कर्म निष्कामनया शिवप्रीत्यर्थमादरात् ॥ ४५

कुर्वन्ति तत्र वैगुण्येऽपि च दोषो न विद्यते ।
ज्ञानाय च शिवप्रीत्यै भवेत्तत्कर्म सुव्रताः ॥ ४६

பரமேசுவரன் பக்திக்குவசமாகிப் பேரருள் புரிகிறான். அருளால் பூச்சியும் புழுவும் நீசனும் கூட முக்தி பெறுவான். செய்கிற செயலின் பலனை எதிர்பாராமல் ஈசுவரனுக்கு இது அர்ப்பணம் என்ற கருத்தாழத்துடன் செயல்புரிய வேண்டும். அவ்வாறு செய்ய செயலின் குறைபாடுகளும் நீங்கும். செயல் முழுமைபெறும். ஈசனின் அருளைப் பெற்றுத் தரும். ஜ்ஞானம் தெளிவுற சிவனது ப்ரீதிபெற ஏற்றமுறை இது. (43-46)

हित्वैतत्कार्यकर्माणि कुर्वाणा मूढचेतसः ।
बहुप्रत्यूहवैगुण्यात् भवन्ति प्रत्यवायिनः ॥ ४७

नश्वरं हि फलं तेषां साद्गुण्येऽपि कृते ततः ।
काम्ये स्पृहां परित्यज्य कुर्वन्तु शिवतुष्टये ॥ ४८

शिवस्याराधनेनैव निस्तीर्णो मोहसागरात् ।
स्वर्गादिफलजातेषु काम्येषु विरतिर्भवेत् ॥ ४९

शब्दादिविषयेभ्यश्च श्रोत्रादीन्युपसंहरेत् ।
कूर्मः पाणिपदानीव शिवे नैर्मल्यमाप्नुयात् ॥ ५०

विषयेषु समासक्तं बलादाकृष्य वै मनः ।
परस्मिन् ब्रह्मणि शिवे धीरो नित्यं निवेशयेत् ॥ ५१

*அறிவற்றவர் தனக்கெனச் செயல்புரிந்தால் குறைகள் இடையூறு விளைவிக்கும். தவறான பலன் கிட்டும். கிடைத்த பலனும் உடன் அழியும். அதனால் பலனின் நாட்டமின்றி சிவனது பிரீதிக்காகவே செயல்புரிய, சிவனை வழிபட, ஸம்ஸார மோகக் கடலை எளிதில் கடக்கலாம். ஸ்வர்க்க வாஸமும் பலனாகத் தோன்றாது. ஆமை தன் கைககால் முகம் முதலியவற்றை ஓட்டினுள் மறைத்துக் கொள்வது போல் சப்தம் முதலிய பொருளிலிருந்து காது முதலியவற்றைத் திருப்பிக் கொள்ள வேண்டும் . நித்யப் பொருளான பரமசிவனிடம் மனத்தைப் பதிக்க வேண்டும். (47-51)*

अनर्थानां हि मूलं स्याद् विषये च मनोरतिः ।
तथा हि मनसस्सङ्गात् कामना सम्प्रवर्तते ॥ ५२

कामाल्लोभस्ततः क्रोधः क्रोधात्स्यात् चित्तविभ्रमः ।
निगृह्य तन्मनस्तस्मिन् परे ब्रह्मणि योजयेत् ॥ ५३

मन एव हि सर्वेषां कारणं बन्धमोक्षयोः ।
स्वस्ववर्णाश्रमाचारांस्त्यजेत् ज्ञानी न बुद्धितः ॥ ५४

दृढानुभूतितस्ते तु सप्तसप्तिफलं तथा ।
तथा स्वयं गलन्त्येव तावत्पर्यन्तमाचरेत् ॥ ५५

चित्तशुद्ध्यै शिवप्रीत्यै ज्ञानी च मुनिपुङ्गवाः ।
ज्ञानेन्द्रियाणां व्यापारा दर्शनस्पर्शनादयः ॥ ५६

कर्मेन्द्रियाणां व्यापारा भवन्ति गमनादयः ।
प्रारब्धानुगुणं तानि प्रवर्तयति हीश्वरः ॥ ५७

इति निश्चित्य तत्राहं नैव कर्तेति वै बुधाः ।
मन्यते तावता तस्य कर्मलोपो न विद्यते ॥ ५८

*வெளிப்பொருளில் மனத்தின் நாட்டமே கேடுகளனைத்தின் மூலகாரணம். மனம் ஒருபொருளில் ஒட்டினால் உடன் அதன் தேவையுணர்ச்சி கூடுகிறது. அதனால் பேராசையும் ஆசை நிறைவேறாததால் கோபமும் அதனால் சித்தக் குழப்பமும் ஏற்படுகின்றன. மனத்தை வெளிப்பொருள் நாட்டத்திலிருந்து தடுத்து பரமேசனிடம் பதியச் செய்ய வேண்டும். மனமே ஸம்ஸாரக் கட்டிற்கும் அதன் விடுதலைக்கும் உதவுகிறது. ஜ்ஞானி தானாக தன்வர்ண - ஆசிரமநிலைக்கேற்ற நடைமுறைகளைக் கைவிடக் கூடாது. மனம் பற்றற்றநிலையில் ஆழ்ந்தவுடன் இவை தானே விலகும். வெள்ளரிப்பழம் தானே கொடியை விட்டு விலகுவது போல் இது. உள்ளத்தூய்மை பெறவும் சிவனருள்பெறவும் மனம் இயங்கும். கர்மேந்திரியங்களின் செயல்பாடு வினைக்கேற்ப அமையும். அதனை ஈசனே நடத்திக் கொள்வான். நான் அதில் ஈடுபடத்தேவையில்லை என்ற கருத்தில் செயல்படுபவனுக்கு கர்மலோபம் ஏற்படாது. (52-58)*

शिवे समर्प्य कर्माणि तत्फले विगतस्पृहः ।
न लिप्यते यथाऽम्भःस्थमपि पद्मदलं जलैः ॥ ५९

एष एवं साधु कर्म कारयत्यत्र देहिनाम् ।
असाधुकर्म चेत्यादि श्रुत्या नास्य स्वतन्त्रता ॥ ६०

ईश्वरप्रेरणेनैव सर्गादिश्चाप्यधोगतिः ।
तर्हि वैषम्यनैर्घृण्ये ईशस्येति न शंक्यताम् ॥ ६१

अनाद्यविद्यया तत्तत्सदसत्कर्मबाधना ।
जीवेषु मलरूपेण मग्ना ताम्रे कलङ्कवत् ॥ ६२

तत्तत्कर्मफलं तेषां भोजयित्वा विमुक्तये ।
यतते हि शिवस्तस्य को दोषः करुणानिधेः ॥ ६३

सन्निधाने हि सूर्यस्य जगत्सर्वं प्रवर्तते ।
तावता किं विकारित्वं तस्य साक्षी सदाशिवः ॥ ६४

अज्ञानं तन्नाशयित्वा प्राणिनां भेदभाविकम् ।
शिवं प्रकाशयेद्धीमान् ततो हित्वा यथा रजः ॥ ६५

प्राप्ते प्रिये तथैतेषां उद्वेगो नाप्रियेऽपि च ।
शिवैक्यानुभवात्ते च सर्वत्र समदृष्टयः ॥
एवं दृढानुभूत्याशु भजन्ति परमेश्वरम् ॥ ६६

इति अशीतितमोऽध्यायः

—★—

*தன் செயல் முறையைச் சிவனிடம் ஒப்படைத்து அதன் பின்விளைவு பற்றிச் சிந்திக்காமல் தாமரையிலை நீருடன் ஒட்டாதிருப்பது போல் வாழ்வது சிறந்தது. நற்செயலைச் செய்யத்தூண்டுபவன் இறைவனே. நல்லவனை நல்லதில் தூண்டுகிறான். கெட்டவனைக் கெட்டதில் தூண்டுகிறான் என வேதம் கூறும். உண்மையில் மனிதன் செயல்பாட்டில் ஸ்வதந்திரனல்ல. ஈசன் ஆட்டுவிக்கிறான் எனில் அவனுக்கு*

ஒருவனிடம் பக்ஷபாதம் - அன்பு இருப்பதால் நல்லது செய்யத் தூண்டுகிறான் எனக் கொள்ளத்தக்காது. ஈசன் ஸமநிலை காண்பவன். பரிவு மிக்கவன். வேண்டியவன், வேண்டாதவன் என்ற பாகுபாடு இல்லாதவனே. அவனவன் தன் தனது வினைப்பயனை ஒட்டிச் செயல்படுகிறான். நல்லதில் நாட்டமோ கெட்டதில் நாட்டமோ அவனவனது வாஸனு - ஸம்ஸ்காரங்களை ஒட்டியது. அதற்கேற்ப அவன் செயல்பட, செயலுக்கேற்ற பலன் விளைகிறது. ஸூரியனின் ஒளி எல்லோருக்கும் உதவுகிறது. அனைவரது செயல்களும் அவ்வொளியின் உதவியால் நிகழ்கின்றன. செயல்களின் பின் விளைவு செய்பவனைச் சாரும். சூரியனைச் சாராது. ஈசன் ஸாக்ஷியே. அறிவில்லாதவன் தன் உள்ளத்திலுள்ள தடுமாற்றத்தால் தவறான செயலில் ஈடுபடுகிறான். சிவனிடம் பக்தி இந்த உள்ளத் தடுமாற்றத்தை அகற்றும். சிவபக்தன் தனக்குப் பிரியமானது கிட்டியதும் மகிழ்ச்சியடைய மாட்டான். பிரியமல்லாதது கிட்டியதால் மனக் கொதிப்பு அடைய மாட்டான். சிவனிடம் ஒன்றிய உள்ளம் எங்கும் ஸமநோக்கு பெறும் அது திடமாகி எங்கும் ஈசனைக் கண்டு அவனைச் சார்ந்திருக்கும். (59-66)

—★—

## एकाशीतितमोऽध्यायः

निर्गुणं निष्कलं नित्यं निराशं निर्मलं स्वतः ।
परिपूर्णं चिदानन्दरूपं निर्लेपमव्ययम् ॥ १

स्वप्रकाशं परं ब्रह्म सदा ध्यायन्ति ये द्विजाः ।
ते वै धन्यतमा लोके ज्ञानिनस्ते हि दुर्लभाः ॥ २

स्वमात्मानं सच्चिदानन्दरूपं ब्रह्मैव भावयेत् ।
ज्ञानी स्वदेहं मिथ्येति परदेहमिवानिशम् ॥ ३

जागरान्ते च निद्राद्यैः दृश्यते यादृशी दशा ।
भावयन्तादृशीं नित्यं परमानन्दभाग् भवेत् ॥ ४

ज्ञानी विषयसक्तोऽपि न त्यजत्यात्मवैभवम् ।
रज्वान्तरं चापसंस्थं हारन्दर्शयतेऽपि वा ॥ ५

देहात्मधीर्विश्वमिदं सत्यमेव स मन्यते ।
ज्ञानी तु विश्वमखिलं खपुष्पमिव मन्यते ॥ ६

ब्रह्माण्डबुद्बुदान्येतान्यात्मन्यानन्दवारिधौ ।
मायाऽनिलेन जायन्ते लीयन्ते च पुनः पुनः ॥ ७

कबलीकृतचेतोदर्दुरोद्यत्प्रमदो गिरि ।

*''அத்தியாயம்'' - 81*

*யதீசுவரர் மேலும் பிரும்மத்தைப் பற்றி விளக்குகிறார். பரப்பிரும்மம் தனிக்குணச் சிறப்போ அவயவச் சிறப்போ அற்றது. அழிவுறாத நித்தியப் பொருள் எதிர்பார்ப்பற்றது தூயது பூர்ணமானது. ஆனந்தத்தின் உருவம். ஒட்டுதலற்றது. தேயாதது. தன்னொளியால் தானே துலங்குவது. இதனை உள்ளத்தில் உருவகப் படுத்துபவரே சிறந்த பாக்யசாலிகள். அவர்களைக் காண்பது அரிது. ஞ்ஞானி தன்னை தன் ஆத்மாவை பேரிருக்கையும் பேருணர்வும் பேரானந்தமே வடிவான பிரும்மாக உணர வேண்டும். உடல் மெய்ப்பொருளல்ல. விழிப்புநிலை தாண்டியதும் கனவு முதலியதில் விழிப்பில் காண்கிற உடலைக்காட்டிலும் வேறுபட்டதாக உணர்கிறான் (விழிப்பில் செய்ய இயலாததைக் கனவில் செய்கிறான். வில்லிலுள்ள நாணும் கழுத்திலுள்ள ஹாரமும் கயிறானலும் வெவ்வெறு. உடல்வேறு ஆத்மாவேறு. உடலையே ஆத்மாவாக நினைப்பதும் உலகை மெய்ப் பொருளாக நினைப்பதும் வானில் பூக்கிற பூ போன்றது. ஆனந்தக் கடலான ஆத்மாவில் பிரும்மாண்டம் ஒருநீர் கொப்புளம். மாயை எனும் காற்று உட்புகுந்ததால் ஏற்பட்ட தோற்றமே. நீர்க்கொப்புளம். தோன்றி மறைந்து கடலாவது போல் உலகம் முழுவதும் தோன்றி மறைந்து பிரும்மத்தில் லயமடையும். பாம்பின் வாயினுட் சென்ற தவளை கத்துவது போல் மனிதன் தன்னைக் காட்டிக் கொள்கிறான். (1-7)*

चिन्मये हृदये शेते चिरमेकैव योगिनाम् ॥ ८

यथाऽऽत्मधीस्तु मूढस्य देहे नैसर्गिकी भवेत् ।
तथैव ज्ञानिनो ब्रह्मण्यात्मबुद्धिः सदा भवेत् ॥ ९

ब्रह्मानन्दैकरसिकः संसारे सञ्चरन्नपि ।
समश्नुते न तेनैक्यं दुग्धात् साज्यमिवोद्धृतम् ॥ १०

मोहान्धकारे सति यः प्राक् पश्यत्यखिलं जगत् ।
स चाथ भास्वत्युदिते विचित्रन्नैव पश्यति ॥ ११

ज्ञानमात्रेण कैवल्यं करस्थे सति देहिनः ।
समाधिस्स्वैच्छिकत्वं स करोति न करोति वा ॥ १२

भ्रान्त्या भातस्स संसारः ज्ञानात् गच्छेन्न कर्मभिः ।
न भेरीनादतो गच्छेद्दृष्ट्यामारोपितस्त्विह ॥ १३

श्वा स्फाटिके मण्डपे स्वबिम्बं दृष्ट्वेव मोहितः ।
स्वान्तःकरणदोषोत्थे प्रपञ्चे कलहायते ॥ १४

யோகியின் உள்ளம் சித்சக்தி என்ற பேருணர்வின் இருப்பிடம். அதில் ஆத்மா துலங்குகிறார். மூடனுக்கு உடலே ஆத்மா. பாலிலிருந்து கடைந்து பிரிக்கப்பட்ட வெண்ணெய் மறுபடி பாலில் கலப்பதில்லை. தனியே ஒட்டாமல் மேலே மிதக்கும். அதுபோல் பிரும்மத்தின் ஆனந்த நிலையை உணர்ந்த ஜ்ஞானி உலகில் சுற்றி வந்தாலும் அதனோடு ஒட்டுவதில்லை. மோகம் எனும் இருள் சூழ்ந்த நிலையில் கண்ட உலகம் வேறு. ஜ்ஞான ஸூரியன் உதித்த பின் காண்கிற உலகம் வேறு. ஜ்ஞானியின் கைத் தலத்தினுள் முக்தி உள்ளது. ஆனால் ஸமாதிநிலையில் ஒதுங்கி நிற்பது அவன் விருப்பத்தை ஒட்டியது. ஸம்ஸாரக்கட்டு பிரமையால் ஏற்பட்டது. பிரமையை அகற்றுகிற ஜ்ஞானத்தால் தான் அது விலகும். கர்மங்கள் புரிந்து

*அவ்விருளை அகற்ற இயலாது. அதுஸ்படிகமண்டபம். அதனுள் நுழைந்த நாய் ஸ்படிகக் கண்ணுடிகளில் பிரதிபலிக்கிற தன் உருவங்களைக் கண்டு மயங்கி வேறுநாய்கள் என்ற எண்ணத்தில் அவற்றைக் கண்டு குரைக்கிறது. அது போன்று தன் உள்ளத்தின் தவற்றால் பல்வேறு உலகங்களைக் கண்டு அவற்றுடன் அறிவிலி சண்டையிடுகிறான். (8-14)*

असतोऽभ्यासदार्ढ्येन यावन्न विजितं मनः ।
नृत्यन्ति तावत् वेताला निशीव हृदि वासनाः ॥ १५

यश्चात्मतीर्थमुत्सृज्य बहिस्तीर्थञ्च गच्छति ।
रत्नं करस्थमुत्सृज्य कः काचं मृगयेत्सुधीः ॥ १६

तत्वज्ञानावधि मनः चाञ्चल्यमधिगच्छति ।
ज्ञाते तत्वे निश्चयः स्यादपि नौस्तम्भकाकवत् ॥ १७

अचिन्त्यैव परं ज्ञानं मन्त्रं वाचमनं परम् ।
परो जपो मौनमेव निश्चयः परमं सुखम् ॥ १८

*பழகிப்பழகி வாஸனைகளை வென்றாலன்றி, உள்ளத்தில் இரவில் வேதாளங்கள் போல் வாஸனைகள் கூத்தடிக்கும். ஆத்மாவைக் கண்டறிவதே தீர்த்தயாத்திரை. இதனைவிட்டு வெளியிலுள்ள தீர்த்தங்களைக் காணச் செல்வது கையிலுள்ள ரத்னத்தை உணராமல் கூழாங்கல்லைத் தேடிச் செல்வது போலாகும். தத்துவஞ்ஞானம் ஏற்படுகிறவரை, மனம் சலிக்கும். தத்துவ உணர்வு வந்ததும் மனம் நிலைத்து விடும். கடலின் மீது பறக்கத் தொடங்கிய காக்கை போக்கிடம் தெரியாமல் அலைந்தது. கப்பலின் கொடிமரத்தில் அமர்ந்ததும் நிம்மதி பெற்றது. மனத்தின் நிலையும் அத்தகையதே. வேற்றுப் பொருள் நினைவின்றி மனமொன்றி ஈசனிடம் நிலைத்துச் செய்கிற மந்திர ஜபம் ஆசமனம் முதலியவை சிறந்தவை. மௌனமே தத்துவ நிச்சயத்தின் அடையாளம். (15-18)*

निशायाश्चरमे भागे ध्यायन् ब्रह्म सनातनम् ।
महापातकसङ्घातैर्मुच्यते चोपपातकैः ॥ १९

जगन्मनसि संपूर्णे सम्पूर्णममृतद्रवैः ।
चरतः पादुके धृत्वा चर्मच्छन्नाऽखिला च भूः ॥ २०

तीर्थे चण्डालगेहे वा विस्मृत्य विसृजन्वपुः ।
ज्ञानोत्पत्त्यैव मुक्तस्सन् परमानन्दमश्नुते ॥ २१

*இரவின் கடைசி யாமத்தில் நித்தியமான பிரும்மத்தை உள்ளத்தில் உருவகப்படுத்தினால் பாபங்களனைத்தும் நீங்கும். மனம் நிறைந்தால் உலகம் அமுதத்திரவத்தால் நிறைந்ததாகும். தன் காலில் தோலாலான காலணியிருந்தால் பூமிமுழுவதையும் தோலால் போர்த்தியதாகுமல்லவா? அதனால் ஜ்ஞானி புண்ய தீர்த்தத்தில் உயிர் பிரிந்தாலும் சண்டாளன் குடியிருப்பில் உயிர் பிரிந்தாலும் உடலைவிட்டு ஆத்ஜ்ஞானத்தால் தன் நிலை உணர்ந்து உலகபந்தத்திலிருந்து விடுபட்டுப் பேரானந்தமடைவான். (19-21)*

मद्यं मत्तं यथा कुर्यात् प्रज्ञाहीनञ्च पण्डितम् ।
प्रारब्धभोगोऽपि तथा ज्ञानिनं नैव मुञ्चति ॥ २२

मण्डूक इव सर्पेण मृत्युनाऽऽनीयते नरः ।
ततः प्रागेव च ज्ञानमार्जनीयं विपश्चिता ॥ २३

मृत्युबीजं जन्म भवेन्मृत्युबीजञ्च जन्मनः ।
बंभ्रमीत्यनिशं मर्त्या घटीयंत्रवदत्र हि ॥ २४

शरीरारम्भकं यत्तु प्रारब्धं कर्म देहिनाम् ।
तद् भोगेनैव नष्टं स्यात् न तु ज्ञानेन कस्यचित् ॥ २५

तदन्यत् पातकं सर्वं पुण्यं वा बहु वाऽबहु ।
भस्मसात्क्रियते ज्ञानवह्निनैव क्षणान्नृणाम् ॥ २६

*கள் பருகியவனை தன்னிலை உணராதவனுக்கும். அது போன்று பிராரப்தவினை பண்டிதனையும் குழப்பும். இந்தப் பண்டிதன் உலகமறிந்தவன். பிரும்மத்தை அறிந்தவனல்ல. பாம்பின் வாயிலகப்பட்ட தவளை போல் இவன் யமனால் கொண்டு செல்லப்படுகிறான். மரணம் நெருங்கு முன்னரே ஆத்மஞானத்தைப் பெறவேண்டும். பிறப்பு இறப்புக்கு விதை. இறப்பு பிறப்பிற்கு விதை, கிணற்றுச் சகடைபோல் சுழன்று கொண்டிருப்பதே இதன் நிலை. மனிதனுக்குப் பயன் கொடுக்கத் தொடங்கிய முன்வினை (பிராரப்தகர்மம்) யை அனுபவித்துத்தான் தீர்க்க முடியும். ஜ்ஞானம் இங்கு பயன்படாது. மற்ற புண்யபாபங்களை ஆத்மஞானம் என்ற நெருப்பு சாம்பலாக்கி விடும். (22-26)*

ब्रह्मास्तीति च यद्ज्ञानं तत्परोक्षमितीर्यते ।
अहं ब्रह्मेति यद्ज्ञानं अपरोक्षं तदुच्यते ॥ २७

इदं बुद्धिस्तु बाह्यार्थेष्वहं बुद्धिस्तथात्मनि ।
प्रसिद्ध्या सर्वजन्तूनां विवादो नात्र कस्यचित् ॥ २८

इदमर्थे घटादौ च नात्मत्वं सर्वदेहिनाम् ।
अहमर्थे तथात्मत्वमपि सिद्धं स्वभावतः ॥ २९

एवं समस्तजन्तूनां अनुभूतिर्व्यवस्थिता ।
इदमर्थे शरीरे तु याऽहमित्यादिका मतिः ॥ ३०

सा महाभ्रान्तिरेव स्यात्तस्मिंस्तद्ब्रह्मतत्वतः ।
अचिद्रूपमहम्बुद्धेः पिण्डं ह्यालम्बनं भवेत् ॥ ३१

मृत्पिण्डादिषु दृष्टत्वादन्ता देहस्य नात्मता ।
रुद्रविष्णुचतुर्वक्त्रप्रमुखास्सर्वचेतनाः ॥ ३२

चिन्मात्रात्मन्यहं शब्दं तत्वतो हि प्रयुञ्जते ।
एवं विवेकतस्साक्ष्यं देहाक्षप्राणपूर्वकम् ॥ ३३

अन्तःकरणमात्मानं विभज्य स्वात्मनः पृथक् ।
सर्वसाक्षिणमात्मानं स्वयंज्योतिस्त्वलक्षणम् ॥ ३४

सत्यमानन्दमद्वैतं महदर्थं विचिन्तयेत् ।
एवन्तर्कप्रमाणाभ्यां आचार्योक्त्या च मानवः ॥ ३५

''பிரும்மம் உள்ளது'' என்ற உணர்வு பரோக்ஷ ஜ்ஞானம். ''நான் பிரும்மமாக உள்ளேன்'' என்ற உணர்வு அபரோக்ஷ ஜ்ஞானம் (நேரிடையுணர்வு) வெளிப்பொருளில் இது என்ற உணர்வும் ஆத்மாவில் தான் என்ற உணர்வும் உலகில் இயல்பானதே. வெளிப்பொருளான குடம் முதலியவற்றில் ''நான்'' என்ற உணர்வில்லை. உட்பொருளான தன்னிடம் ''நான்'' என்ற உணர்வு இயல்பானது. ஆனால் வெளிப்பொருளான உடலில் ''நான்'' எண்ணம் உண்மையான சரியான உணர்வல்ல. அதுபெரிய பிரமை. உணர்வற்ற ஜடப்பொருளான உடல் ''நான்'' என்ற உணர்விற்கு ஏற்றதல்ல. மண் உருண்டையை ''நான்'' என நினைப்பேனு? அதனால் உடலில் ''நான்'' என்ற உணர்வு தவறானது. மும்மூர்த்திகளை முன்னிட்ட தேவர்கள் பேருணர்வான ஆத்மாவையே ''நான்'' எனக் குறிப்பிடுவர். உடல், இந்திரியங்கள், உயிர், உள்ளம், என ஒவ்வொன்றாக ஆராய்ந்து அவை ''நான்'' எனக்கூறத்தகாதவை என உணர்ந்து எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாக தன்னொளியால் துலங்குவதாக ஸத்யம் ஆனந்தம் அத்வைதம் என உணரத்தக்கதாக உள்ளதையே ஆத்மாவென ஆராய்ச்சியாலும் சாஸ்திர பிரமாணத்தாலும் குருவின் உபதேசத்தாலும் உணரவேண்டும். (27-35)

सर्वसाक्षितयात्मानं सम्यङ् निश्चित्य सुस्थिरम् ।
स्वात्मनोऽन्यतयाऽभासं तं स्मरामि विशेषतः ॥ ३६

स्वात्ममात्रतया बुद्ध्या पुनः स्वात्मानमद्वयम् ।
शुद्धं ब्रह्मेति निश्चित्य स्वयं स्वानुभवेन च ॥ ३७

निश्चयश्च स्वचिन्मात्रे विलाप्यापि क्रियाद्वये ।
विलापनञ्च चिद्रूपं बुद्ध्वा केवलरूपतः ॥ ३८

स्वयं तिष्ठेदयं साक्षाद्ब्रह्मवित्प्रवरो मुनिः ।
इदं वस्तत्त्वतः प्रोक्तं रहस्यमृषिसत्तमाः ॥ ३९

जन्ममृत्युजरादुःखमूलोन्मूलनकारणम् ।
अनायासेन साध्यं तज्ज्ञानं हित्वा विमूढधीः ॥ ४०

जनोऽत्यायाससाध्येषु विनश्यत्फलदायिषु ।
यज्ञादिकर्मसु सदा क्रियते किं ब्रवीम्यहम् ॥ ४१

तस्मात्तत् सच्चिदानन्दरूपं ब्रह्म सनातनम् ।
समाधिनिष्ठो निध्यायन्नासीत सततं सुधीः ॥ ४२

*ஆத்மா அனைத்திற்கும் ஸாக்ஷி. அதனைக்காட்டிலும் வேறுபட்ட பொருளொன்றைக் காண இயலாது. வேறுபொருளாகக் காட்சிதராதது. இவ்வாறு சுத்தமான கலப்பற்ற பிரும்மநிலையைத் தன் அனுபவமாக உணர்ந்து எல்லாவற்றையும் அதனுள் மறையச் செய்து இந்த பிரும்ம ஜ்ஞானி பிரும்மாகவே ஆவான். இவ்வுணர்வு பிறப்பு, இறப்பு மூப்பு முதலிய துன்பத்தைவேறுடன் அறுத்தெறியச் செய்யும். இது எளிதில் பெறத்தக்கது. இதனைக்கை விட்டு பெருத்த உழைப்பால் பெறத்தக்க வேள்வி முதலியவற்றில் ஈடுபடுகிறான். வேள்வி முதலியவற்றால் பெறுகிற பலன் அழியும். அதனால் ஸத் - சித் - ஆனந்த வடிவினனான நித்யனான ஆத்மாவை எப்போதும் உள்ளத்தில் கண்டு கொண்டிருக்க வேண்டும். (36-42)*

एतादृशं परं ब्रह्म निर्लेपं निर्गुणं विभु ।
घृतकाठिन्यरीत्यैव सगुणोऽभूत् सदाशिवः ॥ ४३

शुद्धां मायां स ऐक्षिष्ट ततोऽभूदीश्वरो द्विजाः ।
तस्माद्रुद्रः समुत्पन्नस्तस्माद्विष्णुस्ततो विधिः । ४४

अनुग्रहतिरोभावसंहृतिस्थितिसृष्टिषु ।
क्रमात् पञ्चसु कृत्येषु ह्येते पञ्चाधिकारिणः ॥ ४५

एवं क्रमेण लीयन्ते ब्रह्माद्याः स्वस्वकारणे ।
अस्मिन्निदर्शनं वक्ष्ये भवतां मुनिपुङ्गवाः ॥ ४६

शिरस्सदाशिवो वक्त्रं ईश्वरः समुदाहृतः ।
कण्ठाच्च कटिपर्यन्तं रुद्रो जानुद्वयावधि ॥ ४७

ततो विष्णुस्ततो ब्रह्मा पादपर्यन्तमीरितः ।
अयमर्थः सदा शास्त्रपुराणादिषु घुष्यते ॥ ४८

अस्मिन्नर्थे ततो नैव विवादः कस्यचिद्भवेत् ।
शिरःप्राथमिकास्तस्माज्जायन्तेऽवयवा नृणाम् ॥ ४९

प्रशाम्यन्ति मृतौ पादमारभ्यावयवास्तथा ।
दृष्टान्तेन ह्यनेनैव ब्रह्मादीनां लयोदयौ ॥ ५०

*நீர்த்துள்ள நெய் உறைந்து கட்டியாவது போல் பிரும்மமே ஸகுணமாகி ''ஸதாசிவனுனது'' ஸதாசிவன் தன் சக்தியான சுத்தமாயையை வெளியே கண்டார். அதனுல் ''ஈசுவரர்'' ஆனுர். அவரிடமிருந்து ருத்ரர், விஷ்ணு, பிரும்மா, எனப் பிரிந்தனர். அனுக்ரகம், திரோதானம், ஸம்ஹாரம், ஸ்திதி, ஸ்ருஷ்டி என ஐந்து பொறுப்புகளை இவர்கள் கையாண்டனர். லயத்தின் போது பிரும்மா தொடங்கி ஒவ்வொருவரும் வரிசையாக ஒடுங்குவர். இவர்களில் ஸகுணப்ரம்மத்தின் தலைப்பகுதி - ஸதாசிவர். முகம் - ஈசுவரன். கழுத்திலிருந்து இடுப்பு வரை ருத்ரர். முழங்கால்வரை விஷ்ணு. கால்பகுதி, பிரும்மா. குழந்தை தாயின் வயிற்றிலிருந்து வெளியாகும் போது தலை முதலில் வெளியாகும் இறக்கும் போது கால் முதலியவற்றிலிருந்து வரிசையாக உயிர் நீங்கும். லயத்தில் பிரும்மா முதலாமவர். வெளிப்பாட்டில் ஸதாசிவர் முதலாமவர். (43-50)*

निर्णेतव्याविहास्तां तत् क्षेत्रेऽस्मिन्तेजिनीवने ।
सदाशिवस्तेजिनीशोऽविमुक्तेश्वर ईश्वरः ॥ ५१

रुद्रः स्वर्गेश्वरः प्रोक्तो विष्णुः श्वेताचलस्थितः ।
निर्णेतव्या विधिश्चास्ते यज्ञकर्ता चतुर्मुखः ॥ ५२

एवं सदाशिवादीनां पञ्चकृत्याधिकारिणाम् ।
पञ्चानामपि सान्निध्यं क्षेत्रोत्तममिदं विना ॥ ५३

कुत्र वाऽस्ति स्थले तस्मात्क्षेत्रमेतत्प्रशस्यते ।
अत्र सर्वप्रयत्नेन पूजनीयो महेश्वरः ॥ ५४

*தேஜினீ வனத்திலும் தேஜினீசர் ஸதாசிவர், அவிமுக்தேச்வரர் - ஈசுவரர், ஸ்வர்கேசுவரர் ருத்ரர், ச்வேதாசலத்து விஷ்ணு - விஷ்ணு. யாகசாலையில் பிரும்மா இவ்வைவரும் இங்கு அருள்புரிகின்றனர். இங்கு ஈசனை வழிபடுவது மிகச் சிறந்தது. (51-54)*

पञ्चाक्षरं जपेन्नित्यं भक्त्यैव यतमानसः ।
वाचिकोऽयमुपांशुश्च मानसश्च त्रिधा जपः ॥ ५५

उत्तरोत्तरवैशिष्ट्यं प्राहुर्मन्त्रविदां वराः ।
उच्चैर्जपो वाचिकस्स्यादन्येषां शृण्वतां स्फुटम् ॥ ५६

ओष्ठयोः स्पन्दमात्रेण परबोधप्रदायकः ।
उपांशुर्मानसस्तु स्यादोष्ठस्पन्दनवर्जितः ॥ ५७

पादानुक्रमसङ्गत्या वर्णानामनुचिन्तनम् ।
ज्ञात्वाऽभिन्नं शिवाद्विष्णुं ये निन्दन्ति विमोहिताः ॥ ५८

न मोचयति तान् शम्भुः तस्मान्निन्देन्न माधवम् ।
अथवा शिवभक्तेषु नेत्रार्च्चनविधानतः ॥ ५९

अत्युत्तमो हि वैकुण्ठ उरुगाय उरुक्रमः ।
इत्युक्त्वा दक्षिणामूर्तिर्यतिपुङ्गवरूपधृक् ॥ ६०

ज्ञानमार्गञ्चोपदिश्य मुनीनां भावितात्मनाम् ।
तेजिनीकानने तस्मिन् पुण्यक्षेत्रोत्तमोत्तमे ॥ ६१

अविमुक्तस्थले तत्र दक्षिणामूर्तिविग्रहे ।
अन्तर्हितोऽभूद् भगवान् लोकानुग्राहकः शिवः ॥ ६२

## इति एकाशीतितमोऽध्यायः

பஞ்சாக்ஷரஜபம் மிகச்சிறந்தது. "வாசிகம்", "உபாம்சு", "மானஸம்" என ஜபம் மூவகைப்படும். இவற்றில் வாசிகத்தை விட உபாம்சுவும் அதை விடமானஸமும் சிறந்தது. உரக்கப் பிறர்காதுகளில் படும்படி ஜபிப்பது வாசிகம். உதட்டசை வால் பிறருக்குத் தெரிவது உபாம்சு. உதட்டசைவும் இல்லாமல் மனத்தால் ஜபிப்பது மானஸம். எழுத்துக்களை மனமே கூறிப்பொருளை உருவகப்படுத்துவது மானஸத்தின் சிறப்பு. சிவனுக்கு விஷ்ணுவிற்கும் இடையே வேறுபாடில்லை. வேறுபடுத்தி ஒருவரை ஏற்று மற்றவரைத் தாழ்த்திப் பேசுவது கொடும்பாவம். சிவனிடம் தன் கண்ணையே பூவாக்கி அர்ப்பணம் செய்தவர் விஷ்ணு. சிவபக்தரில்இவரே முதல்வர். இவர் பெரும் புகழ் கொண்டவர். பெருஞ்செயலாளர். "இவ்வாறு யோகீசுவரர் வடிவில் தக்ஷிணாமூர்த்தி முனிவர்களுக்கு ஜ்ஞானமார்க்கத்தை உபதேசித்து அவிமுக்தஸ்தலத்தில் தக்ஷிணாமூர்த்தியினுள் மறைந்தார். (55-62)

—★—

## द्व्यशीतितमोऽध्यायः

ऋषयः—

परं प्राहुर्महान्तो हि लिङ्गं चामूर्तिपूजनात् ।
तत्कथं तत्स्वरूपं किं सूत नो वक्तुमर्हसि ॥ १

सूतः—

लिङ्गं तु प्रणवं यन्त्रं यतस्तस्माद्विशिष्यते ।
अकारे लिखिताद्धस्तात् उकारे तस्य चोपरि ॥ २

तस्योपरि मकारे च लिखिते मुनिपुङ्गवाः ।
बिन्दुं विलिख्य तन्मूर्ध्नि तदन्तः स्यूतमालिखेत् ॥ ३

ऊर्ध्वरेखाकृतिर्नादं प्रणवेन च वेष्टयेत् ।
लिङ्गाकृतिर्भवेदेतत् यन्त्रं प्रणवमास्तिकाः ॥ ४

सूक्ष्मपञ्चाक्षरं ह्येतत् इति प्रोक्तं मनीषिभिः ।
पञ्चापि मूर्तयस्तस्मादत्रैवान्तर्भवन्ति ताः ॥ ५

अकारो गदितो ब्रह्मा उकारो विष्णुरुच्यते ।
मकारो रुद्र आख्यातो बिन्दुः प्रोक्तः स ईश्वरः ॥ ६

नादस्सदाशिवो ध्येयो व्यापकत्वान्मुनीश्वराः ।
मूर्त्यच्र्यानाच्चरात्तस्मात् इत्येवान्तर्भवन्ति ताः ॥ ७

अकारो गदितो ब्रह्मा लिङ्गपूजनमुच्यते ।
किं बहूक्तेन विप्रेन्द्र लिङ्गेऽस्मिन् पूजिते सकृत् ॥ ८

पूजिताः स्युः सुराः सर्वे जगत् स्थावरजङ्गमम् ।
अपि स्यात्पूजितं तेन सत्यं सत्यं वदाम्यहम् ॥ ९

पञ्चापि कारणात्मानः सर्वेऽपि च यदुद्भवाः ।
तस्मात् सर्वजगन्मूलं पूजयेल्लिङ्गमास्तिकाः ॥ १०

*"அத்தியாயம்" - 82*

*வடிவற்ற சிவனை லிங்கத்தில் வழிபடுவது சிறந்ததென ஸூதர் முனிவருக்கு விளக்குகிறார். லிங்கம் பிரணவத்தின் யந்திர*

வடிவம். அ உ ம பிந்து நாதம் எனப்பிரணவத்தின் ஐந்து பகுதிகள். அகாரத்தின் மீது உகாரம், அதன் மீது மகாரம், அதனுள் பிந்து, அதில் நாதம் எனவரிசையாக எழுதவேண்டும். இது லிங்கவடிவில் அமையும். இது பிரணவயந்திரம், ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் எனப்படும். பிரும்மா முதலிய ஐவரும் இதனுள் அடங்குவர். அ - பிரும்மா, உ - விஷ்ணு, ம - ருத்ரர், பிந்து - ஈசுவரர், நாதம் - ஸதாசிவர். இதில் வழிபட பிரணவத்தையும் பஞ்சபிரும்ம மூர்த்திகளான பிரும்மா முதலானவரையும் வழிபட்டதாகும். இந்த ஐவரும் காரண புருஷர்கள். உலகின் வேரானவர். லிங்கம் உலகத்தின் மூலகாரணம். - அதனுல், லிங்கத்தை வழிபடுகின்றனர். *(1-10)*

सिक्ते मूले हि तृप्यन्ति शाखाः पर्णादयोऽखिलाः ।
तस्माद्विशिष्यते पूजा लिङ्ग एव द्विजोत्तमाः ॥ ११

मरुतश्च ततश्चित्रं चारुतज्जनितप्रभोः ।
भक्त्या श्रमं मार्जयन्त विष्णुसाम्यपदप्रदम् ॥ १२

स्तनयित्नोरिवातर्क्यजरामरणतः पुरा ।
अकृणुध्वं रुद्रमिति घुष्यते शाश्वती श्रुतिः ॥ १३

ऋषयः—

तत् कथञ्च परं ब्रह्म सच्चिदानन्दलक्षणम् ।
परिपूर्णं निर्विकारं मूर्तिमास्थाय वै जगत् ॥ १४

महीमहीधरादीनि सृजत्यवति हन्ति च ।
परिच्छिन्नस्वभावत्वात् कथं जानाति वै पुनः ॥ १५

पशूनां कर्मजालानि सर्वं नो वक्तुमर्हसि ।

வேரில் நீர்வார்க்க இலை முதலியன வளரும். அதனுல் லிங்கபூஜை சிறந்தது. பேரழிவு நேராதிருக்க ருத்ரனை வழிபடுவீர் என வேதம் கூறும் என்ருர் ஸூதர். முனிவர்கள் வினவினர். ''ஸத்

*- சித் - ஆனந்த ஸ்வரூபமான பரம்பொருள் தனித்தனி உருவேற்று பூமி மலை எனப்பலபொருட்களைப் படைத்தும் காத்தும் அழித்தும் செயல்படுவது எப்படி? உயிரினத்தின் கருமவினையை முன்னிட்டுப் பலனளிப்பது எப்படி? என. ஸூதர் விளக்குகிறார். (11-15)*

सूतः—

तादृशो महिमा तस्य मनोवाचामगोचरः ॥ १६

अतर्क्यञ्च तथैश्वर्यमनन्ताश्चापि शक्तयः ।
परा सा शक्तिरित्याह तथा चाथर्वणी श्रुतिः ॥ १७

परमेष्ठिनि वै तस्मिन् तमःपारे प्रतिष्ठिते ।
न कापि शङ्का कर्तव्या किं भूयश्श्रोतुमिच्छथ ॥ १८

ऋषयः—

अत्र ब्रह्मा कुरुक्षेत्रे यज्ञवाटमकल्पयत् ।
वक्तुमर्हसि तन्मूलं सूत पौराणिकोत्तम ॥ १९

*''சிவனது பேராற்றல் அத்தகையது. மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதது. அவரது பேராளுமை ஊகித்தறிய இயலாதது. அவரது சக்தி பரா (விளக்கவொணண்ணாதது) என அதர்வவேதம் கூறும். இருளுக்கு அப்பாற்பட்ட அவரது ஆற்றல் பற்றி ஐயப்படவேண்டாம்? இதனைக் கேட்டருஷிகள் பிரம்மா குருக்ஷேத்திரத்தில் வேள்விச் சாலை அமைத்தது பற்றிக் கேட்க ஸூதர் கூறுகிறார். (16-19)*

सूतः—

हन्त वः कथयिष्यामि तच्चरित्रं मुनीश्वराः ।
सृष्ट्वाऽऽत्मतनयां काञ्चित् तामेव चकमे विधिः ॥ २०

रोहिद्रूपां धावमानामन्वधावत वै पुरा ।
रिरंसू ऋश्यदेहेन निषिद्धे पथि भूसुराः ॥ २१

ज्ञात्वा तु दुश्चरित्रन्तु सर्वज्ञः परमेश्वरः ।
अन्वद्रवद्धनुष्पाणिः शिक्षितुं तमतिक्रुधा ॥ २२

दृष्ट्वाऽनुधावमानं तं रुद्रकोपपरिप्लुतम् ।
अशक्तो धावितुमयमिदं वचनमब्रवीत् ॥ २३

ईश्वरः—

कथं वा दुष्पथे मूढ प्रवृत्तो मय्युपस्थिते ।
प्रायश्चित्तं वदाम्यद्य पातकस्याधुना शृणु ॥ २४

तेजिनीविपिनं नाम कावेर्या दक्षिणे तटे ।
क्षेत्रमस्ति महत्तस्य तेजिनीशस्य शूलिनः ॥ २५

अविमुक्तमिति ख्यातं नैरृतेऽतीव पावनम् ।
तत्र गत्वाऽविमुक्तेशसन्निधौ त्वं विशेषतः ॥ २६

अश्वमेधैस्तु दशभिः यज मां पापशुद्धये ।
एतादृशस्य पापस्य नान्यथा निष्कृतिर्भवेत् ॥ २७

பிரும்மா ஒரு மகளைப்பெற்றார். அவளிடம் காமமுற்றார். அவள் செம்மானாகி இவரிடமிருந்து தப்பித்து ஓடினாள். பிரும்மாவும் மான் வேடத்தில் அவளிடம் இன்பம் பெறத்துரத்தினார். இதனையறிந்த சிவன் வில்லேந்தி பிரும்மாவைக் கண்டிக்க கோபத்துடன் துரத்தினார். இதனைக் கண்டு பயந்த பிரும்மா ஓடமுடியாமல் நின்றார். ஈசுவரன் பிரும்மா செய்த கொடுஞ்செயலுக்கு கழுவாய் கூறினார். காவேரியின் தென்கரையில் அவிமுக்தேசுவரம் உள்ளது. அந்த ஈசனின் ஸந்நிதியில் பாபம் நீங்கப்பத்து அசுவமேதயாகங்கள்

செய்வாய். இத்தகைய பாபத்திற்கு வேறு கழுவாயில்லை என்ருர். (20-27)

इत्युक्तः शम्भुना तेन प्रसन्नेन मुनीश्वराः ।
पुनः प्रणम्य देवेशं ब्रह्मा लोकपितामहः ॥ २८

अश्वमेधान्दशाजह्रे तुष्ट्ये परमेशितुः ।
दक्षिणेनाविमुक्तेशं नियमेन चतुर्मुखः ॥ २९

सङ्कल्पविधिपूर्वं स भक्तिश्रद्धासमन्वितः ।
स्नात्वा हरिश्रुतायामाहूतायां कैटभद्विषा ॥ ३०

यत्रास्ते स्नातुमायातो हरिः पापविनाशनः ।
अनुज्ञाप्य च तं विष्णुं पापनाशाय वै विधिः ॥ ३१

एवं कृत्वाऽश्वमेधानां दशकं चतुराननः ।
तस्मात्पापात् प्रमुक्तोऽभूत् प्रसादेन महेशितुः ॥ ३२

इति द्व्यशीतितमोऽध्यायः

*பிரும்மா சிவனை வணங்கி அவிமுக்தேசரின் தெற்கில் வேள்விச்சாலை அமைத்து பத்து அசுவமேத யாகங்களை நியமத்துடன் புரிந்தார். ஹரிசுருதா நதியில் நீராடி ஸங்கல்பித்தார். அந்த ஆறு விஷ்ணுவால் அங்கு வரவழைக்கப் பெற்றது. பாபநாசராகிய விஷ்ணு அங்கு நீராடுகிருர். அவரது அனுமதி பெற்று வேள்வி புரிந்து சிவனருளால் பாபத்திலிருந்து விடுபட்டார். (28-32)*

—★—

त्र्यशीतितमोऽध्यायः

सूतः—

तस्याविमुक्तेश्वरस्य सन्निधौ यानि वा पुरा ।
उक्तानि तीर्थान्येतेषां वैभवानीह यद्यपि ॥ १

न शक्यन्ते वर्णयितुं देवतानिर्मितत्वतः ।
तथापि वाक्पावनार्थं संग्रहेण वदामि वः ॥ २

ब्रह्मणा निर्मिते तीर्थेऽवभृतार्थं स्वयम्भुवा ।
दशानामश्वमेधानामवसाने तु तत्र हि ॥ ३

चैत्रे मासि पौर्णिमायां अमायां वा विशेषतः ।
सचित्रमिति मन्त्रेण दूर्वागोमयपूर्वकम् ॥ ४

यः स्नात्वा द्रव्यदानञ्च यथाशक्ति प्रयच्छति ।
स याति ब्रह्मनिष्ठाञ्च महत्त्वमधिगच्छति ॥ ५

*''அத்தியாயம்'' - 83*

*ஸூதர் கூறுகிறார் - அவிமுக்தேசுவரரின் அருகே உள்ள தீர்த்தங்களின் பெருமை சொல்லிலடங்காதது. என்வாக்கின் சுத்திபெற மறுபடி விளக்குகிறேன். பிரும்மா 10 அசுவமேதயாகங்களை முடித்ததும் அவப்ருதஸ்நானத்திற்காக அமைத்தது ''பிரும்மதீர்த்தம்'' சித்திரை மாதத்துப் பௌர்ணமியிலும் அமாவாசையிலும் ''ஸசித்ர சித்ரம்'' என்ற மந்திரம் கூறி அருகம்புல்லும் கோமயமும் தலையிலிட்டு நீராடித் தானம் செய்வர். ஆத்மஜ்ஞானியாகும் பெருமை பெறுகிறார். (1-5)*

सरस्वत्या कृते तीर्थे मासि चाश्वयुजे शुभे ।
प्रणो देवीति मन्त्रेण नवम्यां भक्तिपूर्वकम् ॥ ६

स्नात्वा देवीमर्चयन्यः स सारस्वतवान्भवेत् ।
सावित्र्या तु कृते तीर्थे वैशाख्यां पूर्णिमातिथौ ॥ ७

अद्यान इति मन्त्रेण कण्ठदघ्नजले स्थितः ।
यः स्नाति ब्राह्मणो भक्त्या दुस्वप्नैस्स विमुच्यते ॥ ८

गायत्र्या तु कृते तीर्थे दर्शनादघनाशने ।
गायत्रीं दशवारन्तु जपित्वा स्नाति यो नरः ॥ ९

स सर्वपातकान्मुक्तो ब्रह्मलोके महीयते ।

*ஸரஸ்வதி அமைத்த "ஸரஸ்வதீ தீர்த்தத்தில் " ஐப்பசி நவமியில் "ப்ரணோதேவீ" என்ற மந்திரம் கூறி நீராடித் தேவியை வழிபடுபவர் வாக்ஸித்தி பெறுவர். ஸாவித்ரீ அமைத்த ஸாவித்ரீ தீர்த்தத்தில் வைகாசி பௌர்ணமியன்று "அத்யாநோதேவ" என்ற மந்திரம் கூறி நீராடுபவர் கெட்டகனவு பாதை நீங்கப்பெறுவர். "காயத்ரீ" அமைத்த தீர்த்தத்தில் காயத்ரீயை பத்து தடவை ஜபித்து நீராட பாபம் நீங்கி பிரும்மலோக வாஸம் கிட்டும். (6-9)*

महालक्ष्म्या कृते तीर्थे श्रीसूक्तं मनसा जपन् ॥ १०

शुक्रवारेषु यः स्नाति स कुबेरसमो भवेत् ।
पार्वत्या विहिते तीर्थे ज्येष्ठमासि तु पर्वणि ॥ ११

मनसा प्रजपन्नित्यं भक्त्या पञ्चदशाक्षरीम् ।
यः स्नाति तस्याष्टैश्वर्यमपि हस्तगतं भवेत् ॥ १२

भूमिदेव्या कृते तीर्थे चाषाढ्यां पूर्णिमातिथौ ।
पृथ्वीसूक्तं पठन् भक्त्या यः स्नाति मनुजोत्तमः ॥ १३

भूमण्डलाधिपत्यं स प्राप्नोत्यत्र न संशयः ।
आर्द्रायां श्रवणे चैव रौद्रे तीर्थे च वैष्णवे ॥ १४

तत्तत्सूक्तं जपन्यस्तु स्नाति किञ्चिद्ददाति च ।
रौद्रं स वैष्णवं लोकं प्रयात्यत्र न संशयः ॥ १५

*"மஹாலக்ஷ்மியால்" அமைக்கப் பெற்ற தீர்த்தத்தில் ஸ்ரீ ஸூக்தம் ஜபித்து வெள்ளிக்கிழமைகளில் நீராடுபவன்*

குபேரனைப் போன்று செல்வந்தனுவான் ''பார்வதீ'' அமைத்த தீர்த்தத்தில் ஆனிமாதத்துப் பௌர்ணமீ - அமாவாசையைகளில் பஞ்சதசாக்ஷரியை ஜபம் செய்து நீராட ஐச்வர்யமனைத்தும் கிட்டும். ''பூமி தேவி'' தீர்த்தத்தில் ஆடிப்பௌர்ணமியில் பூஸூக்தம் ஜபித்து நீராட, பூமியை ஆள்வான் - திருவாதிரை, திருவோணம் நாட்களில் ''ருத்ரதீர்த்தத்தில்'' ருத்ரம் கூறி நீராட '' விஷ்ணுதீர்த்தத்தில் விஷ்ணு ஸூக்தம் சொல்லி நீராட ருத்ர - விஷ்ணு லோகங்களை அடைவர். (10-15)

गूढे दिक्पालतीर्थे तु तत्तत्सूक्तं जपेन्नरः ।
तत्तल्लोकं प्राप्य सौख्यं अनन्तं स हि विन्दति ॥ १६

यः स्नाति तारके तीर्थे गुहेन विहिते नरः ।
संसारसागरं सद्यस्तरत्येव न संशयः ॥ १७

कार्तिक्यां पौर्णमास्यां यः कापिले तीर्थ उत्तमे ।
अघमर्षणसूक्तन्तु जपित्वा भक्तिपूर्वकम् ॥ १८
उरोदघ्नजले स्थित्वा स्नाति सर्वैस्स पातकैः ।
विमुक्तः शिवसायुज्यं प्रयाति न निवर्तते ॥ १९

एवं द्वादश तीर्थानि महापापहराणि च ।
पूर्वञ्च द्वादशोक्तानि वासिष्ठादीनि कृत्स्नशः ॥ २०

वक्तुं सोऽपि न शक्नोति सहस्रवदनः फणी ।
चतुर्युगसहस्राणि न पर्याप्तानि वै द्विजाः ॥ २१

पञ्चाशत्कोटिविस्तीर्णा नालं भूमिश्च पत्रिका ।
नालं सहस्रबाहुश्च लिखितुं कृतवीर्यजः ॥ २२

तस्मान्मयाऽधुना किञ्चित् सूचितं तीर्थवैभवम् ।
अविमुक्तेश्वरं लिङ्गं काश्यामस्ति महत्तरम् ॥ २३

तेजिनीकाननेऽन्नापि कुम्भघोणे तथा द्विजाः ।
स्नात्वा सन्निधितीर्थेषु योऽविमुक्तेश्वरं शिवम् ॥ २४

सेवते पुण्यकाले तु महापापयुतोऽपि सः ।
क्रीडते शिवलोके यावदाभूतसंप्लवम् ॥ २५

*மறைவிலுள்ள "திக்பாலர்களின் தீர்த்தங்களில்" அவரவர் ஸூக்தம் சொல்லி நீராட திக்பாலரின் லோகத்தை அடைவர். குஹன் அமைத்த "தாரகதீர்த்தத்தில்" நீராட பிறவிக்கடலைத் தாண்டுவான். "கபில தீர்த்தத்தில்" கார்த்திகை பௌர்ணமியில் அகமர்ஷண ஸூக்தம் சொல்லி நீராட சிவபதமடைவான். இவ்வாறு பன்னிரண்டு தீர்த்தங்கள் உள்ளன. முன்னர் விளக்கிய வஸிஷ்ட தீர்த்தம் முதலிய பன்னிரண்டு தீர்த்தங்கள் என 24 தீர்த்தங்கள் கொண்ட புனித பூமி இது. சொல்லி எழுதி விளக்க இயலாத பெருமை கொண்டது. காசியிலும் கும்பகோணத்திலும் திருவீழிமிழலையினும் அவிமுக்தேச்வரர் கோயில் கொண்டுள்ளார். இங்குள்ள தீர்த்தங்களில் புண்யகாலத்தில் நீராடி ஈசனை வழிபடக் கைலாஸவாஸம் பிரளய காலம் வரை கிட்டும். (16-25)*

अस्मिन्नर्थे पुरावृत्तमितिहासं वदामि वः ।
वङ्गदेशोद्भवः कश्चित् वैश्यश्चण्डालयोनिजः ॥ २६

व्याधपत्नीं समाश्रित्य चचार भुवि दूषकः ।
ब्रह्महत्यासहस्रञ्च गोहत्यायुतमेव च ॥ २७

नित्यं करोति चाक्रामत्यन्यदारान्निरन्तरम् ।
एवमादिमहापापैर्बह्वीर्नरकयातनाः ॥ २८

अनुभूयायुःशेषेण जातोऽभूज्जलवायसः ।
कदाचित् कालपर्याये पर्यटन् स इतस्ततः ॥ २९

चरन्नाकाशमार्गेण स्वजातीयः खगैस्सह ।
ब्रह्मतीर्थेऽपतत्तत्र जलान्तश्चरश्चिरम् ॥ ३०

तत्तीर्थस्नानसम्भूतैः सुकृतातिशयैरथ ।
तस्मिन्नेव दिने सोऽयमुत्थितो जलवायसः ॥ ३१

बलिग्रहार्थमायातैर्वायसैस्साकमुत्पतन् ।
बलिपीठं गतस्तत्र स्वीकृत्य च बलिं ततः ॥ ३२

लिङ्गोपरिस्थितां मांसबुद्ध्या कल्हारमालिकाम् ।
अपश्यत्तस्य हि तदा शिवलिङ्गं महत्तरम् ॥ ३३

तन्नान्तरीयकतया तद्दृष्टिविषयोऽभवत् ।
तेन पुण्यप्रभावेन कैलासं पर्वतं ययौ ॥ ३४

इति त्र्यशीतितमोऽध्यायः

*இங்கொரு வரலாற்றைக் கூறுகிறேன். வங்கதேசத்து வியாபாரி ஈனகுலத்தில் பிறந்தவன். வேடுவப்பெண்ணை மணந்து பிரும்ம ஹத்தி முதலிய கொடியபாபம் புரிந்ததால் நரகவாதனைகளை அனுபவித்த பின் நீர்காக்கையாகப் பிறந்தான். அங்குமிங்கும் பறந்து திரிந்தவன் எதேச்சையாக பிரும்மதீர்த்தத்தில் மூழ்கி நீரினுள் சுற்றி வந்தான். பலி அன்னத்தைச் சாப்பிட அங்கு வந்த மற்ற காக்கைகளுடன் பலி பீடத்தின் மீது வைத்த அன்னத்தை உண்டவன், லிங்கத்தின் மீது சாற்றியிருந்த செங்கழுநீர்ப் பூமாலையை மாமிசம் என நினைத்துத் தூக்கியதும் அடியிலிருந்த லிங்கத்தைக் கண்டான். எதேச்சையாகக் கிட்டிய அக்காட்சியால் முன்வினை நீங்கிக் கைலாஸமடைந்தான். (26-34)*

*

चतुरशीतितमोऽध्यायः

सूतः—

अविमुक्तेशमाहात्म्यं यथा शक्ति समीरितम् ।
पुनश्च तेजिनीशस्य माहात्म्यं प्रवदामि वः ॥ १

पुरा द्वादशवार्षिक्ये क्षामे वागीश्वराभिधः ।
ज्ञानसम्बन्धनामा च द्वावभूतां कवीश्वरौ ॥ २

पटू द्राविडभाषायां शिवभक्ताग्रतस्सरौ ।
शिवक्षेत्रेषु सर्वत्र चरित्वा सूक्तिभिः शिवम् ॥ ३

स्तुत्वा च क्षामदोषस्य शान्त्युपायं कथञ्चन ।
अलब्ध्वाऽऽकाशनगरं पुण्यक्षेत्रमवापतुः ॥ ४

तदा शनित्रयोदश्यां प्रदोषे शिवमर्चितुम् ।
बिल्वपत्राण्याहरन्तं कीटदष्टानि वर्जिनम् ॥ ५

रुद्राक्षमालाभरणं त्रिपुण्ड्राङ्कितमस्तकम् ।
नानाविधशिवस्तोत्रपठनैकपरायणम् ॥ ६

कामक्रोधादिरहितं उपशान्तं द्विजोत्तमम् ।
देवशर्मेति विख्यातं दृष्ट्वा तौ तु कवीश्वरौ ॥ ७

प्रणिपातमकुर्वातां भक्तिप्रवणमानसौ ।
कुशलप्रश्नपूर्वञ्च पप्रच्छतुरिदं पुनः ॥ ८

विशेषात् ज्ञानकामौ तौ ज्ञानमेवार्थमास्थितौ ।

''அத்தியாயம்'' - 84

தேஜினீவனேசரின் பெருமை அளவற்றது. முன்னர் ஒரு சமயம் அவ்வூரில் பன்னிரண்டாண்டு வரட்சி ஏற்பட்டது.

வாகீச்வரர் (நாவுக்கரசர்) ஜ்ஞானஸம்பந்தர் என்ற இரு மிகச்சிறந்த சிவபக்தர்கள், தமிழ்மொழியில் தேர்ந்த கவிஞர்களுமாவர். சிவக்ஷேத்திரங்கள் அனைத்தையும் தரிசித்து ஈசனைப் பாடித்துதித்து வரட்சி சமனமடைய உபாயம் கிட்டாமல் ஆகாச நகரம் (திருவீழிமிழலை) வந்தனர். அன்று சனிக்கிழமை திரயோதசி பிரதோஷ வேளை. சிவனை வழிபட பூச்சி புழுதாக்காத வில்வதளத்தைச் சேகரிக்க வந்த தேவசர்மா என்ற அந்தணரைக் கண்டனர். அவர் ருத்ரா க்ஷமாலை தரித்து நெற்றியில் விபூதி பூசி பலவாறு சிவஸ்தோத்திரங்களைப் பாடுவதில் ஆர்வமிக்கவர். காமம், கோபம் முதலிய கெட்ட குணங்களற்றவர். அமைதிமிக்க அவரைக் கண்டு பெயர் வினவி இருசிவனடியார்களும் அவரை வணங்கிக் குசலம் விசாரித்தனர். (1-8)

स्वामिन् सर्वेषु पुष्पेषु विद्यमानेषु किं भवान् ॥ ९

हरतीमानि पत्राणि किमेषान्तदपेक्षया ।
वैशिष्ट्यं किं प्रदोषे च कर्मादि च विशिष्यते ॥ १०

सर्वाज्ञौ कृपया ब्रूहि दुर्लभं तव दर्शनम् ।
इत्युक्तो देवशर्मा च ताभ्यां वाचमुवाच ह ॥ ११

देवशर्मा—

अहो भाग्यं अहो भाग्यं यत्पृष्टं बिल्ववैभवम् ।
तदहं सम्प्रवक्ष्यामि शृणुतं सावधानतः ॥ १२

त्रीणि ज्योतींषि यान्यत्र भासयन्ति जगत्त्रयम् ।
तानि त्रिदलरूपेण भान्ति बिल्वस्य भूतले ॥ १३

धर्माधर्मौ त्रयो वेदा ये वदन्ति द्विजन्मनाम् ।
तानि त्रिदलरूपेण भान्ति बिल्वस्य भूतले ॥ १४

गार्ह्यपत्यान्वाहार्यपचनाहवनीयास्त्रयोऽग्नयः ।
ते हि त्रिदलरूपेण भान्ति बिल्वस्य भूतले ॥ १५

